ஸ்ரீ

# ஸ்ரீராமாயணம்

## அயோத்யாகாண்டம்.

முதற் பாகம்.

## தமிழ் வசனம்.



இஃது

ஸ்ரீ வால்மீகி ராமாயணத்திற்கிணங்க

ஸ்ரீ. அ. வீ. நரஸிம்ஹாசாரியரால்

மொழிபெயர்க்கப்பெற்று.




சென்னை:

ஆர். வெங்கடேஶ்வர் அண்டு கம்பெனியாரவர்களால்

ஆநந்த அக்ச்சுக்கூடத்தில் அச்சிட்டு

வெளியிடப்பட்டது.

1924

ஸ்ரீ

# விஞ்ஞாபனம்.

---

இதுவரையில் நாம் ராமாயணமென்னும் மஹாஸாகரத்தில் ப்ரபலமான இரண்டு அலைகளைத் தாண்டிவிட்டனம். இம் மஹாஸமுத்ரமும் இதர ஸமுத்ரங்கள்போல் போகப் போக கம்பீரமும் மிகுந்த ரஸப் பெருக்குடையதும் புகக்கூடாததுமாயிருக்கும். முதலில் ஒன்றிரண்டு அலைகள் தாண்டின பின்பு ஸரியான ஓடமிருப்பின் அந்த ஸமுத்ரங்களைத் தாண்டுவது கஷ்டமன்று. அப்படியே சந்தாதாரர்கள் நமக்கு ஓடங்கள்போல் விடாமல் உதவி செய்வார்களாயின் இந்த மஹா ஸமுத்ரத்தை நாம் தாண்டுவதிலும் ஸந்தேஹமில்லை. அதிலும் அயோத்யாகாண்டம் துக்கப்ரசுரமும் விக்னகாரியுமென்பது உலகமெங்கும் ப்ரஸித்தமே அது நம் விஷயத்திலும் பலித்தபடியால் இவ்வளவு தாமதம் நேரிட்டது. ஆகையால் இதைப் பொறுத்துச் சந்தாதாரர்கள் யாவரும் நமக்கு உதவிசெய்து நம்மைக் கரையேற்றுவார்களாக.

இவ்வயோத்யாகாண்டம் முழுவதும் ஒருபாகமாக வெளிப்படுத்தினல் சந்தாதாரர்களுக்கு ஶ்ரமமாயிருக்குமென்று நாம் முன்பு செய்த நியமத்தின்படி (400) பக்கங்கள்டங்கிய அதனொருபாகத்தை இப்பொழுது வெளியிடலாயினம்.

---

ஸ்ரீ:

ஸ்ரீராமசந்த்ரபரப்ரஹ்மணே நம:

# அவதாரிகை.

---

கீழ் பாலகாண்டத்தில் ராமனது மஹா குலப்பிறப்பும் தனுர்வித்யையில் வல்லமையும் சிறந்த குணப் பெருக்கும் அற்புத பராக்ரமமும் யாவரிலும் மேலாயிருக்கையும் பிறர்க்கு அதில்லாமையும், லக்ஷ்மணனுக்கு ராமனிடத்திலுள்ள பக்தியின் மிகுதியும், சத்ருக்னனுக்குப் பரதனிடத்திலுள்ள மிகுந்த பாரதந்த்ர்யமும், ஸீதா விவாஹமும், ஸீதாராமர்களின் பரஸ்பரப்ரீதியும் சொல்லப்பட்டன. இங்ஙனம் கதாபீஜமாகச் சொல்லப்பட்ட அம்மஹாபுருஷர்களின் குணச்சிறப்பு இவ்வயோத்யாகாண்டத்தில் பரிபக்வமாகி நன்னடைத்தைகளால் வெளியிடப்படுகின்றன. அவதாரத்திற்கு முக்யப்ரயோஜனங்களான துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலன தர்மஸம்ஸ்தாபனங்களுக்கு மூலகாரணமான வனவாஸம்போதலே இக்காண்டத்தில் ப்ரதானம். இதுவே இந்த ராமாயணமென்னும் கற்பகக்கொடிக்கு வேராயிருக்கின்றது. பரதனிருந்தால் ராமன் அரண்யம் போகநேராதென்றே இக்காண்டத்தில் 'மச்ஹதா மாதுலகுலம்' என்று அவன் சத்ருக்னனும்தானுமாக மாமாவினகத்திற்குப்போன வ்ருத்தாந்தம் முதல் முதலாகக் கூறப்பட்டது. இந்தப் பரதன் போக்கை ஏற்படுத்துவதற்காகவே யுதாஜித்தின் வரவு முன் காண்டத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்டது. இங்ஙனம் வனவாஸம் போவதற்கு முக்ய ப்ரதிபந்தகமான பரத ஸந்நிதா

ணத்தை இல்லை செய்து அந்த வனவாஸம் போதலை ஏற்படுத்துவதற்காக ராமாபிஷேக ப்ரஸ்தாவத்தையும் அதன் மூலமாக மந்தரையின் துர்ப்போதனத்தையும் அதற்குப் பலமான கைகேயியின் ஆக்ஷேபத்தையும் நடத்தி வரங் கொடுத்தது முதலான அவாந்தர ஸங்கதிகளையுங் காட்டி அக்கார்யம் ஈடேற்றப்பட்டது. இந்த ப்ரகரணத்தில் ராமனது செய்கைகளால் பித்ரு வசனத்தின்படி நடத்தல் ப்ரதிஜ்ஞை தவறுதிருத்தல் முதலிய ஸாமான்ய தர்மங்கள் வெளியிடப்பட்டன. கீழ்ச் சொன்ன லக்ஷ்மணனுடைய பக்தியின் மிகுதி 'ஹி ராதா ஹர்த்தாச வந்யு: ஸ்ச பிதாச மம ராகவ:' என்று எல்லாவிதத்திலும் ராமனுக்கே சேஷப்பட்டிருக்கையில் வந்து முடிவதாகச் சொல்லுகையால் பகவானுக்கும் ஜீவனுக்குமுள்ள சேஷசேஷி பாவமென்னும் விசேஷ தர்மமும், இவ்விடத்திலேயே 'ஸர்வாவஸ்யாகதா ஹர்த்து: பாஉச்ஹாயா விஸிஷ்யதே' என்ற ஸீதையின் பாதிவ்ரத்யம் 'உஜ்ஜிதாயாஸ்த்வயா நாயு தசைவ மரணம் வரம்' என்று பர்த்தாவைப் பிரிந்திருக்கப் பொறுத ப்ரேமாதிசயத்துடன் கூடியதாகி 'பாலேவ ரமதே ஸீதா பாலசந்த்ரநிபாநநா | ராமா ராமே ஹ்யதீநாத்மா விஜநே உபி வநேஸதீ' என்னும்படியான ஸுகத்தில் வந்து முடிகையால் ஸ்த்ரீகளுக்குப் பாதிவ்ரத்யம் மங்கல ஸூத்ரத்தைப் பற்றித் தீராமல் நேருவது மாத்ரமேயன்றி மனப்பூர்வமான ப்ரீதி யமைந்து ஸுகரூபமாயிருக்கவேண்டுமென்னும் பாதிவ்ரத்யதர்மமும், பரதன் ராஜ்யபாரத்தை ராமபாதுகைகளின் மேலிட்டு அவைகளுக்குப் பரதந்த்ரனாயிருக்கையால் பகவானுக்கே அதீனமாயிருக்கும் பாகவதத்வமும், அப்படிப்பட்ட பாகவதசிகாமணிக்கு 'நீத: ப்ரீதிபுரஸ்க்ருத:' என்னும்படி கேவல பாதந்த்ரனாயிருக்கும்

சத்ருக்னன் செயலால் பாகவதாபிமான நிஷ்டையென்னும் தர்மமும் வெளியிடப்பட்டன.

இங்ஙனம் வால்மீகிமஹர்ஷி தர்மத்தை அறிய விரும்புமவர்களுக்கு ஸாமான்ய விசேஷ தர்மங்களை அறிவிப்பதும் ஆஸ்திகர்களுக்கு ஐஹிகாமுஷ்மிகபலங்களைக் கொடுப்பதும் ரஸிகர்களுக்கு மனக்களிப்பை விளைப்பதும் ஸகல சேதனர்களுக்கும் ஸம்ஸார ஸமுத்ரத்தினின்று கரையேறுமுபாயமும் ரஸம்பொழிகிற ம்ருதுமதுரசைலியமைந்ததுமான இக்காண்டத்தை நிபந்தனஞ் செய்தனர். இதிலும் பால காண்டத்தில் போல் விசேஷார்த்தங்களும் ரஹஸ்ய விவரணங்களும் ஸவிஸ்தரமாக ஆங்காங்கு எழுதப்பட்டிருக்கின்றன. மற்றைக் காண்டங்களையும் ஸ்ரீராமசந்த்ரனது க்ருபையின் மிகுதியாலும் மஹான்களுடைய ஸஹாயத்தினாலும் கூடிய சீக்ரத்தில் அச்சிட்டு வெளியிட விரும்புகின்றனம்.

இங்ஙனம்,

ஸ்ரீமான். அ. வீ. நரஸிம்ஹாசாரியர்.

# விஷயங்கள்.

ஸர்க்கம். பேஜ்.

# படங்களின் விவரம்.

---



ஸ்ரீ:

ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீராமாயணம்

## * அயோத்யாகாண்டம்.



பரதன் [1]மாமாவின் அகத்திற்குப்போகும்பொழுது பாபமற்றவனும் பகைவரை என்றும் அடக்க வல்லவனுமாகிய சத்ருக்னன் தன்னைப் பிரிய முடியாத நேசமுடையவனாகையால் அந்த ப்ரீதியால் ஏவுண்டு தன்னுடன் புறப்பட்டு வர, அவனையும் அழைத்துக் கொண்டு சென்றனன்.

---

* இதன் விஷயம் அவதாரிகையில் வெளியாகும்.

1 இதற்கு மூலம்—
‘கச்சதா மாதுலகுலம் பரதேந ததாநக:|
ஶத்ருக்நோ நித்யஶத்ருக்நோ நீத: ப்ரீதிபுரஸ்க்ருத:’

இதற்கு விசேஷார்த்தம்— (கச்சதா) வர்த்தமாநகாலத்தைக் குறிக்கிற இதனால்— சத்ருக்னனும் பரதனும் ஒரே காலத்திற் போனார்களென்று தோற்றுகையால், பரதன் போகும்போது அவனது சக்தி வஸ்த்ரம் முதலியவை அவனுக்கு மிகவும் பரதந்த்ரமாகி அவன் போகும்பொழுதே சிறிதுந் தாமதமின்றிப் போவதுபோல் சத்ருக்னனும் அவனுடன் கூடவே போனானென்று அந்தச் சக்தி முதலியவற்றைப்போல் சத்ருக்னன் பரதனுக்கே பரதந்த்ரனாகையாகிற

இவ்வனம் பரதன் கேகயநாட்டிற்சென்று, அங்கு மாமனாகிய அச்வபதியும் ஜாத்யச்வங்களைக் கொடுப்பது முதலிய ஸத்காரங்களைச் செய்தும், தான் பெற்ற பிள்ளையினிடத்தில் வைக்கும்படியான ப்ரீதியை வைத்து அழகிய

---

ததேகபாரதந்த்ர்யம் இங்குத் தோற்றுகின்றது. (மாதுலகுலம்) இந்த த்விதீயையால் (இரண்டாம் வேற்றுமையால்) பரதனுக்கு உத்தேச்யமான ஸ்தானமே சத்ருக்னனுக்கும் உத்தேச்யமாயிற்றென்று தோற்றுகையால்—சேஷிக்கு (தனக்கு ஸ்வாமியானவனுக்கு) எது உத்தேச்யமோ, அதையே சேஷபூதனென தானும் (அந்த ஸ்வாமிக்கு ஸொத்தைப்போல் விதேயனுயிருக்குந்தானும்) தனக்கு உத்தேச்யமாகக் கொண்டிருக்கையாகிற பாரதந்த்ர்யம் சொல்லப்படுகின்றது. (ஹரதேந) பரதனால். ராமன் ராஜ்யத்தைப் போகட்டுக் காட்டுக்குப் போகையில் லக்ஷ்மணன் உன்னைப் பிரிந்திரேனென்று ராமனைத்தொடர்ந்து செல்லத் தசரத சக்ரவர்த்தி ராமவியோகம் பொறுக்கமாட்டாமல் மரணமடைந்து ஸ்வர்க்கமேறப் போகையில் சத்ருக்னனும் உன்னையல்லது அறியேன் என்றிருக்குந்தசையில் உன்னைப் பிரிந்திரேன் என்னும் லக்ஷ்மணனைப்போல் தானும் ராமனைப் பின் செல்லாமல் ராஜ்யத்தைப் பரித்தானுகையால் இவனுக்குப் பரதனென்று த்ரிகாலஜ்ஞராகிய வஸிஷ்டமஹர்ஷி பேரிட்டனர். கேவலம் ராமனது ஆஜ்ஞையைக் கொண்டு ராஜ்யத்தைப் பரித்தவனென்று தோற்றுகையால் பகவானுக்குப் பரதந்த்ரனுயிருக்கையாகிற பாகவதத்வஞ் சொல்லப்பட்டது. (ததா) அப்பொழுது. பிரித்து முஹூர்த்தமிட்டுப் போக ப்ராப்தமாயிருக்கப் பரதன் போனதுவே முஹூர்த்தமாகப் போனுனென்கை. இதனுல் தனக்கு அனுகூலசந்த்ரதாராதிபலன்களையும் அபேக்ஷிக்காமலே போனுனென்று அவனுடைய பாரதந்த்ர்யமே விசேஷித்துத் தோற்றுகின்றது.(அநவாஸ) பாபமற்றவன். அகமென்றால் பாபம். சத்ருக்னன், தனக்குச் சேஷியான பரதனுக்கு ராமபக்தி உத்தேச்யமாகையாலே தனக்கும் அந்த ராமபக்தி உத்தேச்யமென்றிருந்தனேயன்றி, ஸ்வசேஷியான பரதனுக்கு அது உத்தேச்யமாகாதவன்று தனக்கும் அது உத்தேச்யமாகாமல் அநிஷ்டாவஹமா மென்றே யிருக்கும். அநிஷ்டாவஹமெல்லாம் பாபமெனப்படும். ஸுக்ருதமாயினும் மோக்ஷாபேக்ஷையுடையவனுக்கு

ஆடை ஆபரணங்களைக்கொடுத்தும் மேன்மைப்படுத்திக் கொண்டிருக்கையில் தம்பியாகிய சத்ருக்னனோடு ஸுக மாக வஸித்திருந்தனன். அவ்விடத்தில் ஸகலோபசாரங் களும் நிறையப்பெற்று வஸித்திருந்தபோதிலும், வேண்

அவிஷ்டாவஹமாயின் அது பாபமேயாகுமென்று ச்ருதியும் சொல்லு கின்றது. ஆகையால் ராமபக்தி ஸுக்ருதமாயினும் பரதனுக்கு உத்தேச்யமாகாதவன்று அவனுக்குச் சேஷபூதனாகிய சத்ருக்னனுக் கும் அவிஷ்டாவஹமாகிப் பாபமேயாகுமாகையால் அப்படிப்பட்ட பாபமில்லாதவன். அதாவது— பரதனுக்கு உத்தேச்யமான பின் பே ராமபக்தி தனக்கும் உத்தேச்யமாகப் பெற்றவன். இதனால் சத்ருக்னனுக்கு ராமனைக் காட்டிலும் பரதனிடத்திலே அதிகபக்தி யென்று தோற்றுகையால் அவனுடைய பாகவதபாரதந்த்ர்யம் பின்னும் அதிசயம் பெற்றதாயிற்று. (நித்யசத்ருக்நஃ) நித்யசத்ருக் களைத் தொலைக்குமவன், நித்யசத்ருக்களாவன—இந்த்ரியங்களா கையாலே இந்த்ரியநிக்ரஹ முடையவன். ராமன் 'பும்ஸாந் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்' என்று புருஷர்களுடைய கண்களையும் மனத் தையும் கூட இழுத்துக்கொண்டுபோகவல்ல ஸௌந்தர்யமுடையவ னாயினும் அவனிடத்தில் தனது இந்த்ரியங்கள் செல்லாதபடி அவைகளை நிக்ரஹஞ் செய்தவன். ராமனிடத்தில் பக்தி செய்வது தன்னதிகாரத்திற்கு விருத்தமாகையால் இவன் அதை ஒழித்திருப் பது யுக்தமென்று தோற்றுகிறது. (சத்ருக்நஃ) சத்ருக்னன். பிள் ளைகளின் ஸந்நிவேசங்களைப் பார்த்துத் திருநாமம் சாத்துகிற ஸ்ரீவஸிஷ்டபகவான் பெருமாள், கண்டாரை அழகாலே துவக்கவல் லராகத் தோற்றுகையாலே 'ராமன்' என்றும், இளைய பெருமாளுக் குக் கைங்கர்யமே நிரூபமாகத் தோற்றுகையாலே 'லக்ஷ்மணன்' என் றும், (அதாவது - கைங்கர்ய லக்ஷ்மியையுடையவன் லக்ஷ்மணன்), இவ ருடைய ஸந்நிவேசத்தைக் காணவே சத்ருக்கள் மண்ணுண்ணும் படி யிருக்கையாலே 'சத்ருக்னன்' என்றும் திருநாமம் சாத்தினன். (ப்ரீதிபுரஸ்க்ருதஃ) ப்ரீதியால் ஏவப்பட்டவனாக. 'நான் என் செய் வேன்? பெரியோனைச் சிறியவன் அனுஸரித்துச் செல்லவேண்டுவது விதியன்றோ?' என்று விதியைப் பற்றிப் போனானல்லன்; ப்ரீதி யைப் பற்றியே போனான். அசேதனங்களாகிய சத்தி முதலானவை

டிய வஸ்துக்களையெல்லாம் கொடுத்து அச்வபதியென்னும் மாமாவாகிய யுதாஜித்தானவன் தமக்கு மிகவும் திருப்தியை விளைவித்துக்கொண்டிருந்தபோதிலும் வீரர்களாகிய அவ்வண்ணன் தம்பிகள் இருவரும் 'ஐயோ! தமப்பனார் வயது சென்றவராயினர்; ராஜ்யபாரத்தை நிறைவேற்ற முடியாதிருக்கின்றனர். இப்பொழுது ராமனை யுவராஜனாகச் செய்திருப்பாரா? வயது சென்றவராகிய எமது தந்தைக்கு நாம் சுச்ரூஷை செய்ய வேண்டுங் காலம் கடந்துபோகின்றதே' என்று மனத்திற் சிந்தித்துக்கொண்டிருந்தனர். அப்படிப்பட்ட புத்ரர்களைப் பெற்ற மஹாதேஜஸ்வியாகிய தசரதமஹீபாலனும், மஹேந்த்ரனையும் வருணனையும் ஒத்த மகிமையமைந்து இடைவிடாத ப்ரீதியும் பொருந்தி தேசாந்தரம் சென்றிருக்கின்ற புத்ரர்களாகிய பரத சத்ருக்னர்கள் இருவரையும் நினைத்து 'எவ்வளவு ஸம்பத்திருப்பினும் என்ன? குழந்தைகள் இருவரும் அருகில் இல்லாமையே பெருங் குறையாயிருக்கின்றது' என்று மனக்கவலையுற்றிருந்தனன். 'மேலான குமாரர்களாகிய ராம லக்ஷ்மணர்கள் அருகில் இருக்கையில் மற்றைப்பிள்ளைகளை நினைப்பது எப்படி?' என்று வினவலாகாது; அந்த நான்கு புத்ரர்களும் புருஷர்களிற் சிறந்தவராகையால்

---

களும் சேதனங்களுந் தமது ஸ்வாமியினிடம் பாரதந்த்ர்யத்தில் ஒத்திருக்கும். ஆனால் ப்ரீதி ஒன்று மாத்ரம் அசித்துக்களுக்கு உண்டாகாது. அது சேதனர்களுக்கே உண்டாகு மாகையால் ப்ரீதியே அசித்துக்களைக்காட்டிலும் சேதனர்களுக்கு உள்ள விசேஷம். (ஸ்ரீ தக) கொண்டுபோகப்பட்டனன். கத்திமுதலியவற்றைப்போல் தன்னையும் அவன் கொண்டுபோகப் போனானன்றித் தானே ஸ்வதந்த்ரித்துப் போனானல்லனென்று அசித்துக்களைப்போல் பரதந்த்ரனாயிருக்கை சொல்லப்பட்டது. இதனால் பக்தனாகிய சத்ருக்னனைப்போல் பாகவதர்களிடத்தில் பாரதந்த்ர்யத்தோடிருக்க வேண்டுமென்பது பலிதார்த்தம்.

அவர்கள் எல்லோரும் அவ்வரசனுக்குத் தனது சரீரத்தினின்றும் உண்டான நான்கு புஜங்களைப் போல் ப்ரீதிக் கிருப்பிடமா யிருந்தனர். ப்ராணிகள் எல்லோரிலும் பிரமன் எப்படியோ, அப்படியே அந்தக் குமாரர்கள் அனைவரிலும் ராமன் சிறந்த குணமுள்ளவனும் மிகவும் தேஜஸ்வியுமா யிருப்பதுபற்றித் தந்தைக்கு ஒப்பில்லாதப்ரீதியை விளைத்துக்கொண்டிருந்தனன். அவன் சிறந்த குணமுள்ளவனுகைக்குக் காரணமென்னவெனில் [1]மிகுந்த கர்வங்கொண்டு செருக்குற்ற ராவணனை வதிக்

1 இதற்கு மூலம்—

'ஸஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபிஃ।

அர்த்திதோ மாநுஷேலோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதநஃ'

(ஹி) என்று ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. இங்கு ப்ரஸித்தியாவது 'அஜாயமாநோ பஹுதா விஜாயதே' என்று ச்ருதியாலோதப்படுகை. ஜீவராசிகளைப்போல் கர்மானுகுணமாகப் பிறப்பவனன்றாயினும் சேதனஸம்ரக்ஷணார்த்தம் பலவாருகப் பிறப்பவனென்று ச்ருதியின்பொருள். (தேவைஃ) அவன் அனன்ய ப்ரயோஜன பரரான நித்யஸூரிகள் ப்ரார்த்திக்கப் பிறந்தானல்லன்; (அனன்யப்ரயோஜனபரர்—பகவானை யொழிந்த மற்றை ப்ரயோஜனங்களை வேண்டாதவர்.) ஆனல் யார் இரக்கப் பிறந்தானென்னில்—(தேவைஃ) ப்ரயோஜனாந்தரபரரான தேவர்கள் வந்து இரக்கப் பிறந்தான். (ப்ரயோஜனாந்தரபரர்—பகவானை யொழிந்த மற்றை ப்ரயோஜனங்களை வேண்டுபவர்.) ப்ரயோஜனாந்தர பரராயிருக்கை மாத்ரமேயன்றி 'நானே ஈச்வரன்; நானே போகமுடையவன்' என்று துரபிமானம்பிடித்து மதித்துத் திரிபவர். 'திவு க்ரீடா விஜிகீஷா வ்யவஹார ஸ்துதி மோத மத ஸ்வப்ந காந்தி கதிஷு' என்று தாதுபாடத்தில் மதமும் திவுதாத்வாத்தமாகச் சொல்லப்பட்டது. துரபிமானத்தையெங்கே கண்டோமென்னில் — நரகாஸுரவதத்திற்காக க்ருஷ்ணனைச் சரணம் புகுந்து அந்தக்கார்யம் தீர்ந்தபின்பு பாரிஜாதத்திற்காக அந்த க்ருஷ்ணனேடேயே யுத்தஞ்செய்யப் புறப்பட்டவிடத்தில் இவர்களது துரபிமானம் ஸ்பஷ்டமாயிருக்கும். இப்படி

கும்பொருட்டுத் தேவர்கள் வந்து வேண்டிக்கொள்ள, அவ்வேண்டுகோளின்படி மனுஷ்ய லோகத்தில் அவதரித்த நித்ய வஸ்துவாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவே அன்றோ அந்த ராமன். ஆனதுபற்றியே அவன் யாவரிலும் மேலாயிருந்தனன். ஆதலால் அந்த ராமனிடத்தில் தமப்பனுகிய தசரத சக்ரவர்த்திக்கு மிகுந்த ப்ரீதி உண்டாவது

---

தரபிமானம் பிடித்து மதாந்தர்களாகிய தேவர்கள் ப்ரார்த்திக்கப் பிறந்தான். (உதீர்ணஸ்ய) உத்படனு யிருக்கிற. அதாவது—பயங்கரனுயிருக்கை. ஸஹஜமான சர்வத்தினுல் உலகங்களையெல்லாம் நாசஞ்செய்தவனுகிய இவனைக் கொல்லும்படி தேவதைகள் இரப்பதற்கு இதுவே ஹேது. (ராவணஸ்ய) தனக்கு வரங்கொடுத்தவர்களையே ஸ்தானத்தினின்றும் ஒடச்செய்பவன். அப்படிப்பட்டவனுடைய (வயார்யிபிஃ) இவ்வெருவனைக் கொல்லவே, ராஜ்யமெல்லாம் ஸுகமாக வாழ்ந்திருக்குமென்று சரணமடைந்தவர்கள், (அர்யிசந) ப்ரார்த்திக்கப் பட்டவனுகி. உபாஸிக்கப் பட்டவனன்று. (மானுஷே லோகே) யாதொரு லோகத்தில் தேவதைகளும்கூட மனுஷ்யகந்தத்தைப் பொறுக்கமாட்டாமல் வயிற்றைக்கிளரி வாந்தியெடுக்கும்படி ஜுகுப்ஸைபட்டு யோஜனை தூரத்திற்கு மேலே நின்று யாகங்களில் ஹவிர்ப்பாகத்தைப் பெற்றுக்கொள்கின்றனர். அப்படிப்பட்ட மனுஷ்யலோகத்தில் தன்னை ஏவவந்த தேவர்களும் தனக்கு மனுஷ்ய ஸ்தானத்திலாகும்படியான ஸர்வோத்சர்ஷத்தையுடைய தான் தேவதைகளுங்கூட ஏவும்படி இந்த மனுஷ்யலோகத்தில் வந்து பிறந்தனன். இதென்ன ஸௌலப்யாதிசயம். (ஜஜ்ஞே) பிறந்தனன். ந்ருஸிம்ஹாதிகளைப்போல் ஸ்தம்பாதிகளினின்றும் வெளித்தோற்றினவனல்லன். உலகத்தார் பத்துமாஸங்களே சர்ப்பத்திலிருந்து பிறப்பர்; இவனே, 'ததஸ்ச த்வாதஸே மாஸே' என்கிறபடியே அதற்கும் மேலாகப் பன்னிரண்டு மாஸங்கள் கர்ப்பவாஸஞ் செய்து பிறந்தான். (விஷ்ணுஃ) எங்கும் வ்யாபித்திருப்பவன். அப்படி வ்யாபகனுயிருப்பவன் தான் வ்யாபித்திருக்கிற லோகத்தில், அதாவது—தசரதனுக்கு என்பிள்ளை என்னும்படி பிறந்தான். (ஸநாதநஃ) நித்ய வஸ்துவாயிருப்பவன் இப்படி தனக்கு ஜனனுதிகளை உண்டாக்கிக் கொண்டான்.

அற்புதமன்று. தமப்பனே அன்று; தாயாகியகௌஸல்யா தேவியும், வஜ்ராயுதத்தைக் கையிலேந்தி விளங்குகின்ற தேவேந்த்ரனைப்பெற்ற அதிதியைப்போல், மஹாதேஜஸ்வியாகிய அந்தக்குமாரனைப் பெற்றுப் போனந்தத்துடன் பிரகாசித்தனள். அவன் மிகுந்த அழகுடையவன்; அழகேயன்றி, ஔதார்யம் முதலிய ஸகல நற்குணங்களும் அமையப்பெற்றவன்; வீர்யத்திற்கு இருப்பிடமாயிருப்பவன். அஸூயை யென்பது சிறிதும் அவனுக்கு இல்லை. தேவலோகத்தில் அதிதி ஒருத்தியே அவனுக்கு ஒப்பான பிள்ளையைப் பெற்றாளன்றிப் பூமியில் ஒருத்தியும் அவனுக்கு நிகரான பிள்ளையைப் பெற்றவள் இல்லை. அவன் குணங்களில் தசரதசக்ரவர்த்தியைப் போன்றவன். மேலும், அவன் கோபமென்பது சிறிதுமில்லாமல் என்றும் மதுரமான ஸ்வபாவமுடையவன். ஆனது பற்றியே யாவரும் அவனிடத்தில் பருஷமாகப் பேசார். ஒரு கால் பருஷமாகப் பேசினும் தான் பருஷமாகப் பதிலுரையான்; ஆனால் மெதுவாகப் பேசுபவன். எவனாயினும் ஒருவன் ஓர் உபகாரஞ் செய்தானாயின், அது விளையாட்டாகவாவது, ப்ரதிபலத்தை விரும்பியாவது, மனமின்றியாவது, மிக அற்பமாயாவது, மற்றும் எப்படியாவது செய்யப்பட்டிருந்த போதிலும் அந்த ஒருபகாரத்திற்கே அவன் எப்பொழுதும் ஸந்தோஷித்திருப்பான். இதுவேயன்றி, தனக்கு ஒருவன் அபகாரங்கள் ஆயிரஞ் செய்தபோதிலும், அவன் மனத்தை ஸ்வாதீனஞ் செய்துகொண்ட மிகுந்த அறிஞனானதுபற்றி அவ்வபகாரங்களை நெஞ்சிலும் நினைக்கமாட்டான். அவன் எப்போதும், இவ்வளவென்? அஸ்த்ர வித்யையை அப்யஸிக்குந் தருணங்களிலும் ஸத்புருஷர்கள் எவரேனும் வருவார்களாயின், ஊரும்

பேரும் ஒன்றுங்கேளாமல் ஸகலரையும் ஸமமாக ஆதரித்து அவர்களில் ஸதாசாரம் அறிந்தவர்களோடு மிகவும் நுண்ணியவைகளான தர்மவிசேஷங்களைப் பேசிக்கொண்டும், மோக்ஷ விஷயத்தில் ஜ்ஞானபரிபாகமுடையவர்களோடு வேதாந்த ரஹஸ்யங்களை விடுத்துரைத்துக்கொண்டும், வயதுசென்ற பெரியோர்களோடு பரம்பரையாக வந்த ஸம்ப்ரதாய விசேஷங்களை மொழிந்துகொண்டும் இருப்பவன். ஆகையால் அவன் ஒருக்ஷணமும் ஸஜ்ஜனங்களோடு சேராதிருக்கமாட்டான். நற்புத்தியுடையவனாகையால் 'ஸர்வப்ராணிகளும் எப்படி ஸுகமாயிருப்பார்கள்' என்று லோக ரக்ஷண சிந்தையில் ஆழ்ந்திருப்பான். அவன் மதுரமாகப் பேசுந்தன்மையனாகையால் எந்த வார்த்தைகளைப் பேசினபோதிலும் இனிமை பொழிந்துகொண்டிருக்கும். நீசர்களோடாயினும் தனது மேன்மையைப் பாராட்டாமல் முதலில் தானே பேசுவான்; பிறர்களுக்கு ப்ரியவசனத்தையே மொழிந்துகொண்டிருப்பான். அவன் தன்னை ஆச்ரயித்தவர்களுக்கு உண்டாகும் விரோதிகளைத் தொலைத்து நன்மை செய்யும் படியான வீரியமுடையவன். அன்றியும் தனது வீரியம் எவ்வளவு மேன்மைபெற்றிருப்பினும், அதற்காகத் தான் வியப்புற்று வீண்கர்வங்கொள்ளாமல் 'நாம் என் செய்தோம்? இதுவும் ஒரு செயலோ?' என்றே நினைத்திருப்பான். இவ்வளவேயன்றி, அவன் எல்லாவற்றையும் நன்கு அறிந்தவனாகையால் கட்டுக் கதைகளைச்சொல்லுகிற அஸத்காவ்யங்களில் 'இவை தகா' என்று அறிந்து மனஞ் செலுத்தாதிருப்பான். அவன் ஒருநாளும் பொய்யுரைப்பவன் அல்லன்; ஆனால் எல்லாம் தெரிந்தவன். ஞானத்திலும் சீலத்திலும் வயதிலும் பெருமை பெற்றிருக்கும் பெரியோர்களைத் தான் எதிர்கொண்டு சென்று பூஜிக்குந் தன்மையன். பெரியோரென்றும் சிறியோர்களென்றும் பண்டிதரென்றும்

பாமரர்களென்றும் பேதஞ்சிறிதுமின்றி ப்ராணிகள் யாவரையும் மனக்களிப்புறச் செய்பவன். ஆகையால் அந்த ப்ராணிகள் அனைவர்க்கும் அவனிடத்தில் அள வற்ற ப்ரீதி அமைந்திருக்கும். அவன் பிறர் வருத்த முறக் காணில் பொறுக்கமாட்டாதிருப்பவன்; கோபந் தன்வசமாகப் பெற்றவன்; வேதமோதும் ஸ்வபாவரான ப்ராஹ்மணர்களை எதிர்கொண்டு மேன்மைப் படுத்துந் தன்மையன்; ஏழைகளைக் கண்டால் விசேஷமாகத்தயை செய்து மிகுந்த ப்ரீதியோடு அவர்க்கு வேண்டியவற் றையெல்லாங் கொடுப்பவன்; தர்மங்களெல்லாம் உணர் ந்தவன். [1]ஸர்வ ப்ராணிகளுக்கும் அபயதானஞ் செய்ய வேண்டுமென்னும் நியமத்தை எப்போதும் கைவிடாதி ருப்பவன். அவன் துஷ்டர்களை நிக்ரஹஞ்செய்வதில் எப் பொழுதும் ஊக்கமுடையவன்; பரத்ரவ்யங்களில் அபி லாஷமின்றி எப்போதும் [2]சுசியாயிருப்பவன். அவன் இக்ஷ்வாகுவம்சத்திற்கு உரிய தயைதாக்ஷிண்யம் சரணா கதரக்ஷணம் முதலிய தர்மங்களில் புத்தியைச் செலுத்தி நிற்பவன்; ஆகையால் துஷ்ட நிக்ரஹஞ்செய்து ப்ரஜைக ளைப் பரிபாலனஞ் செய்கையாகிற க்ஷத்ரியதர்மத்தையே பெரிதாக நினைத்திருப்பவன்; [3]கீழ்ச்சொன்ன தர்மங்

1 'அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம்மம' என்கிறபடியே ஸர்வபூதங்களுக்கும் அபயங்கொடுக்கை ராமனுக்கு நித்யவ்ரதம்.

2 இங்கு 'யோர்த்தே சுசிஸ் ஸஹி சுசிர் நம்ருத்வாரிசுசிஸ் சுசி:' என்று மனுஸ்ம்ருதிப்ரமாணம். த்ரவ்யத்தில் எவன் ஆசையின்றிப்பரிசுத்தனாயிருக்கின்றானோ, அவனே சுசியாவான்; மண்ணையும் ஜலத்தையுங்கொண்டுகொழுவி நிற்பவன்சுசியாகான் என்று இதன் பொருள்.

3 தனது வர்ணத்திற்கும் தனது ஆச்ரமத்திற்கும் உரிய தர்மங்களை அனுஷ்டிப்பதனால் கீர்த்தி உண்டாகி அந்தக் கீர்த்திமூலமாக ஸ்வர்க்கம் வித்திக்குமென்று தெரிந்துகொண்டு ஸ்வதர்மமான க்ஷத்ர தர்மத்தை விசேஷித்து அனுஷ்டிப்பவன்.

களைப்பற்றி வரும் பெருங்கீர்த்தியினால் யாவரும் ஆசைப் படும்படியான பெருமைபொருந்திய ஸ்வர்க்கபலம் தனக்கு ஸித்திக்குமென்றெண்ணங்கொண்டவன். அவன் வித்வானாகையால் நிஷ்பலமான காரியங்களிலும் சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்ட காரியங்களிலும் மனஞ்செல்லாதிருப்பவன். தர்மவிருத்தங்களாகிய கதைகளிலும் க்ராம்யங்களான பேச்சுக்களிலும் அவனுக்கு ருசி கிடையாது லௌகிகவிஷயங்களிலும் வைதிகவிஷயங்களிலும் மேன்மேலும் யுக்திப்ரஸங்கம் வந்தபொழுது தான் சொன்னவற்றை நிறைவேற்றும்பொருட்டு ப்ருஹஸ்பதியைப் போல் தட்டுத்தடையின்றிய பேச்சுக்களோடு ப்ரமாணங் களைப்பலவாறாக உபந்யஸிக்க வல்லவன். அவன் 1 ரோகங்கள் ஒன்றுமின்றி யிருப்பவன்; யௌவனப்பருவம் நிரம்பப்பெற்றவன்; நன்கு சிறந்த வாக்குடையவன்;

---

1 இதற்கு மூலம்—

'அரோகஸ்தருணோவாக்மீ வபுஷ்மாந் தேசகாலவித்'

இதனால் 'யுவா ஸ்யாத் ஸாதுயுவாத்யாயக:, ஆசிஷ்டோ த்ரடிஷ்டோ பலிஷ்ட:' என்கிற ச்ருதியின் அர்த்தம் சொல்லப்படுகின்றது. (அரோக:) ஆதிகளும் வியாதிகளும் அற்றிருப்பவன். ஆதிகள் மனோவியாதிகள். வியாதிகள்—சரீரத்தில் உண்டாகும் ரோகங்கள். இதனால் (ஆசிஷ்ட:) என்று சொல்லப்பட்ட அசனஸாமர்த்யமும் பெரியோர்களின் ஆசிர்வாதங்களுக்குப் பாத்ரமாயிருக்கையும் கூறப்பட்டது அசன ஸாமர்த்யமாவது—புசிப்பதில் கைவாங்காதிருக்கை. இது ரோகமற்றிருக்கையாலுண்டாகும். ஆரோக்யமும் பெரியோர்களின் ஆசிர்வாதத்தினா லுண்டாகவேண்டுவதொன்று. (தருண:) யௌவனப் பருவம் நிரம்பப்பெற்றவன். இதனால் (யுவா) என்கிற பதத்தின்பொருள் கூறப்பட்டது. (வாக்மீ) சிறந்த வாக்குடையவன். இதனால் (யுவாத்யாயக:) என்கிற பதத்தின் பொருள் கூறப்பட்டது. (யுவாத்யாயக:) யுவாக்கள்—யௌவனமுடையவர். அத்யயனத்திற்கு இளைக்காத பருவமுடையவர். அப்படிப்பட்டவர்களுக்கு அத்யாபகனா யிருப்பவன் என்று பொருள். (வபுஷ்மாந்) சரீரந்திடமா

சரீரந்திடமாயிருக்கப் பெற்றவன்; அத்யயனத்திற்கும் அவ்வோ தர்மங்களை அனுஷ்டிப்பதற்கும் உரிய தேச காலங்களை அறிந்திருப்பவன்; புருஷர்களை ஒருதரம் பார்த்தமாத்திரத்திலேயே அவர்களின் உட்கருத்தை யெல்லாம் அறியுந்திறமுடையவன். உலகத்தில் இவனொருவனே ஸாதுவாக நிருமிக்கப்பட்டானென்று யாவரும் அவனைக் கண்டபொழுதே நிச்சயம்பெறுவார். இதுவரையிற் சொன்னவையேயன்றி இன்னும் அனேக நற்குணங்களும் பொருந்தி விளங்குகின்ற அந்த ராஜ குமாரன் தனது கல்யாண குணங்களால் ப்ரஜைகளுக்கெல்லாம் தமது சரீரத்தை விட்டு உருவங்கொண்டு வெளியில் ஸஞ்சரிக்கும் ப்ராணனைப்போல், மிகவும் ப்ரீதிக்கிருப்பிடமாயிருப்பவன். உலகத்தில் சிலர் வித்யைகளை மாத்ரமும், சிலர் விரதங்களை மாத்ரமும் நிறைவேற்றி ஸ்னாதகர்மம் கைப்பற்றியிருப்பார். ராமன் அங்ஙனமன்றி, நான்கு வேதங்களையெல்லாம் ஓதி விரதங்களையும் நிறைவேற்றி ஸமாவர்த்தனம் நடத்தியிருப்பவன். அங்கங்களாறுடன் கூடிய வேதங்களின் அர்த்தத்தை க்ரமப்படி நன்கு அறிந்தவன். 1 மந்த்ரங்களில்லாத பாணப்ரயோகங்களிலும் மந்த்ரங்களோடு கூடிய அஸ்த்ர ப்ரயோகங்களிலும் பரதனுக்குத் தமையனாகிய ராமன் தகப்பனாகிய தசரதசக்ரவர்த்தியைக் காட்டிலும் மேலாயிருப்பவன். அவன் தான் தோஷமற்றிருப்பது பற்றித் தன்ஸம்பந்தத்தினால் தனது மாதாபித்ருவர்கங்களை மேன்மைப் படுத்துந்தன்மையன். பின்னும் எவ்வித கலக்கத்திலும் அவன் மனம் கலங்காதிருக்

---

யிருக்கப்பெற்றவன். இதனால்(வலிஷ்ட:) என்கிற பதத்தின்பொருள் கூறப்பட்டது. (வலிஷ்ட:) சிறந்த தேஹபலமுடையவன்.

1 பாணங்கள் இரண்டு வகைப் பட்டிருக்கும். மந்த்ரங்களோடு கூடியவையென்றும் மந்த்ரங்களின்றி யிருப்பவையென்றும். அதில் மந்த்ரங்களோடு கூடியவை அஸ்த்ரங்களென்று கூறப்படுகின்றன.

கும். (அதாவது—மனக்கலக்கமுறச் செய்யுங் காரணங்கள் பல இருப்பினும் அவன் கலக்கமுறான்.) எவ்வித ஸங்கடத்திலும் அவன் ஸத்யம் தப்பாதிருப்பவன். மனோ வாக் காயங்களென்கிற மூன்று காரணங்களிலும் ஒரு ரீதியோடு கூடி என்றும் மாறாதிருப்பவன். தர்மார்த்தங்களை அறிந்தவர்களும் ஞானம் சீலம் வயது இவற்றில் முதிர்ந்தவர்களுமாகிய ப்ராஹ்மணர்களால் அவன் எல்லாவற்றிலும் நன்கு கற்பிக்கப்பெற்று விளங்குவான். 1 பின்னும் அவன் காலை மாலை முதலிய அந்தந்த காலங்களில் செய்யவேண்டிய தர்மார்த்த காமங்களென்கிற அவ்வோ புருஷார்த்தங்களின் மர்மங்களை நன்கு அறிந்தவன்; மறப்பென்பது சிறிதுமில்லாதிருப்பவன்; மேன்மேலும் புதிது புதிதாகத் தோற்றமுற்று மலர்கின்ற மதி பெற்றவன்; உலகத்தில் ஸங்கேதஸித்தங்களாகிய ஆசாரங்களெல்லாவற்றிலும் நியாயந் தெரிந்தவன்; தெரிந்து கொள்வது மாத்ரமேயன்றி அவற்றை நடத்தவுந் திறமுடையவன். அவன் பண்டிதனாயிருந்தும் விநயம் அமைந்திருப்பான்; தன் மனத்திலுள்ள அபிப்ராயங்களை வெளிப்படுத்தாமல் மறைத்துக்கொண்டிருப்பவன். அவன் ஒரு காரியத்தைச் செய்ய நினைத்தானாயின் அது பலம் ஸித்திக்குமளவும் ஒருவர்க்கும் தெரியாதிருக்கும். அவனுக்குச் சிறந்த மந்திரிகள் பலருண்டு. அவனுக்குக் கோபமாவது ஸந்தோஷமாவது உண்டாகுமாயின் அது பலஸித்தி பர்யந்தமும் சென்றே தீரவற்றாயிருக்கும். அவன் வஸ்துக்களைக் கொடுப்பதற்கும் வாங்குவதற்கும்

1 'ந பூர்வாஹ்ணமத்யந்திநாபராஹ்ணாநபலாந் குர்யாத்' என்று கௌதம தர்மசாஸ்த்ரத்தின்படி பூர்வாஹ்ணாதிகாலங்களில் அந்தந்த தர்மார்த்த காமங்களைச் செய்யவேண்டுமென்று அவைகளின் ஸ்வரூபங்கள் இவனுக்குத் தெரியும்.

உரிய காலங்களை அறிந்தவன். அவனுக்குத் தேவதைகளிடத்திலும் குருக்களிடத்திலும் பக்தி நிலை நின்றிருக்கும். அப்படிப்பட்ட பக்தியாலுண்டான அவனுடைய தத்த்வஜ்ஞானமும் நிலைபெற்றிருக்கும். ஆனதுபற்றியே அவன் கெட்ட வஸ்துக்களையும் மதிகெட்டவர்களையும் கைப்பற்றுதிருப்பவன்; ஒருவரையும் க்ரூரமாகப்பேசான். அவன் சோம்பலின்றி எப்பொழுதும் சாஸ்த்ரங்களைப் பரிசீலனஞ் செய்துகொண்டிருப்பவனாகையால் சாஸ்த்ரார்த்தங்களில் ஏமாறுதிருப்பவன். உலகத்தில் அனைவரும் பிறருடைய தோஷத்தைப் பாராட்டுவரேயன்றித் தமது தோஷத்திற் கண்வையார்; இவன் அப்படியன்றித் தனது தோஷங்களையும் பிறர்தோஷங்களையும் அறிபவன். மேலும், அங்கங்களோடுகூடிய வேதங்களை அறிவது மாத்ரமேயன்றி மற்றைச்சாஸ்த்ரங்களையும் நன்குணர்ந்து அவைகளின் ஸித்தாந்தங்களையும் ஆராய்ந்தறிந்தவன்; (பிறர் செய்த உபகாரம் அணுவாயினும் அதை மலைபோல் நினைத்திருப்பவன்;) புருஷர்களைப் பார்த்த மாத்ரத்தில் அவர்களது தாரதம்யத்தையும் அவர் மனத்தில் மறைத்து வைத்திருக்குங் கருத்துக்களையும் அறிந்துகொள்வதில் மிகுந்த ஸாமர்த்ய முடையவன்; சாஸ்த்ரங்களிற் சொல்லியபடி நண்பர் முதலியவர்களை ஸம்பாதிப்பதிலும், அங்ஙனம் ஸம்பாதித்தவர்களைப் பரிபாலனஞ் செய்வதிலும் மிகுந்த வல்லமையுடையவன்; ஸத்புருஷர்களைப் பரிக்ரஹிப்பதிலும், (அங்கீகரிப்பதிலும்) பரிக்ரஹித்துப் பரிபாலனஞ் செய்வதிலும், ஸதாசாரங்களை அனுஷ்டிப்பதிலும் மிகவும் சாதுர்யமுடையவன்; துஷ்டர்களை நிக்ரஹிக்க வேண்டிய ஸமயங்களும் சிஷ்டர்களைப் பரிபாலிக்க வேண்டிய ஸமயங்களும் அவனுக்குத் தெரியும். புஷ்பங்களினின்றும் வண்டுகள்

தேனைக் கொள்வதுபோல், ப்ரஜைகளிடமிருந்து அவைகளுக்கு ஸுகமாகவும் நியாயமாகவும் த்ரவ்யத்தை ஸம்பாதிக்கும் உபாயங்களை அவன் அறிந்தவன். [1] சாஸ்த்ரங்களிற் சொல்லிய ப்ரகாரம் த்ரவ்யத்தைச் செலவழிக்க வேண்டிய காரியங்களையும் அவன் உணர்ந்தவன். வேதம் வேதாங்கம் முதலிய சாஸ்த்ரவகைகளிலும், ஸம்ஸ்க்ருதம் ப்ராக்ருதம் முதலிய பல பாஷைகளிலும், காவ்யநாடகாலங்காரங்கள் முதலியவற்றிலும் தாத்பர்யம் அறிந்தவர்களனைவரிலும் அவன் தலைவனயிருப்பான். அவன் கேவலம் காமத்தில் மனத்தைச் செலுத்தி நிற்பவன் அன்று; அர்த்தம் தர்மம் ஆகிய மற்றைப் புருஷார்த்தங்களையும் ஸங்க்ரஹித்துக் கொண்டே ஸுகம் அனுபவிக்குந் தன்மையன். அந்த அர்த்த தர்மங்களை ஸம்பாதிப்பதிலும் சோம்பலேறித் திரிபவன் அன்று. விளையாடலுக்கு ஸாதனங்களாகிய ஸங்கீதம் சித்ரகர்மம் முதலிய சில்பங்களிலும் விசேஷங்களை நன்ருகத் தெரிந்துகொண்டிருப்பவன். [2] பணத்தை அந்தந்த கார்யங்களுக்கு விபாகஞ்செய்யும் ப்ரகாரங்

---

1 'கஶ்சிஆயஸ்யசார்தேந சதுர்பாகேந வாபுந:। பாதபாகைஸ்த்ரிபிர்வாபி வ்யயஸ்ஸஞ்சோத்யதேதவ' (வருமானத்தில் பாதிபாகமாவது நாலிலொரு பாகமாவது மூன்று பாகங்களாவது செலவு செய்யலாமென்று அறிஞர்களால் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றது) என்று சாஸ்த்ரம்.

2 'தர்மாய யஶஸே(அ)ர்தாய ஆத்மநே ஸ்வஜநாய ச। பஞ்சதா விபஜந் வித்தமிஹாமுத்ர ச மோததே' (தர்மத்திற்காகவும் கீர்த்திக்காகவும் மேன்மேலும் பணத்தை ஸம்பாதிக்கிறதற்காகவும் தன்னுடைய உபயோகத்திற்காகவும் தன்னைச் சேர்ந்தவர்களின் உபயோகத்திற்காகவும் இப்படி ஐந்துவிதமாகப் பணத்தை விபாகஞ் செய்பவன் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் ப்ரகாசித்திருப்பான் என்று பணத்தைப் பகுக்கும்விதம் சாஸ்த்ரங்களிற் சொல்லப்பட்டது.

களும் அவனுக்குத் தெரியும். அவன் யானையேற்றத்திலும் குதிரையேற்றத்திலும், ஏறி அவைகளை அடக்கி நடத்துவதிலும் ஸாமர்த்யமுடையவன்; தனுர்வேதத்தின் மர்மங்களெல்லாமறிந்தவனாகையால் தனுர்வேதத்தை அறிந்தவர் யாவரினும் மேலாயிருப்பவன்; உலகத்தில் அதிரதரென்று பேர்பெற்ற மஹாவீரர்களால் கௌரவத்துடன் கொண்டாடப்பட்டவன்; சத்ருக்கள் வந்து தன்னைச் சுற்றிச் சூழ்ந்தபின்பே தான் அவர்களை அடிப்பவன் அன்று; தானே அவர்களிருக்குமிடந் தேடிச் சென்று, அதிலும் துர்க்கம் முதலிய விடங்களில் மறைந்து வஞ்சித்து அடிக்காமல், எதிரே சென்று நின்று யுத்தஞ் செய்யுந் திறமையுடையவன். இப்படி தானாகச் சென்று யுத்தஞ் செய்துகொண்டும் தனது ஸேனை எதிரிகளால் அடியுண்டு பயந்தோடாதபடி ரக்ஷிக்கும்பொருட்டு எதிரிகள் நுழையமுடியாத சக்ரவ்யூஹம் முதலிய வ்யூஹங்களைச் செய்து ஸேனையைச் சிதறாமல் நடத்தும் வல்லமை யமைந்தவன். ஆனது பற்றியே அவன் யாவராலும் எதிரிடவொண்ணாமல் எப்போதும் ஜயசீலனாயிருப்பவன். கேவலம் மநுஷ்யர்களே யன்றி தேவதைகளும் ராக்ஷஸர்களும் ஒருவரோடொருவர்க்குண்டான விரோதத்தை விட்டு ஒன்றாகக்கூடிக் கடுங்கோபாவேசமுங்கொண்டு வருவார்களே யாயினும் அவனை எதிரிடவல்லரல்லர். அவனுக்கு அஸூயையென்பது எப்போதும் உண்டாகாது. கோபம் அவனுக்கு ஸ்வாதீனமாயிருக்கும். கர்வமென்பது அவனிடத்திற் புலப்படாது. பிறர் மேன்மையைப் பொறுதிருக்குந் தன்மை அவனிடம் தென்படாது. அவன் எவ்வகை ப்ராணிகளையும் அவமதிக்கமாட்டான். சிலகாலங்களில் ஸத்த்வகுணந் தலையெடுத்துச் சிலகாலங்களில் ரஜோகுணந் தலையெடுத்துச் சில காலங்களில் தமோகுணந் தலை

யெடுத்து அந்தந்த காலத்தின்படி யிருக்கையன்றி எப்பொழுதும் ஸத்த்வமே தலையெடுத்து ஸத்த்வமூர்த்தியாயிருப்பவன். இப்படி அந்த ராஜகுமாரனாகிய ராமன் ப்ரஜைகள் அனைவரிலும் தானொருவனே லோகோத்தர குணங்கள் நிரம்பப்பெற்று மூவுலகங்களிலும் கொண்டாடப்பட்டு மேன்மையுடன் விளங்கினன். அவன் பொறுமையில் பூமியைப் போன்றவன்; புத்தியில் ப்ருஹஸ்பதிக்கொப்பானவன். பராக்ரமத்தில் இந்திரனுக்கும் எதிராயிருப்பவன்; இங்ஙனம் ஸ்த்ரீகள் இளைஞர் வ்ருத்தர் முதலிய ஸமஸ்த ப்ரஜைகளுக்கும், தமப்பனாகிய தசரத சக்ரவர்த்திக்கும் ஸந்தோஷத்தை விளைவிக்குந் திறமுடைய குணங்களுடன் இயற்கையாகவே மிகவும் அழகுபொருந்திய ராமன், தானாகவே ப்ரகாசிக்குந்தன்மையனாகிய ஸூர்யன் கிரணங்களோடு ப்ரகாசிப்பதுபோல் ப்ரகாசித்திருந்தனன். [1] இங்ஙனம் குணஸம்ருத்தியுடையனாகி யிருப்பதுபோலவே, ஆச்ரிதர்களுக்கு ஸம்ரக்ஷணஞ் செய்யும் வ்ரதஸம்ருத்தியும் பெற்று, எதிரிடவொண்ணாத பராக்ரமத்துடன் விளங்கி லோகபாலர்களுக்கு ஒப்பாயிருக்கிற ஸ்ரீராமபிரானைப் பூமியும் (பூமியிலுள்ள ஜனங்களெல்லோரும்) தனக்கு

1 இதற்கு மூலம்—

'தமேவம்வ்ரதஸம்பந்நமப்ரத்ருஷ்யபராக்ரமம்।
லோகபாலோபமந்நாதமகாமயத மேதிநீ'

இதற்கு விசேஷார்த்தம்—(ஏவம்) இப்படி பாலகாண்டத்திற் சொல்லியபடி, (வ்ரதஸம்பந்நம்), 'ராமஸ்து ஸீதயா ஸார்த்தம்' என்கிறபடியே பத்னீவ்ரதமும் ஸீதையோடு க்ரீடாரஸமும் பெற்றிருப்பவனும், (அப்ரத்ருஷ்ய பராக்ரமம்) விரோதி வர்க்கத்தைப் போக்கித் தன்னோடொக்க போகத்தைக் கொடுப்பவனும், (லோகபாலோபமம்) இது (லோகபால) (உபமம்) என்று இரண்டும் விசேஷணமாய் விசேஷணோபயபதஸமாஸ மாயிருக்கின்றது. (லோகபால) லோகங்களைப் பரிபாலனஞ் செய்பவனும், (உபமம்-உப ஸமீபே, மா-லக்ஷ்மீ: யஸ்

நாதனுகும்படி விருப்பமுற்றது. உலகத்திலொப்பின்றிய இப்படிப்பட்ட கல்யாணகுணங்கள் பலவும் நிறைந்திருக்கிற புதல்வனைப் பார்த்து, தசரதமஹாராஜன் தான் பகைவரை அடக்கிக்கொண்டு ராஜ்ய பரிபாலனஞ்செய்து ஓய்ந்திருப்பதை ஆலோசித்து வெகுகாலம் பிழைத்துக் கிழத்தனம் அடைந்திருப்பதுபற்றி 'நான் பிழைத்திருக்கும்பொழுதே ராமன் எப்படி அரசன் ஆவான்' என்று மிகுந்த ஆசையோடு சிந்தையுற்றிருந்தனன். பின்னும் அவ்வரசன் மனத்திற்பற்றின சிந்தை நிலைபெற்று 'எனது அன்புக்குரிய குமாரனாகிய ராமன் ராஜ்யாபிஷேகம் பெற்றிருக்க, நான் எப்பொழுதுகாண்பேனோ! அவன் உலகங்களின் அபிவ்ருத்தியை விரும்பியிருப்பவன்; ஸகல ப்ராணிகளிடத்திலும் தயையுடையவன்; மழை பெய்யும் மேகத்தைப்போல் ஜனங்களுக்குத் தாரதம்யமின்றித் தானஞ்செய்து மனவருத்தங்களைப் போக்கிக்கொண்டிருப்பவன். அவன் உலகங்களுக்கு என்னைக்காட்டிலும் மிகவும் ப்ரியனாயிருப்பவன்; பராக்ரமத்தில் யமனுக்கும் தேவேந்திரனுக்கும் ஒப்பானவன்; புத்தியில் ப்ருஹஸ்பதியைப்போன்றவன்; பர்வதம்போல் மஹாதீரனாயிருப்பவன்; என்னைக்காட்டிலும் மிகுந்த குணங்களுடையவன். இப்படி ராஜத்தனத்துக்கு உரிய ஸமஸ்த லக்ஷணங்களும் பொருந்தி விளங்குகின்ற இப்புதல்வன் நான் இவ்வயதோடிருக்கும்போதேஇப்பூமண்டலத்தையெல்லாம்பரித்து ஆளக்கண்டு நான் ஸ்வர்க்கமேறப் போகும்படி நேருமா!' என்று அச்சிந்தையே எப்போதும் நடந்

---

ய தம்) ஸமீபத்தில் வீதாரூபையான லக்ஷ்மியையுடையவனும், லக்ஷ்மியோடு போகத்தை அனுபவித்துக் கொண்டிருப்பவனுமென்க. இப்படிப்பட்ட ராமனை, (மேதிநீ) பூதேவியும், (நாயம் அகாமயத) ஸ்வயம்வரத்தால் கழுத்தில் மாலையிட விரும்பினள்.

தேறப் பெற்றிருந்தனன். இங்ஙனம் நானுவிதங்களாகி மற்றை அரசர்களுக்கு துர்லபங்களுமாகி எங்கும் ப்ரஸித்தி பெற்றிருக்கிற கீழ்ச்சொன்ன அந்த குணங்களும், மேலும் லோகோத்தரங்களாகி ஸ்வபாவஸித்தங்களுமாகிக் கணக்கிட முடியாதிருக்கிற மற்றைக்கல்யாணகுணங்களும் நிறையப்பெற்று விளங்குகின்ற இந்த ஸ்ரீராமனைப் பார்த்து அந்தத் தசரதமன்னவன் மந்த்ரிகளுடன் ஆலோசித்து நிச்சயஞ் செய்துகொண்டு அவனை யுவராஜனுகச் செய்ய நினைத்தனன். பின்னும் சிறந்தமதியுடைய அம்மன்னவன் ஸ்வர்க்கத்திலும் ஆகாயத்திலும் பூமியிலும் பயங்கரங்களாகத் தோற்றுகின்ற உத்பாதங்களைப் பார்த்தும், தனது சரீரத்தில் கிழத்தனம் மிகுந்திருப்பதைக்கண்டும் மந்த்ரிகளைப்பார்த்து 'இவ்வுத்பாதங்கள் எனக்குக் கெடுதியைத் தெரிவிக்கின்றன. மேலும் எனது சரீரமும் கிழத்தனம் பரவப்பெற்றது. இவ்விரண்டு காரணங்களையும்பற்றி இனி வேகமாக ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடத்தவேண்டும்' என்று மொழிந்தனன். பின்பு அந்தத் தசரதமஹாராஜன் 'பூர்ணசந்திரன்போல் ஸமஸ்த ஸந்தாபங்களையும் போக்கடிக்கவல்ல அழகிய முகம்பெற்று மஹாமதியுமாகி விளங்குகின்ற ராமன் உத்பாதம் முதலியவற்றால் எனக்கு உண்டாகும் பயத்தைப் போக்கிக்கொண்டு உலகங்களுக்கு மிகவும்ப்ரியனுயிருக்கின்றனன். இது பட்டங்கட்டுகைக்கு மற்றொரு காரணமாகவும் இருக்கின்றது' என்று தெரிந்துகொண்டனன். தர்மசீலனுகிய அம்மஹீபாலன் தனக்கும்ப்ரஜைகளுக்கும் க்ஷேமத்திற்காகவும் ஸந்தோஷத்திற்காகவும் தகுந்த காலத்தில் ராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வதற்கு மிகுந்த ப்ரீதியோடு த்வரைப்பட்டனன். அம்மன்னவன் அந்தக் கோஸலதேசத்திலடங்

கிய பல நகரங்களிலும் தேசாந்தரங்களிலும் வாஸஞ் செய்கின்ற ப்ரதான ராஜாக்களையும் ஸாமான்யராஜாக்களையும் தனித்தனியாக வரவழைத்தனன். கேகய ராஜனும் ஜநகராஜனும் தூரதேசஸ்தர்களானதுபற்றி அவர்களை வரவழைக்கத்தக்க அவகாசம் நேராமையால் அவ்வரசன் 'இக்காரியம் நடந்தபின்பு அவர்கள் ப்ரியமான இவ்வார்த்தையைக் கேட்கலாகும்' என்று நினைத்து த்வரைப்பட்டாயினும் அவர்களை வரவழைக்க முயலவில்லை. தசரதமன்னவன் தான் வரவழைத்து வந்தவர்களுக்குத் தக்கபடி விடுதிகளைக் காட்டிப் பலவகை ஆபரணங்களையுங் கொடுத்துப் பூஜித்தபின்பு, தான் அலங்காரஞ் செய்துகொண்டு ப்ரஜைகளைப் பார்க்க வந்த ப்ரஜாபதியைப்போல் அவர்களைக்காண ஸித்தமாயிருந்தனன். பிறகு சத்ருஸைன்யங்களை அடக்கவல்ல மஹாவீரனாகிய அம்மன்னவன் உட்கார்ந்திருக்கையில் ஜனகமஹாராஜனும் கேகயமஹீபதியுந் தவிர உலகத்தில் மேன்மை பெற்ற மற்றை அரசர்களெல்லோரும் ஆஸ்தானமண்டபத்தில் புகுந்து அம்மன்னவனால் அளிக்கப்பட்ட அந்தந்த ஆஸனங்களில் அவ்வரசனுக்கு எதிரில்தானே அடக்கத்துடன் உட்கார்ந்தனர். அவ்வரசனால்வெகுமானஞ் செய்யப்பெற்றவர்களும் விநயத்தோடு கூடியவர்களும் அரசன் மொழியும் உரைகளைக் கேட்கும்பொருட்டு மெல்லமெல்ல ஸமீபத்திற்கு வந்து உட்காருகின்றவர்களுமாகிய பலவகை நகரங்களினின்றும் வந்த மன்னவர்களாலும் பலதேசங்களினின்றும் வந்த ஜனங்களாலும் சுற்றிலுஞ் சூழப்பட்ட அந்தத் தசரதமன்னவன் தேவர்களால் சூழப்பட்ட மஹானுபாவனாகிய தேவேந்திரன்போல் ப்ரகாசித்தனன். ஒன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமாபிஷேகத்தின்பொருட்டுத் தசரத மன்னவன் ப்ரஜைகளோடு கலந்து ஆலோசித்தலும், ப்ரஜைகள் அதற்குடன்படுதலும்.

பின்பு அந்தத் தசரதமஹிபதி, பேரிவாத்யம்போல் முழங்கிக்கொண்டு கம்பீரமான அர்த்தங்கள் நிறைந்து நான்கு பக்கங்களிலும் ப்ரதித்வனி எழப்பெற்றுத் தனது ப்ரபாவத்திற்கு அனுரூபமும் மிருதுவும் ஒப்பில்லாததும் மதுரமும் பெருமை பொருந்தியதுமான கண்டத்வனியுடன் மேகத்தை நிகர்த்து, ஸபையிலிருப்பவர் அனைவர்க்கும் எதிர்முகமாகி அரசர்கள் அனைவரையும் நோக்கி மிகவும் ஸந்தோஷத்தை விளைவிக்கவல்ல ஹிதமான வாக்யங்களை ஸ்பஷ்டமாக இங்ஙனம் உரைத்தனன். 'ஸபையீர்களே! மிகுந்த விஸ்தாரமுள்ள இந்த ராஜ்யத்தை எனது பூர்விகர்களாகிய ரகுமஹாராஜர் முதலிய அரசர்கள் தாம்பெற்ற பிள்ளையைப் போல் மிகுந்த ப்ரீதியுடன் பாதுகாத்து வந்தார்களென்பது உங்களுக்குத் தெரியவருமல்லவா? அவர்களது வம்சத்திற் பிறந்த நானும், அந்த இக்ஷ்வாகு வம்சத்தவர்களாகிய அரசர்கள் யாவரும் ஸுகமாக ரக்ஷித்துக்கொண்டு வந்ததுபற்றி ஸுகத்துக்கே உரியதாயிருக்கின்ற இந்த ராஜ்யத்துக்கெல்லாம் இப்பொழுதும் ஸுகம் உண்டாகும்படி விரும்புகின்றனன். பூர்விகர்களாகிய அரசர் நடந்த மார்க்கத்தையே அனுஸரித்து நானும் ஜாகரூகனாகி எப்போதும் ஏமாறுமல் எனது சக்திக்கு உரியபடி ப்ரஜைகளைப் பாதுகாத்து வந்தனன். எதிரில்லாத பராக்ரமத்துடன் ஶ்வேதச்சத்ரந்தரித்துக் கிழத்தனம் வரையிலும் ஏகாதிபத்யத்துடன் ராஜ்யஞ் செய்து, உலகத்திற்கெல்லாம் நியமத்துடன் ஹிதத்தைச் செய்துகொண்டு வந்தேனாகையால், அந்த



420. தசரதன் ராமாபிஷேகத்தைப்பற்றி ப்ரஜைகளுடன் கலந்தாலோசித்தல்.

வெள்ளைக்குடையின் நிழலில்தானே காலங்கடக்கப்பெற்று எனது சரீரமானது கிழத்தனம் அடைந்துவிட்டது. பலஆயிரமாண்டுகள் ஆயுளைப் பெற்று ஜீவித்திருந்த எனது சரீரமானது இப்பொழுது ஜீர்ணமாய்விட்டது. நான் கிழவனாய்விட்டேன். ஆகையால் இனிச்ரமப்பட முடியாதிருக்கின்றனன். ஆனதுபற்றி நான் இளைப்பாற விரும்புகின்றனன். உலகத்தில் தர்மத்தைப் பரிபாலனஞ் செய்யும் பாரம் கேவலம் எளிதில் நிறைவேற்றக் கூடியதல்ல. அரசர்களின் ப்ரபாவமாகிய ஸௌர்யாதிகளைப் பெற்றே அதற்கு முயலவேண்டும். இந்த்ரியநிக்ரஹம் இல்லாமற் போகுமாயின், எப்படிப்பட்ட ப்ரபாவங்களுடையவர்க்கும் அது பரிக்கமுடியாதிருக்கும். அனேக ஸாதனங்களைக் கொண்டே நிர்வஹிக்கவேண்டியிருப்பதால் அது மிகவும் பெருமை பெற்றது. நான் அப்படிப்பட்ட பாரத்தை நிர்வஹித்துக்கொண்டு வந்தேனாகையால் மிகவும் ஓய்ந்திருக்கின்றனன். இங்ஙனம் ஓய்ந்து முதிர்ந்துமிருக்கிற நான் ப்ரஜாரக்ஷணத்தில் குமாரனை நியமித்து, அந்தரங்கர்களாகிய இந்த ப்ராஹ்மணோத்தமர்கள் யாவரும் அனுமதி கொடுக்கப்பெற்று இளைப்பாற விரும்புகின்றனன். எனது மூத்தகுமாரனாகிய ராமன் பராக்ரமத்தில் இந்திரனுக்கு ஒப்பாயிருப்பவன்; சத்ருபட்டணங்களை வெல்லுந்திறமுடையவன். எல்லாக்குணங்களாலும் எனக்கொப்பாகவே பிறந்திருக்கின்றனன். தார்மிகசிரோமணியும் புருஷர்களில் நல்லவனுமாகிப் புஷ்யநக்ஷத்ரத்துடன் கூடிய சந்திரனைப்போல் மிதமின்றி ப்ரகாசிக்கின்ற அந்த ராமசந்திரனை ஸந்தோஷத்துடன் யௌவராஜ்யத்திற்கு நியமிக்க விரும்புகின்றனன். [1] மூவுலகங்களும் பலநாதர்

---

1 இதற்கு மூலம் —

'அநுரூபஸ் ஸவை நாதோ லக்ஷ்மீவாந் லக்ஷ்மணாக்ரஜ: ।
த்ரைலோக்யமபி நாதேந யேந ஸ்யாந் நாதவத்தரம்'

இதற்கு விசேஷார்த்தம்—(ஸ:) அந்த ராமன், (அநுரூபோநாத:) ஸஹஜஸ்வாமி, மற்றை எல்லோரும் கர்மாநுகுணமாக ஸ்வாமிக

களையுடையவையாயினும், யாதொருவனை ப்ரபுவாகப் பெற்றுச் சிறந்த நாதனையுடையனவாகுமோ, அப்படிப் பட்ட மஹாதேஜஸ்வியும் லக்ஷ்மியைப் பெருகச்செய்யுந்

---

ளாவார்; ஆகையால் ஔபாதிக ஸ்வாமிகள். (அதாவது—ஒரு நிமித்தத்தைப்பற்றி ஸ்வாமித்வம் பெற்றிருப்பார்கள்.) ராமன் ஸ்வதஸ்ஸித்தமான ஸ்வாமியாயிருப்பவன்; அன்றியே (அநுரூபঃ) அனுகதமாகிய (எல்லாவற்றையும் அனுஸரித்த) ரூபத்தையுடையவன். எல்லாவற்றிலும் வ்யாபித்திருப்பவன். அன்றியே (அநுரூபঃ) அநுப்ரவிஷ்டமான (தன்னால் உட்புகப்பெற்ற) உருவங்களையுடையவன். எல்லாப் பதார்த்தங்களிலும் உட்புகுந்து அந்தராத்மாவாகி யிருப்பது பற்றி எல்லாவற்றையும் தனக்குச் சரீரமாகக் கொண்டவன். (அநுரூபঃ-அநுஸ்யூதரூபঃ) தன்னிடத்திற் பொருந்தியிருக்கிற பலவகை ரூபங்களையுடையவன். பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களாகிய பலவகை ரூபங்களையுடையவன். அன்றியே (அநுரூபঃ-அ-உருபঃ) உ-என்றால் சிவன். உருபனென்றால் சிவனைப்போன்ற உருவத்தையுடையவன். அனுருபனென்றால் சிவனைப்போன்ற உருவமற்றிருப்பவன். சிவனைப்போல் விரூபாக்ஷனல்லன்; செந்தாமரைக் கண்ணன். (விநாயঃ) (வி) பக்ஷிகளுக்கு (நாயঃ) மேலாகிய ஹம்ஸம். (விநாயஸ்யாயம் வைநாயঃ) ஹம்ஸத்தோடு ஸம்பந்தமுடையவன். ஹம்ஸத்தை வாஹனமாகக் கொண்ட ப்ரஹ்மதேவன். (ஸவைநாயঃ) அந்த ப்ரஹ்மதேவனோடு கூடியவன், (நாபிகமலத்தில் ப்ரஹ்மாவைப் பரித்திருப்பவன்). அன்றியே (விநாயঃ) பக்ஷிகளுக்குத் தலைவனாகிய கருடன்.(விநாயஸ்யாயம் வைநாயঃ) அந்தக்கருடனோடு ஸம்பந்தமுடையவன். கருடவாஹனனென்க. நாதனாகைக்கு ஹேது சொல்லப்படுகின்றது. (லக்ஷ்மீவாந்) லக்ஷ்மீதேவியையுடையவன். லக்ஷ்மீதேவியைப் பத்தினியாக வுடையவன். ஸ்ரீயঃபதித்வம் வேதாந்தங்களில் பரதத்வத்திற்கு ஸூசகமாகச் சொல்லப்படுகின்றது. அங்ஙனம் பரதத்வமுடையனா யிருப்பதுபற்றி இவன் நாதனாகத் தகும். (லக்ஷ்மணாக்ரஜঃ) இங்கு லக்ஷ்மண சப்தத்தால் கைங்கர்யலக்ஷ்மி அமைந்தர்வகள் மாத்திரம் சொல்லப்படுகின்றனர். அக்ரஜன் என்கையால் கைங்கர்யத்தில் மனமூன்றிய ஆஶ்ரிதர்களுக்குத் தம்பிக்குத் தமையன்போல் ஸ்வாதீனமாயிருப்பவனென்று ஆஶ்ரிதபாரதந்த்ர்யம் தோற்றுகின்றது. வேதாந்

**தன்மையுள்ள லக்ஷ்மணனுக்குத் தமையனுமாகிய ராம னே உங்களுக்குத் தகுந்த நாதன். வெகுகாலமாக நான் தரித்திருந்த இந்தப் பூமிபாரத்தை எனது ஜ்யேஷ்ட**

---

தங்களிற் கூறப்படுகிற பத்னீவிசிஷ்டத்வம் (பத்னியாகிய ஸ்ரீமஹா லக்ஷ்மியோடு கூடியிருக்கை) (லக்ஷ்மீவாந்) என்று சொல்லப்பட்டது. (லக்ஷ்மண ஸ்ரீ ரஜ:) என்பதனால் பரிஜனங்களோடு கூடியிருக்கையும் இங்குச் சொல்லப்பட்டது. ப்ரஹ்மருத்ராதிகளும் நாதர்களென்று ப்ரஸித்தி பெற்றிருக்க இவன் தகுந்த நாதனென்பது எப்படி ? என்னில்—சொல்லுகிறார்—(த்ரைலோக்யமபி) மூவ்வுலகங்களும். அன்றியே—நித்யம் அநித்யம் நித்யாநித்யம் என்று மூன்று வகைப்பட்டிருக்கிற ஸமஸ்த லோகங்களும். (யேந நாயேந) எந்த நாதனால். இவனுடைய நாதத்வம் நித்யமென்று தோற்றுகிறது. (நாயவத்) நாதனையுடையது. இப்படி சொல்வதனால் இந்த்ராதிகளின் நாதத்வம் அநித்யமாகையால் அவர்கள் நாதரன்றென்பது ஸூசிப்பிக்கப்படுகின்றது. (நாயவத்தரம்) சிறந்த நாதனையுடையது. இதனால் ப்ரஹ்மருத்ராதிகள் ஸாமான்யமாக நாதர்களேயன்றிச் சிறந்த நாதர்களாகமாட்டார்களென்பது தெரியவருகின்றது. ஏனெனில்—'யுககோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ:। புநஸ்த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதி சுச்ரும' (நான்முகன் பலவாயிரங் கோடியுகங்களாக விஷ்ணுவை ஆராதித்து மூன்று லோகங்களுக்கும் தான் அதிபதியா யிருக்குமதிகாரத்தைப் பெற்றனன்) என்றும், 'மஹாதேவஸ் ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வாத்மாநம் தேவதேவோ பபூவ' (மஹாத்மாவாகிய சிவன் ஸர்வமேதமென்னும் யாகத்தில் ஆத்மஹோமம் செய்து பரமாத்மாவாகிய விஷ்ணுவை ஆராதித்து தேவர்களுக்குந் தேவனாயிருக்குந் தன்மையைப் பெற்றனன்)என்று விஷ்ணுவின் அனுக்ரஹத்தினால் ப்ரஹ்மருத்ரர்கள் நாதராயினரென்று கூறப்பட்டது. ஆகையால் மூன்று லோகங்களும் அவர்களால் நாதனையுடையவை யாகுமேயன்றி, நாதவத்தரங்களாகா. விஷ்ணுவினாலேயே நாதவத்தரங்களாகின்றன. (நாயவத்தரம்) என்கையால் ரக்ஷகனுடைய பெருமையைப் பார்க்கிலும் ரக்ஷகத்வம் சுருங்கி யிருக்குமென்று தோன்றுகின்றது. ரக்ஷகனுடைய பாரிப்பே அதிகமாயிருக்குமென்றபடி.

குமாரனாகிய ராமனிடத்தில் இறக்கிவிட்டு, இப்பூமிக்கு இப்படிப்பட்ட நன்மையை உண்டாகச்செய்து, இவ்வருத்தந் தீர்ந்திருக்கலாமென்று எண்ணுகின்றனன். ராஜ்ய பாரத்தினால் ஓய்ந்து முதிர்ந்திருக்கின்ற எனக்கு இந்த ராமனை அபிஷேகஞ்செய்ய நினைத்த காரியம் தகுந்த ப்ரயோஜனத்தை விளைவிக்கவற்றா யிருப்பின் நான் இதை நன்றாக ஆலோசித்துச் செய்யத் தொடங்கினேனென்று உங்களுக்குத் தோற்றியிருப்பின் இதைச் செய்ய நீங்கள் எனக்கு அனுமதி கொடுப்பீர்களாக. இது எனக்கு அனுகூலமாயிருக்குமாயின், இதை விட்டு நான் மற்றொன்றை எப்படி செய்யலாகும்? உங்களனுமதியின்றி நான் மாத்திரம் எதைத்தான் செய்ய நேரும்? 'உனக்கு எது ப்ரியமோ, அதைச் செய்யலாம்' என்பீர்களாயின், ராமனுக்கு அபிஷேகஞ் செய்யும் விஷயத்தில் எனக்கு ப்ரீதி உண்டு; ஆயினும் மற்றொரு ஹிதம் உளதாயின், அதை ஆலோசித்துச் சொல்வீர்களாக. பக்ஷபாதத்துடன் கூடிய நான் செய்யும் ஆலோசனையைக்காட்டிலும் பக்ஷபாதமில்லாத மத்யஸ்தர்கள் செய்யும் ஆலோசனை வேறுபட்டு அதிசயித்தேயிருக்கும். அது யுக்திப்ரதியுக்திகளையிட்டு விசாரஞ்செய்ய நேரப்பெற்று மேலான பொருளடக்க முடையதாயிருக்கும்' என்றிவ்வாறாகத் தசரதமன்னவன் சொல்லிக்கொண்டிருக்கையில், அரசர்கள் அனைவருங்கேட்டு, மழையைப் பெய்யும் மேகத்தைக்கண்டு மயில்கள் ஸந்தோஷங்கொண்டு 'கேகா' என்று சப்திப்பதுபோல், அந்தத் தசரதமன்னவனைக் கொண்டாடினர். அந்த ஸபையிலுள்ள ஜனக்கூட்டம் அனைத்தும் அவ்வரசன் மொழிந்த வார்த்தைக்கு ஸந்தோஷம் அடைந்து 'மேல் மேல்' என்று உரப்புடன் கோஷிக்கையில், அந்த அழகான த்வனியானது, அவர்களது ஸ்நேஹத்தை

வெளித்தோற்றுவித்துக்கொண்டும், ப்ரதித்வனிகளை மேலெழச்செய்துகொண்டும் அவ்வாஸ்தான மண்டபத்தின் விமானத்தைக் குலுங்கச்செய்வதுபோல் மேற்கிளம்பிற்று. 'தனக்குக் கிழத்தனம் வருங்காலத்தில் யுவராஜாவை ஸ்தாபித்துக்கொடுப்பது அரசர்களுக்குரிய தர்மமும், ப்ரஜைகளுக்கு ப்ரயோஜனத்தை நிறைவேற்றிக் கொடுக்கவற்றும்' என்று அறிந்து மொழிந்த அந்தத் தசரதமன்னவனது அபிப்ராயத்தைத் தெரிந்துகொண்டு வஸிஷ்டர் முதலிய ப்ராஹ்மணர்களும், அரசர்களும் பட்டணத்திலுள்ளவர்களும் பக்கத்து தேசத்தினின்றும் வந்தவர்களுமாகிய ப்ரஜைகளுடன் கூடி யுக்தாயுக்தங்களை விசாரித்து ஆலோசித்து, எல்லோரும் ஐகமத்யம் பெற்றுத் தந்தமது மனத்தில் தனித்தனியே நிச்சயித்துக்கொண்டு அந்தத் தசாத மன்னவனைப் பார்த்து 'மஹாராஜரே! நீர் பல் ஆயிரமாண்டுகள் பிழைத்து முதிர்ந்தவராய்விட்டீர். ஆகையால் ராமனை இளவரசனாகப் பட்டாபிஷேகஞ் செய்வீராக. நாங்கள் நீண்டபுஜ தண்டங்களை யுடையவனும் மிகுந்த பலமுடையவனும் ரகுகுலதிலகனுமா

1 இதற்கு மூலம்—
'இச்சாமோஹி மஹாபாஹும் ரகுவீரம் மஹாபலம்।
கஜேந மஹதா யாந்தம் ராமஞ் சத்ராவ்ருதாநநம்' என்று.
இதற்கு விசேஷார்த்தம்—'நான் ரக்ஷித்துக் கொண்டிருக்கையில் ராமனுக்கு அபிஷேகஞ் செய்வதை என் விரும்புகின்றீர்கள்?' என்று ராஜன் வினவினதாகக்கொண்டு நாங்கள் ரக்ஷணத்தின்பொருட்டு ராமாபிஷேகத்தை விரும்பவில்லை. ராமன் குமாரனாயிருக்கும்பொழுது உள்ள அழகைக் கண்டனம். இனிப் பட்டாபிஷேகங்கொண்டருளும்போது உண்டாகும் அழகைக்கண்டு அநுபவிக்க அபிஷேகத்தை ஆசைப்படுகின்றனமென்று ஜனங்கள் சொல்லுகின்றனர்—(இச்சாமः) நீ கட்டின பட்டம் முதலியவற்றோடு கூடியிருக்கையில் காண விரும்புகின்றனம். (இச்சாமः) இச்சைமாத்ரமே எங்களுக்

கிய ராமன் பெரிய பட்டத்து யானையின்மீது ஏறிக்கொண்டு வெளுத்த குடையின் நீழலில் முகம் மறைந்ததும் மறையாததுமாக வந்துகொண்டிருக்கையில் எப்பொழுது காணப்போகிறோமென்று நெடுநாளாக விரும்பிக்கொண்டிருக்கிறோமல்லவா'? என்றனர். இங்

குள்ளது; காரியத்தை நிறைவேற்றுவது உன்னுடையதன்றோ? (இச்ஸாமः) எங்களுக்கு ஆசையிருக்கின்றது; ஆயினும் 'ஶ்ரேயாம்ஸி ஸஹுவிக்நாநி' என்கிறபடியே நன்மைக்கே பல இடையூறுகள் உண்டாகுமாகையால் நாங்கள் விரும்புகிற நன்மை இடையூறின்றி நடந்தேறுமோ? நடந்தேறாதோ? தெரியவில்லை. (இச்ஸாமः) அபிஷேகத்துக்கு இடையூறுகள் உண்டாகுமோ? உண்டாகாமற் போகுமோ? எங்களாசைக்கு யாதோரிடையூறும் உண்டாகாதன்றோ? மேலும் அழகான வஸ்துவைப்பார்க்க ஆசைப்படுவது லோகஸித்தமேயன்றோ? (இச்ஸாமः) நீ எல்லாவிதத்திலும் குறையின்றி ரக்ஷித்துக் கொண்டிருந்ததுபற்றி வாயாற் சொல்லலாகாதென்று மனத்திலேயே ஆசைப்பட்டுக்கொண்டிருந்தனம்; இப்பொழுது உனது அபிப்ராயம் தெரியவந்ததனால் ஆசைப்படுகிறோம் என்று ஸ்பஷ்டமாக வாயாற் சொல்லுகின்றனம். (இச்ஸாமः) இப்பன்மையால் சிலர்க்கு விருப்பமுண்டாகிச் சிலர்க்கு விருப்பமில்லையென்பதின்றி எல்லோரும் விரும்புகின்றனமென்று தோற்றுகிறது. (ஹி) இவ்விருப்பம் உலகத்தில் உள்ளவர் அனைவர்க்கும் உண்டென்பது ப்ரஸித்தமே. இது எல்லோர்க்கும் உண்டென்பது 'ஜநகோஷோ மஹாநபூத்' என்றும் 'விமாநங் கம்பயந்நிவ' என்றும் நாட்டார் பண்ணின ஆரவாரத்தில் கோப்புக் குலைந்த உனது மாளிகைகளிலும் விமானங்களிலும் காணும்படியன்றோ இருக்கின்றது. (ஹி) நீ நாதனாயிருக்கும்பொழுதே ராமனை இப்பூமிதேவி நாதனாக விரும்பி ஸ்வயம்வரஞ்செய்து மாலையிட்டபோதே இவ்விஷயம் நீ அறிந்திலையோ? (மஹாபாஹும்) நீண்ட புஜங்களையுடையவன். அவனது பாஹுபலத்திற்கு இப்பூமியைப் பரிபாலனஞ்செய்வது எவ்வளவு? மஹாபுருஷ லக்ஷணமன்றோ மஹா பாஹுவாயிருக்கை, (ரகுவீரம்) 'தீநாந்நாகோரக்ஷவவः' (ராகவன் தரித்ரர்களை தானத்தினால் வெகுமதிப்பவன்) என்று ப்ரஸித்திபெற்ற ராகவன். (ரகுவீரம்) ரகுவம்சத்தவர்களைக்காட்டிலும் தார்மிகனாயிருப்ப

னம் ஸபையிலுள்ளவர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்டுத் தசரதமன்னவன் அவர்களது மனத்திலுள்ள ஸந்தோஷத்தைத் தெரிந்துகொண்டும் அதை அறியாதவன்போல் அபிநயித்து அவர்கள் வாயாற்ருனே

---

வன். (மஹாவலம்) மஹாபலமுடையவன் திடமான ப்ரதிஜ்ஞையுடையவன். ப்ரதிஜ்ஞை தவருதிருக்குமென்னும் தனது விரதத்தில் திடமாக ஊன்றியிருப்பவன். (ஹஜேந) யானையினல். சத்ருஞ்ஜயமென்னும் பேர் பெற்ற பட்டத்து யானையின்மீது ஏறிக்கொண்டு அபிஷேகத்தின் பொழுது நீ கொடுத்த கிரீடம் பட்டபந்தம் முதலியவை யானையின்மீதேறிலன்றே எங்களுக்குப் புலப்படும்; தேர் முதலியவற்றில் ஏறமாயின் அவை எங்களுக்குத்தோற்ரு. (மஹாஹஜேந) ராமன் மஹாசஜம்போல் நடக்கவல்லவனுகையால் அவனது நடையைப்போன்ற நடையுடைய மஹாகஜமாகிய சத்ருஞ்ஜயத்தின்மீது ஏறிக்கொண்டு. (ஆயாந்தம்) மஹா வீதிநடுவில் வீட்டுவாசல்தோறும் வருகையில். (ஆயாந்தம்) 'ஏகஸ்ஸ்வாது ந புஞ்ஜீத' (ருசியுள்ள பதார்த்தத்தை ஒருவனுகப் புசிக்கலாகாது) என்கிறபடியே அவன் வீதியில் வரும்போது நாங்கள் மாத்ரமேயன்றி எமது பிள்ளைகள் பெண்டிர்கள் முதலியவர்களோடு காணவேணும். (ராமம்) ஸௌந்தர்யத்தினல் ஜனங்களின் மனத்தைக் களிக்கச் செய்யவல்ல ராமனை. (ஸத்ராவ்ருதாநநம்) த்ருஷ்டிதோஷம் வாராதபடி குடையினல் மறைக்கப்பட்ட முகத்தையுடையவன். குடையினல் முகம்கொஞ்சம் தென்பட்டுக்கொண்டு கொஞ்சம் தென்படாமலிருப்பதனல் முகமெல்லாம் பார்க்கவேண்டுமென்னும் ஆசையை உண்டு பண்ணுகின்ற ராமனை. அன்றியே- காற்றிலும் வெயிலிலும்பட்டு வாடாமலிருக்கும்படி அந்தரங்கர்களாகிய நண்பர்களால் பூசக்ரக்குடையைக்கொண்டு மறைக்கப்பட்ட முகத்தை யுடையவன். அன்றியே—'ஏகச்ஸத்ராம் மஹீம்ஹுங்க்தே' என்று ஸாமுத்ரிகத்திற் சொல்லியபடி ஒரேரீதியுடன் வட்டமாகிக் குடைபோன்று விசாலமான சிரஸ்ஸை யுடையவனென்று தோற்றுவிப்பதும் மஹீபாலர்கள் யாவரும் இவனது தடையின்றிய கட்டளைக்குட்பட் டிருப்பவர்களென்றுரைப்பதுமாகி வெளுத்த பெருங்குடையினல் மிகவும் அழகுபொருந்தி விளங்குகின்ற முகத்தையுடையவன். (ரவு வீரம், என்பதனல் யானையின்மீதேறி யுட்காரும்பொழு

அதைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று விரும்பி அவர்களைப் பார்த்து' ஓ மன்னவர்களே ![1] நான் ராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யவேண்டுமென்னும் வார்த்தையைச் சொல்லக் கேட்டவுடனே முன்பின் ஆலோசிக்காமல் ராமன் ப்ரபுவாகவேண்டுமென்று விரும்புகின்றீர்கள் ; ஆனதுபற்றி இதில் எனக்கு ஸம்சயமாயிருக்கின்றது. நீங்கள் எதுக்காக ராமாபிஷேகத்தை ப்ரார்த்தித்திர்களோ, அதை எனக்கு யதார்த்தமாகச் சொல்லவேண்டும். நான் தர்மத்தைத் தவறாமல் பூமியைப் பரிபாலனஞ்செய்து கொண்டிருக்கையில், நீங்கள் இளமைப் பருவம் நீங்காத எனது குமாரனை யுவராஜாவாகப் பார்க்க விரும்புகின்றீர்கள். இது எப்படி? என்னிடத்தில் அபராதமயாது?"

---

றுண்டான வீர்யவிசேஷம் சொல்லப்படுகின்றது. (மஹாவலம்) என்ற விதனால் மதம்பிடித்த யானையையும் த்ருணீகாரஞ்செய்து எதிர் போகவல்லவனென்று தோற்றுகின்றது. (ராமம்) தன் ஸௌந்தர்யத்தினால் யானையை அலங்கரித்துக்கொண்டிருப்பவன். (ஸத்ராவ்ருதாநநம்) தனது முககாந்திவெள்ளத்தினால் எப்படிபோ, அப்படியே குடையின் நுனி மறைப்பதனாலும் உண்டான ஸௌந்தர்யத்தை யுடையவன். இங்ஙனம் அபிஷேகத்திற்குப் பின்பு உண்டாகும் ஸௌந்தர்ய சோபை முதலியவற்றை வர்ணித்துச் சொல்வதனால் அபிஷேகஞ் செய்யவேண்டும் என்று ஜனங்களின் அபிப்ராயம் தோற்றுவிக்கப் பட்டது.

1 'நான் சொன்ன மாத்திரத்திலேயே நீங்கள் ராமனை ப்ரபுவாக விரும்புவதைக் கண்டால் ஹிம்ஸகனாகிய இந்தத் தசரதனை விட்டுத் தப்பி ராமன் கையில் எப்பொழுது போய்விழுவோம்' என்று நீங்கள் முறையிட்டுக் கொண்டிருந்ததாகத் தோற்றுகின்றது. நீங்கள் இங்ஙனம் விரும்புவது— 'நான் பரிபாலனஞ் செய்வது சரியல்லவென்றோ? அல்லது—ராமன் என்னைக்காட்டிலும் குணநிகன் என்றோ?' என்று தெரியாமல் ஸந்தேஹப்படுகின்றேன்'என்று தசரதன் கருத்து.

என்றனன். பின்பு அங்குள்ள அரசர்களும் பட்டணத்தி லும் க்ராமத்திலும் வஸிப்பவர்களாகிய ஸகல ஜநங்களும் மஹாநுபாவனுகிய அம்மன்னவனைப் பார்த்து 'மஹீ பாலனே! 1உமது புதல்வனுக்குக் குணங்கள் பல உண்டு.

---

1 இதற்கு மூலம் –

வஹவோ ந்ருப கல்யாண குணாঃ புத்ரஸ்ய ஸந்தி தே'

இதற்கு விசேஷார்த்தம்—(ந்ருப) மனுஷ்யர்களைப் பரிபாலிப் பவனே! இந்த ஸம்போதனத்தினுல் தசரதனுக்கும் ராமனுக்கும் உள்ள தாரதம்யம் தோற்றுவிக்கப்பட்டது. உனக்கு மனுஷ்யர்களைப் பரிபாலனஞ்செய்யுங் குணமொன்றுமாத்ரமேயுள்ளது; ராமனிடத் தில் கல்யாணகுணங்கள் பல இருக்கின்றன. (தே புத்ரஸ்ய) உன் புத் திரனுக்கு என்ற இதனுல் ராமன் அங்ஙனம் பல குணங்கள் நிறை யப்பெற்றிருக்கை உன் வயிற்றில் பிறந்தமை பற்றியே உண்டாயிற்று. (குணாঃ) என்னும் பன்மையால் 'குணங்கள் பல' என்று ஸித்தித் திருக்கையில், மீளவும் (வஹவঃ) என்றவிது 'இவை கணக்கிடமுடி யா' என்று தோற்றுவிக்கைக்காக என்று தெரிய வருகின்றது. (புத்ரஸ்ய குணাঃ) என்று பிள்ளையின் குணங்களென்று ஜன்மஸித் தங்களாகச் சொல்லுகையால் 'அவை ஸ்வாபாவிகங்கள்' என்று தெரி விக்கப்பட்டன. (கல்யாணঃ) ஸமஸ்த ஹேயங்களுக்கும் விரோதிக ளாயிருப்பவை. தாங்கள் சுபங்களாயிருக்கை மாத்ரமேயன்றி துஷ்டங்களானவற்றைச் சேரவொட்டாமல் பரிஹரிக்குந்தன் மை யுடையவை. இங்ஙனம் ராமனுக்கு ஸ்வாபாவிகானவதிகா திசயாஸங்க்யேயகல்யாண குணகணம் சொல்லப்பட்டது. ஸ்வா பாவிக—ஸ்வபாவஸித்தங்கள். அனவதிகாதிசய—எல்லையற்ற மே ன்மையுடையவைகள். அஸங்க்யேய—கணக்கற்றிருப்பவைகள். கல் யாண—ஸமஸ்த ஹேயங்களுக்கும் விரோதிகளா யிருப்பவைகள். ஹேயம்-தோஷம். குணகணம்-குணஸமூஹம்.' ராமனது குணங் களுக்குப் பரவசர்களாகி மெய்ம்மறந்து அபிஷேகஞ்செய்யச்சொன் னேமன்றிச் செய்யவேண்டுமென்று நினைவிட்டுச் சொன்னேமல் லோம்' என்று ஜனங்களின் கருத்து.

1 தேவனே! சிறந்த குணங்களும் மிகுந்த புத்தியும் நிரம்பப்பெற்றுத் தேவர்களுக் கொப்பாகி விளங்கும் உமது புதல்வனாகிய ஸ்ரீராமபிரானுடைய குணங்கள் சத்ருக்

---

1 இதற்கு மூலம்—

'ருணாந் ருணவதோ தேவ தேவகல்பஸ்ய யீமத:।
ப்ரியாநாநந்தநாந் க்ருத்ஸ்நாந் ப்ரவக்ஷ்யாமோதிய தாந்ஸ்ருணு'

இதற்கு விசேஷார்த்தம்—(ருணவதோ ருணாந்) குணங்களையுடையவனாகிய ராமனது குணங்களை என்கையால்— குணங்கள் அவனிடத்தில் ஏறிடப்பட்டவையல்லவென்றும் ஸ்வபாவஸித்தங்களேயாயிருப்பவை யென்றும் தோற்றுகின்றது. (தேவகல்பஸ்ய) தேவதைகளை நிகர்த்திருக்கின்ற ஸ்ரீராமபிரானுடைய, என்கையால்— இப்படிப்பட்ட குணங்கள் ராமனிடத்தில் ஸம்பாவிதங்களே (இருக்கத்தக்கவையே) என்று தோற்றுகின்றது. (யீமத:) சிறந்த புத்தியுள்ள. இதனால்—புத்தி ஜனிதமான ஜ்ஞானம் சொல்லப்பட்டது. (ருணவத:) என்று குணங்களையுடையவனாகச் சொல்லும்பொழுதே குணங்களில் ஒன்றாகிய ஜ்ஞானகுணமும் உண்டென்று சொல்லப்பட்டதன்றோ? திரியவும் (யீமத:) என்று அதைச் சொன்னது எதுக்காக என்னில் 'ப்ராஹ்மணர்கள் வந்தனர்; வஸிஷ்டரும் வந்தனர்' என்னில்— ப்ராஹ்மணர்களில் வஸிஷ்டரும் உள்ளடங்கியிருக்கையில் மீளவும் அவரைச் சொன்னது எப்படி அவருக்கு ப்ராதான்யத்தை (தலைமையைக்) காட்டுமோ, அப்படியே இங்கும் ஜ்ஞானத்தைத் திரியவும் சொன்னது. அதன் ப்ராதான்யத்தைக் காட்டுகைக்கேயாகையால் புனருக்தி (சொன்னதையே மீளவும் சொல்லுகை) இல்லை. குணங்கள் (ப்ரியாந்) என்கையால் கல்யாணங்களாயிருப்பவையென்றும் (ஸகல ஹேயங்களுக்கும் விரோதிகளாயிருப்பவையென்றும்), (க்ருத்ஸ்நாந்) என்கையால் கணக்கிடமுடியாதவையென்றும் சொல்லப்பட்டன. (அதிய) இப்பொழுது என்கையால்— இதுவரையில் நீ கேளாமையால் நாங்கள் சொல்லவில்லை. இப்பொழுது கேட்டாயாகையால் சொல்லுகின்றோம். (ப்ரவக்ஷ்யாம:) ப்ரவசனஞ் செய்கின்றோம். ப்ரவசனஞ் செய்கையாவது— தன்னைக் கேட்டவர்களுக்குத் தெரியும்படி உபதேசஞ் செய்கை. இதனால் பகவானுடைய குணங்களை உபதேசிப்பதற்கு எல்லோரும் அதிகா

களுக்கும் ஸந்தோஷத்தைக் கொடுப்பவைகளா யிருக்கின்றன. பின்னும் அநிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களைத் தரவல்லவைகளாகையால் யாவர்க்கும் ஆனந்தத்தை விளைவிக்கின்றன. எங்கும் ப்ரஸித்திபெற்ற அக்குணங்களை நீ கேட்பதனால் சொல்ல வேண்டியதாக நேரிட்டதுபற்றி அவை யெல்லாவற்றையும் சொல்லுகின்றோம்; கேட்பாயாக. ராமன் அமானுஷங்களாகிய (மானிடவர்க்கு நேரிடவொண்ணாத) ஸௌர்யம் வீர்யம் முதலிய குணங்களால் இந்திரனுக்கு ஒப்பாயிருப்பவன்; எவ்விதத்திலும் வீணாகாத பராக்ரமமுடையவன்; இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்த அரசர்கள் யாவரினும் மேலாயிருப்பவன்; உலகத்தில் ராமனொருவனே ஸத்புருஷனென்னலாகும். ஸத்யத்திலும் மற்றை தர்மத்திலும் மிகுந்த ஆஸக்தியுடையவன்; தர்மமும் அதற்குப் பலனாகிய ஸம்பத்தும் ராமனிடத்திலேயே நேராக நிலைபெற்றிருக்கின்றன. (அதாவது—மற்றொருவர் ஸஹாயமின்றி ராமனொருவனே அவைகளை நிர்வஹிக்கவல்லவன்.) அவன் ப்ரஜைகளுக்கு ஸுகத்தை விளைவிப்பதில் சந்திரனைப் போன்றவன்; பொறுமையில் பூமிக்கு நிகரானவன்; புத்தியில் ப்ருஹஸ்பதிக்கு ஒப்பானவன்; பராக்ரமத்தில் தேவேந்திரனை நிகர்த்தவன்; ஸாமான்யமாயும் விசேஷமாயுமுள்ள தர்மங்களெல்லாம் உணர்ந்தவன்; தான்செய்த ப்ரதிஜ்ஞையைத் தவறாதிருப்பவன்; தாழ்ந்தாரோடும் தனது மேன்மையையும் பிறர் தாழ்ச்சியையும் பாராமல் ஒருநீராகக்கலக்குந் தன்

ரமுள்ளவர்களே; தெரிந்தவனிடத்தில் தெரியாதவன் கேட்கவேண்டியதே' என்று தோற்றுகின்றது. (ஶ்ருணு) செவிகொடுத்துக் கேட்பாயாக. ராமனது குணங்களைக் கேட்பாயாயின் நிரதிசயானந்தத்தில் ஆழ்ந்து மெய்ம்மறந்து போவாயாகையால் எவ்விதத்திலாவது மனத்தை நிலைப்படுத்திக்கொண்டு ஊக்கத்துடன் கேட்பாயாக வென்று கருத்து.

மையுடையவன்; குணங்களிலும் தோஷத்தையேயிடுந் தன்மையாகிய அஸூயையற்றவன்; ஆஶ்ரிதர்களின் அபராதங்களைப் பொறுக்குந் தன்மையன். இவ்வளவேயன்றி அவன் கோபித்துக்கொண்டவர்களையும் மனவருத்தமுற்றவர்களையும் குளிர்ந்த உரைகளால் மனத்தெளிவு பெறச் செய்யுந் திறமுடையவன்; இனிப்பாகமொழியுந் தன்மையன்; பிறர் செய்த உபகாரம் அணுவாயினும் அதைப் பெருமலையாக நினைத்திருப்பவன்; இந்திரியங்களையெல்லாம் வென்றவன்; ஆஶ்ரித ஜனங்களை விட்டுப் பிரியில் தரிக்கமாட்டாதிருக்குந் தன்மையுடையவன்; யாவராலும் ஸுகமாக அணுகத்தக்கவன். எவ்வித ஸங்கடங்கள் நேர்ந்தபொழுதிலும் நினைத்த காரியம் நிறைவேறும் வரையில் மனந்தளராதிருப்பவன்; என்றும் அழியாத ஸாமர்த்திய முடையவன்; ஆஶ்ரிதர்களுக்குஸ்வாதீனமாயிருப்பவன்; பொறாமையற்றவன். அவன் ஸகலப்ராணிகளுக்கும் ப்ரியங்களும் ஸத்யங்களுமாகிய உரைகளை

---

1 இதற்கு மூலம்—

'ப்ரியவாதீச ஹூதாநாம ஸத்யவாதீச ராகவவ:।

வஹூஸ்ருதாநாம வ்ருத்தாநாம ஸ்ராஹ்மணாநாமுபாஸிதா॥

இதற்கு விசேஷார்த்தம்—(ஸத்யவாதீச ப்ரியவாதீச) ஸத்யத்தையே உரைப்பவனாயினும் 'ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாந்நப்ரூயாத் ஸத்யமப்ரியம்' என்கிறபடியே கேவல ஸத்யத்தையேயாவது கேவலம் ப்ரியத்தையேயாவது சொல்லாமல் ஸத்யமும் ப்ரியமுமாகியவற்றையே சொல்பவன். சகாரத்தினால் ப்ரியமாயினும் அஸத்யமாயிருப்பின் அதைச் சொல்லமாட்டானென்று தோற்றுகின்றது. (ப்ரியவாதீ) வெயிற்காலத்தில் ஒடுக்கத்தினால் பிளந்த நிலத்தில் நன்கு மழையைப் பெய்யும் மேகத்தைப்போல் மிகவும் குளிர்ந்த உரைகளை உரைப்பவன். இவ்வித உரைகள் அந்தப்புர ஸ்த்ரீகளிடத்திலும் தாய் தந்தைகளிடத்திலும் வஸிஷ்டர் முதலிய பெரியோர்களிடத்திலும் மாத்ரமேயன்றி, (ஹூதாநாம்) ஸா

உரைக்குந்தன்மையன்; சாஸ்த்ரங்களில் மிகவும் ஆராய்ச்சிபெற்றப் பெருமையுமமைந்த ப்ராஹ்மணர்களைப் பணி

மான்யமாக ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் அவ்வித உரைகளை உரைப்பவன். (ஸத்யவாதீச) எல்லோர்க்கும் ப்ரியவர்த்தை மாத்ர மேயன்றி ஸத்யத்தையுமுரைப்பவன். ப்ராணிகளுக்கு ஹிதங்களும் ப்ரியங்களுமாகியவற்றையே உரைப்பவன். (ராகவஃ) ரகுவம்சத்திற் பிறந்தவன். ரகுராக்ஷஸ ஸம்வாதம் முதலியவற்றில் ப்ரியங்களும் ஸத்யங்களுமானவற்றையே உரைப்பது ரகுவம்சத்திற் பிறந்தார்க்கு ப்ரஸித்தமாயிருக்கின்றது. ஆகையால் இங்ஙனம் பேசுவது அந்த வம்சத்திற்குரிய தர்மமேயென்று தெரிய வருகின்றது. இங்ஙனம் பேசவேண்டுமென்கிற எண்ணம் கேவலம் புஸ்தகங்களைத் தானாகப் படித்ததனாலாவது, தன்னைத் தான் பண்டிதனாக நினைத்ததனாலாவது உண்டானதன்று. (வஹுஶ்ருதாநாம்) பல ஆசிரியர்களிடத்தில் பல சாஸ்த்ரங்களைப் பலவாறாகக் கேட்டுத் தெளிந்தவர்களும், (வ்ருத்தாநாம்) சீலத்திலும் வயதிலும் பெரியோர்களாகிய, (ப்ராஹ்மணாநுபாஸிதா) ப்ராஹ்மணர்களிருந்த இடந்தேடித் தானே சென்று அவர்கள் சொல்லும்படிக்கு, அவர்கள் காலும் தன்னுடைய தலையுமாக அனுவர்த்தனஞ் செய்ததனாலுண்டானது. அன்றியே— இங்ஙனம் பேசுவதற்குரிய குணங்கள் பெற்றிருக்கின்றோமென்று இறுமாந்திருப்பானோ? என்னில்—அதில்லை. தனக்கு உண்டான குணஸம்ருத்திக்கு த்ருப்தி அடையாமல் மேன்மேலும் ஜ்ஞானம் ஸம்பாதிக்க வேண்டுமென்று எண்ணங்கொண்டு, (வஹுஶ்ருதாநாம்) ஜ்ஞானவான்களின் இருப்பிடந்தேடிச்சென்று, பல புஷ்பங்களிலிருந்து ஸாரத்தைப் பெற்றுக்கொள்ளும் வண்டுகளைப்போல் பலபேர்களிடத்தினின்றும் ஜ்ஞானஸாரம் பெற்றவரான (ப்ராஹ்மணாநுபாஸிதா) 'ஸா வித்யா யா விமுக்தயே' (மோக்ஷத்தின் பொருட்டுக்கற்கப்பட்ட வித்யையே வித்யை) என்கிறபடி ப்ரஹ்ம வித்யாநிஷ்டர்களை யன்றி 'வித்யாந்யா ஶில்பநைபுணம்' என்கிறபடியே செருப்புக் குத்தக் கற்ற வித்யையோபாதி சிஷ்பலங்களாகிய வித்யைகளில் மனஞ்சென்றவர்களன்று. (உபாஸிதா) அவர்களிருப்பிடஞ்சென்று அனுவர்த்திப்பனேயன்றித் தனது மாளிகைக்கு அவர்களை வரவழைத்துக் கேட்பவனல்லன்.

யும் ஸ்வபாவமுடையவன். அங்ஙனம் பெரியோர்களைப் பணிவதனால் அவனுக்கு ஔதார்யம் முதலிய குணங்களைப்பற்றி விளங்கிவரும் கீர்த்தியும், பராக்ரமம் முதலியவைகளால் உண்டாகும் புகழும், சத்ருக்களை அடக்குவதற்குரிய ஸாமர்த்யமும் ஒப்பின்றி மேன்மேலும் பெருகிவருகின்றன. ராமனுக்கு தேவர்களும் அஸுரர்களும் மனிதர்களும் உபயோகஞ்செய்கிற அஸ்த்ரங்கள் யாவும் நன்றாகத்தெரியும். அவன் நன்கு வேதாத்யயநஞ் செய்து வ்ரதங்களை ஆசரித்து ஸமாவர்த்தனம் பெற்றவன். வேதங்களை அதன் அங்கங்களோடு க்ரமந் தவறாமல் அறிந்தவன். அவன் ஸங்கீதத்தில் பூமியிலுள்ளவர் யாவர்க்குந் தலைவனாயிருப்பான். அவனது மாதாபித்ரு வம்சங்கள் இரண்டும் பரிசுத்தங்களா யிருப்பவை. வம்சங்களைப்பற்றியன்றித் தானாகவும் அவன் பரிசுத்தனாயிருப்பவன். எவ்வித ஸங்கடத்திலும் அவன் மனக்கலக்கம் பெறான்; மிகுந்த புத்தி அமைந்தவன்; தர்மார்த்தங்களை ஆராய்ந்துரைப்பதில் மிகுந்த வல்லமை அமைந்தவர்களும் எங்கும் சிறப்புற்றவர்களுமாகிய ப்ராஹ்மணர்களால் நன்கு கற்பிக்கப் பெற்றவன். அவன் க்ராமங்களுக்காவது நகரங்களுக்காவது நன்மையைக் குறித்துப் போர்புரிய நேரும்பொழுது லக்ஷ்மணனுடன் கூடிச் சென்று, வெற்றியைப்பெறாமல் திரும்புகிறதில்லை. இங்ஙனம் அவன் யுத்தத்தினின்றும் வெற்றியைப் பெற்றுத் திரும்பி யானையின்மேலாவது ரதத்தின்மேலாவது ஏறிக்கொண்டு பட்டணம்வந்து, எப்பொழுதும் பட்டணத்து ஜனங்களைத் தனது பந்து ஜனங்களைப்போல் பார்த்துத் தமப்பன் தர்மபத்னியிடம் பிறந்த பிள்ளைகளை விசாரிப்பதுபோலவே 'உமது குழந்தைகள் க்ஷேமமா? அக்னி கார்யங்கள் முதலிய செய்கடன்கள் இடையூறின்றி நடக்

துவருகின்றனவா? உமது பார்யைகள் ப்ரீதியோடிருக்கின்றார்களா?[1] ப்ரேஷ்யவர்க்கங்களும் சிஷ்யவர்க்கங்களும் கட்டளை தவறாமல் நடக்கின்றனவா?' என்று மிகுந்த பரிவுடன் எல்லோருடைய க்ஷேமத்தையும் க்ரமமாக விசாரிக்கின்றனன். மேலும், புருஷர்களில் சிறப்புற்றவனாகிய அம்மஹாநுபாவன் எங்களைப் பார்த்த பொழுதெல்லாம் 'உமது சிஷ்யர்கள் நீங்கள் கட்டளையிட்ட கார்யங்களைத் தடையின்றி உடனே முயன்று நடத்திக்கொண்டு உங்களைக் களிப்புறச் செய்கின்றார்களா?' என்று வினவிக்கொண்டிருப்பான். பின்னும் அவன் தனிகனென்றும் தரித்ரனென்றும் ப்ராஹ்மணனென்றும் சூத்ரனென்றும் எவ்வித பேதத்தையும் பாராமல் மனுஷ்யர்களில் எவனுக்காயினும் கஷ்டம் நேரிடுமாயின் 'ஐயோ! எனது பரிபாலனம் சரியாயிராமற் போனதுபற்றியன்றோ இவர்களுக்கு இப்படிப் பட்டவை ஸம்பவித்தன' என்று அவர்களைக்காட்டிலும் மிகவும் துயரம் அடைந்திருப்பான். பின்னும், அவன் அவர்களுக்குப் பிள்ளை பிறப்பது முதலிய உத்ஸவங்கள் நேரிடுமாயின், அவ்வுத்ஸவங்களெல்லாவற்றிலும் தந்தை தன் பிள்ளைக்குண்டான உத்ஸவங்களில் ஸந்தோஷிப்பதுபோல் தானும் அவர்களைக்காட்டிலும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்திருப்பான். அவன் எவ்வித ஸங்கடங்கள் நேர்ந்தபோதிலும் ஸத்யத்தையே பேசுந்தன்மையன்; நல்ல வில்லாளி; பெரியோர்களைப் பணியும் ஸ்வபாவமுடையவன்; ஐம்புலன்களையும் அடக்கி நடத்துந்திறமுடையவன். அவன் யாரைப்பார்த்தபோதிலும் தானே முற்பட்டுப் புன்னகையுடன் பேசுந்தன்மையுடையவன்; ஸர்வப்ரகாரத்தாலும் தர்மத்தையே பின்சென்று எவ்வளவு கஷ்டங்கள் வந்தபோதிலும் அதைக்கைவிடாதவன்; தன்னைப்பற்றினவர்களுக்கு நன்மையையே நடத்துந்தன்

1 ப்ரேஷ்யர்-வேலைக்காரர்.

மையுள்ளவன். வீண்பேச்சுக்களிலும் விதண்டாவாதங்க ளிலும் அவனுக்கு எப்பொழுதும் விருப்பம் உண்டாகிற தில்லை. வாதஞ்செய்ய நேரும்பொழுது அவன் ப்ருஹஸ் பதியைப்போல் மேன்மேலும் யுக்திகளை உபன்யஸிக்க வல்லவன். அழகிய புருவங்களும், நீண்டு செவ்வரியோ டிய கண்களும் பெற்று உலகங்கட்கெல்லாம் அழகியனு கிய அந்த ராமபிரானுனவன், சாவுக்கும் பிற்காலியாத சௌர்யமும், தான் விகாரமொன்றுமடையாமலே பகை வரைப் பறந்தோடச் செய்யவல்ல வீர்யமும், யாவராலும் உட்புகமுடியாத சக்ரவ்யூஹம் முதலிய வ்யூஹங்களோடு கூடிய பலவகை ஸைன்யங்களைப் பெற்றவராகிய தேவா ஸுரர்களையுங் கணிசியாத மிகுந்த உத்ஸாஹத்துடன் பகைவரை அடக்கவல்ல பராக்ரமமும் பொருந்தி, விஷ் ணுதேவனே இங்ஙனம் மானிடத்தன்மை பெற்று வந்த னனே என்னும்படி விளங்குகின்றனன். ப்ரஜைகளைப்பரி பாலிக்கும் விதம் அனைத்தையும் அவன் நன்கறிந்தவன்; இந்த்ரியசாபலமின்றியிருப்பவன். அவன் ஒருவனே மூவு லகங்களையும் பரிபாலனஞ் செய்யவல்லவன். இனி இந்தப் பூமிமாத்ரத்தைப் பரிபாலிப்பது அவனுக்கு ஒரு விஷய மோ? அவன் கோபித்துக்கொள்வானுயின், கோபமுண் டாகச் செய்தவனைத் தொலைக்காமல் தணியான். அவ னுக்கு ஒருவனிடம் அனுக்ரஹம் பிறக்குமாயின், அவ னது கருத்தை யீடேறச் செய்யாமல் ஒழியான். ஆகை யால்அவனது கோபமாயினும் அனுக்ரஹமாயினும் ஒரு பொழுதும் வீணுகிறதில்லை. ந்யாயப்படி கொல்லவேண் டியவனைத் தவருமல் கொன்றேவிடுகின்றனன். கொல் லத் தகாதவனிடத்தில் கோபித்துக்கொள்வதுமில்லை. எவன் விஷயத்தில் களிப்புறுகின்றனனே, அவன் விரும் பியவற்றை யெல்லாம் மனக்களிப்புடன் கொடுக்கின்

றனன். ராமனது குணங்களில் சாந்தியே தலைமைபெற்றிருக்கும். பின்னும் அவனது குணங்கள் ஸமஸ்த ப்ரஜைகளும் ஆசைப்படத்தக்கவைகளாயிருக்கும். ஆனதுபற்றியே, அவை யாவர்க்கும் ஆனந்தத்தை விளைவிக்கின்றன. வெயிற்காலத்து ஸூர்யன் கிரணங்களோடுகூடி ப்ரகாசிப்பதுபோல், ராமன் இப்படிப்பட்ட குணங்களோடு கூடி ப்ரகாசிக்கின்றனன். இங்ஙனம் குணஸம்ருத்தி அமைந்து, பராக்ரமத்தின் பெருக்கினுல் எல்லாரிலும் அதிசயித்து திக்பாலகர்களை நிகர்த்திருக்கிற ஸ்ரீராமபிரானைப் பூமியும் (பூமியிலுள்ள ஜனங்களும்) தமக்கு நாதனுகும்படி விரும்பிற்றன்றோ? நீ செய்த பாக்யத்தினுல் நன்மையை விளைவிக்கும்பொருட்டு இக்குமாரன் உனக்குப்பிறந்தனன். ரகுகுலத்திற்பிறந்த மஹானுபாவனே! உனது பாக்யத்தினுலன்றோ இவன், மரீசியின் புத்ரராகியகாஸ்யபரைப்போல் புத்ரர்களுக்கு வேண்டிய குணங்களெல்லாம் பொருந்தியிருக்கின்றனன். தேவர்களும் அரசர்களும் ரிஷிகளும் கந்தர்வர்களும் உரகர்களும் மற்றை தேசங்களிலுள்ள ஜனங்களும் மற்றைப்பட்டணங்களிலுள்ள ஜனங்களும் அந்தப்புரத்திலுள்ளவர்களும் அதற்கு வெளிப்பட்டவர்களும் நமது தேசத்திலும் பட்டணத்திலும் வஸிக்கிற ஜனங்களும் ஆகிய அனைவரும் எங்கும் கீர்த்திபெற்ற சீலம்பொருந்திய ராமனுக்கு பலமும் ஆரோக்யமும் ஆயுஸ்ஸும் வளர்ந்துவரும்படி ப்ரார்த்திக்கின்றனர். [1]வயது முதிர்ந்திருக்கிற ஸ்த்ரீகளும் யௌவனப்பருவம் நிரம்பியபெண்களும், விரும்பியவற்றை

1 இதற்கு மூலம்—

'ஸ்த்ரியோ வ்ருத்தியாஸ் தருண்யஸ் ச ஸாயம்ப்ராதஸ்ஸமாஹிதா:|
ஸர்வாந் தேவாந்நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யஸஸ்விந:'

இதற்கு விசேஷார்த்தம—(ஸ்த்ரிப:) மிகுந்த காம்பீர்யமுள்ளவர்களாகையால் மனத்திலுள்ள அபிப்ராயத்தை ஸ்பஷ்டமாக வெளிப்

யெல்லாங் கொடுப்பதுபற்றி எங்கும் புகழ் பெற்றி ருக்கிற தேவர்களனைவரையும் காலையிலும் மாலையிலும்

படுத்தாத ஸ்த்ரீகளும். இப்படிப்பட்டவர்களாயினும் ராமனிடத்தில் தமக்குள்ள ப்ரீதியை அடக்கி மறைக்கமுடியாமல் தேவதா நமஸ்காரத்தினால் வெளிப்படுத்தினரென்று தோற்றுகின்றது. (வ்ருத்தாஃ) கிழவிகள். அவயவங்களில் பாடவமற்றவர்களாகையால் (பாடவம்-ஸாமர்த்யம்) சோம்பலுற்று எந்தக்கார்யங்களிலும் ஆதரமற்றிருப்பவர்கள். இப்படிப்பட்டவர்களாயினும் ராமனிடத்திலுள்ள ப்ரீதியின் மிகுதியால் சுருசுருப்புற்று அவனுக்காக தேவதா நமஸ்காரஞ் செய்தனர். (தருண்யஃ) யௌவனப்பருவம் பெற்றவர்கள். யௌவனமதமுடையவர்களாகையால் தகுந்த விவேகமற்றவர்கள். இப்படிப்பட்டவர்களாயினும் ராமனிடத்தில் தமக்கு உண்டான அதிக ப்ரேமாவேசத்தினால் அப்படிப்பட்ட புருஷனது நன்மைச்சாக தேவதாநமஸ்காரஞ் செய்வது யுக்தமென்றறிந்து அங்ஙனஞ் செய்தனர். (ஸாயம் ப்ராதஃ) இது மத்யாஹ்னத்திற்கும் உபலக்ஷணம். மூன்று ஸந்த்யைகளிலுமென்றபடி. (ஸமாஹிதாஃ) ஊக்கத்துடன் கூடியவர்களாகி. ராமனது குணங்களுக்கு வசப்பட்டு மனப்பூர்வமாக அங்ஙனஞ் செய்தனரென்று ப்ரேமத்தின் மிகுதி தோற்றுகின்றது. (ராமஸ்யார்த்தே) ராமனது ப்ரயோஜனத்திற்காக. ராமனுக்கு நன்மை உண்டாகும்பொருட்டு. தமது ப்ரயோஜனத்திற்காகவன்றென்று கருத்து. (ஸர்வாந் தேவாந்) ஸமஸ்த தேவர்களையும். அன்பின் மிகுதியினால் மதியெல்லா முள்கலங்கி மயங்கி— 'இந்த தேவதை உயர்ந்தது, இது தாழ்ந்தது, இது வேதங்களிற் சொல்லிய தைவம், இது ஸாமான்ய தைவம்' என்று தாரதம்யம் பாராமல் ஸகல தேவதைகளையும் நமஸ்கரித்தனரென்று அன்பின்மிகுதியினால் உண்டான கண்மூடித்தனம் தோற்றுகின்றது. ராமனால் காக்கப்படும் தேவதைகளை ராமனைக் காக்கும்பொருட்டு நமஸ்கரிப்பது ப்ரேமார்தத்வத்தின் கடைசியெல்லை. (யஶஸ்விநஃ) இது தேவர்களுக்கு விசேஷணம். விரும்பியவற்றைக் கொடுப்பதனால் புகழ்பெற்ற தேவர்களென்றபடி. ஸ்த்ரீகளுக்கு விசேஷணமாயின்— தேவதாந்தர நமஸ்காரம் ஸ்வரூபவிருத்தமாயினும் ராமனது நன்மைச்சாகவாகையாலும், ராமனிடத்தில் உண்டான ப்ரீதியில் காலாழ்ந்திருப்பதுபற்றி உண்டாவ

ராமனுக்கு நன்மை உண்டாகும்பொருட்டு மிக்க மன ஊக்கத்துடன் வணங்குகின்றனர். மன்னவனே! அவர்கள் ப்ரார்த்தித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீராமாபிஷேகமானது உனது அனுக்ரஹத்தினால் நிறைவேறுமாக. அரசர்களிற்றலைவனே! கருநெய்தல் புஷ்பம்போல் கறுத்த நிறமுடையவனும் பகைவரையெல்லாம் பறந்தோடச் செய்யவல்லவனுமாகிய உனது குமாரன் இளவரசனாயிருக்க யாங்காண்போமாக. மஹாராஜனே! நீ விரும்பியவற்றையெல்லாம் கொடுக்க வல்லவனன்றோ? தேவர்க்குந்தேவனாகிய விஷ்ணுவை நிகர்த்தவனும் உலகங்களுக்கெல்லாம் நன்மையைச் செய்ய முயன்றவனும் உலகத்திலுள்ள உதாரர்கள் யாவரும் வந்து வணங்கும்படி மிகுந்த ஔதார்யகுணம் அமைந்தவனும் உனது ஆசைக்குமாரனுமாகிய ராமனை எங்களுக்கு நன்மையுண்டாகும் பொருட்டு மனக்களிப்புடன் சீக்ரமாக ராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்விப்பது உனக்குத் தகுந்ததாயிருக்கின்றது. இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## { பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்களைச் சேர்த்தல். }

அந்தச் சபையிலுள்ளவர் யாவரும் தாமரைமலர் போன்ற தமது கைகளைக் கூப்பிச்செய்த நமஸ்காரங்களையெல்லாம் அவ்வரசன் அங்கீகரித்து அவர்களை நோக்கிப்ரியங்களும் ஹிதங்களுமாகிய உரைகளைக்கொண்டு'நீங்கள் எனதுமூத்தகுமாரனும் எனக்குப்ரீதியை விளைவிப்பவனுமாகிய ராமனை யௌவராஜ்யத்தில் வீற்

---

தோன்றுகையாலும் ஸ்வரூபவிருத்தமாகாது. ஆகையால் ஸ்வரூப விருத்தமானவற்றைச் செய்தார்களென்னும் அயஶஸ்ஸு அந்த ஸ்த்ரீகளுக்கில்லை. யஶஸ்ஸே உள்ளதென்றபடி.

றிருக்கும்படி விரும்புகின்றீர்கள். இது எனக்கு மிகவும் ஸந்தோஷமாயிற்று. ஆ! எனது ப்ரபாவத்திற்கு நிகருண்டோ? இல்லை' என்று மொழிந்து, அந்தச் சபையிலுள்ளப்ராஹ்மணர்களை இனியஉரைகளால் மேன்மைப்படுத்தி, அவர்கள் அருகிலிருந்து கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே வஸிஷ்டரையும் வாமதேவரையும் பார்த்து[1] 'இப்பொழுது வந்திருக்கிற இந்தச் சித்திரைமாஸமானது மிகவும் அழகாகி ஆனந்தத்தை விளைக்கின்றது; இப்படிப்பட்ட மங்களகார்யங்கள் செய்வதற்குத் தக்கபடி பரிசுத்தமாயிருக்கின்றது; காடுகளும் இப்பொழுது புஷ்பித்து விளங்குகின்றன. ராமனுக்கு யௌவராஜ்யாபிஷேகஞ் செய்வதற்கு வேண்டியவற்றையெல்லாம் ஸித்

---

1 இதற்கு

'சைத்ரஶ்ஶ்ரீமாநயம்மாஸ: புண்ய: புஷ்பிதகாநந:'

இதற்கு விசேஷார்த்தம்—(சைத்ர:) சித்திரை மாஸம். மற்றவரைக் காட்டிலும் ராமன் எப்படியோ, அப்படியே மற்றை மாஸங்களைக்காட்டிலும் இந்தச் சித்திரைமாஸமானது ப்ரதானமாயிருக்கின்றது (அயம் மாஸ:) இம்மாஸம். நாம் ராமாபிஷேகத்தைச் செய்ய விரும்புமபொழுதே வந்திருக்கின்ற மாஸமென்றபடி. (அயம்மாஸ:) ராமனது அவதாரத்திற்கு ஹேதுவே அவனது பட்டாபிஷேகத்திற்கும் ஹேதுவாயிற்று. அதாவது—ராமன் அவதரித்தபோது நேர்ந்தாற்போலவே அவனது அபிஷேக ஸமயத்திலும் இந்தச் சித்திரை மாஸம் நேர்ந்ததென்றபடி. (ஸ்ரீமாந்) மேலான ஸுகத்தைக் கொடுப்பதனால் ராமன் எப்படி யாவர்க்கும் ராஜாவாகி யிருக்கின்றானோ; அப்படியே ஸுகத்தைக் கொடுப்பதனால் இமமாஸமும் மற்றை மாஸங்களில் மேலாயிருக்கின்றது. (புண்ய:) அழகாயிருக்கின்றது. (புஷ்பிதகாநந:) காடுகளெல்லாம் புஷ்பிக்கப் பெற்றது: நகரம் நமது ப்ரயத்னத்தினாலேயே அலங்காரஞ் செய்யப்பெற்றது; இது அப்படியன்றித் தன்னைத் தானே அலங்கரித்துக் கொண்டது. அல்லது ராமன் ஸுவர்ணமயமான கிரீடந் தரிக்கும் ஸமயத்தில் தானும் புஷ்பகிரீடந் தரித்தது.

தப்படுத்திவைப்பீர்களாக' என்றுரைத்தனன். இங்ஙனம் அம்மன்னவன் மொழிந்து முடிக்கும்பொழுதே, 'வெகுகாலமாக ராமாபிஷேகத்தைப் பார்க்கவேண்டுமென்கிற நமது விருப்பம் ஈடேறப் பெற்றதன்றோ?'' என்று மிகுந்த ஸந்தோஷம் அடைந்து அங்குள்ள ஜனங்களெல்லோரும் பெருங்கோஷமிட்டனர். அந்த ஜனகோஷம் மெல்லமெல்ல அடங்கிவருகையில், ஜனங்களுக்கு அதிபதியாகிய அந்தத் தசரத மஹாராஜன் வஸிஷ்டமுனிமன்னவரையும் வாமதேவரையும் பார்த்து 'மஹானுபாவர்களே! ராமனது அபிஷேகத்திற்கு எந்தெந்த கார்யங்கள் செய்யவேண்டுமோ அவற்றை நடத்தும்படியாகவும் அவைகளுக்கு எந்தெந்த உபகரணங்கள் வேண்டுமோ அவையெல்லாவற்றையும் ஸித்தஞ் செய்யும்படியாகவும் இப்பொழுது கட்டளையிடவேண்டும்' என்றனன். அரசன் மொழிந்த மொழியைக் கேட்டு அந்தணர் தலைவராகிய வஸிஷ்டர், வாமதேவருடன் கலந்து, அம்மன்னவனெதிரில் கையைக் கூப்பி நின்றுகொண்டிருக்கும் ராஜகார்யத்தில் பழகிய ஸுமந்த்ரன் முதலிய அதிகாரிகளைப் பார்த்து 'நீங்கள் ஸுவர்ணம் முதலியவற்றையும், மற்றுமுள்ள ரத்னங்களையும், உபஹாரங்களையும், நெல்லு பயறு உளுந்து துவரை முதலிய ஸமஸ்த ஓஷதிகளையும், வெளுத்த புஷ்பமாலைகளையும் பொரிகளையும், வேறு வேறாகக் கிண்ணங்களில் தேன்களையும் நெய்களையும், வைதிகங்களுக்குரியபடி ஒருவரும் உடுத்துக்களையாத புதியவஸ்த்ரங்களையும், ரதத்தையும், ஸமஸ்த ஆயுதங்களையும், சதுரங்க ஸைன்யத்தையும், சுபலக்ஷணங்கள் பொருந்தின யானையையும், விசிறிகளைபோல் உபயோகப்படும்படியான இரண்டு வெண்சாமரங்களையும், த்வஜத்தையும், வெள்ளைக் குடையையும், அக்னியை நிகர்த்து விளங்கும் நூறு பொற்குடங்களையும், பொற்கோப்பிகள் பூட்டின கொம்புகளையுடைய வ்ருஷ

பத்தையும், அவயவங்களொன்றிலுங் குறையின்றி யெல்லாம் நிறைந்திருக்கிற புலித்தோலையும், ஆகிய இவை யெல்லாவற்றையும் ஸூர்யோதயமாகும்பொழு தேதசரதனது அக்னிஹோத்ர க்ருஹத்தில் கொண்டு வந்து சேர்க்கவேண்டும். இவையேயன்றி, மற்றும் சந்தனம், புஷ்பம் முதலிய மங்கள த்ரவ்யங்கள் யாவை யாவை வேண்டியிருக்கின்றனவோ அவை யெல்லா வற்றையுங்கூட ஸித்தப்படுத்திவைப்பீர்களாக. ராஜ க்ருஹத்தின் வாசற்படிகளிலும் பட்டணத்து வாசற் படிகளெல்லாவற்றிலும் நற்சந்தன ஜலங்களைத் தெளித் துப் பூமாலைகள் கட்டிக் குமுகுமென்று வாஸனை கம ழும்படியான தூபங்களையும் போகட்டு நன்கு அலங்கா ரஞ் செய்யவேண்டும். ப்ராஹ்மணர்கள் கோடிகோடி யாகக் கணக்கின்றி வந்தார்களாயினும் அவர்களுக்கு த்ருப்தியாகப் போதும்படி பாலுந்தயிரும் பெருகக் கலக்கப்பெற்ற மேலான அன்னங்களையும் ஸித்தப்படுத்தி வைத்து, நாளையதினம் காலையில் வரும் சிறப்புற்ற ப்ரா ஹ்மணர்களுக்கு ஸத்காரஞ் செய்து அவ்வன்னத்தைக் கொடுக்கவேண்டும். பின்னும் அவர்களுக்கு நெய்யும் தயிரும் பாலும் பொரியும் புஷ்கலமாக தக்ஷிணைக ளும் கொடுக்கவேண்டும். நாளையதினம் காலையில் ஸூர்யோதயமானவுடனே ஸ்வஸ்திவாசனம் நடக்கும். அதற்காக ப்ராஹ்மணர்களை யெல்லாம் அழைப்பிக்க வேண்டும். அவர்கள் வந்து உட்காரும்படி ஆஸனங்க ளையும் ஸித்தப்படுத்தி வைக்கவேண்டும். வீடுகள் தோ றும் கொடிமரங்கள் கட்டுவிப்பீர்களாக. ராஜமார்க்க மெங்கும் ஜலந்தெளித்து நனையச் செய்வீர்களாக. ராஜ க்ருஹத்தில் முதற்கட்டில் அபிஷேகம் நடத்தும் ப்ரா ஹ்மணர்கள் நிறைந்திருப்பார்களாகையால், இரண்டாங்

கட்டில் நட்டுவர்களும் பாடகர்களும் தாஸிகளும் நன்கு அலங்கரித்துக்கொண்டு வந்திருக்க வேண்டும். அப்பங்களும் குழைக்கட்டைகளும் வைத்துக்கொண்டிருக்கிற மனிதர்களையும், தக்ஷிணை கொடுப்பவர்களையும், புஷ்பமாலைகளைத் தருபவர்களையும், தனித்தனியே அனுப்பி தேவாலயங்களிலும் நாற்சந்தி வீதிகளிலும் ராஜமார்க்கங்களிலுள்ள வ்ருக்ஷங்களின் அருகிலும் நிறுத்தி, ப்ராஹ்மணர் முதலியவர்களுக்கு தக்ஷிணைகளையும் பக்ஷணம் முதலியவற்றையுங்கொடுக்கும்படி செய்யவேண்டும். ஸேவகர்கள் எல்லோரும் நீண்ட கத்திகளை இடையிற் கட்டிக்கொண்டு கவசங்களைத் தரித்து நிர்மலமான வஸ்த்ரங்களை உடுத்து ராமாபிஷேக மென்னும் மஹோத்ஸவம் நடக்கப்பெற்ற மஹாராஜ க்ருஹத்தின் வாசலில் ஸித்தமாய் வந்து சேரவேண்டும்' என்றனர். இங்ஙனம் கார்யங்களில் மிகவுந்தேர்ந்திருக்கிறப்ராஹ்மணஶ்ரேஷ்டர்களாகிய அவ்விருவரும் அவ்விடம் தாம் செய்யவேண்டிய கார்யங்களை மந்த்ரிகளுக்கு ஆஜ்ஞாபித்து, தாஸீபரிஜனங்களை வரவழைக்கை முதலான கார்யங்களையும் அரசனுக்குத் தெரிவித்து நிறைவேற்றிய பின்பு, 'கார்யங்களை யெல்லாஞ் செய்து விட்டோம்' என்று மனத்தில் ஸந்தோஷம் உண்டாகப்பெற்று, உடம்பெங்கும் மயிர்க்கூச்சல் அடைந்து மேனியெல்லாம் அவ்வானந்தம் வழிய, அம்மன்னவனிடம் வந்து 'நீர் சொன்ன சொற்படி எல்லாவற்றையும் செய்வித்தனம்' என்றனர். பிறகு அந்தத் தசரத சக்ரவர்த்தியும் ராமாபிஷேகத்தைப்பற்றிய ஸந்தோஷத்தினால் மிகவும் ஒளிபெற்று விளங்கி, ஸுமந்த்ரனைப் பார்த்து 'மந்த்ரிசிகாமணி! நீ புறப்பட்டுச் சென்று, எல்லாவற்றிலும் தேர்ந்த மதியுடையோனாகிய நமது ராமனை விரைவில் அழைத்துக்கொண்டு வருவா

யாக' என்றிவ்வாறு கூறினன். அதைக் கேட்ட ஸுமந்த்ரனும் 'அப்படியே ஆகட்டும்' என்று அரசனது கட்டளைப்படி புறப்பட்டுச் சென்று, ரதிகர்களில் தலைவனாகிய ராமனைத்தேரில் ஏற்றிக்கொண்டு அவ்விடம் அழைத்து வந்தனன். ஸுமந்த்ரன் ராமனை அழைத்துக்கொண்டு வரப்போன பின்பு, அந்தக் கொலுமண்டபத்தில் உட்கார்ந்திருந்த கிழ்தேசத் தரசர்களும் வடதேசத்தரசர்களும் மேனாட்டரசர்களும் தென்னாட்டரசர்களும் ம்லேச்சப்ரபுக்களும் மின்னும் வனங்களிலும் பர்வதங்களிலும் வாஸஞ்செய்கிற ஆடவிகர்களும் ஆகிய இவர்கள் அனைவரும் அப்பொழுது தேவேந்த்ரனைத் தேவர்கள் சூழ்ந்திருப்பதுபோல், தசரதமஹாராஜனைச் சூழ்ந்துகொண்டனர். தேவர்களின் நடுவில் விளங்குகின்ற தேவேந்த்ரன்போல் அவ்வரசர்களின் நடுவில் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிற அந்தத் தசரத மஹாராஜன் மேடை மீதிருந்து தேரில் ஏறிக்கொண்டு ராஜமார்க்கத்தில் வருகின்ற ராமபிரானைக் கண்டனன். அவன் போக ரஸானுபவத்தில் கந்தர்வராஜனைப்போன்றவன். போகபரம்பரையில் ரஸிகனேயன்றி வீரரஸத்தில் சுவடறியானென்றுரைக்கலாகாது; அவன் உலகமெங்கும் ப்ரஸித்திபெற்ற மிகுந்த பராக்ரம முடையவன். அப்படிப்பட்ட பௌருஷத்திற்குத் தகுந்ததாகிய நீண்ட புஜதண்டங்கள் பொருந்திய திருமேனியும் பெற்றவன். வாகைப் பூவை நிகர்த்து ம்ருதுவான மேனியுடையவனாகையால் உள் வலிவுடையவனல்லனென்னப்படாது; மிகுந்த பலமுடையவன். அப்படிப்பட்ட பலத்திற்குத் தகுந்தபடி மதித்த யானையைப்போல் கர்வமும் அழகும் பொருந்திய மெதுவான நடையுடையவன். அவன் சந்த்ரனைக் காட்டிலும் மிகவும் அழகான திருமுகமண்டலம்

பெற்று, எவ்வளவு பொழுது பார்த்தாலும் மேன்மேலும் புதிது புதிதாகத் தோற்றி ஆநந்தத்தை விளைவித்துக் கொண்டிருப்பவன். பின்னும் அவன் அழகினாலும் ஔதார்யத்தினாலும் ஸௌசீல்யத்தினாலும் ஸ்த்ரீகள் மாத்ரமேயன்றிப் புருஷர்களுடைய கண்களையும் மனத்தையும் கவர்ந்து மோஹிக்கச் செய்பவன். வெயிற்காலத்து வெயிலில் அகப்பட்டுத் தபிக்கப் பெற்ற ஜனங்களுக்கு ஸந்தோஷத்தை விளைக்கின்ற மேகத்தைப்போல் ப்ரஜைகளுக்கு மிகுந்த மனக்களிப்பைக் கொடுப்பவன். இப்படிப்பட்ட இந்த ஸ்ரீராமபிரானானவன் ராஜமார்க்கத்தில் வரும்பொழுது, அரசன் கொலு மண்டபத்தின் மேடையிலிருந்து இடைவிடாமல் எவ்வளவு பார்த்துக் கொண்டிருந்தபோதிலும் க்ஷணந்தோறும் புதிது புதிதாக ப்ரீதிக்கிருப்பிடமாயிருப்பது பற்றி த்ருப்தி பெறவில்லை. ஸுமந்த்ரன் அந்த ராமனைத் தேரினின்றும் கைகொடுத்துக்கீழே இறங்கச்செய்து அந்த ராஜகுமாரன் தந்தையினிடம் போகையில் கைகளைக் கூப்பிக்கொண்டு அவனுக்குப் பின்னே சென்றனன். புருஷர்களில் சிறந்தவனாகிய அந்த ராமன் ஸுமந்த்ரனுடன்கூட மன்னவனைப் பார்க்கும்பொருட்டுக் கைலாஸ பர்வத சிகரம்போல் உயர்ந்து பெருத்து விளங்குகின்ற ராஜக்ருஹத்தின்மேல் ஏறிச் சென்று கைகளைக் கூப்பிக்கொண்டு தமப்பனருகில் வந்து வணக்கத்துடன் தன்பெயர் அவன் செவியிற்படும்படி உரக்கச் சொல்லிக்கொண்டு தந்தையினது பாதங்களில் ப்ரணாமஞ் செய்தனன். (ப்ரணாமம்—நமஸ்காரம்.) அப்பொழுது தசரத சக்ரவர்த்தி, தனக்கு நமஸ்காரஞ் செய்து அஞ்சலிஹஸ்தனாகித் தன் பக்கத்திலிருக்கின்ற ப்ரியகுமாரனைப் பார்த்துக்கூப்பிய கைகளைப்பிடித்து அருகில் வரவழைத்

துக் கட்டியணைத்து, அவனுக்கு உயர்ந்ததும் மிகுந்த மேன்மையுள்ளதும் ரத்னங்கள் இழைக்கப்பெற்றதும் ஸுவர்ணமயமாகி ப்ரகாசித்துக் கொண்டிருப்பதும் அழகு பொருந்தியதுமாகிய ஓராஸனத்தைக் கொடுத்தனன். ராமனும் அவ்வாஸனத்தில் உட்கார்ந்திருந்து, ஸூர்யன் உதயமாகும் பொழுது [1] மேருபர்வதத்தில் வந்து அப்பர்வதத்தைத் தனது கிரணங்களால் ப்ரகாசிக்கச் செய்வதுபோல், அவ்வாஸனத்தைத் தனது காந்தியினுல் ப்ரகாசிக்கச் செய்தனன். சரத்காலத்தில் நிர்மலமாகிய க்ரஹங்களோடும் நக்ஷத்ரங்களோடுங் கூடிய ஆகாயத்தைச் சந்த்ரன் மேலும் விளங்கச்செய்வதுபோல், அவ்வுப்பரிகையின்மீது தசரத மன்னவன் முதலியவர்களால் நிறைந்திருக்கிற அந்தச் சபையை மிகவுந் தேஜஸ்வியாகிய ராமன நன்கு விளங்கச் செய்தனன். அச்சமயத்தில் தசரதமன்னவன், நன்கு அலங்காரஞ் செய்துகொண்டு தன் ப்ரதிபிம்பத்தைக் கண்ணுடியிற்கண்டு ஸந்தோஷிப்பதுபோல், தன்னைக் காட்டிலும் மிகவும் தேஜஸ்வியாகி ஸமஸ்த

1 ஸூர்யன் ப்ரதானமாகிய மேரு பர்வதத்தைச் சுற்றிக்கொண்டு வருகின்றுனன்றி மேருபர்வதத்திற்குப் போவதில்லை; ஆகையால் இங்கு மேருவென்றுல் அஸ்த பர்வதத்தின் ஸமீபத்திலிருக்கின்ற ஸாவர்ணி மேருபர்வதமென்று தெரிகின்றது. இங்கு (உதயமாகும் பொழுது) என்று உதயகாலத்தைச் சொல்லுகையால் அஸ்தமய பர்வதத்தின் ஸமீபத்திலிருக்கிற மேருவைச் சொல்லுகையெப்படியெனில்—உத்தர வர்ஷத்திலுள்ள ஸித்தபுரத்தில் வஸிப்பவர்களுக்கு அஸ்த பர்வதத்தின் ஸமீபத்திலேயே ஸூர்யன் உதிக்கின்றுகையால் அவர்களைப்பற்றி அஸ்தபர்வதத்தினருகிலிருக்கிற ஸாவர்ணிமேருவில் ஸூர்யனுக்கு உதயமாகை பொருந்துகின்றது.

அவயவங்களாலும் தனது ப்ரதிபிம்பம்போல் விளங்குகின்ற ப்ரியகுமாரனாகிய ராமனைப் பார்த்து ஸந்தோஷித்தனன். அப்படிப்பட்ட பிள்ளையைப் பெற்ற அம்மன்னவனன்றோ பிள்ளையைப் பெற்றவர்களில் மேலானவன்! அம்மஹீபதி புன்னகையுடன் 'ராமா' என்றழைத்து, காஸ்யபர் தன் புத்ரனாகிய தேவேந்த்ரனைப் பார்த்துரைப்பதுபோல் அப்புதல்வனைப் பார்த்து 'நீ எனக்கு மிகவும் இசைந்தவளாகிய எனது மூத்தபத்னியினிடத்தில் எனக்குத் தக்கபடி பிறந்த புத்ரனாகின்றனை; குணங்களிலும் மேலாயிருக்கின்றனை; பின்னும் எனது அன்பிற்கிருப்பிடமாயிருக்கின்றனை. இவ்வளவேயன்றி, நீ உனது குணங்களால் எம்மையும் இந்த ப்ரஜைகளையும் களிக்கச் செய்கின்றனை. இந்தக் காரணங்களைக் கொண்டு, நீ இளவரசனாகைக்குத் தகுந்திருக்கின்றனை. ஆகையால் புஷ்ய நக்ஷத்ரத்தினன்று நீ யௌவராஜ்ய பட்டாபிஷேகம் பெறுவாயாக. நீ இயற்கையாகவே மிகுந்த வினயத்துடன் ப்ரகாசிக்கின்றனை; நற்குணங்கள் அனைத்தும் நிறையப் பெற்றிருக்கின்றனை. இப்படி குணங்களெல்லாமுடையவனாகையால் உனக்குச் சொல்லவேண்டியது ஒன்றுமில்லை. ஆயினும் நேசத்தினால் உனக்கு ஓர் ஹிதஞ் சொல்லுகின்றேன், கேளாய். நீ மேன்மேலும் வினயத்தையே கைப்பற்றி எப்பொழுதும் இந்த்ரிய நிக்ரஹம் பெற்று இருப்பாயாக. [1] நீ காமத்தினாலும் கோபத்தினாலும் உண்டா

---

1 'ஸ்த்ரீ த்யூத ம்ருகயா மத்ய வாக்பாருஷ்யோக்ர தண்டதா:| அர்த்தஸந்தூஷணஞ்சேதி ராஜ்ஞாம் வ்யஸநஸப்தகம்' என்று வ்யஸனங்கள் ஏழென்று சொல்லப்பட்டன. (ஸ்த்ரீ ஸம்போகம், சூதுசதுரங்கமாடுதல், வேட்டையாடல், கள்முதலிய பானங்களைக் குடித்தல், க்ரூரமாகப்பேசுதல், கடினமாகத் தண்டனையிடுதல், தமப்பன்

கும் வ்யஸனங்களை யெல்லாம் துறந்திருக்கவேண்டும். நீ, ஸாமான்யர்களாகிய ஸேவகர்களுக்கு தர்சனங் கொடாமல் அவர்க்குக் கண்மறைவாக நின்று அதிகாரிகள் மூலமாகக் கட்டளையிட்டு, அவர்களைக்கொண்டு கார்யங்களைச் செய்வித்துக்கொள்ளவேண்டும். மந்த்ரிகள் முதலிய முக்யர்களோடு நேராகவே நின்று நன்காலோசித்துச் செய்யவேண்டிய கார்யங்களை நடத்தவேண்டும். மறைவிலிருந்து சாரர்களின் மூலமாக இதரதேச வ்ருத்தாந்தங்களையும் நேராகவே திரிந்து ஸ்வதேச வ்ருத்தாந்தங்களையும் தெரிந்துகொண்டு நடப்பாயாக. மேலும் மந்த்ரிகள் முதலிய ப்ரஜைகளெல்லோரையும் களிக்கச்செய்வாயாக. தான்யசாலைகளில் பலவகை தான்யக் குவியல்களையும், ஆயுதசாலைகளில் பலவகை ஆயுதங்களையும் நிரம்பச் சேர்த்துவைத்து

---

முதலியோர் சேர்த்து வைத்திருந்த பணத்தை வீணாக அழித்தல் ஆகிய இவ்வேழும் அரசர்களுக்குள்ள வ்யஸனங்கள்.) இவைகளில்— ஸ்த்ரீபோகம், சூதாடல், வேட்டையாடுதல், கள்குடித்தல் முதலியவை காமத்தினாலுண்டான வ்யஸனங்கள். க்ரூரமாசப்பேசுதல், கடினமாகத்தண்டனையிடுதல் முதலியவை கோபத்தினாலுண்டான வ்யஸனங்கள். அன்றியே மற்றொருவிதங் கூறுவர்-'ம்ருகயாக்ஷோ திவாஸ்வாப: பரிவாத: ஸ்த்ரியோ மத:।தௌர்யத்ரிகம் வ்ருதாட்யா ச காமஜோ தச கோ கண:' என்று வேட்டையாடுதல், பாசிகையாடுதல், பகலில் நித்ரைபோதல், பிறரை நிந்தித்தல், ஸ்த்ரீஸம்போகம், கள் குடித்தல், ஸங்கீதங் கேட்டல், கூத்துப்பார்த்தல், வீணாக வழிநடத்தலாகிய இவை காமத்தினாலுண்டானவை. 'பைசுந்யம் ஸாஹஸம் த்ரோஹ ஈர்ஷ்யாஸூயார்த்த தூஷணம்। வாக்தண்டயோஸ்ச பாருஷ்யம் க்ரோதஜோபி கணோஷ்டக:' என்று புறங்கூறுதல், ஆலோசனையின்றி அவஸரப்பட்டுக் கார்யஞ்செய்தல், கெட்ட எண்ணங்கொள்ளல், பிறர் மேன்மையைப்பொறாதிருத்தல், பிறர் குணங்களில் தோஷத்தையேறிட்டுக் கூறுதல், பதார்த்தங்களைத் தூஷித்தல், க்ரூரமாகப் பேசுதல், கடினமாகத் தண்டித்தல் ஆகிய இவை கோபத்தினாலுண்டானவை என்று.

அவைகளைக்கொண்டு ப்ரஜைகளுக்கெல்லாம் மனக் களிப்புண்டாகச் செய்து, தன்னிடம் ப்ரீதியை விளை வித்துக்கொண்டு எவன் பூமியைப் பரிபாலித்து வரு கின்றானோ அவனைப் பார்த்து அவனது பக்கத்து தேசத்தரசர்கள் அமிருதத்தைப் பெற்ற தேவர்களைப் போல் மனங்களித்திருப்பர். ஆகையால் நீயும் மனத் தை அடக்கிக்கொண்டு இங்ஙனம் நடப்பாயாக' என்ற னன். அப்பொழுது, ராமனுக்கு ப்ரியத்தையே செய்யுந் தன்மையாகிய அவனது நண்பர்கள், அங்ஙனம் தசரத மன்னவன் அவனுக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்வதாகச் சொன்ன வார்த்தையைக் கேட்டு, சீக்ர மாய்ப் புறப்பட்டு, கௌஸல்யையி னிருப்பிடஞ் சென்று அந்த வ்ருத்தாந்தத்தைத் தெரிவித்தனர். அம்மடந் தையர்மணியும் அங்ஙனம் 'ராமாபிஷேகம் நடக்கப் போகின்றது' என்னும் ப்ரியவார்த்தையைச் சொன்ன அவர்களுக்குப் பொன்களையும் பசுக்களையும் பலவகை ரத்னங்களையும் பரிசாகக் கொடுத்தனள். பின்பு ராமன் தசரத சக்ரவர்த்திக்கு நமஸ்காரஞ்செய்து, ரதத்தின் மீதேறி ஜனங்கள் குவியல் கூடிவந்து நடத்துகிற நமஸ் காரம் முதலிய பூஜைகளை அங்கீகரித்து, மிகுந்த ஒளி யுடன் விளங்குகின்ற தனது க்ருஹத்திற்குப் போய்ச் சேர்ந்தனன். அப்பட்டணத்து ஜனங்களும் 'ராம னுக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்யப் போகி றேன்' என்று மன்னவன் மொழிந்த அவ்வார்த்தையைக் கேட்டுத் தாங்கள் வெகுநாளாக விரும்பிக்கொண்டி ருந்த கார்யம் கைகூடப் பெற்று தசரதனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு வேகமாகத் தமது வீட்டிற்குச் சென்று, ராமாபிஷேகம் இடையூறின்றி ஈடேறும்படி தமது இஷ்ட தெய்வங்களை ப்ரீதியுடன் பூஜித்தனர்.

மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தசரதன் ராமனைப் பார்த்து வேகமாக அபிஷேகஞ் செய்துகொள்வா யென்று கூறுதல்.

இங்ஙனம் பட்டணத்து ஜனங்கள் எல்லோரும் புறப்பட்டுப் போகையில், பிறகு தசரத மஹாராஜன் கார்யங்களை நிச்சயித்துச் செய்யும் வகைகளெல்லாம் அறிந்தவனுகையால் மீளவும் மந்த்ரிகளுடன் கலந்து ஆலோசித்து 'நாளையதினமே புஷ்ய நக்ஷத்ரம் வரப்போகின்றது; ஆனதுபற்றிச் செந்தாமரை மலர்போல் சிவந்து அழகான கடைக்கண்களையுடைய, எனது குமாரனுகிய ஸ்ரீ ராமபிரானுக்கு நாளையதினமே யௌவராஜ்ய பட்டாபிஷேகம் நடத்தவேண்டும்' என்று நிச்சயித்தனன். பிறகு அப்பொழுதே அந்த தசரதன் க்ருஹத்திற்குள் சென்று ஸுமந்த்ரனைப் பார்த்து 'ராமனை மீளவும் இங்கு அழைத்துக்கொண்டு வருவாயாக' என்று ஆஜ்ஞாபித்தனன். ஸுமந்த்ரனும் அரசன் மொழிந்த அவ்வார்த்தையைச் சிரஸில் வஹித்து ராமனை அழைத்துக்கொண்டு வருவதற்காக விரைவில் அவனது மாளிகைக்குச் சென்றனன். அம்மாளிகையினது வாசற்காப்பவர்கள் அங்ஙனம் ஸுமந்த்ரன் வந்திருப்பதை ராமனுக்குத் தெரிவித்தனர்; ராமனும் மீளவும் ஸுமந்த்ரன் வந்திருப்பதைக் கேட்டவுடனே 'இவன் வருதற்குக் காரணம் யாதோ?' என்று சங்கித்து உடனே அந்த ஸுமந்த்ரனை உள்ளே வரவழைத்து அவனைப்பார்த்து மீளவும் எந்தக் கார்யத்திற்காக நீ இவ்விடம் வந்தனையோ, அதை யெல்லாம் எனக்குச் சொல்வாயாக' என்றனன். ராமன் இங்ஙனம் வினவியபின்பு, ஸாரதியும் அவனைப்பார்த்து 'மன்னவன் உன்னைப் பார்க்க விரும்புகின்றனன். இவ்வளவே எனக்குத் தெரியும்; அரசன் மொழிந்தனுப்பின வார்த்தை

யைக்கேட்டனையன்றோ? இனி அவ்விஷயத்தில் போகவாவது வரவாவது நீயே நிர்ணயித்துச் செய்பவன்' என்று கூறினன். ஸாரதியாகிய ஸுமந்த்ரன் இங்ஙனம் மொழியக் கேட்டு, ராமன் மீளவும் அரசனைக் காணும்பொருட்டு, சீக்ரமாக அரசனது மாளிகைக்குச் சென்றனன். தசரதனும், ராமன் வாசலில் வந்திருப்பதை வாசற்காப்பவர் வந்து மொழியக் கேட்டு, அவனுக்கு மேலான ப்ரியத்தைக்கூற உத்தேசித்து அவனை மாளிகைக்குள்ளே வரவழைத்தனன். மிகவும் அழகுபொருந்தி ரகுகுலத்திற்கு அலங்காரமாகிய ஸ்ரீராமனும் தமப்பன் மாளிகைக்குள் நுழைந்துகொண்டே தூரத்தில் நமஸ்காரஞ் செய்து வணக்கத்துடன் கைகளைக் கூப்பிக்கொண்டு தந்தையைக் கண்டனன். தசரத மன்னவன், அருகில் வந்து மீளவும் நமஸ்காரஞ் செய்கிற ஸ்ரீராமனை எடுத்து அணைத்து அழகான ஓர் ஆஸனத்தைக் கொடுத்து மீளவும் அவனைப் பார்த்து 'ராமா! நான் வெகுகாலமாக உயிர் வாழ்ந்து கிழவனுய்விட்டனன். விரும்பின போகங்களையெல்லாம் அனுபவித்தனன். [1] அப்படியே மேலான அன்னதானங்களைச் செய்துகொண்டு, அளவற்ற தக்ஷிணைகள் கொடுத்து நூறுநூறாக யாகங்களைச் செய்தனன். இப்பூமியில் ஒப்பற்ற ப்ரிய குமாரனுகிய நீயும் எனக்குப் பிறந்தனை. புருஷர்களிற் சிறந்த ராமனே! பல தானங்களைச் செய்தனன். பல யாகங்களையும் நடத்தினன். அத்யயனமும் செய்து முடித்தனன். சாஸ்த்ரங்களைத் தவறுமல் பற்பல ஸுகங்

1 'விதிஹீநமஸ்ருஷ்டாந்நம் மந்த்ரஹீநமதக்ஷிணம்। ச்ரத்தா விரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே' என்று அன்னதானமில்லாத யஜ்ஞத்தை நிந்தித்திருப்பதனுல் (மேலான அன்னதானங்களைச் செய்துகொண்டு) என்று சொல்லப்பட்டது. இதனுல்— இவன் செய்த யாகங்கள் தாமஸங்களல்லவென்று கூறப்பட்டது.

களையும் இஷ்டப்படி அநுபவித்தனன். [1] யாகங்களைச் செய்வதனுல் தேவருணத்தினின்று விடுபட்டனன். அப்படியே அத்யயனஞ் செய்து ரிஷி ருணத்தையும், உன்னைப் பெற்றுப் பித்ரு ருணத்தையும், பலவகை தானங்களைச் செய்துப்ராஹ்மண ருணத்தையும் தீர்த்துக்கொண்டனன். பற்பல ஸுகங்களை அநுபவித்தேனுகையால் ஆத்மருணத்தையும் தீர்த்துக்கொண்டவனுயினன். ஆக எல்லாம் ஆயிற்று. உனக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்வது தவிர மற்றை யாதும் எனக்குச் செய்யவேண்டியதில்லை. ஆகையால் நான் உனக்கு யாது சொல்வேனே, அதை எனக்காக நீ தவருமல் செய்யவேண்டும். அப்பா! ராமனே! இப்பொழுது ப்ரஜைகளெல்லோரும் நீ ராஜனுக வேண்டுமென்று விரும்புகின்றனர். ஆகையால் உன்னை யுவராஜனுக அபிஷேகஞ் செய்ய நினைத்திருக்கின்றனன். இதுவேயன்றி, உன்னை யுவராஜனுகச் செய்ய மற்றொரு காரணமும் உண்டாயிருக்கின்றது. எனக்கு இப்பொழுது ஸ்வப்னத்தில் பயங்கரமான அமங்க

---

1 தேவருணம் ரிஷிருணம் பித்ரு ருணம் ப்ராஹ்மணருணம் ஆத்மருணம் என்று மனிதனுக்கு ருணங்கள் ஐந்து வகைப்பட்டிருக்கும். ருணம்-கடன். இங்குக் கடனுவது—தேவதைகளுக்கும் ரிஷிகளுக்கும் பித்ருக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் ஆத்மாவுக்கும் அவஶ்யமாகச் செய்யவேண்டிய வ்யாபாரம். இவ்வைவர்க்கும் ஒருவன் உடன்பட்டிருக்கை யெப்படியெனில் —தேவதைகள் இந்த்ரியங்களை அபிமானித்து நடத்துபவர்களாகையால் இந்த்ரிய ஜயத்தை உண்டாக்கிக் கொடுத்து உபகாரஞ் செய்வதனுலும், ரிஷிகள் வாக்கை அளித்து உபகாரஞ் செய்வதனுலும், ப்ராஹ்மணர்கள் கர்மாதினங்களாகிய ஸமஸ்த ஸம்ஸ்காரங்களையும் செய்வித்துப் பாபங்களைப் போக்கி உபகரிப்பதனுலும், ஆத்மா சரீர இந்த்ரிய ஸங்காதரூபமாகி ஜ்ஞானப்ரகாசத்திற்குக் காரணமா யிருப்பதனுலும் இவ்வைவர்க்கும் செய்யவேண்டிய ப்ரத்யுபகாரமே புருஷனுக்குக் கடனுயிருக்குமென்று தெரிந்துகொள்வது.

ளக்குறிகள் பலவும் புலப்படுகின்றன. ஆகாயத்தினின்று மேகமில்லாத இடியுடன் கூடின புகையில்லாத கொள்ளிகள் பெருங்கோஷத்தோடு விழுகின்றன. எனது ஜன்ம நக்ஷத்ரத்தையும், ஸூர்யன் அங்காரகன் ராஹு என்னும் இந்த க்ரூர க்ரஹங்கள் கவர்ந்துகொண்டிருக்கின்றனவென்று சோதிடர் கூறுகின்றனர். இவ்வித அசுபக்குறி உண்டாகுமாயின் அனேகமாக அரசனுக்கு மரணமாவது உண்டாகும்; இல்லையாயின் பெருத்த ஆபத்தாவது ஸம்பவிக்கும். ஆகையால் உனக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்யவேண்டுமென்னும் இக்கருத்து மாறிப்போவதற்கு முன்னமே நீ அபிஷேகத்தை நடத்திக்கொள்வாயாக. ப்ராணிகளின் புத்தி நிலையற்று நிமிஷந்தோறும் மாறுகிறதன்றோ? ஆனதுபற்றி நீ தாமதஞ்செய்தாயாயின் ஏதாயினும் ஓர் இடையூறு உண்டாகக்கூடும். இன்று சந்த்ரன் புஷ்யத்திற்கு முன் நக்ஷத்ரமாகிய புனர்வஸுவில் இருக்கின்றனன். ஆகையால் அபிஷேகஞ்செய்ய நிச்சயித்திருந்த புஷ்ய நக்ஷத்ரத்திற்குச் சந்த்ரன் நாளையதினம் வருவதாகச் சோதிடர் கூறுகின்றனர். ஆனதுபற்றி நீ புஷ்ய நக்ஷத்ரத்தினன்று அபிஷேகஞ் செய்துகொள்வாயாக. என்மனம் என்னை த்வரைப்படுத்திக் கொண்டிருக்கின்றது. நீ சத்ருக்களைத் தபிக்கச்செய்யும் மஹாவீரனாயிருக்கின்றனை. இப்படிப்பட்ட உனக்கு நாளையதினம் யௌவராஜ்யாபிஷேகஞ் செய்யப் போகின்றனன். ஆகையால் நீ இன்றையதினம் மத்யாஹ்நம் முதலாக மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு இன்றிரவு முழுவதும் பார்யையுடன் உபவாஸ மிருக்கவேண்டும். பூமியில் தர்ப்பங்களைப் பரப்பி அதன்மேல் படுத்துக்கொள்ளவேண்டும். மிகுந்த நன்மையை விளைவிக்கவற்றாகிய இப்படிப்பட்ட பெருங் கார்யங்களுக்கு இடையூறுகள் பல உண்டாகும். ஆகையால் உனது நண்பர்கள் ஏமாறுதலின்றி மன ஊக்கத்துடன் உன்னை இன்றையதினம் சூழ்ந்திருந்து ஸர்வ ப்ரகாரத்தாலும்

பாதுகாத்திருப்பார்களாக. பரதன் தேசாந்தரத்திற்குப் போயிருக்கின்றனன்; [1] அவன் இப்பட்டணத்திற்குத் திரும்பி வாராதிருக்கும் வரையிலுமே உனது அபிஷேகத்திற்குத் தகுந்த காலமென்று எனக்குத் தோற்றுகின்றது. உன் தம்பியாகிய பரதன் பெரியோர்களின் நடவடிக்கையிற்றனே நன்கு நிலைநின்றிருப்பவன்; அண்ணனாகிய உன்னை அனுஸரித்தே யிருக்குந் தன்மையன். மேலும் அவன் தர்மத்திற்றனே மனஞ்செல்லப் பெற்றவன்; மிகுந்த மன இரக்க முடையவன்; ஐம்புலன்களையும் அடியோடு வென்று விளங்குகின்றனன். இதிற் சிறிதும் ஸந்தேஹமேயில்லை. ஆயினும் ஸாமான்யமாக மனிதர்களின் மனம் நிலையற்றிருக்கு மென்றே எனக்கு நிச்சயம். [2] ரகுகுலாலங்காரனே! தர்மத்திலேயே எப்

---

1 தசரதமன்னவன் கேகயராஜனிடத்தில் உன் பெண்ணுக்குப் பிறக்கும் பிள்ளைக்கு ராஜ்யங் கொடுக்கின்றேனென்று சொல்லிக் கைகேயியை மணம் புரிந்தனன். இந்தக் கதை இக்காண்டத்திலேயே நூற்றேழாவது ஸர்க்கத்தில் வெளியாகும். இந்த வ்ருத்தாந்தத்தை மனத்தில் வைத்துக்கொண்டே பரதன் வந்தால் ராஜ்யத்தை அவனுக்கே கொடுக்கவேண்டியிருக்குமோ என்று சங்கித்து மன்னவன் இங்ஙனம் மொழிந்தனன்.

2 இதற்கு மூலம்—

'ஸதாந்து யர்மநித்யாநாம க்ருதஶோபிச ராகவ'

இதற்குச் சிலர் மற்றொருவிதமாகவும் பொருள் கூறுகின்றனர். (யர்மநித்யாநாம ஸதாம்) தர்மத்தில் நிலைநின்றிருக்கிற ஸத்புருஷர்களின், (சித்தம்) மனம், (க்ருதஶோபி) க்ருத— பிறர் செய்த மித்ரபேதம் முதலியவற்றால், ஶோபி— ப்ரகாசிக்கவற்ற. தர்மத்தில் இடைவீடின்றி நிலைநின்றிருக்கும் ஸத்புருஷர்களின் மனமும் பிறர் செய்த மித்ரபேதம் முதலியவற்றிற்கு உட்பட்டு விகாரம் பெறும். அன்றியே, தர்மத்தில் நிலைநின்ற ஸத்புருஷர்களின் மனம், (க்ருதஶோபி) க்ருத— செய்தவற்றைக்கண்டு, ஶோபி— விளக்கமுற்றிருக்கும். மேற் செய்யப்போகிறவற்றிற்கு ஸம்மதிக்காது.

பொழுதும் நிலைநின்றிருக்கிற ஸத்புருஷர்களின் மன மோ என்னில்—ஒருவருக்கொருவர் உபகாரத்தையே செய்ய நினைத்து விளங்குமன்றிச் சிறிதாயினும் பேதித்திராது. ரகுவம்சத்திற்பிறந்த உனக்கு இது தெரியாத விஷயமன்று' என்றனன். தசாதமன்னவன் இங்ஙனம் நாளையதினம் நடக்கவேண்டிய அபிஷே கத்தைப் பற்றி மொழிந்து 'போய் வருவாய்' என்று விடை கொடுத்தனுப்ப, ராமனும் தந்தைக்கு நமஸ் காரஞ் செய்து புறப்பட்டுத் தனது மாளிகைக்குள் சென்றனன். இங்ஙனஞ் சென்று தன் மாளிகைக்குள் நுழைந்து, அரசன் தனக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய உத்தேசித்திருப்பதைத் தாய்க்குத் தெரியப்படுத்தும் பொருட்டு உடனே புறப்பட்டு அவளது அந்தப்புரத் திற்குச் சென்றனன். இங்ஙனஞ்சென்ற ஸ்ரீராமன், அங்குத் தனது தாயானவள் பட்டு வஸ்த்ரந்தரித்துக் கொண்டு தேவாலயத்திற்குச் சென்று மௌனவ்ரதத் துடன் தனது அபீஷ்ட தேவதையை த்யானஞ் செய்துகொண்டு தன்புத்ரனுக்கு ராஜ்யாபிஷேகம் நேரும்படி ப்ரார்த்தித்துக் கொண்டிருக்கக் கண்ட னன். ராமன் வருவதற்கு முன்னமே இனிதாகிய ராமா பிஷேக வ்ருத்தாந்தத்தைக் கேட்டு ஸுமித்ராதேவி அவ்விடம் வந்திருந்தனள். அப்பொழுதே லக்ஷ்மண னும் அங்குவந்து சேர்ந்தனன். பின்பு வேலைக்காரிகளைக் கொண்டு வரவழைக்க, ஸீதையும் வந்திருந்தனள். அப் பொழுது கௌஸல்யை புஷ்ய நக்ஷத்ரத்தினன்று தன் புத்ரனுக்கு யௌவராஜ்யாபிஷேகம் நடப்பதைக் கேட்டு, ஸுமித்ரையும் ஸீதையும் லக்ஷ்மணனும் உபாஸித்துக்கொண்டிருக்க, புத்ரனது மங்களாபி வ்ருத்திக்காக ப்ராணாயாமஞ் செய்துகொண்டு புருஷ

ஆகையால் பரதன் எவ்வளவு தர்மத்தில் நிலைநின்ற ஸத்புருஷனாயி னும் தான் வருவதற்கு முன்னமே அபிஷேகம் நடந்திருக்குமாயின் ஸந்தோஷிப்பவனே யன்றித் தான் வந்த பின்பு நடக்கவேண்டுமா யின் ஒருகால் இடையூறு செய்யவுங்கூடுமென்று கருத்து.

ஸூக்தத்தில் ஓதப்படுகின்ற ஸ்ரீமந் நாராயணனை த்யானஞ் செய்து கண்களை மூடிக்கொண்டிருந்தனள். ராமன் அங்ஙனம் நல்ல நியமத்தில் முயன்றிருக்கின்ற தாயின் அருகிற் சென்று நமஸ்காரஞ் செய்து, அப்பொழுது அவ்வம்மைக்கு ஸந்தோஷத்தை விளைவித்துக்கொண்டு 'அன்னையே! ப்ரஜைகளைப் பரிபாலனஞ்செய்யும் அதிகாரத்தை எனக்குத் தந்தை ஆஜ்ஞாபித்தனர். அவரது கட்டளைப்படி நாளையதினம் எனக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகம் நடக்கப் போகின்றது. ஸீதையும் என்னுடன்கூட இன்றிரவு உபவாஸமாயிருக்கவேண்டும். இது யானாக உரைக்கிறேனல்லேன்; தந்தையும் ருத்விக்குகளும் உபாத்யாயர்களும் இதை எனக்குச் சொல்லினர். நாளையதினம் நடக்கப்போகிற அபிஷேகத்திற்காக எனக்கும் ஸீதைக்கும் செய்யவேண்டிய மங்களகார்யங்களெல்லாவற்றையும் செய்விப்பாயாக' என்றனன். கௌஸல்யையும் தான் வெகுகாலமாக விரும்பியிருந்த அபிஷேக வ்ருத்தாந்தத்தைக் கேட்டு ஆனந்தபாஷ்பம் உண்டாகப்பெற்று அதனால் தழுதழுத்த இனிதான இம்மொழியைக் கூறத்தொடங்கி 'அப்பா! ராமனே! நீ வெகுகாலம் வாழ்ந்திருப்பாயாக. நீ உனது சத்ருக்களெல்லாக் தொலையப் பெறுவாயாக. நீ ராஜ்யலக்ஷ்மியைப் பெற்று எனது பந்துக்களையும் ஸுமித்ரையினது பந்துக்களையும் களிப்புறச் செய்வாயாக. பிள்ளாய்! எனது ஸந்தோஷத்தை யான எவ்வண்ணம் எடுத்துரைப்பேன்! மிகுந்த சுபமான நக்ஷத்ரத்தில் நீ எனக்குப் பிறந்தனை. ஆனது பற்றியே நீ விநயம் முதலிய கல்யாணகுணங்கள் நிரம்பப் பெற்று, அந்தக் குணங்களால் தந்தையாகிய தசரதமன்னவரைச் சந்தோஷம்பெறச்செய்தனை. குழந்தாய்! இக்ஷ்வாகு வம்சத் தரசர்களது ராஜ்ய லக்ஷ்மியானது இப்

பொழுது உன்னைப் பெறப்போகின்றது. ஆகையால் நான் செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீமந் நாராயணனென்னும் புராணபுருஷனைக் குறித்து ஸ்ரமங்களையெல்லாம் பொறுத்துக்கொண்டு செய்த வ்ரதோபவாஸங்களனைத்தும் இப்பொழுது பயன்பெற்றவையாயின' என்றிங்ஙனம் மொழிந்து முடித்து நின்றனள். தாயாகிய கௌஸல்யாதேவி இவ்வாறுரைத்து நிற்கையில், ராமன் தனது பார்ஸ்வத்தில் கைகளைக் கூப்பிக்கொண்டு மிகவும் அடக்கத்துடன் உட்கார்ந்திருக்கிற தம்பியாகிய லக்ஷ்மணனைப் பார்த்துப் புன்னகை விளங்க 'லக்ஷ்மணா! நீ என்னுடன்கூடி இப்பூமியைப் பரிபாலித்து வருவாயாக. நீ எனக்கு இரண்டாவது ப்ராணன்; ஆகையால் இந்த ராஜ்யலக்ஷ்மி உன்னை அடைந்திருக்கின்றது. லக்ஷ்மணா! நீ உனக்கு இஷ்டங்களான போகங்களையும், பின்னும் ராஜ்யம் பெற்றதற்குப் பலனாகிய விலையுயர்ந்த ரத்னாபரணம் முதலியவற்றையும் அனுபவிப்பாயாக. என் ப்ராணனையும் இந்த ராஜ்யத்தையும் உனக்காகவே நான் விரும்புகின்றனன். இனி விசேஷித்துச் சொல்லவேண்டுவதென்?' என்று மொழிந்து தாய்மாராகிய கௌஸல்யா ஸுமித்ரைகளுக்கு நமஸ்காரஞ்செய்து ஸீதையை அனுப்பும்படி அவர்களிடம் அனுமதிபெற்றுக் கூடவே அழைத்துக்கொண்டு தன் மாளிகைக்குப் போயினன். நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

வஸிஷ்டமஹர்ஷி ராமனை உபவாஸமிருக்கச் செய்வது.

தசரத மன்னவன் மறுநாள் நடக்கவேண்டிய அபிஷேகத்திற்காக உபவாஸம் முதலியவற்றை நடத்தும்படி ராமனுக்கு ஆஜ்ஞாபித்துப் புரோஹிதராகிய வஸிஷ்ட

மஹர்ஷியை வரவழைத்து 'தபோதனரே! நீர் புறப்பட்டுச் சென்று இப்பொழுது வ்ரதத்தில் மனவூக்கங்கொண்டிருக்கிற ஸ்ரீராமனைப் பத்னியாகிய ஸீதையுடன் கூடி, ஸம்பத்தும் கீர்த்தியும் ராஜ்யமும் பெறுவதற்காக உபவாஸமிருக்கும்படிக்குச் செய்வீராக' என்றனன். வேதங்களை ஓதி உணர்ந்தவர்களில் தலைவராகிய வஸிஷ்டமஹர்ஷி இங்ஙனம் தசாத மன்னவன் மொழியைக் கேட்டு 'அப்படியே ஆகட்டும்' என்றனர். அம்மஹானுபாவர் மந்த்ரங்களையெல்லாம் நன்கு அறிந்து நடத்துந் திறமுடையவர்; மனவுறுதிகொண்டு வ்ரதங்களையெல்லாம் அனுஷ்டிக்குந் தன்மையர். ஆகையால் ராமனைக்கொண்டு மந்த்ரங்களைத் தவறாமல் உபவாஸஞ் செய்விக்க முயன்று, ப்ராஹ்மணர்கள் ஏறுகைக்குரியதும் குதிரைகளைக் கட்டி ஸித்தஞ்செய்து வைத்திருப்பது மாகிய ரதத்தின் மீதேறிக்கொண்டு மற்றொருவரை அனுப்பாமல் தாமே ராமனது மாளிகைக்குப் போயினர். அம்மாமுனிவர் வெளுத்த மேகங்களைப்போல் மிகுந்த ஒளியுடன் விளங்குகின்ற ஸ்ரீராமக்ருஹத்திற்குச் சென்று ரதத்தி லிருந்துகொண்டே மூன்று கட்டுக்களைத் தாண்டி உள்ளே புகுந்தனர். அந்த ஸ்ரீராமனும் யாவராலும் வெகுமானிக்கத் தக்க அம்மாமுனிவர் வரக் கண்டு, அவருக்குப் பூஜை செய்வதற்காக த்வரைப் பட்டுப் பரபரப்புற்று, தனது இருப்பிடத்தினின்றும் வெளிப் புறப்பட்டு, மஹாமதியாகிய அம்முனிவரது ரதத்திற் கருகில் விரைந்தோடிச் சென்று, தானே கைப்பிடி கொடுத்து, அவரைத் தேரினின்றும் இழியச் செய்தனன். அந்தப் புரோஹிதரும தம்மிடத்தில் இங்ஙனம் வணக்கத்துடன்கூடி ப்ரியத்தைச் சொல்லுகைக்கு உரியவனாகிய ஸ்ரீராமனைக் கண்டு க்ஷேமம் விசாரித்து மனம் நிலைபெறச் செய்து, அவனுக்கு ஸந்தோஷத்தை விளைத்

துக்கொண்டு 'ராமா! உனது தந்தைக்கு உன்னிடம் அநுக்ரஹம் உண்டாயிருக்கின்றது; ஆகையால் நீ யௌவராஜ்ய பட்டாபிஷேகம் பெறப்போகின்றனை. இப்பொழுது ஸீதையுடன் கூடி உபவாஸ மிருப்பாயாக. உனது தமப்பனாகிய தசரத மஹாராஜன் நாளையதினம் காலையில், நஹுஷனுக்கு யயாதி அபிஷேகஞ் செய்வித்தது போல், தான் உனக்கு இளவரசனாகும்படிக்குப் பட்டாபிஷேகம் நடத்த ஸித்தமா யிருக்கின்றனன்' என்று மொழிந்து அம்மாமுனிவர் வ்ரதத்தில் மனவூக்க முடையவனாகிய ஸ்ரீராமனை ஸீதையுடன்கூட உபவாஸ மிருக்கச் செய்தனர். பிறகு ராஜ குருவாகிய அவ்வஸிஷ்ட மாமுனிவர் க்ரமப்படி ராமன் பூஜை செய்யப் பெற்று, அவன் தன்னைப் பின்றொடர்ந்து வர, நிற்கும்படி அவனுக்கு அநுமதி கொடுத்து, அவனது க்ருஹத்தினின்றும் புறப்பட்டுச் சென்றனர். ராமனும் அவ்விடத்தில், தன்னிடம் அன்புற்று இனிய மொழிகளை உரைக்கின்ற நண்பர்களுடன் கூடி உட்கார்ந்திருந்து மனக்களிப்புற்றவனாகி, அவர்க ளெல்லோரையும் விடைகொடுத்தனுப்பிவிட்டு அந்தப் புரத்திற்குள் ப்ரவேசித்தனன். அப்பொழுது ராம க்ருஹத்திலுள்ள பெண்களும் புருஷர்களும் மிகுந்த ஸந்தோஷத்துடன் கலகலவென்று பேசிக்கொண்டு முகம் மலரப் பெற்றிருக்கையில், அம்மாளிகை, மதங்கொண்ட பறவைகள் கலகலவென்றொலிக்கப் பெற்றுத் தாமரைமலர்கள் மலர்ந்த அழகிய தாமரையோடைபோல் விளங்கியது. அந்த வஸிஷ்டமாமுனிவர் தசரத மஹாராஜனது மாளிகைக்கொப்பான ராமக்ருஹத்தினின்றும் வெளிப்புறப்பட்டு வழியில் எங்கும் ஜனங்கள் சூழ்ந்திருக்கக் கண்டனர். ராமாபிஷேகத்தைப் பார்க்கவேண்டுமென்னுங் குதூஹலத்தினால் கும்பல் கும்பலாக ஜனங்கள் அயோத்

யைக்குவந்துகொண் டிருப்பதுபற்றி, அந்நகரத்து ராஜ மார்க்கங்க ளெல்லாம் ஜனக்கூட்டம் நெருங்கப் பெற்றி ருந்தன. அப்பொழுது ஜனக்கூட்டங்கள் பெருத்த அலை கள்போல் மேன்மேலும் வந்து ஒருவரோடொருவர் உரைத்துக்கொள்வதனுலும் அபிஷேகத்தைப் பார்க்க நேர்ந்த ஸந்தோஷத்தினுலும் ராஜமார்க்கத்தில் உண் டாகும் த்வனி, அலைகள் மோதிக்கொள்ளும்படிக்குப் பெருகி வருகின்ற ஸமுத்ரத்தின் கோஷம்போல் இருந் தது. அப்பொழுது அயோத்யையிலுள்ள ஜனங்கள் ராஜமார்க்கங்களை விளக்கி ஜலந் தெளித்து அலங்க ரித் திருந்தனர். பின்னும் அலங்காரமா யிருக்கும்படி க்கு ஆங்காங்கு வாழை முதலிய தோட்டங்களை வரி சையாக ஏற்படுத்தி வைத்தனர். வீடுகள்தோறும் த்வஜங்களை உயர எடுத்து நாட்டிக் கட்டினர். அப் பொழுது அயோத்யையில் வஸிக்கும் ஸ்த்ரீகள் இளை ஞர் கிழவர் ஆகிய ஸகல ஜனங்களும் ராமாபிஷேகத் தைப்பார்க்க விரும்பி மற்றை வ்யாபாரங்களை யெல்லாம் விட்டு 'ஸூர்யோதயம் எப்பொழுது ஆகப்போகின் றது?' என்று எதிர்பரர்த்துக் கொண்டிருந்தனர். அயோத்யையில் நடக்கும் ஸ்ரீராமாபிஷேக மஹோத் ஸவத்திற்காக ப்ரஜைகள் எல்லோரும் அலங்காரஞ் செய்துகொண்டு மேன்மேலும் ஆநந்தம் பெருகிவர, அம் மஹோத்ஸவத்தைக் காணப் பேராவலுற்றனர். அப்பொழுது வஸிஷ்டமாமுனிவர் இங்ஙனம் ஜனங்கள் நெருங்கியிருக்கிற ராஜமார்க்கத்தைப் பார்த்துக்கொ ண்டே அந்த ஜனக் கூட்டத்தை ஆங்காங்குப் பிரித்து விடுபவர்போல், மெதுவாகச்சென்று ராஜக்ருஹத்தைக் கிட்டி வெளுத்த மேகம்போல் விளங்குகின்ற சிகரங் கள் அமைக்கப்பெற்ற அழகிய உப்பரிகையின் மீதேறி தேவகுருவாகிய ப்ருஹஸ்பதி தேவேந்த்ரனிடம் செல்வ

துபோல், தான் தசரதமஹீபதியினிடஞ் சென்றனர். அவ்வரசனும் வஸிஷ்டமாமுனிவர் வரக் கண்டு ஸிம்ஹாஸனத்தினின்றும் எழுந்திருந்து 'ராமனை உபவாஸமிருக்கும்படி செய்தீரா?' என்று வினவ, 'செய்தேன்' என்று அவரும் பதிலுரைத்தனர். அப்பொழுது அரசனுடன் உட்கார்ந்திருந்த ஸபையிலுள்ளவர் யாவரும் அவனோடு கூடவே தாமும் புரோஹிதராகிய வஸிஷ்டரைப் பூஜிப்பதற்காக ஆஸனத்தினின்றும் எழுந்திருந்தனர். அரசனும் குருவாகிய வஸிஷ்டரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு ஸபிகர்கள் அனைவர்க்கும் விடைகொடுத்துவிட்டுப் பர்வதத்தின் குஹையில் ஸிம்ஹம் ப்ரவேசிப்பதுபோல், அந்தப்புரத்தில் ப்ரவேசித்தனன். உயர்ந்த அலங்காரஞ் செய்துகொண்டிருக்கிற ஸ்த்ரீஜனங்கள் எங்கும் நெருங்கப் பெற்று மஹேந்த்ரனது மாளிகைக்கு ஒப்பாகி விளங்குகின்ற அழகான அந்த அந்தப்புரத்திற்குள் நக்ஷத்ர ஸமூஹங்கள் நெருங்கிய ஆகாயத்தில் சந்த்ரன் ப்ரவேசிப்பதுபோல் தனது தேஜஸ்ஸை நான்கு பக்கத்திலும் நிரப்பி ப்ரகாசிக்கும்படி தசரத மஹாராஜன் ப்ரவேசித்தனன். ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமாபிஷேகத்திற்காக ஸன்னாஹஞ் செய்தல்

[1] புரோஹிதராகியவஸிஷ்ட மாமுனிவர் புறப்பட்டுப் போனபின்பு ராமன் ஸ்னானஞ்செய்து மனத்தை அடக்கி

---

1 இதற்கு மூலம்—

'கதே புரோஹிதே ராமஸ் ஸ்நாதோ நியதமாநஸ꞉।

ஸஹ பத்ந்யா விஸாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்'

இதற்கு விசேஷார்த்தம்— (ஸ்நாத꞉) என்பதனால் காயசுத்தியும், (நியதமாநஸ꞉) என்பதனால் மனச்சுத்தியும் தோற்றுகின்றன. (ஸஹபத்ந்யா) பத்னியோடுகூட. 'பத்யுர்நோ யஜ்ஞஸம்யோகே'

கிலே நிறுத்திக்கொண்டு, நீண்டழகிய கண்களுடன் விளங்குகின்ற பத்னியாகிய ஸீதையோடுகூட நாராயணனை

என்று ஸ்த்ரீக்கு யஜ்ஞஸம்பந்தஞ் சொல்லும்பொழுது பத்னியென்று பெயர் ஆகின்றது. ஆனதுபற்றி இங்கு (பத்ந்யா) என்கையால் யஜ்ஞஸம்பந்தந்தோற்றுகிறது. பார்யையை விட்டுப் பர்த்தாவுக்கு யஜ்ஞத்தில் அதிகாரமில்லையென்று சாஸ்த்ரங்கள் முறையிடுகின்றன. பகவதாராதனம் யஜ்ஞங்களெல்லாவற்றிலும் சிறந்த யஜ்ஞமெனக் கூறப்படுகிறது. (பத்ந்யா) என்று மூன்றும் வேற்றுமையால் ஆராதனகாலத்தில் ஸீதை உபகரணங்களை ஸமர்ப்பித்துக் கொண்டிருந்தவளென்று தோற்றுகின்றது. (விஶாலாக்ஷ்யா) நீண்ட கண்களையுடையவள். 'ருதே மாயாம் விஶாலாக்ஷீம் தவ பூர்வ பரிக்ரஹாம்' (உனக்குப் பூர்வத்தில் பார்யையும் நீண்ட கண்களையுடையவளுமாகிய மாயையை விட்டு) என்று விசாலாக்ஷீ சப்தம் லக்ஷ்மியினிடத்தில் ரூடமாயிருப்பதுபற்றி 'ஸீதை, என்று விசேஷித்துச் சொல்லாமல் ஸாமான்யமாக 'விசாலாக்ஷி' என்று சொல்லப்பட்டது. இதனால்— ஸீதை லக்ஷ்மியினவதாரமென்பது தெரிவிக்கப்பட்டது. (நாராயணம்) இங்கு நாராயணனென்றால் ஸ்ரீரங்கநாதனைச் சொல்லுகிறது. மேலில் ஸ்ரீரங்கநாதனையே ராமன் விபீஷணனுக்கு தானஞ் செய்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. (ஸஹ பத்ந்யா) ஸ்ரீரங்கநாதன் திருமேனியை அனுபவிக்கையாகிற ஸமுத்ரத்தைத் தாண்டுவதற்கு ஸஹாயமா யிருப்பவளென்று கருத்து. (விஶாலாக்ஷ்யா) ஸ்ரீராமனது விக்ரஹத்தை அனுபவிப்பதைக்காட்டிலும் ஸ்ரீரங்கநாதனுடைய விக்ரஹத்தை ஸேவித்தனுபவிப்பது மிகவும் ப்ரியமாயிருப்பதுபற்றிக் கண்கள் ஸந்தோஷத்தினல் நன்கு மலர்ந்து இமைகொட்டுவதையும் மறந்து அனுபவித்தாளென்றபடி. (விஶாலாக்ஷ்யா) ஸீதை நீண்டழகிய கண்களுடையவளாயினும் அந்த ஸௌந்தர்யத்தில் கால் தாழாமல் நாராயணனையே உபாஸித்தானென்று ராமனது ஜிதேந்த்ரியத்வம் தோற்றுகின்றது. (விஶாலாக்ஷ்யா) என்று மூன்றும் வேற்றுமையாலும் (நாராயணம்) என்று இரண்டாம் வேற்றுமையாலும், ஸீதை அப்ரதானையென்றும், நாராயணன் மிகவுமிஷ்டனுகையால் ப்ரதானனென்றும் தோற்றுகின்றது. (உபாகமத்) (அகமத்) என்ற மாத்ரத்திலேயே பகவதாலயத்திற்குப் போவது தெரிகின்றது. (உப) என்பதனல் நிவேதனம் முடிவாக பகவதாராதனஞ் செய்தமை தோற்றுகின்றது.



462. தேவாலயத்தில் ஸீதையோடுகூட ராமன் உபவாஸ ஹோமாதிகளைச் செய்தல்.

உபாஸித்தனன். அவன் அப்பொழுது விதி தவறாமல் [1] ஹவிஸ்ஸு நிறைந்த பாத்ரத்தைச் [2] சிரஸ்ஸில் தரித்துக்கொண்டு ஜ்வலித்துக் கொண்டிருக்கிற அக்னியில் [3] அளவிறந்த மஹிமைபொருந்திய தெய்வமாகிய நாராயணனுக்காக நெய்யைக்கொண்டு ஹோமஞ் செய்தனன். அங்ஙனம் ஹோமஞ் செய்த பின்பு மிகுந்த ஹவிஸ்ஸை மிகவும் இனிதாகப் புசித்துத் தனது இஷ்டம் நிறைவேறும்படி வேண்டிக்கொண்டு தேவனாகிய நாராயணனை த்யானஞ் செய்துகொண்டே, தானாகப் பரப்பின தர்ப்பப் படுக்கையின் மீது [4] மௌனத்துடன் மனத்தை நிலைநிறுத்திக்கொண்டு, ஸீதையுடனே அழகிய அவ்விஷ்ணு

---

1 ஹவிஸ்ஸு-நெய்

2 இதற்கு 'ப்ரக்ருஹ்ய ஶிரஸா பாத்ரீம்' என்று மூலம். இங்கு 'உபரிஹி தேவேபீயோ தாரயதி' என்று ஶ்ருதி ப்ரமாணம். தேவர்களுக்குத் தலைமேல் எடுத்து வைத்துக்கொண்டு ஹோமஞ் செய்ய வேண்டுமென்று இதன் பொருள்.

3 இதற்கு 'மஹதே தைவதாய' என்று மூலம். (அளவிறந்த மகிமை பொருந்திய) இது (மஹதே) என்கிற பதத்தின் பொருள். ஶ்ருதிகள்பகவானது மகிமையை அளவற்றதென்று கூறுகையாலும், இதற்கு மற்றொரு பாதகமில்லாமையாலும் இங்கு (அளவிறந்த மகிமை பொருந்திய) என்று சொல்லப்பட்டது. 'தம் தேவதாநாம் பரமஞ்ச தைவதம்' என்கிற ஶ்ருதி இங்கு ப்ரமாணம்.

4 இதற்கு மூலம்.

'வாக்யதஸ்ஸஹ வைதேஹ்யா பூத்வா நியதமாநஸ:,
ஸ்ரீமத்யாயதநே விஷ்ணோ: ஶிஶ்யே நரவராத்மஜ:'

இதற்கு விசேஷார்த்தம்— (வைதேஹ்யா ஶிஶ்யே) ஸீதையுடன் பள்ளிகொண்டிருந்தானென்கையால்— இருவரும் ஒரு படுக்கையில் படுத்தமை தோற்றுகிறது. இதனால் ஜிதேந்த்ரியத்வத்தின் மிகுதி தோற்றுகின்றது. (ஸ்ரீமதி விஷ்ணோராயதநே) 'ருசஸ் ஸாமாநி யஜூம்ஷி ஸாஹி ஸ்ரீரம்ருதா ஸதாம்' என்கிற ஶ்ருதியின்படிக்கு ஸ்ரீ சப்தம் மூன்றுவேதங்களையுஞ் சொல்லுமாகையால்

தேவாலயத்தில் அந்த ராஜகுமாரன் பள்ளிகொண்டனன். அவன், அன்றிரவு உதயமாகைக்கு இன்னும் ஒரு யாமப்பொழுது இருக்கையிற்றானே எழுந்திருந்து வீடு முழுவதும் அலங்கரிக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டு, அங்கு ஸூதர் மாகதர் வந்திகள் ஆகிய இவர்களது இனிய உரைகளைக் கேட்டுக் கொண்டிருந்து, விடியற்கால ஸந்த்யை நேரிட, ஸூர்யோபாஸனஞ் செய்து, மனத்தை மற்றொன்றிலுஞ் செலுத்தாமல் அடக்கிக்கொண்டு காயத்ரீஜபத்தைச் செய்து முடித்து ஸ்ரீமந் நாராயணனைக் குறித்து [1]தண்டப்ரணாமஞ் செய்து ஸ்தோத்ரஞ் செய்தனன். பின்பு மீளவும் ஸ்நானஞ் செய்து வெளுத்த வெண்பட்டு வஸ்த்ரத்தை உடுத்திக்கொண்டு ப்ராஹ்மணர்களை வரவழைத்துப் புண்யாஹவாசனஞ் செய்வித்தனன். பிறகு அப்பொழுதே அந்த ப்ராஹ்மணர்கள் கம்பீரமாகவும் இனிதாகவும் நடத்தின அந்தப் புண்யாஹவாசனத்தின் கோஷமானது மங்கள வாத்ய கோஷத்துடன் கலந்து மேன்மேலும் ஒலி வளரப்பெற்று அயோத்யாநகரம் முழுவதும் நிரம்பிவிட்டது. அப்பொழுது அயோத்யையிலுள்ள ஜனங்கள் ராமன் ஸீதையுடனே உபவாஸமிருக்கக் கேள்விப்பட்டு எல்லோரும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தனர். பிறகு பட்டணத்திலுள்ளவர் யாவரும் ராம

வேதங்களின் ஸாரமாகிய ப்ரணவாகாரமாயிருக்கும் இந்த நாராயண விமானமென்றுணர்க. 'விமானம் ப்ரணவாகாரம்' என்று இதுமுதலியவற்றில் இங்ஙனஞ் சொல்லப்பட்டது. (விஷ்ணோராயதநே) விஷ்ணுவினுலயத்தில்— ப்ரணவாகாரமாகிய ஸ்ரீரங்கவிமானத்தில். (நரவராத்மஜ:) ராஜகுமாரன். தான் நாராயணவதாரமேயாயினும் க்ஷத்ரியனாகப் பிறந்திருப்பதுபற்றி ஸ்ரீரங்கநாதனைப் பூஜித்தானென்று க்ஷத்ரியதர்மத்தை அனுஸரித்தமை தோற்றுவிக்கப்பட்டது.

1 தண்டப்ரணாமம்— தடி விழுந்தாற்போல் சரீரம் முழுவதும் பூமியிற் படும்படி செய்யும் நமஸ்காரம்.

பிஷேகம் நடப்பதாகக் கேட்டிருப்பவராகையால் அன்றிரவு விடியக்கண்டு, பட்டணத்தில் ஆங்காங்கு வீதிகளை விளக்கி ஜலந்தெளித்து மேற்கட்டுகள் கட்டிப் பூமாலைகளைச் சூட்டி வாழைமரங்கள் நாட்டி நன்கு விளங்கும்படி அலங்காரஞ் செய்தனர். வெளுத்த மேகம்போலவும் வெளுத்த மலைபோலவும் விளங்குகின்ற தேவாலயங்களிலும், நாற்சந்தி வீதிகளிலும், ராஜமார்க்கங்களிலும், பௌத்தாலயங்களிலும், [1] மண்டபங்களிலும், பல சரக்குகள் நிறைந்திருக்கிற வர்த்தகர்களது கடைகளிலும், ஸகல ஸம்ருத்தியும் பெற்று அழகாய் விளங்குகிற க்ருஹஸ்தர்களது க்ருஹங்களிலும், ஸமஸ்த ஸபைகளிலும், உயர்ந்திருப்பதுபற்றி நாற்புறங்களிலும் தோன்றுகிற வ்ருக்ஷங்களிலும், ராஜசிஹ்னங்களுள்ள த்வஜங்களையும் சிஹ்னமில்லாமல் பல வர்ணங்களுள்ள டக்கயங்களையும் நாட்டினர். நட்டுவர்களும், நர்த்தகர்களும் (கூத்தாடிகளும்,) பாடகர்களும் பாடிக்கொண்டிருக்கையில் மனத்திற்கும் செவிக்கும் இனிய அச்சொற்களை ஜனங்கள் கேட்டு ஆநந்தித்தனர். ராமனது அபிஷேக மஹோத்ஸவம் ஸமீபித்து வருகையில், ஜனங்கள் வெளியான முற்றங்களிலும், அவர்களில் ஸ்த்ரீகள் க்ருஹங்களிலும் ஒருவருக்கொருவர் ராமாபிஷேகத்தைப் பற்றிய வார்த்தைகளையே மிகவும் சொல்லிக் கொண்டிருந்தனர். வீட்டு வாசல்களில் திரள்திரளாக விளையாடிக் கொண்டிருக்கும் பாலர்களும் ஒருவருக்கொருவர் ராமாபிஷேகத்தைப் பற்றிய வார்த்தைகளையே சொல்லிக்கொண்டிருந்தனர். ராமாபிஷேக ஸமயத்தில் பட்டணத்திலுள்ள ஜனங்கள் எல்லோரும் ராஜமார்க்கம் முழுவதும் புஷ்

1 மண்டபங்கள்—மதிட்சுவர்களின் மேற்பாகங்களில் நாற்புறங்களிலும் கண்களை விட்டுப் பார்த்து யுத்தஞ் செய்வதற்காகக் கட்டப்பட்ட நாற்கால் மண்டபங்கள்.

பங்களை இறைத்துக் குமுகுமென்று மணங்கமழ்கின்ற தூபங்களையிட்டு அழகு மிகுந்திருக்கும்படி அலங்காரஞ்செய்தனர். பின்னும் அந்தப்பட்டணத்து ஜனங்கள் அபிஷேகமான பின்பு, ராமன் உயர்ந்த யானையின் மீது ஏறிக்கொண்டு வருகையில் அவனது அபிஷேகாலங்காரங்கள் அவ்வுயரத்தில் தமக்குத் தெரியும்படிக்கும், அவன் வெளிப்புறப்படுவதற்கு முன்பே ராத்ரியாய் விடுமாயினும் அவன் அணிந்திருக்கிற மற்றை அலங்காரங்கள் இருட்டிலும் நன்கு புலப்படுவதற்காகவும் ராஜமார்க்கங்கள்தோறும் வ்ருக்ஷங்கள்போல் உயர்ந்திருக்கிற பலவகைத் தீபஸ்தம்பங்களையும் நாட்டி வைத்தனர். இங்ஙனம் அவ்வயோத்யாபுரத்தில் வஸிப்பவர் பட்டணத்திற்கு அலங்காரஞ்செய்து ராமனுக்கு யௌவராஜ்யாபிஷேகம் நடப்பதை எதிர்பார்த்துக்கொண்டு, முற்றங்களிலும் ஸபைகளிலும் எல்லோரும் கும்பல்கூடி ஒருவருக்கொருவர் ஸம்பாஷணஞ்செய்துகொண்டு தசரத மஹாராஜனைக் குறித்து 'இக்ஷ்வாகு வம்சத்திற்கு ஸந்தோஷத்தை விளைக்குந்தன்மையனாகிய இம்மஹாராஜன், அஹோ! மிகவும் மஹானுபாவன். ஆனதுபற்றியே தனக்குக் கிழத்தனம் வந்ததை அறிந்து ராஜ்யத்தில் ராமனை அபிஷேகஞ்செய்யப் போகின்றனன். ராமனோ உலகத்திலுள்ள வஸ்துக்களின் தாரதம்யத்தைக் கண்டறிந்தவன். அங்ஙனம் அறிஞனாகிய ராமன் அரசனாக வேண்டுமென்று விரும்பிக்கொண்டே வெகுகாலங் கடத்தினம். இனி அவன் அரசனாகி நம்மைப் பாதுகாப்பவனாவான். ஆகையால் நம்மெல்லோருக்கும் தெய்வானுக்ரஹம் உண்டாயிருக்கின்றது. ராமனது குணங்களை எவ்வண்ணங் கூறலாகும்? அவன் மனத்தில் கர்வமென்பது சிறிதுங்கிடையாது. அவன் எல்லாம் அறிந்தவன்; தர்மஸ்வபாவன்; உடன் பிறந்தவரிடத்தில் மிகுந்த

வாத்ஸல்யமுடையவன் ; இதெல்லாம் ஓரற்புதமன்று; ரகுகுலாலங்காரனாகிய அவன் உடன்பிறந்தவரிடத்தில் எப்படி ப்ரீதியோடிருக்கின்றானோ, அப்படியே நம்மி டத்திலும் மிகுந்த ப்ரீதியோடிருக்கின்றனன். தசர தன் நம்மிடம் அனுக்ரஹம் வைத்து ராமனுக்கு யௌ வராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்ய, நாம் பார்க்கப்போ கின்றனம். இப்படிப்பட்ட ஸந்தோஷத்தை நமக்கு விளைத்துத் தருந் தர்மஸ்வபாவனும் பாபமற்றவனு மாகிய அந்தத் தசரதமஹாராஜன் வெகு காலம் வாழ்வுற்றிருப்பானாக' என்று புகழ்ந்துகொண்டனர். அப்பொழுது ராமாபிஷேக வ்ருத்தாந்தத்தைக் கேள் விப்பட்டு நான்கு பக்கங்களிலுமுள்ள பல தேசங்களி னின்றும் வந்த ஜனங்கள், பட்டணத்தவர் இங்ஙனம் மொழிந்துகொண்டிருக்கச் செவியுற்றனர். இவ்வண் ணம் ராமாபிஷேகத்தைப் பார்க்கும் பொருட்டுப் பல திக்குக்களினின்றும் அயோத்யாபுரத்திற்கு வந்திருக்கிற அந்த நாட்டு ஜனங்கள் [1] ராமனது பட்டணமெங்கும் நிறைந்திருந்தனர். அந்நகரத்தில் அவ்வாறு நானாதேசங் களினின்றும் வந்திருக்கிற ஜனங்களின் கலகலத்வனி, பர்வகாலத்தில் பொங்கி வருகிற ஸமுத்ரகோஷம்போல் காதுக்குப் புலப்பட்டுக்கொண்டிருந்தது. பிறகு தே வேந்த்ரனது மாளிகைபோல் மிகவும் அழகு பொருந்தி விளங்குகின்ற அவ்வயோத்யா நகரமானது, இங்ஙனம் ராமாபிஷேக மஹோத்ஸவத்தைப் பார்க்க விரும்பி நாடுகளினின்று வந்த ஜனங்களால் எங்கும் நெருங்கப் பெற்றுக் கலங்கி, ஸமுத்ரத்திலுள்ள திமி திமிங்கிலம் முதலிய ஜலஜந்துக்கள் நெருங்கிக் கலங்கிய ஸமுத்ர ஜலம்போல் விளக்கமுற்றிருந்தது. ஆறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1 முதனாளே ஸகல ஜனங்களின் முன்னிலையில் ராமாபிஷே கம் நடத்துவதாக அரசன் ப்ரதிஜ்ஞை செய்திருப்பதனால் ராமன்

மந்தரை கைகேயிக்குத் துர்ப்போதனை செய்தல்.

[1] கைகேயியின் பந்துக்களுக்குத் தாதியா யிருந்தவளொருத்தி கைகேயியோடு கூடவே வஸித்திருந்தனள். அவள் எங்கு யாருக்கு யாரிடத்தில் பிறந்தவளோ தெரியாது. அவள், சந்த்ரனைப்போல் வெளுத்து அழகியதாகி விளங்குகிற உப்பரிகையின்மீது யாதொரு காரணமுமின்றி ஏறவேண்டுமென்றெண்ணமுண்டாகத் தற்செயலாகவே ஏறி, அவ்வயோத்யாபுரத்தை முழுவதுங் கண்டனள். அப்பொழுது அந்நகரத்திலுள்ள ராஜமார்க்கங்களெல்லாம் ஜலந்தெளித்து மலர்கள் தூவப்பெற்று மிகவும் அழகுடன் விளங்கியது. அதில் ராஜசிஹ்னங்களுள்ள டக்கயுங்களும் சிஹ்னமில்லாத ஸாதாரணமான த்வஜங்களும் அலங்காரமாக உயரக்கட்டப்பட்டிருந்தன.

---

அதிபதியென்று யாவர்க்கும் தெரிந்துவிட்டது. ஆகையால் அயோத்யையை ராமனது பட்டணமென்று கவி சொன்னதாகத் தெரியவருகின்றது.

1 இதற்கு 'ஜ்ஞாதிதாஸீ யதோஜாதா' என்று மூலம். (யதோஜாதா) எங்கேயோ பிறந்தவள். அவளது தாய்தந்தைகளாவது பிறந்த இடமாவது ஒன்றுந் தெரியாதிருந்ததென்றபடி. இதற்கு விசேஷார்த்தம்—(யதோஜாதா) எங்கேயோ பிறந்தவள். ராமனது அபிஷேகத்திற்கு இடையூறு செய்யும்படியான இப்படிப்பட்ட துஷ்டஸ்வபாவமுடையவள் அயோத்யாபுரத்தில் பிறக்க நேராது. ஆகையால் எங்கேயோ பிறந்தவளென்றபடி. அன்றியே-(யதோஜாதா)இப்படிப்பட்ட பாபிஷ்டர்களது பேரும் ஊரும் வாயினால் மொழியவுந் தகாதென்று 'எங்கேயோ பிறந்தவள்' என்று கூறப்பட்டது. ஆனது பற்றியே மந்தரையென்னும் அவளது பேரை இங்குச்சொல்லவில்லை. (யதோஜாதா) ராமனைக்கொண்டு ராவணனைத் தொலைப்பதற்காகக் கைகேயிக்கும் அவனுக்கும் பேதம் உண்டாகச் செய்யும்படி தேவதைகளே அவளை அனுப்பினார்களாகையால் அவளது குலம் முதலியவற்றைச்சொல்லில் இந்த தேவரஹஸ்யம் வெளியாகுமென்று அவைகளை இங்குச் சொல்லவில்லை என்றும் கூறுவர்.

ஜனங்கள் நெருங்கியிருப்பது பற்றித் தாம் நினைத்த இடங்களுக்கு இஷ்டப்படிக்குப்போக அனுகூலமாயிருக்கும்படி குறுக்கு வழிகள் பலவும் புதிதாக ஏற்படுத்தப்பட்டிருந்தன. அந்நகரத்தில் ஜனங்களெல்லோரும் சிரஸ்ஸ்னானஞ்செய்து பரிசுத்தர்களாகி எங்குஞ் சூழ்ந்திருந்தனர். ராமனுக்குக் காணிக்கைகள் ஸமர்ப்பிக்கும்பொருட்டு ப்ராஹ்மணர்கள் புஷ்பமாலிகைகளையும் [1] மோதகங்களையும் கைகளிலேந்தித் திரிந்துகொண்டு ஸந்தோஷ த்வனிகளைச் செய்துகொண்டிருந்தனர். தேவாலயத்வாரங்களும் சுண்ணும்படிக்கப் பெற்று வெளுத்து அழகு பொருந்தி விளங்கின. ஸமஸ்த வாத்யங்களும் நான்கு பக்கங்களிலும் முழங்கிக்கொண்டிருந்தன. எங்குப் பார்க்கிலும் ஜனங்கள் ஸந்தோஷம் நிரம்பப்பெற்று நெருங்கிக் கூடிக்கொண்டிருந்தனர். ஆங்காங்கு வேதபாராயண கோஷங்களும் செவியிற் பட்டுக்கொண்டிருந்தன. ராமாபிஷேகத்தைப் பற்றி மனிதர்களுக்கு மாத்ரமேயன்றி ம்ருகாதிகளுக்கும் ஸந்தோஷம் மேலெழுந்திருப்பதுபற்றி, மேலான யானைகளும் குதிரைகளும் ஸந்தோஷம் பெருகப்பெற்று மயிர்க்கூச்சலிட்டுத் திரிந்துகொண்டிருந்தன. காளை மாடுகளும் பசுக்களும் கொழுத்துக் கோஷமிட்டுக் கொண்டிருந்தன. ராமாபிஷேகத்தைப் பற்றிய ஸந்தோஷம் உள்ளடங்காமல் வெளிவந்ததோ என்னும்படி மயிர்க்கூச்சலிட்டு மனக்களிப்புற்றிருக்கும் பட்டணத்து ஜனங்கள் ஆங்காங்கு வரிசையாக த்வஜங்களை எடுத்துக் கட்டினர். இவ்வனம் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிற அந்நகரம் முழுவதையும் உப்பரிகை

---

1 மோதகம்—குழக்கட்டையென்று சிலர்; லட்டென்று சிலர்; லட்டுக்குக் கண்டமோதகமென்று பேரென்றும், மோதகமென்பது குழக்கட்டையேயென்றுஞ் சிலர் கூறுவர்.

யின் மீது ஏறியிருந்த அந்தக் கைகேயியின் தாதியாகிய மந்தரை என்பவள் கண்டனள். இப்படி விளங்குகிற அவ்வயோத்யாபுரத்தைக் கண்டு, மந்தரை என்பவள் மிகவும் ஆச்சர்யம் அடைந்தனள். அப்பொழுது ராமனது செவிலித் தாயாகிய ஒருத்தி வெண்பட்டு உடுத்துக்கொண்டு ஸந்தோஷத்தின் மிகுதியால் கண்கள் மலரப்பெற்று அவ்வுப்பரிகையில் அம்மந்தரைக் கருகில் இருந்தனள். அம்மந்தரை அவளைப் பார்த்து [1] 'ராமனது தாய் இயற்கையாகவே தனத்தைக் கைப்பற்றுந் தன்மையளேயன்றி, ஒருவர்க்குங் கொடுப்பவளன்று. அப்படிப்பட்டவளும் இப்பொழுது அளவில்லாத ஸந்தோஷங்கொண்டு ஜனங்களுக்கு தனத்தைக் கொடுக்கின்றனள்; இதென்? ஜனங்களுக்கும் ஸந்தோஷம் அளவற்றிருக்கின்றது; இதுவென்? இது எதுக்க கஉன்டாயிற்று? இதை எனக்குச் சொல்வாயாக. அன்றியே, அரசன் மிகுந்த ஸந்தோஷங்கொண்டு எதாயினும் நடத்தப்போகின்றானோ?' என்று வினவினள். ராமனுக்குச் செவிலித்தாயாகிய அந்தப் பெண்மணியும் ஸந்தோஷம் உள்ளடங்காமல் மேன்மேலும் பெருகி வருகையில், அந்த வேகத்தைப் பொறாமல் உடம்பு வெடித்துப் போமோ என்னும்படி ஸந்தோஷம் புறம்பொசிய, ப்ரதி

1 இதற்கு மூலம்—

'உத்தமேநாபிஸம்யுக்தா ஹர்ஷேணார்யபரா ஸதீ।

ராமமாதா தநம் கிந்ந ஜநேப்ய ஸம்ப்ரயச்சதி।।

மந்தரை கௌஸல்யையினிடத்தில் த்வேஷத்தினால் அவளை (அர்யபரா) அர்த்தத்தில் ஆசையுடையவளென்று சொல்லுகின்றனள். அர்த்தம்—பணம். பின்னும் 'கௌஸல்யா' என்று பேரைச் சொல்லாமல் 'ராமமாதா' ராமனுடைய தாயென்கையால் கௌஸல்யையின் பேரையுங்கூடச் சொல்லக்கூடாத த்வேஷமுடையவளென்று தெரிகிறது.




471. மந்தரை கைகேயிக்கு ராமாபிஷேகத்தைக் கூறுதல்.

கூனியாகிய அம்மந்தரைக்குச் சொல்லக்கூடாதாயினும் ஸந்தோஷத்தின் மிகுதியால் அதை மறந்து, ராமனுக்கு நேரிடப்போகிற ஒப்பில்லாத ராஜ்யலக்ஷ்மீ விபவத்தைச் சொல்ல முயன்று, 'தசரத மஹாராஜர் நாளைய புஷ்யநக்ஷத்ரத்தில் கோபமின்றி யிருப்பவனும் பாபமற்றவனுமாகிய ராமனை யௌவ ராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்யப்போகின்றார்' என்று மறுமொழி உரைத்தனள். அக்கூனியும் அவள் சொன்ன வார்த்தையைக் கேட்டு, உடனே மிகுந்த கோபாவேசங் கொண்டவளாகிக் கைலாஸ பர்வத சிகரம்போல் உயர்ந்து வெளுத்து விளங்குகின்ற அவ்வுப்பரிகையி னின்று வேகத்துடன் இறங்கிவந்தனள். மந்தரை பாபத்திலேயே கண்ணோக்கமுடையவள். ஆகையால் ராமாபிஷேக வ்ருத்தாந்தத்தைக் கேட்டுக் கோபாக்னி வளர்ந்தெரியப்பெற்று, படுத்துக் கொண்டிருக்கின்ற கைகேயியினிடஞ்சென்று அவளைப் பார்த்து 'அடி மதிகெட்டவளே! உறங்குகின்றாயென்? எழுந்திரு. உனக்கு ஒரு பயம் வந்திருக்கின்றது. ஒன்றா? இன்னும் பல துக்கங்களும் உன்னைச் சுற்றிலுஞ் சூழ்ந்துகொண்டிருப்பது உனக்குத் தெரியவில்லையா? அரசன் ஆசைப்படும்படியான ஸௌபாக்ய முடையவள்போல் மேலுக்குப்புலப்படுகின்றாயன்றி, நிஜமாக நீ அரசனுக்கு இஷ்டையாயிருப்பவளல்லை. 'அரசனுக்கு என்னிடத்தில் ப்ரீதிமிகுந்திருக்கின்றது. ஆகையால் நானே பாக்யவதி' என்று வீண்கர்வப்படுகின்றாய். உனது ஸௌபாக்யம் எங்கே? வெயிற்காலத்து ஆற்றின் ப்ரவாஹம்போல் இப்பொழுது உனது ஸௌபாக்ய மெல்லாங் குறைந்து போகின்றது' என்றனள். அக்கூனி இங்ஙனம் பாபத்திலேயே கண்ணோக்க முற்றவளாகி ரோஷத்தினால் நெருப்புப் பொறி பறக்கும்படி உரைத்த வார்த்தை

களைக் கேட்டு மிகுந்த மனவருத்தங்கொண்டு, அவளைப் பார்த்து 'மந்தரையே! எனக்கு க்ஷேமம் இல்லையா? உனது முகம் வாட்டமுற்றிருக்கும்படி கண்டு, உனக்கு ஏதோ ஒருவருத்தம் உண்டாயிருப்பதாக ஊஹிக்கின்றேன்' என்றனள். இவ்வாறு கைகேயி மொழிந்த இனிய உரைகளைக் கேட்டு, அம்மந்தரை 'ராமாபிஷேகத்தை ஆலோசியாமல் வார்த்தையில் ஒழுங்கு பாராட்டுகின்ருள்' என்று மிகுந்த கோபாவேசங் கொண்டனள். அவள் கைகேயியின் மேன்மையையே விரும்பி யிருப்பவளாகையால் கௌஸல்யையைக் காட்டிலும் கைகேயிக்குக் குறை நேரிடுகின்றதே யென்று மேன்மேலும் வருத்தம்பெருகி வரப்பெற்று, ராஜ்யலக்ஷ்மி தாயாதிகள் வசமாவதைச்சொல்லி அவளுக்கு வருத்தமுண்டாகச் செய்யவும், ராமனிடத்தில் அவளுக்குள்ள ஸ்னேஹத்தைப் போக்கி விரோதத்தை உண்டாகச்செய்யவும் முயன்று பேசுவதில் மிகுந்த வல்லமையமைந்திருப்பதுபற்றி அந்தக் கைகேயியைப் பார்த்து 'தேவியே! எவ்விதத்திலும் தடுக்க முடியாதபடி உன்னை நாசஞ் செய்வதற்கு ப்ரயத்னம் எவ்வளவோ நடக்கின்றதே! அந்த நாசந்தான் யாதென்னில்—சொல்லுகின்றேன். தசரத மஹாராஜன் ராமனுக்கு நாளையதினம் யௌவராஜ்யபட்டாபிஷேகம் நடத்தப் போகின்றனன். அங்ஙனம் நடக்கப் போவதைக் கேட்ட நான், 'நமக்கு அநிஷ்டனாகிய ராமனுக்கும் ராஜ்யமா' என்று வருத்தமுற்றும் 'நமக்கு இஷ்டனாகிய பரதனுக்கு ராஜ்யமில்லாமல் தப்பிப்போகின்றதே' என்று சோகமுண்டாகப் பெற்றும், மஹாபயத்தில் மூழ்கி நெருப்பினால் எரிக்கப் பட்டவள்போன்று வெறுமனே இருக்க முடியாமல் உனது மேன்மையை விரும்பி இதோ இவ்விடம் வந்து சேர்ந்தனன். எப்படி வாராமலிருக்க முடியும்? 'எனக்கு துக்கமுண்டாயின் உனக்கு என்ன வந்தது?' என்னவேண்

டாம். கைகேயி! உனக்குப் பனிபோன்ற ஒரு வருத்தமுண்டாயின், எனக்கு அதைக் கண்டு மலைபோன்ற வருத்தமாயிருக்கும். உனக்கு ஒரு ஸந்தோஷம் உண்டாயின், எனக்கும் ஸந்தோஷமாயிருக்கும். இதற்கு ஸந்தேஹமில்லை. நீ சிறந்த ராஜவம்சத்திற் பிறந்தவள்; நமது அரசனுக்கு உத்தம பார்யையாயிருக்கின்றனை. ஆயினும் ராஜதர்மங்கள் கொடியவையென்று உனக்குத் தெரியாதிருப்பதேன்? இதென்ன ஆச்சர்யம்? உனது பர்த்தாவாகிய தசரதன் மேலுக்கு தர்மத்தையே யுரைப்பவன்போல் தோற்றுவனேயன்றி இயற்கையாகவே ஏகாந்தத்தில் கெடுதியைச் செய்பவன்; வெளிக்கு மாத்ரந் தேனொழுகப் பேசுவான்; கார்யங்களில் கொடியவனு யிருப்பவன். உனது ஸ்வபாவம் நிர்மலமாகையால் உனது பர்த்தாவையும் நற்கருத்துடையோனுக நினைக்கின்றனை. இப்படியாயின், ஐயோ! அவன் உன்னை இவ்வாறு நன்ருகவே வஞ்சித்திருக்கின்றனன். உனது பர்த்தாவானவன் அந்தந்த ஸமயங்களுக்குத் தகுந்தபடி உன்னருகில் வந்து இனிய உரைகளை மொழிந்துகொண்டு, எதாயினும் ஒரு ப்ரயோஜனத்தையும் செய்யாமலே உன்னை அநுஸரித்து வந்து, இப்பொழுது கௌஸல்யைக்குப் பெரும் ப்ரயோஜனத்தைச் செய்யப் போகின்றனன். உன்னை வஞ்சித்த விதந் தெரியுமா? துஷ்டஸ்வபாவனுகிய உனது கணவன், பரதனை உன் பிறந்தவகத்து பந்துக்களிடம் போகத் துரத்தி விட்டனன். பரதனொருவனேயன்ருே அவனுக்குச் சத்ரு; ஆகையால் அவனை வெளியே போகத் துரத்திவிட்டு ராஜ்யத்தை [1]நிஷ்கண்டகமாகச் செய்து, அந்த ராஜ்யத்தில் நாளையதினம் உதய காலத்தில்

1 நிஷ்கண்டகமாக - சத்ருவற்றதாக.

ராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யப் போகின்றனன். நீயோ அறியாதவள்; ஆதலால் வரப்போகிற தீங்கு ஒன்றும் உனக்குத் தெரியவில்லை. உனக்கு தசரதமன்னவன் பர்த்தாவென்று பேர் வைத்துக் கொண்டிருக்கிற சத்ரு. ஓர் அறிவுகெட்டவள் ஸர்ப்பத்திற்கு உள்ளே விஷமுண்டென்பது அறியாமல் அதற்கு நன்மையைச் செய்ய விரும்பித் தாய் வளர்ப்பதுபோல் வளர்த்து மடியிலிட்டுச் சீராட்டுவதுபோல், நீ உன் பர்த்தாவை வெளிக்குத் தோற்றுமல் உள்ளே மறைந்திருக்கும் சத்ருவென்று தெரிந்துகொள்ளாமல் விஸ்வாஸத்துடன் மடியிலேயிட்டுக் குலாவிக்கொண்டிருக்கின்றனை. பாம்பையாவது பகைவனையாவது அடித்துக்கொல்லாமல் வெறுமனே விட்டுவிடுவோமாயின், எப்படி தீங்கு வருமோ, அப்படியே தசரதன் இப்பொழுது உன்னையும் உனது புத்ரனையும் செய்துவிட்டனன். நீ எப்பொழுதும் ஸுகத்தையே அனுபவிக்கத் தக்கவளன்றோ? நீ ஒன்றுமறியாத சிறியவளாயிருக்கின்றனை. இந்த தசரதன் எவ்வளவு பாபிஷ்டனே, தெரியுமா? உன்னை இத்தனை காலமாகப் பொய்யான இன்சொற்களைச்சொல்லி வஞ்சித்துக் கொண்டிருந்தே, இப்பொழுது ராமனுக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்வித்து உன்னை அடியோடு கெடுத்துவிட்டனன். உன்னை ஒருத்தியைமாத்ரந் தானே? அன்று. உன் புதல்வனையும் என்னைப்போன்ற உனது பரிஜனங்களையும் பாழடித்தனன். ஐயோ! கெட்டுப்போயினை. கைகேயியே! இப்படிப்பட்ட துக்கத்தில் அகப்பட்டுக்கொண்டாயாகையால், நீ உடனே இச் சமயத்திற்குத் தகுந்தபடி உனக்கு யாது நன்மையோ அதை விரைவில் தேடிக்கொள்வாயாக. எப்படி செய்யலாமென்று நீ சிந்திக்கவேண்டாம். உனது புத்தி மிகவும்

அற்புதமா யிருக்கவற்றன்றோ? உன் கண்களின் அழகும் காண்போர்களுக்கு ஆச்சர்யத்தைவிளைக்கவல்லது. இனி உன் பர்த்தாவாகிய தசரதன் எவ்வளவு? ஆகையால் உனது புத்திஸாமர்த்யத்தையும் உனது அழகையும் உபயோகப்படுத்தி, உன்னையும் உன் புதல்வனையும் என்னையும் பாதுகாத்துக்கொள்வாயாக' என்றனள். அழகான முகமுடைய அந்தக் கைகேயி படுத்துக்கொண்டிருந்தே மந்தரை மொழிந்த வார்த்தையைக் கேட்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்து, சரத்காலத்திலுதித்த சந்த்ரகலைபோன்றவளாகிப் படுக்கையினின்றும் எழுந்திருந்தனள். அங்ஙனம் எழுந்திருந்து, ராமாபிஷேக வ்ருத்தாந்தத்தைக் கேட்டதற்கு மேன்மேலும் ஆநந்தம் பெருகப்பெற்று, அப்படிப்பட்ட ஸந்தோஷம் தனக்கு தெய்வாதீனமாக நேரிட்டதுபற்றி ஆச்சர்யம் அடைந்து அங்ஙனம் தனக்கு ப்ரியஞ்சொன்ன அக்கூனிக்குப் பரிசாக உயர்ந்த ஓராபரணத்தை எடுத்துக் கொடுத்தனள். மடந்தையர்மணியாகிய கைகேயி அங்ஙனம் அக்கூனிக்கு ஆபரணத்தைக் கொடுத்து மீளவும் அவளைப் பார்த்து, 'மந்தரையே! நீ எனக்கு மிகவும் ப்ரியமான இந்த ராமாபிஷேக வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகின்றனை. இப்படிப்பட்ட ப்ரியவார்த்தையைச் சொல்லுகிற உனக்கு இன்னும் யாது செய்வேணுக? 'சக்களத்தியின் பிள்ளையினிடத்தில் ப்ரீதி என்?' என்பாயோ? ராமனிடத்திலாவது பரதனிடத்திலாவது எனக்குப் பேதம் புலப்படவில்லை. எனக்கு இருவரும் ஒருவராகவே தோன்றுகின்றனர். ஆகையால் அரசன் ராமனுக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்விக்கப்போகிறுனென்பதைக் கேட்டு, எனக்கு மிகுந்த ஸந்தோஷமாயிருக்கின்றது. ஓ மந்தரையே! நீ ப்ரியத்திற்கே உரியவளா யிருக்கின்றனை; இந்த ராமாபிஷேக

வ்ருத்தாந்தத்தைக்காட்டிலும் ப்ரியமாயிருப்பது மற்றொன்றும் நீ எனக்குச் சொல்லமுடியாது. ஏனெனில் எனக்கு ப்ரியமானவைவையெல்லாவற்றிலும் ராமாபிஷேகமே மிகவும் அதிசயித்திருக்கின்றது. அப்படிப்பட்ட ப்ரியத்தைச் சொல்லினை. ஆனதுபற்றியே அதைவிட மற்றொரு ப்ரியத்தை நீ எனக்குச் சொல்லமுடியாது. இப்படி மிகவும் ப்ரியமான ஸங்கதியை எனக்குச்சொல்லினை யாகையால் உனக்கு இஷ்டமாகிய மற்றும் ஏதாயினுமொன்றை வேண்டுவாயாக. அதை உனக்குத் தருகின்றனன்' என்று மொழிந்தனள். ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## மந்தரை கைகேயிக்கு மேலும் துர்ப்போதனை செய்தல்.

இங்ஙனம் மொழிந்த கைகேயியைப் பார்த்து அவள் மொழிந்த மொழிகளைப் பொறுக்கமாட்டாமல் அவளிடம் அஸூயையுற்று, அள்கொடுத்த ஆபரணத்தையும் கீழே போகட்டு, ஹிதஞ் சொல்லினும் கேட்கவில்லையேயென்று கோபமும், அனர்த்தம் வருமேயென்று துக்கமும் மேலெழப் பெற்றுக் கைகேயியை நோக்கி, 'ஓ அறிவு கெட்டவளே! வருத்தப்படவேண்டிய காலம் இது; இங்ஙனந் தகாத ஸமயத்தில் உனக்கு ஸந்தோஷமாயிருக்கின்றதே! இதுவென்? இதற்குக் காரணம் யாதோ? தெரியவில்லையே! எனக்கு இது மிகவும் அற்புதமா யிருக்கின்றது. துக்கமாகிற பெருங்கடலி னிடையில் இருக்கின்றனையே! இது உனக்குத் தெரியாதிருக்கின்றதே! ராமாபிஷேகத்தைக் காட்டிலும் மேலான துக்கம் மற்றை யாது? பெருந் துயரத்திலாழ்ந்த நீ மனவருத்தமுற்றிருக்கவேண்டுங் காலத்

தில் ஸந்தோஷித் திருக்கின்றனை. நீ இப்படி விபரீத மாக ஸந்தோஷித் திருப்பதைக் காணவே, நான் மிக்க மனவருத்தங்கொண்டு, அதனால் கலிவுபெற்றிருக்கின்ற னன். நீ இங்ஙனம் பித்தம் பிடித்திருப்பதைக் கண்டு, எனக்கு மனத்தில் பரிஹாஸமாயிருக்கிறது. கைகேயீ! உனது மதிகேட்டிற்கு யான் சோகிக்கின்றனன். உனது சக்களத்தியின் பிள்ளை உனக்குப் பகைவனே. அவ னுக்கு நன்மை நேருவது நமக்கு மரணம் வந்தாற்போ லவே. ம்ருத்யுவைப்போல் அது வரக் கண்டும் மனத் தெளிவுள்ளவள் எவள்தான் அதை ஸந்தோஷமாகக் கொள்வாள்? ராமனேடொக்க ராஜ்யம் பெறுகைக்குப் பரதனுக்கே அதிகாரமுள்ளது. ஆகையால் பரதனைப் பற்றியே ராமனுக்கு பயம் உண்டாகும். ஆனால் ராமனுக்கு மாத்ரம் பயமேயன்றிப் பரதனுக்குப் பய மில்லையோ என்பாய்; அப்படியன்று. நம்மைப் பார்த்து பயப்படுகின்ற புலி பாம்பு முதலியவற்றினின்றுமே நமக்கு பயம் உண்டாகின்றது. பயந்தவனிடத்தினின் றுமே பயம் உண்டாகும். ஆகையால் பயப்படுகின்ற ராமனிடத்தினின்றும் பரதனுக்கு பயமுண்டாகுமென் பது சொல்லவேண்டுமோ? இதை நினைத்து நினைத்தே யான் சிந்தையுற்று வருத்தப்படுகின்றனன். 'லக்ஷ் மணனுக்கும் சத்ருக்னனுக்கும் ராஜ்யத்தில் அதி காரம் உண்டாகையால், அவர்களுக்கு வாராதபயம் பரதனுக்கு மாத்ரம் வரப்போகின்றதோ?' என்று நினைக் கவேண்டாம். பெருத்த வில்லாளியாகிய லக்ஷ்மணன் மனோவாக்காய கருமங்களால் எல்லாவிதத்திலும் ராம னையே அனுஸரித்திருப்பவன். லக்ஷ்மணன் ராமனை அனுஸரித்திருப்பது போலவே சத்ருக்னனும் பரதனை அனுஸரித்திருப்பவன். அப்படி அவ்விருவரும் க்ரமமாக ராமனுக்கும் பரதனுக்கும் பரதந்த்ரர்களாயிருப்பவரா

கையால் ராமனுக்கு லக்ஷ்மணனைப் பற்றிய பயமும் பரதனுக்குச் சத்ருக்னனைப் பற்றிய பயமும் உண்டா காது. பரதனைப் பற்றியே ராமனுக்குப் பயமுண்டா கைக்கு மற்றொருகாரணமும் உண்டு; சொல்லுகின் றேன் கேட்பாயாக: ஜனித்த க்ரமத்தைப்பற்றிப் பார்க் கிலும் பாதனது ஜனனமே ராமனுடைய பிறப்புக்கு ஸமீபித்திருக்கின்றது. ஆகையால் ராஜ்யம் வரவேண் டிய க்ரமம் ராமனுக்குப் பின்பு பரதனுக்கே மிகவும் ஸமீபமாயிருக்கின்றது. லக்ஷ்மண சத்ருக்னர்களுக்கோ வென்னில்-அவ்விருவரும் பரதனைக்காட்டிலும் பின் பிறந்தவராகையால் அவர்களுக்கு ராஜ்யப்ராப்தி தூர மாயிருக்கின்றது. (ஒதுங்கியிருக்கின்றது.) லக்ஷ்மண னும் சத்ருக்னனும் ராமனுக்கும் பரதனுக்கும் அதீ னப் பட்டவராயிருப்பினும், பரதனைப்போலவே அவர் களுக்கும் ராஜ்யத்தில் அபிலாஷம் (ஆசை) இருக் கக் கூடுமேயன்றி ராமனுக்குப் பிறகு பரதனே வயதின் க்ரமத்தைப்பற்றி ராஜ்ய ப்ராப்திக்கு உரியவனாகையால் ராமன் முதலில் பரதனையே அடிக்க நினைப்பான். ஆகையால் ராமனைப்பற்றி பரதனுக்கே பயம் உண்டா கும். வயதின் க்ரமத்தைப்பற்றி ராஜ்யப்ராப்திக்கு ராம னே உரியவனாயிருக்க, பரதனுக்கு 'அது வருமோ?' என் றுரைப்பாயாயின், அந்த க்ரமம் அப்படி யிருக்கட்டும். மற்றொன்று சொல்லுகிறேன்; கேள். ராமன் இயற் கையாகவே புத்திசாலியாயிருப்பவன்; ராஜநீதியில் விசேஷித்து மதியுடையவன்; அந்தந்த காலத்தில் செய்யவேண்டிய காரியங்களையும் அவ்வப்பொழுதே தவ றாமல்செய்யுந் தன்மையுடையவன்; உனது புதல்வனோ அப்படிப்பட்ட ஸாமர்த்யமுடையவனல்லன். ஆகையால் உன் புதல்வனை நினைத்தபொழுதெல்லாம் அப்படிப்பட்ட ராமனிடமிருந்து யாது பயம் நேருமோவென்று வடவட வென்று நடுங்குகின்றனன். ஆகையால் வயதின் க்ரமம்

அப்படியிருக்கட்டும். இப்படிப்பட்ட விபத்து நேராத படி முந்துற மருந்து தேடிக்கொள்ளவேண்டாமா? பிள்ளைகளின் வார்த்தை அப்படி யிருக்கட்டுமென விட்டு உனது சக்களத்தியின் ஸங்கதியைக் கேட்பாயாக. கௌஸல்யையின் பிள்ளை நாளைய புஷ்ய நக்ஷத்ரத்தி னன்று மஹத்தான யௌவராஜ்யத்தில் ப்ராஹ்மணோத் தமர்களால் பட்டாபிஷேகம் செய்விக்கப் பெறுகையில், அந்தக் கௌஸல்யையின் பாக்யத்தை எவ்விதம் உரைக் கலாகும்? அவளே மிகுந்த பாக்யமுடையவள். பிள்ளை யுவராஜனாகக் கௌஸல்யை இவ்வள வவ்வளவென்று எண்ணமுடியாத ஸந்தோஷம் அடைந்து உலகமெங்கும் புகழ்பெற்றுச் சக்களத்தி முதலிய சத்ருக்களை அடக்கி மேலாயிருக்கப் போகின்றனள். அப்பொழுது அந்தக் கௌஸல்யைக்கு நீ தாஸிபோலிருந்து கைகளைக் கூப் பிக்கொண்டு ஸேவை(ஊழியம்) செய்யப் போகின்றனை. ராமனால் உன் புதல்வனுக்கு துர்க்கதி உண்டாகுமென் பது அப்படி யிருக்கட்டும். கௌஸல்யையிடமிருந்து இதைக்காட்டிலும் வேறு துர்க்கதி உனக்கு யாது நேரி டவேண்டும்? அப்படி யாகுமாயின், நீயும் உன்னையுடைய நாங்களும் கௌஸல்யைக்கு வேலைக்காரிகளாகப் போ கின்றனம். இந்தக்கதி நம்மளவில் மாத்ரமேயன்று; உனது புதல்வனும் ராமனுக்கு வேலைக்காரனாகப் போ கின்றனன். [1] ராமனுக்குப் பட்டாபிஷேகமாகையில் அவனுடைய உத்தமஸ்த்ரீகளெல்லோரும் ஆநந்தம்

---

1 இதற்கு மூலம்—

'ஹ்ருஷ்டாः கலு பவிஷ்யந்தி ராமஸ்ய பரமாः ஸ்த்ரியः।
அப்ரஹ்ருஷ்டா பவிஷ்யந்தி ஸ்நுஷாஸ்தே பரதக்ஷயே'

(ராமஸ்ய பரமாः ஸ்த்ரியः) ராமனுடைய உத்தம ஸ்த்ரீகள் இந்த (ஸ்த்ரியः) என்கிறதற்குச் சரியாக இரண்டாவது பாதத்தில்

அடைந்திருப்பார்களன்றோ? பரதன் தாரித்ரியம் பெற்றுக் குறைந்திருக்கையில் உனது மருகிகள் ஸந்தோஷங்குன்றி இருக்கப்போகின்றனர்' என்றனள் இவ்

---

(ஸ்நுஷா:) மருகியர்-கைகேயியின் மருமக்கள்-பரதனுடைய பார்யைகள் - என்றிருக்கின்றது. அதனுடைய ஸாஹசர்யத்தினால் இந்த ஸ்த்ரீகள் கேவல பரிசாரிகாதி ஸ்த்ரீகளன்றி ராமனுடைய பார்யைகளே யாவார்களென்று ஏற்படுகின்றது. இதனால் ராமனுக்கு வெகு பார்யைகள் உளரெனத் தெரியவருகின்றது. ஆனதுபற்றியே ஸுந்தரகாண்டத்தில் 'பிதுர்நிதேஶம் நியமே க்ருத்வா வநாந்நிவ்ருத்தஶ்சரிதவ்ரதஶ்ச। ஸ்த்ரீபிஸ்து மந்யே விபுலேக்ஷணாபிஸ் த்வம் ரம்ஸ்யஸே வீதபய: க்ருதார்த:' (தந்தையின் ஆணையினபடி ஏற்படுத்தப்பட்ட பதினான்கு வர்ஷங்களைக் கடத்தி, வ்ரதத்தை முடித்துக்கொண்டு வனத்தினின்றும் புறப்பட்டு பயந்தீர்ந்து ப்ரயோஜனம் நிறைவேறப் பெற்று நீண்டழகிய கண்களையுடைய ஸ்த்ரீகளோடு கூடி க்ரீடித்துக் கொண்டிருக்கப் போகின்றனை.) என்று ஸீதை ராமனைக் குறித்து மொழிந்தனள். யுத்தகாண்டத்தில் தர்ப்பசயனத்தை வர்ணிக்கும்பொழுது 'ஸுஜாதை: பரமநாரீணாமபிம்ருஷ்டமநேகதா' (உத்தம ஸ்த்ரீகளின் கைகளால் அனேகவிதமாக ஆலிங்கனஞ் செய்யப்பெற்றது) என்று ராமனது இடக்கைக்கு விசேஷணஞ் சொல்லப்பட்டது. பார்யைகளாகாதவர் தமது புஜங்களால் ஒரு புருஷனுடைய புஜத்தை அணைக்கமாட்டார்களன்றோ? பின்னும் உத்தரகாண்டத்தில் அஶ்வமேதம் ஆரம்பிக்கும் பொழுது 'மாதரஶ்சைவ ஸர்வா மே குமாராஸ் ஸ்த்ரீ கணாஶ்ச। அக்ரதோ பரதம் க்ருத்வா கச்சந்த்வக்ரே ஸமாஹிதா:' (எனது தாய்மார்களெல்லோரும் பிள்ளைகளும் ஸ்த்ரீஸமூஹங்களும் பரதனை முன்னிட்டுக்கொண்டு ஊக்கத்துடன் முன்பு நடப்பார்களாக) என்று ராமன் மொழிந்திருக்கின்றனன். இங்கு ஸீதை தவிர வேறு பார்யைகள் இல்லையென்னில் (மேஸுதா: ஸ்த்ரீ கணாஶ்ச) என்று என்னுடைய பிள்ளைகளென்பதுவும் என்னுடைய ஸ்த்ரீ ஸமூஹங்களென்பதுவும் பொருந்தாது. மேலும், தர்மபத்னியில்லாதவனுக்கு யாகஞ்செய்ய அதிகாரமில்லை ராமன் ஸீதையை அரண்யத்துக்கு அனுப்பி யிருக்கையில் அஶ்வமேதஞ் செய்ததாகத் தெரியவருகையால் அவனுக்கு வேறு பார்

யைகளும் உண்டென்று அர்த்தாபத்தி ப்ரமாணத்தினுல் ஏற்படுகின்றது. அர்த்தாபத்தியாவது — ஓர்த்தத்தினுல் அவஸ்யமாக மற்றோரர்த்தம் ஸித்திப்பதுவே. உதாஹரணம்—அப்பத்தை மூட்டையாகக்கட்டித் தடியில் மாட்டி ஓரிடத்தில் வைத்திருக்கையில், அந்தத்தடியை எலி இழுத்துக்கொண்டு போயிற்றென்றால் அதில் மாட்டியிருந்த அப்பத்து மூட்டையும் போயிற்றென்பது ஸித்தமன்றோ? அப்படியே இங்கும் 'தர்மபத்னியில்லாதவன் யாகஞ்செய்யலாகாது, பத்னியோடு கூடவே யாகஞ்செய்யவேண்டும்' என்று தர்மசாஸ்த்ர மிருக்கையில் ஸீதையின்றியே தர்மஸ்வபாவனுகிய ராமன் யாகஞ் செய்தானென்னில் அவனுக்கு வேறு பார்யைகள் உண்டென்று ஸித்தமாகின்றது. இதுவே அர்த்தாபத்திப்ரமாணம். அப்பொழுது ராமனுக்கு ஏகபத்னீவ்ரதம் எப்படி கூடுமென்னில்—போகத்திற்கு அல்லாமல் தர்மானுஷ்டானத்துக்கு மாத்ரம் உபயோகப்படும்படியான பார்யைகள் உளராகையால் ஏகபத்னீவ்ரதத்திற்கு தோஷமில்லை. ஸீதையை விட்டபின்பும் இதர பார்யைகள் இருந்தமையால் 'பார்யாவியோகம் உண்டாகுக' என்கிற ப்ருகு சாபம் எப்படி சேருமென்னில்— ஸீதையினிடத்தில் உண்டான ப்ரீதியின் மிகுதியால் ஸீதாவியோக துக்கத்தை நன்கு அனுபவித்ததுபற்றி அந்த சாபம் பரிபாலிதமாகின்றது. யாகத்தில் ஸீதையின் ப்ரதிமையை ஏற்படுத்திக்கொண்டது ஸீதையினிடத்திலுள்ள ஸ்னேஹ பஹுமானங்களைப் பற்றியேயன்றி வேறு பார்யைகளில்லாமையைப்பற்றி யன்று என்று சிலர் கூறுகின்றனர். இது பூர்வபக்ஷம். இதற்கு ஸித்தாந்தம்:— ராமன் ஏகபத்னீ வ்ரதமுடையவனென்பது ஸர்வர்க்கும் தெரிந்த விஷயமே. இதர பார்யைகள் இருப்பார்களாயின் அவன் ஏகபத்னீவ்ரதனென்றுரைக்க நேராது. ஸீதாப்ரதிமையைக் கொண்டே யாகஞ்செய்ய அதிகாரம் நேருமாகையால் 'ஸீதாவியோக காலத்தில் இதர பார்யைகள் இல்லையாயின் யாகஞ்செய்ய நேராது' என்றுரைக்கலாகாது. இவ்விஷயத்தைப்பற்றியே உத்தரகாண்டத்தில் 'காஞ்சநீம் மம பத்நீஞ்ச தீக்ஷார்ஹாம் யஜ்ஞகர்மணி। அக்ரதோ பரதஃ க்ருத்வா கச்சத்வக்ரே மஹாமதிః' (யஜ்ஞகார்யத்தில் தீக்ஷைக்குத் தகுந்தபடி ஸுவர்ணத்தினுல் செய்யப்பட்ட எனது பார்யையை (ஸ்வர்ணமயமான ஸீ

ப்ரதிமையை) மிகுந்த மதியுடையவனுகிய பரதன் முன்னிட்டுக்கொண்டு முன்பு நடப்பானுக) என்று ஸீதாப்ரதிமை யாகதீக்ஷைக்கு அர்ஹமானதென்றும் பத்னியோடு ஒத்திருப்பதென்றும் சொல்லப்பட்டது. மேலும் 'நஸீதாயா: பரம் ஹார்யாம் வவ்ரே ஸ ரகுநந்தந:। யஜ்ஞேயஜ்ஞேச பத்ந்யர்த்தம் காஞ்சநீ ஜாநகீ ஹவத்' (ராமன் ஸீதையைக் காட்டிலும் வேறு பார்யையை மணம் புரியவில்லை; யாகங்கள்தோறும் அவனுக்குப் பத்னீஸ்தானத்தில் ஸுவர்ணமயமான ஸீதையே (ஸீதாப்ரதிமையே) இருந்தனள்' என்று ஸ்வர்ணமயமான ஸீதாப்ரதிமையைக் கொண்டே யாகதீக்ஷைகள் நடந்தனவாகத் தெரிய வருகின்றது. ஆகையால் பார்யையின்றி யாகஞ் செய்ய நேராது. பார்யா ப்ரதிமையைக் கொண்டு யாகஞ் செய்வது சரியன்று. ராமன் யாகஞ் செய்தானுகையால் அவனுக்கு ஸீதையைக்காட்டிலும் வேறு பார்யைகள் உளர்' என்னும் அனுமானம், 'ராமன் ஸீதையைக்காட்டிலும் வேறு பார்யையை மணம் புரியவில்லை. யாகங்கள்தோறும் ஸ்வர்ணமயமான ஸீதாப்ரதிமையைப் பத்னியாகக் கொண்டிருந்தனன்' என்று விருத்த வசனம் இருக்கும்பொழுது ஈடேறுது. நேரே வசனமிருக்க அதற்கு விரோதமான ந்யாயம் நிலைநிற்காது. ப்ரத்யக்ஷ்ச்ருதிக்கு விருத்தமின்றியிருக்கிற இவ்வசனத்தினுல் 'பார்யை அருகில் இல்லாதகாலங்களிலும் அருகிலிருந்தும் யாகத்திற்கு அனுகூலையாகாத காலங்களிலும் பத்னியின் ப்ரதிமையைப் பத்னீஸ்தானத்தில் வைத்துக்கொண்டு ஸ்ரௌதஸ்மார்த்த கர்மங்களை நடத்தலாமென்னும் விதி ஏற்படுகின்றது. அப்படியே 'ஏ-ப்ரஹார்யோ உ நநுகூலஹார்யஶ்ச தீர்ஹபுஞ்ஜீலோ ஹார்யாப்ரதிக்ருதிம் விதாய பார்வணம் குர்யாத்' (பார்யை தூரதேசத்திலிருக்கப் பெற்றவனும் யாகாதிகர்மங்களுக்கு பார்யை உபயோகப்படக்கூடாத அஸந்தர்ப்பமுடையவனும் தர்ப்பங்களால் பார்யாப்ரதிமையைச் செய்துகொண்டு பார்வணஞ் செய்யவேண்டும்' என்று ஹேமாத்ரியென்னும் தர்மசாஸ்த்ரத்தில் கூறப்பட்டது. அப்பொழுது பார்யை கார்யஞ் செய்ய வல்லமையற்றிருப்பது பற்றி அவள் செய்ய வேண்டிய கார்யங்களை அத்வர்யுவாவது யஜமானனுவது செய்யவேண்டும். பார்யை யாகாதிகார்யங்களுக்கு அனுகூலை யாகாதவன்று அவளுக்கு மரணமில்லாமையால் எப்படி அக்னிக்குக் கெடுதி

இல்லையோ, அப்படியே இங்குங் கண்டுகொள்வது. தோஷமுடையவனென்று துறந்த பார்யையிடத்தில் ஸ்னேஹ பஹுமானங்களைக் காட்டுவது சிந்தைக்கு இடமாகையால் ஸ்னேஹ பஹுமானங்களுக்காக ஸீதாப்ரதிமையை வைத்துக்கொண்டானென்பது ந்யாயமன்று. 'மாதரஶ்சைவ ஸர்வாமே குமாராஃ ஸ்த்ரீ கணாஶ்ச' என்கிற விடத்தில் (மே) என்கிற இது (மாதரஃ) என்கிற இத்தோடு மாத்ரமே சேருகின்றது. (மே மாதரஃ) என்னுடைய தாய்மார்களும், (குமாராஃ) பரதனுடைய பிள்ளைகளும், (ஸ்த்ரீ கணாஶ்ச) பரதனுடைய ஸ்த்ரீ ஸமூஹங்களும் என்று பொருள். ராமனுக்கு வேறு பார்யைகள் உளரென்று கொண்டாலும் அவர்கள் தர்மார்த்தமேயன்றி ப்ரஜார்த்தமன்றாகையாலே ராமனுக்கு அப்பொழுது குமாரர்களில்லாமையால் (குமாராஃ) என்று பரதனுடைய குமாரர்களையே சொல்லவேண்டும். அப்பொழுது குமார சப்தத்தோடு சேர்த்துப் படிக்கப்பட்ட ஸ்த்ரீ கணங்களும் பரதனுடைய ஸ்த்ரீ ஸமூஹங்களே யாகவேண்டும். இப்படி பொருள் கொண்டோமாயின் ராமனுக்கு இதரபார்யைகள் உளரென்பது ஸித்திக்காது. ஆகையால் (பரமாஃ ஸ்த்ரியஃ) (பரமநாரீணாம்) (ஸ்த்ரீஶிஶ்ச மந்யே) என்று இது முதலிய இடங்களில் போகத்தை ப்ரஸங்கித்துச் சொல்லுகையால் தர்மபத்னிகளைச்சொல்ல நேராமையாலும் இனி ஸாதாரணாதி பரிக்ரஹசங்கைக்கு ராமனிடத்தில் அவகாசமில்லாமையாலும் இவைகளுக்கு வேறாகப் பொருள் கொள்ளவேண்டும். அதெப்படியென்னில்— (பரமாஃ ஸ்த்ரியஃ) என்கிற விடத்தில் பரிசாரிகை முதலியவர்கள் என்று பொருள். (பரமநாரீணாம்) என்பது கவியின் வசனமாகையால் ஸ்ரீ பூமி நீளாதி திவ்யமஹிஷிகளால் அணையப்பட்டதென்று பொருள் கொள்ள வேண்டும். (ஸ்த்ரீஶிஶ்ச மந்யே) என்ற இது ஸுந்தரகாண்டத்தில் ஸீதை ராமனை விட்டுப் பிரிந்து துக்கத்தினால் தான் காணாது போனபின்பு ராமன் வேறு பெண்களை மணம் புரிந்து ஸுகித்திருக்கக் கூடுமென்று தானாகச் சங்கித்துச் சொன்னதாகப் பொருள் கொள்ளவேண்டும். ஆகையால் ஸம்ப்ரதாய ஸித்தாந்தானுஸாரமாக விமர்சித்துப் பார்க்கையில் ராமனுக்கு ஸீதையைத் தவிர வேறு பார்யையில்லையென்பது ஸித்தம்.

வாறு சிறிதுங் களிப்பின்றித் தனக்கு புத்தி சொல்லு கிற மந்தரையைப் பார்த்து ராஜபத்னியாகிய அந்தக் கைகேயி அவள் மொழிந்தவற்றைப் பாராட்டாமல் ராமனது குணங்களையே இங்ஙனம் கொண்டாட ஆரம் பித்தனள். 'மந்தரையே! ராமன் தர்மங்களை உணர்ந் தவன்; பெரியோர்களால் நன்கு கற்பிக்கப் பெற்றிருப்ப வன்; பிறர் செய்த உபகாரங்களையெல்லாம் நிறுத்துத் தீர்த்தறிந்தவன்; எப்பொழுதும் பொய்யுரையான்; பரிசுத்தனு யிருப்பவன்; பின்னும், அரசனுக்கு மூத்த குமாரன். ஆனதுபற்றி அவனே யௌவராஜ்யத்திற் குத் தகுந்தவனுகையால், ராஜ்யம் பரதாதிகளுக்கு ஸாதாரணமாகச் சொந்தமென்று கூறுவது நேரா காது. 'ராமனிடமிருந்து பரதனுக்கு அனர்த்தம் விளையும்' என்று நினைக்கிருயோ? அது உண்டாகாது. ராமன் தம்பிகளையும் வேலைக்காரர்களையும் தமப்பனைப் போல் மிகுந்த ப்ரீதியுடன் பாதுகாத்துவரப் போகின் றனன். அவன் வெகுகாலம் வாழ்நாள் வளரப் பெற்றிருப் பானுக. அப்படிப்பட்ட ராமாபிஷேகத்தைக் கண்டு ஸந்தோஷிக்க வேண்டி யிருக்க, அது தப்பி, அடி கூனியே! நீ இங்ஙனம் பரிதபிப்பது ஏனே? 'பரத னுக்கு ராஜ்யம் நேரவில்லையே என்கிற வருத்தத்தி ஞல் பரிதபிக்கிறேன்' என்கிருயோ? ராமன் நாறுண்டு கள் பரிபாலனஞ் செய்த பின்பு புருஷர்களிற் சிறந்த பரதனும் தமப்பன் பாட்டன் வரிசையாக வந்த ராஜ்யத் தை அடையப் போகின்றனன். இது நிச்சயம். இப் பொழுது ராமனுக்கு அபிஷேகம் நடப்பதே யுக்தம். இங்ஙனம் உசிதமாகிய ராமாபிஷேக மென்னும் சுபம் ஸமீபத்திலிருக்கின்றது. இனி பரதாபிஷேகமென்னுஞ் சுபமும் வரப்போகின்றது. இவ்வாறு மங்கலங்கள் ஒன்றுக்குமேல் ஒன்ருக வந்துகொண்டிருக்கையில், நீ பரிதபிப்பது எதுக்காக? 'உனக்கு அனர்த்தம் வருமே'

என்கிறாயோ? அது வரமாட்டாது. ராமன் கௌஸல்யையைக்காட்டிலும் மேலாகவே எனக்குச் சுச்ரூஷை செய்கின்றனன். ஆகையால் பரதனைக்காட்டிலும் ராமனையே நான் மேலாகப் பார்க்கவேண்டியதாயிருக்கின்றது. ராமன் தம்பிகளையும் தன்னைப்போலவே பார்த்துக்கொண்டிருப்பவனாகையால் ராமனுக்கு ராஜ்யம் வருமாயின் இப்பொழுது பரதனுக்கும் ராஜ்யம் வந்தாற்போலவேயன்றோ? ஆகையால் இனி அதற்காக ஒரு நூறாண்டு கழியவேண்டுமோ?'' என்றனள். மந்தரை இங்ஙனம் கைகேயி மொழிந்தவற்றைக் கேட்டு மிகவும் துயரம் அடைந்து, அனல் வீசும்படி நீண்ட பெருமூச்சுக்களை எறிந்துகொண்டு மீளவும் அவளைப்பார்த்து 'ஐயோ! உனக்கு விவேகம் போராது. ஆகையால் 'இது நன்று, இது தீது' என்று தெரிந்துகொள்ளாமல் கெடுதியைத் தானே நல்லதென்று பாவிக்கின்றனை. பரதன் ராஜ்யத்தை விட்டுக் காட்டுக்குப் போகும்படி நேர்ந்த வ்யஸனத்தையும், நீ ஸுகங்களைத் துறக்கும்படியான விபத்தையும் அடைந்து சக்களத்திக்கு ஊழியஞ்செய்யும் மஹாதுக்கம் மேன்மேலும் ஸமுத்ரம்போல் கரைபுரண்டுவர, அதில் மூழ்கித் தத்தளித்துக்கொண்டிருக்க வேண்டும்படியான இப்படிப்பட்ட துரவஸ்தை நேரிடப் பெற்றிருக்கின்ற உன்னை நீ தெரிந்துகொள்ளாமலிருக்கின்றனை. 'நூறாண்டு சென்ற பின்பாவது பரதனுக்கு ராஜ்யம் வரும்' என்கின்றாயோ? கைகேயி! இப்பொழுது ராமன் அரசனாவானாயின், ராமனுக்குப் பின்பு அவனுக்குப் பிள்ளையாகப் பிறந்தவனே அரசனாவான். அன்றிப் பரதனும் அவன் பிள்ளைகளும் ராஜ்யத்தை ஆளும்படி எக்காலத்திலும் நேராது. ஆகையால் ராஜவம்சத்தில் பரதனுடைய பெயரே இராது. ஆனதுபற்றி அதிலிருந்து அவன் தொலைந்து போனானென்றே சொல்

லலாகும். ஓர் அரசனுக்குப் பிறக்கும் பிள்ளைகள் எல்லோரும் ராஜ்யத்துக்கு அரசர்களாக ஏற்பாடு செய்யப்படுவார்களென்பதில்லை. அப்படியாயின், நீதிநெறி மிகவும் கெடுதி நேரப்பெற்று, ராஜ்யத்துக்கே ஹானி நேரிடும். ஆகையால் அரசர்கள் தமக்குச் சிறந்த குணங்கள் பொருந்திய வேறு பிள்ளைகள் இருந்த பொழுதிலும் மூத்த குமாரனுக்கே ராஜ்ய மாளவேண்டிய கார்யங்களை ஒப்புவிக்கின்றனர். ஆனதுபற்றி உனது புதல்வனுக்கு இனி எக்காலத்திலும் ராஜ்யம் நேரிடாது. தோஷங்களொன்றுமின்றி மிகவும் அழகு பொருந்தி ஸௌபாக்யங்களைக் குறிக்கிற உனது அவயவங்களைக் கண்டால் இப்படிப்பட்ட இந்தக்கெடுதியும் நேரிட வழி உண்டோ? ராஜ்யம் வாராதிருப்பினும் வந்தாற்போலவே யென்றுரைத்தனையே! அது நீ தெரியாமற் சொல்லுகிற வார்த்தையேயன்றி உண்மையன்று. உனக்கு எல்லாப் பிள்ளைகளிடத்திலும் ப்ரீதி ஒரேவிதமா யிருக்கின்றது. ஆகையால் உன் பிள்ளைக்கு வந்திருக்கிற அனர்த்தத்தை நீ அறியவில்லை. உனது புதல்வன் அநாதன் போல் ஸுகங்களை மிகவும் இழந்து, ராஜவம்சத்தில் சிறிதும் கணக்கின்றித் தொலைந்து போகின்றனன். 'ராமன் மூத்தவனுயிருக்கப் பரதனுக்கு ராஜ்யம் வர வழியில்லையே' என்று நினைப்பாயாயின், இதை யறிந்த நான் பரதனுக்கு ராஜ்யம் கைசோராதபடி ஹிதத்தை உனக்கு உண்டு பண்ணும் பொருட்டே இங்கு வந்தனன். இது உனக்குத் தெரியுமா? தெரியாது. ஏனெனில்— நீ அறிந்திருப்பாயாயின், சக்களத்திக்கு அபிவ்ருத்தி உண்டாகும்பொழுது எனக்கு வெகுமதி கொடுக்கநினைப்பது உனக்கு நேருமோ? இவ்வளவு தெளிவில்லாத நீ, நான் உனது மேன்மையை விரும்பி வந்திருப்பதை எப்படி தெரிந்துகொள்ளமுடியும்? ஆகையால் நீ தெரிந்து கொள்ளவில்லை. ராமன் சத்ருக்கள் உள்ளவரையில்

வெறுமனே யிருந்து பகைவரெல்லாந் தொலைந்துபோகவே [1] நிஷ்கண்டகமாகிய ராஜ்யத்தைப் பெற்றுப் பரதனைத் தேசாந்தரத்துக்காவது போகவிடுவான்; லோகாந்தரத்துக்காவது அனுப்பிவிடுவான். இது மாத்ரம் நிச்சயமே. ராமன் பரதனுக்கு இவ்வளவு அனர்த்தத்தையும் இனிமேற் செய்யப்போகின்றனன். நீயோ இப்பொழுதே செய்துவிட்டனை. இல்லாதே யென்? பரதன் பாலனு யிருக்கும்பொழுதே, அவனை நீயாகவே மாமனகத்துக்கு அனுப்பினை. 'அனுப்பின மாத்ரத்தில் கெடுதி யாது?' என்றுரைக்க வேண்டாம். சொல்லுகிறேன் கேள்: வ்ருக்ஷம் முதலிய ஸ்தாவரங்களுங்கூட ஒன்றுக்கொன்று மிகவும் ஸமீபத்திலிருப்பதனுல் ஒவ்வொரன்றுக்கும் ஒன்றோடொன்று கூடும்படியான ஸ்னேஹம் உண்டாகின்றது. இனி அப்படி யிருப்பதனுல் சேதனங்களுக்குப் பிறக்கிற ஸ்னேஹம் சொல்லவேண்டுமோ? ஆகையால் பரதன் அருகிற்றனே இருப்பானுயின் தசரதனுக்கும் ராமனுக்கும் அவனிடத்தில் மிகுந்த ப்ரீதி உண்டாயிருக்கும். இங்ஙனம் ப்ரீதியை விளைக்கும்படியான சேர்த்தியை நீயே கெடுத்துவிட்டனை. சத்ருக்னன் பரதனுக்கு அதீனமா யிருப்பவன்; ஆகையால் பரதனேடுகூடவே போயினன். ராமனை லக்ஷ்மணன் தொடர்ந்திருப்பதுபோல் அவன் பரதனைத் தொடர்ந்திருப்பவன். அந்தச் சத்ருக்னனுயினும் அருகில் இருப்பானுயின், தசரதனுக்காவது ராமனுக்காவது அவனிடத்திலுள்ள ஸ்னேஹத்தைப்பற்றிப் பரதனிடத்திலும் ப்ரீதி உண்டாகக்கூடும். அதுவும் இல்லாமற்போயிற்று காட்டில் கட்டை வெட்டி ஜீவிக்கிற விறகுதலையர் ஒரு மரத்தை வெட்டவேண்டிய காலம்

---

1 நிஷ்கண்டகம்—சத்ருவற்றிருக்கிற. கண்டகன்-சத்ரு.

நேரிட்டு அதைவெட்ட வரும்போது, அதைச் சுற்றிலும் முட்புதர்கள் வேலியாகச் சூழ்ந்திருந்தமையால் அம் மரம் தனக்குண்டான அப்பெரும்பயத்தினின்றும் தப் பித்துக்கொண்டதென்னும் இந்தப் பழமொழி, நாம் நித்யமாகவே அந்தப்புரத்தில் வஸிப்பவர்களாகையால் நேரே பார்க்க நேராதபோதிலும் நமக்கு ஜனங்கள் சொல்லக் கேள்வி உண்டல்லவா? அப்படியே பரதன் இங்கேயே யிருப்பானாயின், அந்த ஸஹவாஸத்தினால் நமது தசரதனுக்கு ப்ரீதி உண்டாகி, அவனை ராமனிட த்தினின்று உண்டாகிற பயத்தினின்றும் பாதுகாக்கக் கூடும். ஆனால் ராமன் லக்ஷ்மணனையும் தேசாந்தரத் திற்காவது லோகாந்தரத்திற்காவது பரதனைப் போல் அனுப்ப மாட்டானோ என்னில், அது செய்யான்; லக்ஷ் மணன் ராமனைக் காத்துவருவான்; அப்படியே ராம னும் லக்ஷ்மணனைக் காத்துவருவான்; அச்விதேவ தைக ளிருவருக்கும்போல் அவ்விருவருக்கும் உடன் பிறந்தமையாலுண்டான ஸ்னேஹம் எப்பொழுதும் ஈடேறிவருவது உலகமெங்கும் ப்ரஸித்த மாயிருக்கின் றது. ஆனதுபற்றி, ராமன் லக்ஷ்மணனுக்கு எவ்விதக் கெடுதியுஞ் செய்யமாட்டான். ராமன் பரதனுக்கு மாத் ரமே கெடுதியைச் செய்வான். இதற்குச் சந்தேக மில்லை. இப்படி யிருப்பதுபற்றி, பரதன் இங்கு வருவா னாயின், ராமன் அடித்துக் கொன்றுவிடுவானாகையால் அப்பரதன் இங்கு வந்து நங்கண்ணெதிரில் சாகாமல் கேகயராஜ க்ருஹத்தினின்றுமே காட்டுக்குப் போய் விடலாம். அப்பொழுது ப்ராணஹானி உண்டாகா தாகையால் அங்ஙனஞ் செய்வதே எனக்கு இஷ்டமா யிருக்கின்றது. உனது புதல்வனுக்கு ப்ராணனாவது நிற்குமாகையால் உனக்கும் இதுவே மிகவும் ஹிதமா யிருக்கும். பரதனைக் காட்டுக்கு அனுப்பமாட்டாயா யின், ராஜ்யத்தையாவது நேரிடச் செய்யவேண்டும். பரதன் தமப்பனிடம் அனுமதி பெற்று, தர்மத்தின்படி தந்தையினது ராஜ்யத்தைப் பெறுவானாயின், உனக்கு

நன்மை உண்டானுற் போலவே உனது பந்துக்களுக்கும் தப்பாமல் நன்மை உண்டாகும். உனது புதல்வன் ராஜ்ய மின்றி ராமன் கையில் அகப்பட்டு இருக்கத்தகாது. ஏனெனில்—அவன் ஸுகத்தையே அநுபவிக்கத் தகுந் தவனன்றி, கஷ்டத்தை அநுபவிக்கத்தகான். ஒரு வனுக்குக் கீழ்ப்பட்டிருப்பானுயின், ஸுகமென்பது சிறிதும் உண்டாகாது. மேலும், பரதன் ராமனுக்குச் சக்களத்தித் தாயின் குமாரன்; ஆகையால் அவனுக்கு இவன் ஸஹஜ சத்ருவா யிருப்பவன். ராஜ்யமில்லாமை யால் பரிவாரங்களின்றி அஸஹாயனுமாயிருக்கிற பர தன், ராஜ்யாபிஷேகம் பெற்றிருப்பதனுல் ஸமஸ்த ஸம் பத்துக்களும் பொருந்தி ஸஹாயங்களும் நேரப்பெற்றி ருக்கிற ராமனது கையில் அகப்பட்டு, எப்படி பிழைத் திருக்கப் போகின்றனன்? எப்படி ஆலோசித்துப் பார் த்தபோதிலும், ராமன் பரதனைக் கொல்லாமல் விடா னென்பது ஸித்தமே. அரண்யத்தில் ஸிம்ஹம் பின் ருெடர்ந்துவரக் கண்டு பயந்து மரண மடையப்போகிற மஹாகஜம் போல் ராமனிடம் அகப்பட்டுக் கீழ்ப்படிந்து சாகக்கிடக்கிற உன் பிள்ளையை நீ ரக்ஷிக்கவேண்டும். நீ முன்பு 'நாம் மஹாராஜனுக்கு மிகவும் இஷ்டமா யிருக்கின்ருேம்' என்கிற ஸந்தோஷப் பெருக்கினுல் கர் வம் அடைந்து உனது சக்களத்தியாகிய ராமனுடைய தாயாரை அவமதி செய்திருக்கின்றனை; இப்பொழுது அவள் தன் பிள்ளை அரசனுகவே, உன்மீது தனக்குள்ள பகையைத் தீர்த்துக்கொள்ளாம லிருக்க நேருமோ? கட்டாயமாய் அவள் உன்னைத் தனக்கு வேலைக்காரி யாகச் செய்துகொண்டு அவமதிக்கப் போகின்றனள். அளவில்லாத ரத்னங்கள் நிறைந்திருக்கிற ஆகரங்கள் பொருந்திய மலைகளும் பட்டணங்களும் நெருங்கப்பெற்ற இப்பூமண்டலத்திற்கு ராமன் எப்பொழுது அரசனு

வானே, அப்பொழுதே உன்பிள்ளையும் நீயும் தாரித்ர்யம் அடைந்து, பயங்கரமாயிருப்பது பற்றி வாயாற் சொல்ல முடியாத அவமானத்தை யடையப் போகின்றீர்கள். ராமன் எப்பொழுது பூமிக்கு அரசன் ஆவானே, அப்பொழுதே பாதன் மிகவும் நசித்துப்போவது நிச்சயம். ஆனதுபற்றி உனது புதல்வனுக்கு ராஜ்யம் வருவதற்கும் மற்றொருவனை (ராமனை)ப்பட்டணத்தினின்று துரத்துவதற்கும் தகுந்த உபாயத்தை இப்பொழுது ஆலோசித்துக் கொள்வாயாக' என்று இங்ஙனம் மொழிந்தனள். எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## கைகேயி மந்தரையின் துர்ப்போதனைக்கு உட்படுதல்.

மந்தரை இங்ஙனஞ் சொல்லக் கேட்டுக் கைகேயி 'நானே தாஸியாவேன்' என்று பெருங்கோபத்தினால் எரி விசும்படி முகஞ் சிவக்க, அனல் பறக்கும்படி நீண்ட பெருமூச்செறிந்து, மந்தரையைப் பார்த்து 'நான் இப்பொழுதே ராமனை வேகமாகக் காட்டுக்கு அனுப்பி விடுகின்றேன்; பாதனுக்குச் சீக்ரமாக யௌவராஜ்யத்தில் பட்டங்கட்டி வைக்கின்றேன். மந்தரையே! எந்த உபாயத்தினால் பாதனுக்கு ராஜ்யம் வரும்? ராமனுக்கு எவ்விதத்தில் ராஜ்யம் நேராமற்போகும்? இதைமாத்ரம் நீ இப்பொழுது நன்கு ஆலோசிக்கவேண்டும்' என்றனள். மந்தரை, ஸஹஜமாகவே பாபத்தில் கண்வைத்திருப்பவள்; ஆகையால், அவள் அந்த ராஜபத்னி அங்ஙனஞ் சொல்லக் கேட்டு ராமனுக்கு ப்ரயோஜனமாகிய பட்டாபிஷேகத்தைக் கெடுக்க நினைத்துக் கைகேயியை நோக்கி 'கைகேயி! எனக்கு இப்பொழுது ஸந்தோஷமாயிற்று. உனது புதல்வனாகிய பாதனுக்கே எப்படி ராஜ்யமெல்லாம் நேருமோ, அதைச் சொல்லு

கின்றேன் ; கேட்பாயாக : கைகேயி! நீ ஸொந்த ப்ர யோஜனத்தைப் பல தடவைகளில் சொல்லிக்கொண் டிருப்பாய். அப்படிப்பட்டதை என் வாயால்தானே கேட்கவேண்டுமென்று விரும்புகின்றனே. என் ? நீ அந்த உபாயத்தை மறந்துவிட்டனையா? அல்லது தெரிந்திருந்தும் நான் சொல்லக் கேட்கவேண்டுமென்று மறைக்கின்றனையோ ? அடி அழகுடையாய் ! நானே சொல்லிக்கேட்கவேண்டுமென்று உனக்கு எண்ணம் உள தாயின், சொல்லுகின்றேன் ; கேட்பாயாக: அதைக் கேட்டு யுக்தமோ? அன்றோ? என்று நீயும் ஆலோசித் துப்பார்' என்றனள். இங்ஙனம் அவள் மொழிந்த மொ ழிகளைக் கேட்டுக் கைகேயி தான் ஸுகமாகப் படுத்துக் கொண்டிருக்கலாம்படி நன்கு பரப்பப்பட்ட படுக்கையி னின்றும் ஆவலின் மிகுதியால் கொஞ்சம் எழுந்திருந்து அம்மந்தரையைப் பார்த்து 'மந்தரையே ! எந்த உபா யம் செய்தால் பரதனுக்கு ராஜ்யம் வருமோ, ரமனுக்கு எப்படி வாராமலிருக்குமோ, அந்த உபாயத்தைச் சொல்லவேண்டும்' என்றுரைக்க, பாபத்தையே செய்ய நினைத்துக்கொண்டிருக்கிற மந்தரையென்னும் அந்தக் கூனியானவள் ராமனது அபிஷேக ப்ரயோஜனத்தைக் கெடுக்க முயற்சிகொண்டு, 'தேவீ! முன்பு தேவாஸுர யுத்தத்தில் உனது பர்த்தாவாகிய தசரதன் தேவேந் த்ரனுக்கு ஸஹாயஞ் செய்யக் கருதி, தன்னைச் சேர்ந்த ராஜர்ஷிகளோடு கூட உன்னையும் அழைத்துக்கொண்டு தென்திசையாகப் புறப்படுத் தண்டகாரணியஞ் சேர்ந்து அங்குத் திமித்வஜனிருக்கின்ற வைஜயந்த மென்னும் பட்டணத்துக்குப் போயினன். அந்தத் திமித்வஜன் சம்பரனென்னும் பெயர் கொண்ட ஓர் பெரிய அஸு ரன். அவனுக்கு நூறுவிதங்களாகிய மாயைகள் தெரி

யும். அவன் தேவதைகளிடம் தோல்வியடையாமல் அவர்களைக் கீழ்ப்படுத்திக்கொண்டு தேவேந்த்ரனோடு யுத்தஞ்செய்தனன். அந்த மஹாயுத்தத்தில் மத்யாஹ்ன மெல்லாம் தேஹம் முழுவதும் பாணசூலாதிகள் பொத்தவும் பாசு கதாதிகள் அடிக்கவும் பெற்றுப் பலவித காயங்கள் பட்டுப் பரவசமாகிப் படுத்து நித்ரை செய்து கொண்டிருக்கிற புருஷர்களை, இரவில் வேகத்துடன் அவ்விடம் வந்து ராக்ஷஸர்கள் அடித்தனர். அவ்விடத்தில் அந்த ராத்ரியிலேயே மஹாபுஜனாகிய தசரதமஹாராஜன் அந்த அஸுரர்களோடு மஹாயுத்தஞ் செய்தனன். பின்பு அம்மன்னவன் தேஹம் முழுவதும் பொடியாகும்படி அவ்வஸுரர்களால் பல ஆயுதங்களைக் கொண்டு அடிக்கப்பட்டனன். அப்பொழுது நீ அவனுக்கு ஸாரத்யஞ் செய்து கொண்டு இருந்தனையாகையால் மூர்ச்சை யடைந்த உன்பர்த்தாவை யுத்த பூமியினின்றும் அப்புறங் கொண்டு சென்று, சிகித்ஸோபசாரங்கள் செய்து பாதுகாத்தனை. நீ கொண்டுபோன இடத்திற்கும் அந்த அஸுரர்கள் வந்து உனது பர்த்தாவின்மேல் பலவித ஆயுதங்களைக் கொண்டு அடிக்க, அடியுண்ட அம்மன்னவனை, நீ அப்பொழுதும் அவ்விடமிருந்து மற்றோரிடங்கொண்டு சென்று மீளவுங்காப்பாற்றினை. அழகிய காட்சி யுடையவளே! நீ இவ்விதம் இரண்டு தடவையாகப் பாதுகாத்ததற்கு ஸந்தோஷம் அடைந்து, அம்மன்னவன் உனக்கு இரண்டு வரங்கள் கொடுத்தனன். தேவி! அப்பொழுது நீ உன் பர்த்தாவை நோக்கி 'நான் எப்பொழுது விரும்புகின்றேனோ, அப்பொழுது கொடுக்கப் பெற்றுக்கொள்கின்றனன்' என்று மொழிந்தனை. அம்மஹானுபாவனும் 'அப்படியே ஆகட்டும் என்றனன். இந்த வ்ருத்தாந்தம் நடக்கும்பொழுது நான் நேரே பார்த்துக்கொண் டிருந்தவளன்றாகை

யால் எனக்குத் தெரியாது. முன்பு ஒரு காலத்தில் நீயே எனக்கு இதைச் சொல்லத் தெரியும். இந்த வ்ருத்தாந் தத்தை உன்னிடத்திலுள்ள ஸ்னேஹத்தினல் உனக்கு இது எப்பொழுதாயினும் உபயோகப்படுமென்கிற எண் ணத்துடன் இதை மறக்காமல் என்மனத்திலேயே வைத் துக்கொண்டிருக்கின்றனன். இப்பொழுது தசரதன் ராமாபிஷேகத்திற்காக ஸம்பாரங்களைச் சேர்த்துக் கொண்டிருக்கின்றனன். நீ, அவன் அந்த ப்ரயத்தனங் களைச் செய்யாதிருக்கும்படி பலாத்காரஞ் செய்து தடுப் பாயாக. அவ்விரண்டு வரங்களில் ஒன்றுக்குப் பரதனுக் குப் பட்டாபிஷேகம் நடத்துவதும், மற்றொன்றுக்கு ராமன் பதினன்கு வர்ஷங்கள் அரண்யஞ் சென்றிருக் கும்படி செய்விப்பதும் நடக்கவேண்டுமென்று உன் பர்த் தாவை வேண்டிக்கொள்வாயாக. ராமன் பதினன்கு ஸம்வத்ஸரங்கள் அரண்யவாஸஞ் செய்யும்படிக்குச் செய்வாயாயின், அவ்வளவு காலத்தில் உனது புதல்வனு கிய பரதன்மீது ப்ரஜைகளின் மனத்தில் மிகுந்த ப்ரீதி உண்டாய் விடும். பின்பு ராமன் வந்து ராஜ்யத்துக்காக எத்தனை பாடுபட்டபோதிலும் அவையெல்லாம் வீணே யாகுமாகையால் பரதனுக்கு ராஜ்யம் நிலைபெற்றுப்போய் விடும். இந்த உபாயத்தைச் சொல்லினன்; இனி இதை நடத்துகிற விதத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. அடி அஶ்வபதியின் புதரியே! நீ இப்பொழுது கோபம் வந்தாற்போல் பாவித்துக் கோபக்ருஹத்திற்குச்சென்று அழுக்காடை உடுத்துப் படுக்கையில்லாத வெறுந்தரை யிலே படுத்துக்கொண்டிரு. தசரதன் உன்னிடம் வரக் கண்டு பெருந்துக்கத்திலாழ்ந்தவள்போல் வெறுந்தரை யில்படுத்து அழுது கொண்டு அவனைத் தலையெடுத்தும் பாராதே; அவனுக்கு முகங்கொடுத்துப் பேசாதே. உன்பர்த்தாவுக்கு உன்னிடத்தில் எப்பொழுதும் மிகுந்த

ப்ரீதி உண்டு. இவ்விஷயத்தில் எனக்கு ஸந்தேஹமே யில்லை. உனக்காக அம்மஹாராஜன் நெருப்பிலுங்கூட விழுவான். இப்படி அன்பிற்கிடமாகிய உனக்கு அவன் கோபத்தை உண்டாக்க வல்லனல்லன். நீ கோபித்துக் கொள்வாயாயின், உன்னை அவன் தலையெடுத்துப்பார்க் கவும் பொறுக்கான். உன் ப்ரீதிக்காக அம்மன்னவன் தன் ப்ராணன்களையும் விட்டுவிடுவானன்றோ? அம்மன் னவன் உன்னுடைய வார்த்தையை அணுமாத்ரமும் மறுக்க வல்லனல்லன். நீ இயற்கையாகவே மந்தபுத்தி யாகையால் இப்படிப்பட்டவளென்று உன்னை நீ அறி யாய். இப்பொழுது உன் ஸௌந்தர்யத்தின் பெருமை எவ்வளவோ, தெரிந்துகொள்வாய். தசரதன், மணிக ளையும் முத்துக்களையும் பொன்காணயங்களையும் மற் றும் பலவித உயர்ந்த வஸ்துக்களையும் உனக்குக் கொடுப் பான்; நீ அவைகளில் சிறிதும் மனஞ் செலுத்தாதே யிருக்கவேண்டும். மிகுந்த பாக்யம் பொருந்தியவளே! தேவாஸுர யுத்தத்தில் தசரதன் உனக்குக் கொடுத்த வரங்களையே மனத்திற்கொண்டிரு. நீ நினைத்த கார்யம் உன்னை விட்டுப் போகாதிருக்கப் பார். எல்லா விதத்தி லும் உன் கார்யம் உனக்கு ஸித்திக்கும்படி யத்னஞ் செய்யவேண்டும். தசரதன் எப்பொழுது, தானே உன் னை எழுந்திருக்க எடுத்து உட்கார வைத்து வரங்கொ டுப்பானோ, அப்பொழுது அவனை ஸத்யத்தில் நிலையாக நிற்கச் செய்து அவனைப் பார்த்து 'ராமனைப் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் அரண்யத்தில் வஸிக்கும்படி அனுப்பு வாயாக; பரதன் பூமிக்கு அரசனாகும்படி செய்வாயாக' என்று இவ்வரங்களை வேண்டிக்கொள். ராமனைப் பதி னான்கு ஸம்வத்ஸரங்கள் அரண்யத்தில் வஸிக்கும்படிக் குச் செய்வாயாயின், இதற்குள் உன் புதல்வன் ப்ர

ஜைகளின் ப்ரீதியால் ராஜ்யத்தில் வ்ருத்தியடைந்து நிலைக்கப் பெற்று வேரூன்றி மூலபலத்தையும் ஸ்வாதீனஞ் செய்துகொண்டிருக்கப் பெறுவான். பின்பு ராமன் திரும்பி வந்தாலும் அவனுக்கு ராஜ்யம் ஸித்திக்காதாகையால் மிகுந்த காலத்திலுங்கூட உன் புதல்வனே ராஜாவாயிருக்க நேரும். [1] பாமினி! ஆனதுபற்றி நீ பரதனுக்கு ராஜ்யத்தை வேண்டும்பொழுது அவ்வளவோடு விடாமல் ராமனைக் காட்டுக்கு அனுப்புவதையும் ஒரு வரமாகக் கேட்கவேண்டும். இப்படிக்குச் செய்வாயாயின், உனது புதல்வனுக்கு ஸமஸ்த ப்ரயோஜனங்களும் கைகூடும். இங்ஙனம் ராமனை அரண்யத்திற்குப்போகும்படி செய்தோமாயின், ராமன் வெகுதூரத்திலிருப்பதுபற்றி ப்ரஜைகளுக்கு அவனிடத்தில் ப்ரீதி மாறிப்போகும். அப்பொழுது [2] ராமன் ராமனேயாய்விடுவான். பரதனும் ப்ரஜைகளைப் பரிபாலனஞ் செய்துகொண்டு அவர்களது ஸ்னேஹத்துக்குப் பாத்ரமாகி யிருப்பதனால் மீளவும் ராமன் கானகத்தினின்றும் வந்து வைரத்தைக் காட்டினாலும் ஈடேறாது. அன்றி மற்றைப் பகைவரும் நேரார். ஆகையால் பகைவரை முழுவதும் வென்று

1. பாமினி-கோபிக்குந்தன்மையுடையவளே.

2 'ராமோ ராமோ ஹவிஷ்யதி' என்று மூலம். 'ராமன் ராமனே ஆவான்' என்று பொருள். 'ராமன் ஸஹாய ஸம்பத்தி யில்லாமல் தான் கேவலம் ஒருவனாகவே ஆவான்' என்றபடி. அல்லது 'ரமயதீதி ராமஃ' என்கிற வ்யுத்பத்தியால் அரண்யத்தில் ரிஷிகளை ஆநந்திக்கச்செய்வான். அங்கேயே இருந்து விடுவானென்று கருத்து. அல்லது—'ராமஃ அராமோ ஹவிஷ்யதி' என்று பதவிபாகஞ் செய்துகொண்டு ராமன் அராமன்—என்றால் ப்ரஜைகளை மனக்களிப்புறச் செய்யாதவன், வெகுகாலம் அரண்யத்திலிருப்பதனால் ப்ரஜைகளின் ஸ்னேஹத்திற்குப் பாத்ரமாகாதவன் ஆவான்- என்று பொருள்.

[1]நிராடங்கமாக உனது புதல்வன் அரசனாகக் கூடும். ராமன் அரண்யத்தி னின்றும் இவ்விடத்திற்கு வருங் காலத்திற்குள்ளாகவே உன்புதல்வன் மிகுந்த மதியு டையோனாகையால் ப்ரஜைகளை[2]ரஞ்ஜனஞ்செய்து ஸ்வா தீனப்படுத்திக் கொண்டு நண்பர்கள் பலரையும் ஸம்பா தித்து ராஜ்யத்தினின்றும் தன்னை அசைக்கமுடியாமல் வேரூன்றப் பெற்று ஸ்திரமாக நிலைமை பெற்றவனாவான். நீ விரும்பியவற்றை வேண்டிக் கொள்ள இதுவே தகுந் த காலமென்று எனக்குத் தோற்றுகின்றது. ஆகையால் தசரத மன்னவனை நிர்ப்பந்தஞ் செய்து ராமாபிஷேகத் தை நடத்துகிற ப்ரயத்னத்தினின்றும் திருப்பி விடுவா யாக. அப்படி திருப்புவதற்கும் இதுவே ஸமயமென்று நினைக்கின்றேன்' என்றனள். மந்தரை இங்ஙனம் ப்ரதி கூலங்களாகிய ராம வனவாஸ பரத பட்டாபிஷேகங்களை அனுகூலங்களாகக் காட்டி துர்ப்போதனஞ் செய்யக் கைகேயியும் அப்படியே மனத்திலேற்றிக் கொண்டனள். அம்மடந்தை முன்பெல்லாம் மிகவும் பெருத்த விஷயங்க ளில் மாத்ரங் கண் வைத்தவளே யன்றி, [3]அனுசிதங்க ளான ப்ரயோஜனங்களைப் பாராட்டாள்; ஆயினும் அவள் அந்தக் கூனியின் வார்த்தைகளைக்கேட்டு மிகவும் ஆச்சர்யம் அடைந்து, மருண்ட பெண்குதிரையைப் போல் தப்புவழியே போகத் தொடங்கினள். கெட்டகார் யத்தை நற்கார்யமாகப் பாவித்து, அங்ஙனந்தெரிந்து கொண்டிருந்து தனக்குச் சொன்னதற்கு மிகவும் ஸந்தோஷம் அடைந்து, மந்தரையைப் பார்த்து 'அடி கூனி! இவ்வளவு காலமாக நீ இவ்வளவு மேலா யிருப்பவ ளென்றும், இவ்வளவு நன்மையைப் போதிப்பவளென்றும் நான் தெரிந்து கொள்ளாதிருந்தனன். உலகத்தில் கூனி

1 நிராடங்கமாக—தடையொன்றுமின்றி. 2. ஸந்தோஷப்படுத்தி. 3 அனுசிதங்களான—தகாத. அதாவது- தான் பட்டமஹிஷியாயிரு க்கும் பெருமைக்குத் தகாத என்றபடி.

களாயிருப்பவர், மற்றை ஜனங்களைக் காட்டிலும் கூர்மையான புத்தி யுடையவர்கள். நீயோ, புத்தியைக் கொண்டு நிச்சயிக்க வேண்டிய விஷயத்தில் பூமியிலுள்ள அக்கூனிகளெல்லோரிலும் மேலாயிருக்கின்றனை. நீ ஒருத்தியே என் கார்யங்களில் எப்பொழுதும் மிகுந்த ஊக்கமுடையவள்; எனது மேன்மையை விரும்புந் தன்மையள். நீ இல்லாமற் போனால், இம்மன்னவன் ராமாபிஷேகத்தை நடத்தி என்னைக் கெடுக்க நினைத்திருப்பான்; நானும் அதைத் தெரிந்துகொள்ளாமற் போய்விடுவேனன்றோ! உலகத்தில், விகாரமான அவயவங்கள் பெற்றுக் கோணலாகிப் பார்க்கும் பொழுது மிகவும் வெறுப்பைத் தரும்படியான கூனிகள் பலருண்டு. நீ அப்படியன்று; காற்றினால் வளைந்த கமலம்போல் வாத தோஷத்தினால் உனது சரீரம் வளைந்திருக்கின்றது; பார்க்க அழகாகவே புலப்படுகின்றனை. உன் மார்பு, தோள்களின் உயர்வைக் கண்டு அவைகளுடன் சண்டை செய்வதுபோல் பக்கங்களில் ஒரே விதமாகப் பெருத்துத் தோள்வரையிலும் உயர்ந்திருக்கின்றது. அதன் கீழ், அழகிய கொப்பூழுள்ள உதரமும் தன்னோடு சேர்ந்த மார்பு உயர்ந்திருப்பதுகண்டு தனக்கு அத்தனை உயர்வில்லாமைக்கு வெட்கமுற்று இளைத்திருப்பதுபோல் நுண்ணிதாகப் புலப்படுகின்றது. உனது ஒக்கலை விசாலமாயிருக்கின்றது. உன்னுடைய ஸ்தனங்களும் அழகாய்ப் பெருத்திருக்கின்றன. உன் முகம் மறுவின்றிய சுக்லபக்ஷத்து சந்த்ரன்போல் விளங்குகின்றது. அடி மந்தரே! உனது அழகைப் பற்றி என்ன சொல்லப்போகின்றேன். கலகலவென்று மிகவும் இனிதாக ஒலித்துக் கொண்டிருக்கிற இவ்வரை நாண் மாலையானது அழகிய உனது அல்குலுக்கு மேலான சோபையைத் தருகின்றது. உனது முழந்தாள்களும் ஒன்றோடொன்று

பொருந்தித் திரந்து மிகவும் ப்ரகாசிக்கின்றன. உனது பாதங்களிரண்டும் நீண்டு விளங்குகின்றன. மந்தரே! நீ வெளுத்த பட்டு வஸ்த்ரந் தரித்து நீண்ட துடைகள் விளங்கப் பெற்று என் முன்பு நடந்து போகும்பொழுது பெண் ராஜஹம்ஸம்போல் ப்ரகாசிக்கின்றனே. அஸுரர்களிற் சிறந்தவனுகிய சம்பராஸுர னிடத்திலுள்ள பல மாயைகளும் உலகத்திலுள்ள இதர மாயைகளும் ஆயிரமாயிரமாக உன்னிடத்தில் இருக்கின்றன. ரதத்தில் மூக்குப்போல் நீண்டு அழகு பொருந்தி விளங்குகிற அவயவ விசேஷம்போல் நீண்டிருக்கிற உன் கூனில் உனக்குள்ள புத்திகளும் நீ கற்றறிந்த ராஜ நீதிகளும் மாயைகளும் வாஸஞ் செய்துகொண்டிருக்கின்றன. அடி கூனி! பரதன் யௌவ ராஜ்யபட்டாபிஷேகம் நடக்கப் பெற்று, ராமனும் காட்டுக்குப் போகையில் உனது கூனின்மேல் ஸுவர்ண மயமான மாலையைக் கட்டுகின்றனன். மந்தரே! என் கார்யம் ஸித்தித்தபின்பு ஸந்தோஷம் அடைந்து நான் பத்தரை மாற்றுள்ள மேலான அபராஞ்சித்தங்கத்தை உருக்கிப் பூசி உனதுகூனை அலங்கரிக்கின்றனன். (சந்தனத்துடன் கலந்த மேலான அபரஞ்சியைக்கொண்டு உனதுகூனின்மீது பூசுகின்றனன்.) உன் முகத்திற்குப் பலவகை ரத்னங்கள் இழைக்கப் பெற்று நானுவர்ணங்கள் அமைந்து வியப்புறச் செய்ய வல்ல அழகான ஸ்வர்ணதிலகத்தைச் செய்விக்கின்றனன்; மற்றும் பலவகை உயர்ந்த ஆபரணங்களையும் செய்வித்துக் கொடுக்கின்றனன். நீ உயர்ந்த விலையுள்ள அழகிய வஸ்த்ரங்களை உடுத்துக்கொண்டு தேவதையைப்போல் இங்குமங்கும் திரிந்துகொண்டிருக்கப்போகின்றனே. சந்த்ரனோடு சண்டை செய்துகொண்டு ஒப்பின்றி விளங்குகின்ற உனது அழகிய முகத்தினுல் நிகரற்ற முக முடையவளாகி நீ எனது சத்ருக்களாகிய சக்

களத்தியைக் கண்டு கர்வங் கொண்டு லக்ஷயஞ் செய்யாமல் எல்லோரையும் த்ருணீகாரஞ் செய்துகொண்டு அழகிய நடையுடன் திரியப் போகின்றனே. கூனிகளெல்லோரும் ஸமஸ்த ஆபரணங்களுந் தரித்து அலங்காரஞ் செய்து கொண்டு, நீ என் பாதங்களில் விழுந்து வணங்குவதுபோல், கூனியாகிய உன் பாதங்களில் எப்பொழுதும் விழுந்து வணங்கப்போகின்றனர்' என்று மொழிந்தனள். இவ்வாறு தன்னைப் புகழ்ந்துகொண்டு யாக வேதிகையில் ஜ்வலிக்கிற அக்னி ஜ்வாலைபோல் வெளுத்த மஞ்சத்தில் படுத்துக் கொண்டிருக்கிற கைகேயியைப் பார்த்து, மந்தரை 'அடி சுபத்துக்கேற்ற கைகேயி! ஜலம் போனபின்பு அணைகட்டுவதில் உபயோக மில்லையன்றோ? அப்படியே ராமாபிஷேகம் நடந்த பின்பு நீ வரங்கேட்டும் ப்ரயோஜனமில்லை. ஆகையால் வீண் பொழுது போக்காமல் எழுந்திரு. கோபக்ருஹத்திற்குச் சென்று அரசன் வருவதை எதிர் பார்த்துக்கொண்டிருப்பாயாக' என்று உத்ஸாஹப் படுத்துகையில், அது கேட்டு ஸந்தோஷத்தினுல் கண்களிரண்டும் மலரப் பெற்று, தான் பர்த்தாவின் அன்பிற் கிடமாயிருப்பதின் மேன்மையாலும் தனக்குள்ள அழகின் மிகுதியாலும் யௌவன மதத்தினுலும் கர்வித்திருக்கிற அந்த மடந்தையர் மணியான கைகேயி, அக்கூனியின் வார்த்தைக் குட்பட்டு அவளுடன்கூடவே கோபக்ருஹத்திற்குச் சென்று அனேக மாயிரம் விலையுள்ள முத்து மாலைகளையும் மற்றும் விலையுயர்ந்த அழகிய பல ஆபரணங்களையும் கழற்றி எறிந்துவிட்டு, ஆபரணங்களொன்றுமின்றி யிருப்பதனுல் பொற்கொடிபோல் விளங்குகின்ற அழகிய மேனியுடன் அந்த க்ருஹத்தில் வெறுந் தரையிலேயே படுத்துக்கொண்டு மந்தரையைப் பார்த்து 'அடிகூனி! என் பர்த்தா வந்து, நான் விரும்பின வரத்

தைக் கெடாத பக்ஷத்தில் நான் இவ்விடத்திலேயே ப்ராணன்களை விடுவது நிச்சயமேயாகையால் அப்பொழுது நீ அரசனுக்கு (தசரதனுக்கு அல்லது கேகய ராஜனுக்கு) நான் இங்கேயே மரித்துப் போனதாகச் சொல்லிவிடவேண்டும்; அங்ஙனம் இல்லையாயின் ராமன் காட்டுக்குச் செல்ல, பரதன் பூமியைப் பெற்று ஆள வேண்டும். இவ்விரண்டில் ஒன்று நடந்தீடேறுவது நிச்சயம். மேலான பொன்களைப் பற்றி எனக்கு ப்ரயோஜனமில்லை; உயர்ந்த ரத்னங்களைக் கொடுப்பினும் எனக்கு அவைகளைப்பற்றி ஆகவேண்டியது ஒன்றுமில்லை. சிறந்த ஆபரணங்களைக் கொடுப்பினும் எனக்கு வேண்டியதில்லை. ராமன் யௌராஜ்ய பட்டாபிஷேகம் பெறுவானாயின், இதுவே என் ப்ராணனுக்கு முடிவு; கண்டுகொள்வாய்' என்றனள். பிறகு அக்கூனியானவள், கைகேயிக்கு மேன்மையையும் ராமனுக்குக் கெடுதியையும் விளைக்க முயன்று, தசரத மஹாராஜனது பட்ட மஹிஷியும் பரதனுக்குத் தாயுமாகிய அந்தக்கைகேயியைப் பார்த்து மிகவும் பெரிய பராக்ரமம் பொருந்திய (நினைத்த கார்யத்தை முடித்தே தீரவல்ல மிடுக்குடைய) வசனங்களைமொழியத் தொடங்கி 'அடி சுபத்திற்கு உரியவளே! ராமன் இந்த ராஜ்யத்தில் பட்டங்கட்டப் பெறுவானாயின், நீயும் உனது குமாரனாகிய பரதனும் சிந்தையிலாழ்ந்து பரிதபிப்பது நிச்சயம். ஆனதுபற்றி ராமனுக்கு நேராமல் உன் புதல்வனுக்கே பட்டாபிஷேகம் நடக்கும்படி ப்ரயத்னம் செய்வாயாக' என்றனள். மந்தரை இவ்வாறு பாணங்கள் போன்ற உரைகளைக் கொண்டு அடிக்கடி மர்மங்களில் அடிப்பதுபோல் உரைக்க, அது கேட்டு ராஜமஹிஷியாகிய கைகேயியும் மிகவும் துயரம் அடைந்து 'அவ்வளவு ஸ்னேஹமும் இனிமையும் பொருந்திய எனது கணவன் இவ்வளவு செய்வானோ' என்று கைகளை மார்பிலிட்டு மிகவும் ஆச்சர்யப்பட்டுக்கொண்டு

ராமாபிஷேகத்தைப் பற்றி மேன்மேலும் கோபித்துக் கூனியைப் பார்த்து 'அடி கூனி! நான் இங்கேயே இருந்து யமலோகத்திற்குப் போவது கண்டு, நீ அரசனுக்குத் தெரியப் படுத்தவாவது நேரவேண்டும்; அல்லது, ராமன் வெகுகாலம் காட்டிற்குச் சென்றிருக்கப் பரதன் நெடுநாள் ராஜ்யஸுகம் பெற்றுத் தன் கருத்து ஈடேறப் பெற்றிருக்கவாவது நேரவேண்டும். இவ்விரண்டில் எதாயினும் ஒன்று நடப்பது ஸித்தமே. ராமன் இவ்விடமிருந்து புறப்பட்டுக் காட்டுக்குப் போகானாயின், நான் படுக்கையில் படுக்கமாட்டேன்; ஆபரணங்களைத் தரியேன்; புஷ்பமாலைகளைச் சூட்டி முடியேன்; சந்தனம் அணியேன்; மையிட்டெழுதேன்; [1] அப்யஞ்ஜனஞ் செய்வதும் அன்னபானங்களைக்கொள்வதும் செய்யேன்;நான் எதையும் விரும்பேன். இங்கு ப்ராணன்களையுங்கூட வைத்துக்கொண்டிரேன்' என்று அடிக்கடி இங்ஙனம் மொழிந்தனள். இங்ஙனம் அக்கைகேயி மிகப் பயங்கரமாக மொழிந்து, பின்பு ஆபரணங்களையெல்லாங் கழற்றிக் கீழே வைத்துவிட்டு, புண்யம் குறைந்துபோகையில் ஆகாயத்தினின்றுங் கீழே விழுந்த கின்னரப் பெண் போல் படுக்கையில்லாத வெறுந்தரையிலேயே படுத்துக் கொண்டனள். அப்பொழுது இருட்டு மூடுவதுபோல் பெருங்கோபம் வந்து நிரம்ப முகமெல்லாம் மழுங்கப் பெற்று நக்ஷத்ர ஸமூஹம்போல் ப்ரகாசிக்கின்ற மேலான வெள்ளைப் பூமாலைகளையும் உயர்ந்த பல ஆபரணங்களையும் கழற்றிப் போகட்டு மனவருத்த முற்றிருக்கிற அந்த ராஜபத்னியாகிய கைகேயி, நக்ஷத்ரங்களெல்லாம் மறையும்படி பெரிய இருட்டு மூடப்பெற்ற ஆகாயம் போல்புலப்பட்டனள். ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1. எண்ணெய் தேய்த்துக் கொள்ளுதல்.

தசரதன் கைகேயியைப் பார்க்க வந்து
நல்வார்த்தை சொல்லுதல்.

கைகேயி, மிகவும் பாபஸ்வபாவையாகிய மந்தரையென்னும் அக்கூனி விபரீதமாகச்செய்த உபதேசத்திற்கு உடன்பட்டு, விஷம் பூசின பாணத்தினால் அடியுண்டகின்னரப்பெண்போல் வெறுந்தரையில் படுத்துக் கொண்டனள். பின்னும் கோபஸ்வபாவையாகிய அந்தக் கைகேயி, தான் பிடித்த கார்யம் ஈடேறுமாவென்னும் மனக்கவலையால் களிப்பின்றி முகம் வாடப்பெற்று மந்தரையின் வார்த்தையைக் கேட்டு மனமயக்கமுற்று, நாககன்னிகைபோல் அனல் பறக்கும்படி நெடுமூச்சு விட்டுக்கொண்டு ஒரு முஹூர்த்த காலம் வரையில் தனக்கு ஸுகத்தை விளைக்கவற்றாகிய உபாயம் இது வென்று சிந்தித்து, செய்யவேண்டிய கார்யம் இது வென்று மனத்தில் நிச்சயித்துக்கொண்டு மந்தரையைப் பார்த்து 'அடிகூனி! நீ மொழிந்தவையெல்லாம் நன்றா யிருக்கின்றனவே' என்று மெல்லமெல்ல மொழிந்தனள். மந்தரை, கைகேயியினிடத்தில் மிகுந்த நேசமுடையவள்; பின்னும் கைகேயியின் கார்யத்தில் மிகுந்த ஆதரமுடையவள்; ஆகையால் அக்கைகேயி நன்கு நிச்சயஞ்செய்துகொண்ட விஷயத்தைக் கேட்டுப் பெரிய ஸித்தி பெற்றவள்போல் பேராநந்தம் அடைந்தனள். பிறகு அந்த ராஜபத்னி, கோபம் மேலெழப்பெற்றுத் தான் ஆலோசித்தஉபாயத்தினின்றும் பிறழாதிருக்கும்படி நிச்சயஞ் செய்துகொண்டு புருவத்தை நெற்றிவரையில் நெரித்துப் பூமியில் படுத்துக்கொண்டனள். பின்பு அக்கைகேயி, எப்படியாவது போகட்டுமென்று கழற்றி விட்டெறிந்த பல வர்ணங்களுள்ள பூமாலைகளும் மேலான பல ஆபரணங்களும் வெறுந்தரையில் விழுந்திருந்தன. அம்மடந்தையர் மணி கழற்றி யெறிந்த அந்தப்

புஷ்பஸரங்களும் ஆபரணங்களும் பூமியின்மேல் சிதறி விழுந்து, நக்ஷத்ரங்கள் ஆகாயத்தை விளங்கச்செய்வதுபோல் அப்பூமியை விளங்கச் செய்தன. கேசங்களையெல்லாம் ஒரேபின்னலாக எடுத்துக் கட்டிமுடிந்து அழுக்காடையுடுத்துக் கோபக்ருஹத்தில் படுத்திருக்கின்ற அம்மாதரசி, மிடுக்கொழிந்தகின்னரப்பெண்போல் ப்ரகாசித்தனள். பின்பு தசரதமஹாராஜன் ராமனது அபிஷேகத்தை ஆரம்பிக்கும்படி ஆஜ்ஞாபித்து ஸபையிலுள்ளவர்களிடம் அனுஜ்ஞை பெற்றுக்கொண்டு, தன் மனத்தில் 'ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடப்பது இப்பொழுதேயன்றோ வெளியாயிற்று. ஆகையால் இதற்குள் இது கைகேயிக்குத் தெரிய அவகாசம் இல்லை' என்று ஆலோசித்து, அந்த ராமாபிஷேகமென்னும் ப்ரிய ஸமாசாரத்தைக் கேட்பதற்குக் கைகேயி உரியவளென்று நினைத்துத் தான் எல்லாவற்றிலும் ஸ்வதந்த்ரனுயிருப்பதுபற்றித் தானே அந்த ப்ரியஸமாசாரத்தைச் சொல்ல அவளது அந்தப்புரத்திற்குட் ப்ரவேசித்தனன். சந்த்ரன், தன்னை விழுங்க வருகிற ராகுவோடுகூடி வெளுத்த மேகங்கள் நிரம்பப்பெற்ற ஆகாயத்திற்குள் ப்ரவேசிப்பதுபோல், மஹாயஶஸ்வியாகிய அம்மஹாராஜன், தனக்கு மரணபீடையைக் கொடுக்கப்போகிற கைகேயி படுத்திருக்கப்பெற்று வெளுத்து விளங்குகின்ற அவளதுஉத்தம க்ருஹத்திற்குள் நுழைந்தனன். அந்த க்ருஹத்தில் கிளிகளும் மயில்களும் க்ரௌஞ்ச பக்ஷிகளும் அன்னப்பறவைகளும் கலகலவென்றுஅழகாய்க்கூவிக்கொண்டிருந்தன; நான்கு வகை வாத்யங்களும் நாற்புறத்திலும் சப்தித்துக்கொண்டிருந்தன; ப்ரியானுகூலங்களாகிய உரைகளை உரைத்து மனக்களிப்புறச் செய்ய வல்லமையுள்ள கூனிகளும் குள்

ளிகளும் அங்கு நிறைந்திருந்தனர். சண்பகமரங்களும் அசோகவ்ருக்ஷங்களும் விளங்கப்பெற்று அழகிய பல புதர்கள் நிறைந்திருக்கிற கொடிமாடங்கள் பலவும் அதைச் சுற்றிச் சூழ்ந்திருந்தன. அதில் சித்ரக்ருஹங் கள் அனேகம் புலப்பட்டன. தந்தத்தினுலும், வெள் ளியினுலும், தங்கத்தினுலும் செய்யப்பட்ட பல திண் ணைகளும் அங்கு விளங்கின. அங்குள்ள வ்ருக்ஷங்கள் எல்லா ருதுக்களிலும் பூவும் காயும் பழமும் நிறைந் திருப்பன. நடைவாவிகள் ஆங்காங்குப் புலப்பட்டன. அங்கு தந்தத்தினுலும் வெள்ளியினுலும் பொன்னுலும் செய்யப்பட்ட உயர்ந்த ஆஸனங்கள் எங்கும் நிரம்பி யிருந்தன. அங்குப் பலவகை அன்ன பானங்களும் பல வகை பக்ஷயங்களும் நிறைக்கப்பட்டிருந்தன. விலை யுயர்ந்த ஆபரணங்களை யணிந்த அழகிய ஸ்த்ரீகளோடு கூடிய அவ்வந்தப்புரம் அப்ஸரஸ்ஸ்த்ரீகளால் விளங்கு கிற ஸ்வர்க்கலோகம்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந் தது. இப்படி ஸமஸ்த ஸம்பத்துக்களும் பெருகப் பெற்று, மன்மதனுக்கு வெற்றியைக்கொடுக்க வல்ல பல ஸம்பாரங்கள் நிறைந்து, மிகவும் இனிதாகிய தனது அந்தப்புரத்திற்குள் அம்மஹாராஜன் ப்ரவேசித்து, அங்குமேலான படுக்கையில் தனது அன்பு நாயகியாகிய கைகேயியைக் காணப்பெற்றிலன். அம்மானவரதிபதி அங்கு ச்ருங்கார ரஸத்தைப் பொழிந்துகொண்டிருக் கிற பதார்த்தங்களைக் கண்டும், காலந் தகுந்திருப்பது பற்றியும், மிகுந்த காமவிகாரம் உண்டாகப் பெற்றுப் படுக்கையில் தனது அழகிய கைகேயி புலப்படாமை யைக் கண்டும், அணைத்து ஆலிங்கனஞ் செய்வது முத லிய ஸம்போகத்திற்காக ‘கைகேயீ! எங்கே இருக் கின்றனை’ என்று கூப்பிட்டு மறுமொழி நேராமையைப் பற்றியும் மிகுந்த மனவருத்தமுற்றனன். மனவருத் தம் உண்டாகாமற்போகுமா? இதுவரையில் எப்பொழு

தாயினும் தசரதன் அந்த ரதிகாலத்தில் வருவானாயின், அக்கைகேயி அவ்வேளையில் தப்பாமல் அலங்காரஞ் செய்துகொண்டிருந்து புன்னகையுடன் எதிர்கொண்டு வந்து மனக்களிப்புறச் செய்வாளேயன்றி, ஒருகாலும் தப்பிப்போனதில்லை. அம்மன்னவன் எப்பொழுதாயினும் அந்தப்புரத்திற்குள் புகுவானாயின், கைகேயி இல்லாமல் அது சூன்யமாயிருந்ததுமில்லை. இப்பொழுது விபரீதமா யிருந்தது பற்றி அம்மன்னவனுக்கு மனவருத்தம் உண்டாயிற்று. பிறகு ரதிக்ஹருத்திற்குள் புகுந்த மன்னவன், கைகேயி அறிவு கெட்டுத் தன் கார்யம் நிறைவேற ஆசைப்பட்டுக் கோபக்ருஹத்திற் படுத்திருப்பதனால் அவளை முன்போல் அங்குக் காணாமல் அங்கிருந்த வாசற்காப்பவளைப் பார்த்து, 'கைகேயி எங்கே யிருக்கின்றாள்?' என்று வினவினன். வாசற் காப்பவள் மிகவும் பயந்து கைகளை நன்கு கூப்பிக் கொண்டு மன்னவனைப் பார்த்து 'அரசே! தேவியார் மிகவும் கோபித்துக்கொண்டு கோபக்ருஹத்திற்கு வேகமாகச்சென்றாள்' என்று மொழிந்தனள். அரசன் கைகேயி புலப்படாமைக்கே மனவருத்தமுற்றிருந்தனன்; இப்பொழுது கோபக்ருஹத்தில் இருக்கின்றாளென்று வாசற் காப்பவள் சொல்லக்கேட்டுப் பின்னும் மனங்கொதிக்கப் பெற்று, இந்த்ரியங்களெல்லாங் கலங்க நலங் குலைந்து, மிகுந்த மனவருத்தம் பெற்றனன். அம்மன்னவன் கோப க்ருஹத்திற்குச் சென்று, அங்குத் தரையின்மீது படுக்கத்தகாத ஸுகுமாரமான மேனியை வெறுந்தரையிற் கிடத்திப் படுத்துக்கொண்டிருக்கிற கைகேயியை, துக்கத்தினால் எரிக்கப் பெற்றவன்போல் கண்ணுற்றனன். அந்தத் தசரதன் ஒரு பாபத்தையும் அறியாத நிர்மலஸ்வபாவன்; ஆகையால் கைகேயிக்கு ராமனைக்

காட்டுக்கு அனுப்பிவிட வேண்டுமென்னும் பாவக்கருத்து உண்டாயிருப்பதை அவன் அறியான். மேலும் அம்மன்னவன் தான் வ்ருத்தன் (கிழவன்.) கைகேயியோ யௌவன மமைந்தவள். அதுபற்றி அவள் அவனுக்கு ப்ராணனைக்காட்டிலும் மேலாக அன்பிற்கு இடமாயிருந்தனள். ஆதலால் அவளிடத்தில் மிகுந்த மோஹங்கொண்ட அம்மன்னவன் அவளது கெடுநினைவை அறியாமல் கோபித்து வெறுந்தரையில் படுத்துக்கொண்டிருக்க அவளைக் கண்டனன். அக்கைகேயி, [1] அறுப்புண்ட கொடி போலவும், புண்யம் அனுபவித்துத் தீருகையில் கீழே விழுந்த தேவஸுந்தரி போலவும், கலக்கமுற்ற கின்னரப்பெண்போலவும், ஸ்வர்க்கத்தினின்று பூமியில் நழுவின அப்ஸரமடந்தை போலவும், பிறரை மோஹிப்பிப்பதற்காக ப்ரயோகிக்கப் பட்டுத் தன் வர்ணங்களெல்லாம் மழுங்கி மாறின மாயை போலவும், பூமியில் விழுந்த பெண்குதிரைபோலவும், வலையில் கட்டுண்ட மான்பேடைபோலவும், அரண்யத்தில் வேடன் விஷம் பூசின பாணத்தைக் கொண்டடிக்க அடியுண்டு கீழே விழுந்த பெண் யானைபோலவும் தோற்றித் தரையில் படுத்திருக்கக்கண்டு, அரண்யத்தில் வேடனது பாணத்தினாலடியுண்டு கீழே விழுந்த அப்பெண்

1 (அறுப்புண்ட கொடி) யென்கையால் பூமியில் நன்கு படிந்து விழுந்திருக்கையும், (கலக்கமுற்ற) கின்னரப் பெண்ணென்கையால் வியசனப்படக் கூடாதவ ளென்கையும், (பூமியில் நழுவின) அப்ஸரமடந்தை என்கையால்—மிகவும் பார்க்க அழகாயிருக்கையும், (வர்ணங்களெல்லாம் மழுங்கி மாறின) மாயை யென்கையால்—வர்ணம் மாறியிருக்கையும் (வலையில் கட்டுண்ட) மானென்கையால்—சேஷ்டையொன்று மில்லாதிருக்கையும், (விஷம் பூசின பாணத்தைக் கொண்டடிக்க, அடியுண்டு கீழேவிழுந்த)பெண் யானையென்கையால்—மிகுந்த மனவருத்த முற்றிருக்கையும் தோற்றுவிக்கப்பட்டன.

யானையைப்பெரிய மத்தகஜம் அருகில்வந்து கரத்தினுல் தடவிக்கொடுப்பதுபோல், அம்மடந்தையை ஸ்னேஹத்தினுல் மனந்தளரப் பெற்றுச் சரீரமெங்கும் பரிசித்தனன். தசரதன் ஸஹஜமாகவே காமம் மிகுந்திருப்பவன்; மேலும் தாமரை யிதழ்போன்று அழகான கண்களையுடைய அம்மாதரசியைக்காணும்பொழுது அவ்வரசனுக்கு உண்டான காமவிகாரத்தைச் சொல்லிமுடியுமா? ஆகையால் அம்மன்னனை 'அப்பெண்மணி என்ன சொல்லுமோ? என்ன செய்யுமோ? கோபமோ? தெளிவோ?' என்னும் பயத்தினுல் மிகவும் மனக்கலக்கமுற்று, இரண்டு கைகளாலும் தடவி அம்மடந்தையை நோக்கி 'என்மீது நீ கோபித்துக் கொள்வதற்குக் காரணம் யாதோ? தெரியவில்லை. தேவி! உன்னை யாவர் கடோரமாகப் பேசினர்? அல்லது உன்னை யாராயினும் அவமதித்தார்களா? நடந்தவற்றை எனக்குச் சொல்ல வேண்டும். நல்ல ஸ்வபாவமுடையவளே! நீ புழுதியில் படுத்திருப்பது கண்டு எனக்கு மிகவும் துயரமாயிருக்கின்றது. நீ எப்பொழுதும் எனக்கு நன்மையையே விரும்பும் ஸ்பாவமுடையவள்; அப்படிப்பட்ட நீ இப்பொழுது இருக்குமிருப்பு அமங்களமன்ருே? நான் உன்னிடத்தில் நன்மனத்தோடு கூடி ஓரபகாரமுஞ் செய்யாமல் உனக்கு நன்மையைத்தானே நினைத்துக் கொண்டிருக்கையில், நீ பிசாசம் பிடித்து மனமயங்கப் பெற்றவள்போல் என் மனத்தை மிகவும் துன்பப்படுத்திக்கொண்டு ஏன் வெறுந்தரையில் படுத்திருக்கின்றனை? அடி, ரோஷமுள்ளவளே! உனக்கு எதாயினும் வ்யாதி உண்டாயிருக்குமாயின், சொல்வாயாக; என்னிடத்தில் ஸமஸ்த வ்யாதிகளையும் போக்க வல்லமையுள்ள வைத்யர்கள் பலர் இருக்கின்றனர். அவர்களை நான் எல்லா விதத்திலும் ஸத்காரஞ் செய்து த்ருப்தியுறச் செய்திருக்கின்றனன். அதுபற்றி என்னிடத்தில் அவர்கள்

மிகுந்த விஸ்வாஸமுடையவர்கள். ஆகையால் அவர்கள் உன் வ்யாதியைப் போக்கி உன்னை ஸுகப்படுத்துவார்கள். உனக்கு ப்ரியஞ் செய்தவன் யாவன்? அப்ரியஞ் செய்தவன் யாவன்? உனக்கு ப்ரியஞ் செய்தவன் எவன் ப்ரியத்தை அடையவேண்டும்? நீ யாருக்கேனும் ப்ரியஞ் செய்ய விரும்பி அது செய்ய முடியாமல் வருந்துகின்றனையா என்ன? அல்லது நீ யாருக்கு அப்ரியஞ் செய்யவேண்டுமென்று விருப்புகின்றனை? இதை எனக்கு மொழிவாயாக. அப்படி அப்ரியஞ் செய்த எவனுக்குப் பதிலாக மிகுந்த அப்ரியத்தைச் செய்ய விரும்புகின்றனையோ அவனை எனக்குத் தெரியச் சொல்வாயாக; நான் தப்பாமல் அப்படியே செய்கின்றனன்; தேவி! இவ்வளவேயன்றி இதற்காக நீ அழவேண்டாம்; அழுதழுது உடம்பை உலர்த்திக்கொள்ளவும் வேண்டாம். எவனைக் கொல்ல வேண்டுமோ, அவனைச்சொல்; கொல்லக்கூடாதவனாயினும் கொன்றுவிடுகின்றனன். எவனை ஆபத்தினின்றும் விடுவிக்கவேண்டுமோ, அவனைச் சொல்வாயாக; கொல்லவேண்டியவனாயினும் அவனை விடுவிக்கின்றனன். தரித்ரனாகிய எவனையாவது தனம் மிகுந்திருக்கும்படி செய்யவிரும்புகின்றனையா? சொல். அவனை அப்படியே செய்கின்றனன். பணக்காரனாகிய எவனேனும் ஏழையாகவேண்டுமா? சொல்; அப்படியே செய்கின்றனன். இவ்வளவென்? நானும் என்னைச் சேர்ந்தவர்களும் எல்லோரும் உனக்கே அதீனமாயிருக்கின்றனம்; நீ சொன்னபடி செய்ய ஸித்தமாயிருக்கின்றனம். ஆகையால் என் ப்ராணன்களைப் போக்கிக்கொள்ளவேண்டியதாயிருப்பினும், உனது அபீஷ்டத்தைக் கெடுப்பதற்குச் சிறிதும் உத்ஸாஹப்படேன். உனக்கு ப்ரியஞ் செய்வதற்காக என் ப்ராணன்களையும் விடுவேன்; நீ மனத்தினால் எதை விரும்பினையாயினும், அது என் ப்ராணன்களுக்கு அபாயத்தைக் கொடுக்கவற்றாயினும், சொல்வாயாக; தப்பாமல் செய்தே தீருகின்றேன். எனக்கு உன்னிடத்தில் ப்ரீதி மிகவும் வலிவு பெற்றிருக்கின்

றது. அப்படிப்பட்ட பலம் உனக்கு உண்டாயிருப்பது தெரிந்தும், நீ என்மீது ஸந்தேஹப்படுவது யுக்தமன்று. நீ விரும்பியவற்றைச் செய்து முடித்து உனக்கு ஸந்தோஷத்தை விளைக்கின்றனன்; ஸந்தேஹம் வேண்டாம்; அதை என்புண்யத்தின்மேல் ஆணையிட்டுச் சொல்லுகின்றனன். ஸூர்யனது ரதசக்ரம் எவ்வளவு தூரம் போகின்றதோ, அதுவரையிலுமுள்ள அபாரமான பூமிவிஸ்தாரமானது எனக்கு ஸ்வாதீனமாயிருக்கின்றது. அவ்வளவு தூரமும் எனது ஆஜ்ஞாசக்ரம் செல்லவற்று யிருக்கின்றது. அதில் ப்ராசீன ஸிந்து ஸௌவீர ஸௌராஷ்ட்ர தக்ஷிணபத அங்க வங்க மகமத மத்ஸ்ய காசி கோஸலம் முதலிய பல தேசங்களுண்டு; அவையெல்லாம் பெரிய ஸம்ருத்தியுடையவை; அவைகளில் தன தான்யங்களும் கம்பளம் முதலிய உயர்ந்த வஸ்துக்களும் பற்பல விளைகின்றன; அவற்றில் நீ எதையெதை வேண்டுமென்று மனத்தில் விரும்புகின்றனையோ, அதைக் கேட்பாயாக; கொடுக்கின்றனன். அச்சமுள்ளவளே! இதற்கு இப்படி பூமியிற் கிடந்து ஆயாஸப்படவேண்டிய காரணமென்? நீ நல்ல ஸ்பாவமுடையவளன்றோ? இப்படி வெறுந்தரையில் படுக்கலாகாது. எழுந்திரு; எழுந்திரு. கைகேயி! எதினின்று உனக்கு பயம் உண்டாகின்றதோ, அதை எனக்குச் சொல்வாயாக. ஸூர்யன் பனியைப் போக்குவது போல் அந்த பயத்தை நான் போக்கிவிடுகின்றேன்' என்று மொழிந்தனன். அவ்வாறு தசரதன் ஆஸ்வாஸப் படுத்திச் சொல்லுகையில், அந்தக் கைகேயி, ஆஸ்வாஸம் அடைந்து ராமன் வனத்திற்குப் போக வேண்டுமென்கிற அநிஷ்டத்தைச் சொல்ல நினைத்துத் தான் தரையில் படுத்திருப்பது முதலியவற்றிற்கே மிக்க மனவருத்த முற்றிருக்கின்ற தன்பர்த்தாவை, தான் செய்த ப்ரதிஜ்ஞையைச் செய்யும்படி நிர்ப்பந்தித்து மேன்மேலும் பீடிக்க ஆரம்பித்தனள். பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## கைகேயி பரதனுக்குப் பட்டங்கட்டி ராமனைக் காட்டுக்கு அனுப்பும்படி தசரதனிடங் கூறுதல்.

மன்மதனுடைய கூர்மையான பாணங்கள் மனத்தில் ஆழமாகப் பாயக் காமவேகத்திற்காளாகி அது போகும் வழியெல்லாம் போகின்ற அந்தத் தசரதமஹாராஜனைக் கண்டு, கைகேயி, ராமனைக் காட்டுக்கு அனுப்பவேண்டுமென்னுங் க்ரூரமான வார்த்தையைச் சொல்ல முயன்று, 'நாதா! எனக்கு ரோகமொன்றும் இல்லை; நான் தனத்தையும் விரும்பவில்லை; என்னை ஒருவன் அவமதிக்கவுமில்லை. ஆனால் எனக்கு ஓர் விருப்பம் உண்டாயிருக்கின்றது. அதை நீ நிறைவேற்ற வேண்டுமென்று விரும்புகின்றனன். நீ நிறைவேற்றுவாயாயின், அப்படியே செய்கிறேனென்று கெட்டியாக ப்ரதிஜ்ஞை செய்யவேண்டும். பிறகு நான் விரும்பினவற்றைச் சொல்லுவேன்' என்றனள். அதைக் கேட்டு மஹாதேஜஸ்வியாகிய தசரதமன்னவன் தனக்குள் 'என்னை இவ்வளவு ப்ரீதியுள்ளவனாகத் தெரிந்துகொண்டும், நம்பாமல் ப்ரதிஜ்ஞையும் செய்யவேண்டுமென்கிறனள். இது என்ன ஆச்சர்யம்' என்று கொஞ்சம் சிரித்து, ஸஹஜமான புன்னகையுடன் விளங்குகின்ற அந்தக் கைகேயியைத் தனக்கு எதிர்முகமாகச் செய்து கொள்ள விரும்பி, அவளது தலைமயிர்களைக் கையாற் பிடித்துத் தலையை மடியிலிட்டுக்கொண்டு 'அடி ஸௌபாக்பத்தினால் கர்வமுற்றிருப்பவளே! ஸ்த்ரீகளில் உன்னைக்காட்டிலும் அன்பிற்கிடமானவள் எனக்கு மற்றொருத்தியும் கிடையாது. புருஷர்களில் புருஷச்ரேஷ்டனாகிய ராமனைக்காட்டிலும் ப்ரீதிக்கிடமான புருஷன் எனக்கு ஒருவனுமில்லை. இது உனக்குத்தெரியா

திருப்பதேன்? ஸௌபாக்யத்தின் மிகுதியால் கர்வமுற்று நீ இதைத் தெரிந்துகொள்ளாதிருக்கின்றனை; யுக்தமே. ராமன் யாவராலும் வெல்ல முடியாதவன்; மஹானுபாவன்; ப்ராணன்களைக் காட்டிலும் மேலாக ஆதரிக்கத்தக்கவன்; நான் ஜீவித்திருப்பதற்குக் காரணம் அவனே. அப்படிப்பட்ட ராமன்மேல் ஆணையிட்டுச் சொல்லுகின்றனன். நீ உன்மனத்தில் விரும்பிய வற்றைச்சொல்வாயாக. கைகேயீ! எவனை நான் ஒரு முஹூர்த்த காலமும் காணாதிருப்பேனாயின் ஜீவித்திருக்கமாட்டேனோ, அப்படிப்பட்ட ராமன்மேல் ஆணையிட்டு 'நீ சொன்னபடி செய்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞை செய்கின்றனன். எனது சரீரத்தை விட்டாயினும், பரதன் முதலிய மற்ற புதல்வர்களைத் துறந்தாயினும் மற்றுமுள்ள அன்பிற்கிடமான பந்துக்களை உபேக்ஷித்தாயினும் புருஷஶ்ரேஷ்டனாகிய எவனை விடாமற் கைப்பற்றியே யிருப்பேனோ, அப்படிப்பட்ட ராமன் ஸாக்ஷியாக 'நீ சொன்னபடி செய்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞை செய்கின்றனன். மங்கலஸ்வபாவ முடையவளே! ப்ராணன்களைக்காட்டிலும் மேலாக நான் ஆதரித்துப்போருகிற ஸ்ரீராமபிரானையுங்காட்டி ப்ரமாணஞ் செய்யும்படியான ப்ரீதியின் மிகுதியும்மிகுந்த மோஹமும் பொருந்தி இங்ஙனமிருக்கிற எனது ஹ்ருதயத்தை நோக்கியாயினும் உனக்குச் சொன்ன வார்த்தையை நான்தப்பமாட்டேனென்று நிச்சயித்து உன் கருத்தை வெளியிட்டு துக்கத்தினின்றும் என்னைப் பாதுகாப்பாயாக. நான் ஜீவித்திருக்கப் பார். உனது மனவருத்தங் கண்டால் நான் எப்படி பிழைத்திருக்க நேரும்? கைகேயீ! என் மனமும்வாக்கும் ஒரு ரீதியாகவே யிருக்கும் விதத்தைக் கண்டாயினும், நீ எது நன்றென்று நினைக்கின்றனையோ அதை எனக்குச் சொல்வாயாக. உன்னிடத்தில் எனக்குள்ள ப்ரீதியின் மிகுதியாகிற உனது பலத்தை நீ அறியாயோ? அது தெரிந்திருந்தும் நீ என்னிடத்தில் ஸந்

தேஹப்படுவது யுக்தமா? யுக்தமன்றே. உன் கருத்தை ஈடேறச்செய்து உனக்கு ஸந்தோஷத்தை விளைவிக்கின்றனன்; இதற்காக நான் செய்த புண்யத்தின்மேலும் ஆணையிடுகின்றேன்' என்றனன். கைகேயி ராமனைக் காட்டுக்கு அனுப்பி பரதனுக்கு ராஜ்யத்தில் பட்டங்கட்டுவிக்க வேண்டுமென்று மந்தரை மொழிந்த வசனத்தையே நெஞ்சிற் படுத்திக்கொண்டிருப்பதுபற்றித் தான் கருதிய ப்ரதிஜ்ஞையை அம்மன்னவன் செய்வது கண்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்து, பரதனிடத்திலுள்ள பக்ஷபாதத்தினால், முகம் மாறவில்லாமல் சத்ருக்களுக்காயினும் வாயாற்சொல்ல முடியாத வார்த்தையைச் சொல்ல ஆலோசித்தனள். இங்ஙனம் அரசன் தன் கருத்தை யீடேற்றுவதாகச் சொன்ன வார்த்தையைக் கேட்டு மிகுந்த ஸந்தோஷம் பெற்று, அங்ஙனம் தான் கருதியபடி நடத்திக்கொள்ளும் பெருமிடுக்குடன், மரணம் வரையிற் சென்று திரும்படியான பயத்தைக் கொடுப்பதாகையால் எதிரே வந்திருக்கிற யமனைப் போன்ற வார்த்தையைச் சொல்லினள். 'நாதா! நீ உனது ப்ரிய புத்ரன் புண்யம் முதலியவற்றின் மீது க்ரமமாக ஆணையிடுகின்றனை. எனக்கு வரமும் கொடுக்கின்றனை. அதை (ஆணையிட்ட ப்ரகாரத்தையும் எனக்கு வரங்கொடுக்கிறேனென்பதையும்) அக்னியை முன்னிட்டுக் கொண்டிருக்கிற முப்பத்து மூன்றுகோடி தேவர்களும் செவி கொடுத்துக் கேட்பார்களாக. சந்த்ர ஸூர்யர்களும் மற்றை க்ரஹங்களும் ஆகாயமும் இரவும் பகலும் திசைகளும் ஸ்வர்க்கலோகமும் பூமியும் கந்தர்வர்களும் ராக்ஷஸர்களும் ராத்ரியில் ஸஞ்சரிக்கின்றபூதங்களும் வீட்டிலுள்ள க்ருஹ தேவதைகளும் மற்றுமுள்ள இதர பூதங்களும் நீ இப்பொழுது மொழிந்த வர்த்தையை அறிந்திருப்

பார்களாக; ஸத்யஸந்தனுகி மிகுந்த பராக்ரமம் பொருந்தி தர்மங்களையெல்லாம் உணர்ந்து மனஊக்கமும் அமைந்து விளங்குகின்ற இம்மன்னவன் எனக்கு வரங்கொடுக்கின்றனன்; அதைத் தேவர்களெல்லோரும் செவிகொடுத்துக் கேட்பார்களாக' என்று தான் ஓர் அபலையாயிருந்தும், பெருவில்லாளியாகிய அம்மன்னவனைத் தனது சாதுர்யததினுல் தர்மமென்னும் கயிற்றைக் கொண்டு கட்டுண்ணப் பண்ணித் தன் கருத்தை நிலைநிறுத்தி, 'ஸத்யஸந்தன்' என்று இது முதலிய வசனங்களால் ஸந்தோஷப்படுத்தி, ஸமஸ்த தேவதைகளையும் ஸாக்ஷியாயிருக்கும்படி வேண்டிக்கொண்டு, அதன் பிறகு காமவெறிகொண்டு மனமயங்கித் தான் விரும்பிய வரத்தைக் கொடுக்க ஸித்தமாயிருக்கின்ற பெருவில்லாளியாகிய அம்மன்னவனைப் பார்த்து 'அரசே! முன்பு தேவாஸுர யுத்தத்தில் நடந்த வ்ருத்தாந்தத்தை மனத்திற் படுத்திக்கொள்வாயாக. அந்த யுத்தம் நடக்கும் பொழுது நடுவில் சத்ருவாகிய சம்பராஸுரன், உன் ப்ராணன்களைப் போக்காமற் போயினும், அவைகளை மிகவும் கலக்கி நலுங்கச்செய்து உன்னை மூர்ச்சையுறச் செய்தனன். அப்பொழுது நான் ஸாரத்யம் செய்துகொண்டிருந்து அன்றிரவெல்லாம் மனஊக்கத்துடன் உன்னைச் சாவாமல் பிழைக்கும்படி மிகுந்த யத்னங்கள் செய்து பாதுகாத்தனன். அதற்காக நீ எனக்கு இரண்டு வரங்கள் கொடுத்தனை. மனக்களிப்பைச் செய்யும் மஹீபாலனே! அப்பொழுது நீ கொடுத்த அவ்வரங்களிரண்டையும் உன்னிடத்திலேயே இருப்பாக வைத்திருந்தனன். அரசனிடத்தில் வைத்த [1] நிக்ஷேபத்தை அவன் காப்பாற்றிக் கொடுப்பது தர்மமன்றோ? நீ அரசன்; மேலும் ஸத்யஸந்தனுயிருப்பவன்; அதற்கு மேல் பர்த்தாவாயிருக்கின்றனை. ஆகையால் அவ்வரங்களை எனக்குக் கொடுப்பாயென்று வேண்டுகின்றனன். எனக்கு நீ கொடுத்த வரங்களையே விரும்புகின்றேனன்றி வேறில்லை.

1 நிக்ஷேபம்-புதையல்.

ஆகையால் வரங்களைக் கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து தர்மத்தின்படி அவைகளை எனக்குக் கொடுக்காமற் போவாயாயின், அப்படி அவமானப்பட்டும் ஒருக்ஷணமாவது ப்ராணன்களைத் தரித்திருப்பேனு! தரித்திருக்கமாட்டேன். இப்பொழுதே, உன்கண் முன்னிலையிற்றுனே ப்ராணன்களை விட்டுவிடுவேன்' என்றனள். முன்பு கொடுத்த வரத்தை ஜ்ஞாபகப்படுத்திக் கொண்டு கைகேயிமொழிந்த இவ்வாக்யத்தைக் கேட்ட மாத்ரத்தில் மன்னவன் பயப்பட்டு, வேடனது [1]கபட கானத்திற்குட்பட்டு வலையிற் கட்டுண்டமானைப்போல், தனது விநாசத்தின் பொருட்டுத் தானே கொடுப்பதாக ஒத்துக்கொண்டு தர்ம பாசத்தினுல் கட்டுண்டனன். பிறகு கைகேயி, காமவிகாரத்தினுல் மதி கெட்டுத் தனக்கு வரங் கொடுக்க இருக்கிற தசரதவேந்தனைக் கண்டு 'ப்ராணேஶ்வர! நீ எனக்கு அப்பொழுது கொடுத்த வரங்கள் இவையென்று வேறு வேருகப் பிரித்து எனக்குக் கொடுக்கவேண்டிய விதத்தை இப்பொழுதே சொல்லுகின்றனன்; அதைச் செவிகொடுத்துக் கேட்கவேண்டும். இப்பொழுது ராமனது பட்டாபிஷேகத்திற்காக எந்த எந்த ஸாமக்ரிகள் ஸித்தப்படுத்தப்பட்டிருக்கின்றனவோ, அவைகளைக் கொண்டே எனக்காக நீ பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடத்த வேண்டும்; இது ஒரு வரம். தைவாஸுர யுத்தத்தின்பொழுது நீ என்னிடத்தில் ப்ரீதியோடு எனக்குக் கொடுத்த இரண்டாவது வரத்திற்கு இதோ ஸமயம் வந்தது. ராமன் பதினுன்கு ஸம்வத்ஸரங்கள் தண்டகாரண்யத்தில் மரவுரி உடுத்து [2] க்ருஷ்ணாஜினத்தையும் ஜடைகளையும் தரித்துத் தாபஸனுகி வஸித்திருக்க வேண்டும். ஆகையால் இப்பொழுதே காலவிலம்பஞ் செய்யாமல் ராமனைக் காட்டுக்கு

---

1 கபடகானம்-கபடத்துடன் பாடும் பாட்டு.

2 க்ருஷ்ணாஜினம்-மான் தோல்.

அனுப்பி, அவனில்லாமையால்[1] அகண்டகமான யௌவ ராஜ்யத்தில் பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடத்தவேண்டும். காலவிலம்பஞ் செய்யவேண்டாம். நான் மிகுந்த ஆவலுடன் விரும்புவது இதுவே; மற்றொன்றும் அன்று. எனக்குக் கொடுத்த வரங்களையே நான் வேண்டுகிறேனன்றிப் புதிதாக நான் ஒன்றையும் விரும்பிக் கேட்டு அந்யாயமாக உன்னை நிர்ப்பந்தஞ்செய்யவில்லை. இப்பொழுதே ராமன் அரண்யத்திற்குச் செல்ல நான் பார்க்க வேண்டும். நீ ராஜாதிராஜன்; ஸத்யஸந்தனென்று எங்கும் புகழ்பெற்றவன். நீ செய்த ப்ரதிஜ்ஞையை ஸத்யமாகச் செய்துகொள்வாயாக. அங்ஙனம் ப்ரதிஜ்ஞையைக் காப்பாற்றிக்கொண்டு உனது குலத்தையும் சீலத்தையும் ஜன்மத்தையும் பாதுகாத்துக்கொள்வாயாக. தபோதனராயிருப்பவர் பரலோக வாஸத்திற்கு ஸத்ய வசனத்தைக்காட்டிலும் மிக்க ஹிதமான உத்தம ஸாதனம் மனிதர்களுக்கு வேறில்லை யென்று சொல்வது உனக்குத் தெரிந்திருக்குமல்லவா?' என்றுரைத்தனள்.
பதினொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தசரதன் சோகித்தல்.

பிறகு தசரத மஹாராஜன் இடியிடித்தாற்போல் மிகவும் பயங்கரமாயிருக்கின்ற கைகேயியின் வார்த்தையைக் கேட்டுச் சிந்தாக்ராந்தனாகி முஹூர்த்தகாலம் பரிதபித்து மூர்ச்சித்தனன். அம்மன்னவன் தனக்குள் 'ஆ! கைகேயி இப்படிப்பட்ட மொழிகளை இயற்கையாகமொழிவாளா? மொழியமாட்டாள். ஆனால் இது ஸ்வப்னமோ! அதற்கு நான் இப்பொழுது நித்ரை போகவில்லையே; விழித்துக்கொண்டிருக்கிறேனன்றோ? அல்லது சித்தப்ரம

1 அகண்டகமான—சத்ருவில்லாத.

மோ! ஆனல் அதற்கும் காரணத்தைக் காணேன். அல்லது—ஜன்மாந்தரத்தில் அனுபவித்த விஷயம் இப்பொழுது நினைவுக்கு வந்திருக்கின்றதா? இப்படிப்பட்ட அனுபவம் ஜன்மாந்தரத்திலும் உண்டாக நேராதே. ரோகத்தினல் என் மனத்திற்கு இவ்வித விகாரம் உண்டாயிருக்குமா? இவற்றில் எதுவா யிருக்கலாம்?' என்று சிந்தித்து, அப்பொழுது ஒன்றுந் தோற்ருமையால் ஸுகமற்றிருந்தனன். கைகேயியின் வார்த்தைகளால் அடியுண்டு மூர்ச்சித்த மன்னவன், வெகு நேரங்கழித்து மூர்ச்சை நீங்கித் தெளிவுபெற்று, எதிரில் பெண் பெரும்புலியைக் கண்ட மானைப்போல் துயரம் அடைந்து விலவிலப்புற்று வெறுந் தரையில் உட்கார்ந்திருந்து, பாம்பாட்டியால் எழுதப்பெற்ற யந்த்ர மண்டலத்தில் மந்த்ரத்தினல் கட்டுண்ட பெருவிஷமுள்ள ஸர்ப்பம்போல் இப்படியப்படி சலிக்கமுடியாமல் நெருப்புப்பொறி பறக்கின்ற பெருமூச்சுக்களை எறிந்துகொண்டு கோபாக்னி எரியப்பெற்று 'ஆ! சீ! இப்படியும் கூடுமா?' என்றுரைத்து, மீளவும் துக்கத்தின் மிகுதியால் மனம் பொறுக்கமாட்டாமல் மூர்ச்சை அடைந்தனன். அவ்வரசன் வெகு நாழிகை சழிந்தபின் தெளிவுபெற்று, மிகவும் துக்கித்துக் கோபத்தினல் சிவந்து நெருப்புப்போன்ற கண்களால் கொளுத்தி விடுபவன்போல் நெருப்புப்பொறி பறக்கின்ற பார்வைகளால் பார்த்துக்கொண்டு கைகேயியை நோக்கி 'அடி க்ரூரஸ்வபாவையே! கொடிய கடத்தையுடையவளே! இவ்வம்சத்திற்கு நாசத்தைக் கொடுக்க முயன்ற காதுகையே! பாபிஷ்டே! உனக்கு ராமன் யாது அபராதஞ் செய்தனன்? அன்றியே, நான்தான் யாதுபாபஞ் செய்தனன்? ராமன் தனது தாய்க்குப் போலவே உனக்கும் சுஶ்ரூஷை செய்துகொண்டிருக்கிறனல்லவா? அப்படி செய்துகொண்டிருக்கும் பொழுதே அவனுக்கு நீ

அனர்த்தத்தை உண்டாக்க ஆரம்பித்தனையே! எதற்காகவோ இது! உன்னை நான் தெளிவின்றி ராஜபுத்ரி என்று நினைத்து நெருப்புப்போன்ற விஷம்பொருந்திய கொடிய ஸர்ப்பத்தை வீட்டிற்குள் கொண்டுவருவது போல் நாசத்திற்காகவே என் வீட்டிறகுள் நுழைப்பித்தனன். பசு பக்ஷி முதலிய ஸகல ஜந்து ஸமூஹமும் ராமனது குணங்களைக் கண்டு புகழ்ந்துகொண்டிருக்கையில், அவன் யாது அபராதஞ் செய்தானென்கிற [1] நிபத்தைப்பற்றி எனது அன்பு குமாரனைப் போகவிடுவேன்? கௌஸல்யையை யாயினும் ஸுமித்ரையையை யாயினும் மற்ற ராஜ்யலக்ஷ்மியையாயினும், இவ்வளவென்? என் ப்ராணன்களையாயினும் விடுவேனன்றி, தந்தையாகிய என்னிடத்தில் மிகவும் ப்ரீதியுள்ள எனது அழகிய ராமனை விடுவேனோ? விடேன். எனது மூத்த குமாரனைக் கண்ணாரக் காண்பேனாயின், எனது சரீரமெல்லாம் மிகுந்த ஆநந்தம் அடைகின்றது; அவனைப் பாராதிருப்பேனாயின் நான் பிழைத்திரேன். ஒரு வேளை உலகமாயினும் ஸூர்யனை விட்டிருக்குமே யன்றி, பயிராயினும் ஜலத்தை விட்டிருக்குமேயன்றி, ராமனை விட்டு என் சரீரத்தில் ஒரு க்ஷணமாயினும் ப்ராணன்கள் தங்கமாட்டா. அடி எவ்வளவு பாபத்திற்கு முயன்றனை! அடி! பாபஸ்வபாவையே! நீ நிச்சயித்த நினைவு எனக்கு ப்ராணஹானியைக் கொடுக்கவற்று யிருக்கின்றதே; ஆகையால் இவ்வளவோடு பேரும். இனியாவது இந்தக்கருத்தை விடுவாயாக; உனக்கு நான் பர்த்தாவாயிருக்கிறேனே என்று பின்வாங்குகின்றனன்; இதோ உன் பாதங்களில் எனது சிரத்தைப் படுத்தி நமஸ்காரஞ்செய்யட்டுமா? சொல்லு. கலக்கந் தீர்ந்து என்மேல் அருள் புரிவாயாக. அடி பாபஸ்வபாவையே! அதிபயங்கரமான இப்படிப்பட்ட எண்ணங் கொள்ளுகின்றனையே;

1. நிபம்-வியாஜம்.

இதுவென்? அல்லது பரதனிடத்தில் எனக்கு ப்ரீதி உண்டோ இல்லையோ என்று தெரிந்துகொள்ள விரும்புகின்ருயோ? மொழிவாய். அப்படியாயின் இது யுக்தமே யாகும். அப்பொழுதும் ராமனிடத்தில் ப்ரீதி குறைவதற்குக் காரணம் இல்லை. பரீக்ஷார்த்தமாயிருக்குமாயின், நீ பரதனுக்கு யௌவராஜ்யபட்டாபிஷேகம் செய்யவேண்டுமென்று மொழிவாயன்றி, ராமனைக் காட்டுக்குப் போகச் செய்யவேண்டுமென்றுரைக்கமாட்டாய். ஆகையால் முன்பு நீ ராமனைக் குறித்து என்னிடத்தில் 'அந்த ராமன் எனக்கு ஜ்யேஷ்டகுமாரன்; மிகுந்த பாக்யமுள்ளவன்; தர்மிஷ்டர்களில் சிறந்தவன்' என்று மொழிந்து கொண்டிருந்தனையே; அம்மொழிகளெல்லாம் என்னை அனுஸரித்துப் பணிந்து என்முகத்துக்கிஷ்டமாகச் சொல்பவளாகையால், என் மனத்தை ஸந்தோஷப்படுத்தவாவது, உன்னிடத்தில் ப்ரீதி என்றும் மாருதிருக்கவேண்டுமென்ருவது, ராமன் உனக்கு சுச்ருஷைசெய்வதைப் பற்றியாவது சொல்லியிருப்பாயன்றி, நிஜமான ப்ரீதியைப்பற்றிச் சொன்னவளன்று. 'ராமனைக் காட்டுக்கு அனுப்பவேண்டுமென்பதுவும் உன்னைப் பரீக்ஷிப்பதற்காகவே' என்றுரைப்பாயாயின், இப்பொழுது ராமாபிஷேகம் நடப்பதைக் கேட்டு நீ மனவருத்தமுற்று, என்னையும் மிக்க மனவருத்தமுறச் செய்கின்ருயே; இது என்? நீ பரீக்ஷைக்காகவன்றி வாஸ்தவமாகவே ராமனிடத்தில் கெட்ட எண்ணங்கொண்டிருப்பது பற்றியே பிறர் செய்த துர்ப்போதனைக்கு உட்பட்டுப் பாழான கோபக்ருஹத்திற்குள் நுழைந்திருக்கின்றனை. உன்னைப் பிசாசங்கள் எவையோ கண்ணுக்குப் புலப்படாமல் ஆவேசித்திருக்கின்றன. ஆனது பற்றியே நீ தெளிவின்றி இங்ஙனம் விபரீதமாகப் பேசுகின்றனை. நீ இவ்வளவுகாலமாக நீதியெல்லாம் நன்கு அமையப் பெற்றிருந்தனை; இப்படிப்பட்ட உனக்கு இக்ஷ்வாகு வம்சத்தைப் பாழாகச் செய்யவல்ல இந்த விபரீதபுத்தி

உண்டானதுபற்றி இவ்விக்ஷ்வாகு வம்சத்திற்கே மிகவும் பெரிய ஓரனர்த்தம் ஸம்பவிக்கின்றது. விசாலமான கண்களையுடையவளே! நீ இதற்கு முன்பு எனக்குக் கொஞ்சமாயினும் அயுக்தமாகவாவது அப்ரியமாகவாவது செய்ததில்லை; ஆகையால் எனக்கு நீ இப்படி அப்ரியத்தையும் அஹிதத்தையும் செய்வாயென்று நான் இப்பொழுதும் நம்பவில்லை. உனக்கு ராமன் மஹானுபாவனாகிய பரதனோடு ஸமானமாயிருப்பவனேயன்றோ? நீ 'ராமனும் பரதனும் எனக்கு ஸமானர்களே' என்று பல தடவையாகச் சொல்லிக்கொண்டிருந்தனை. நல்ல ஸ்வபாவமுடைய இளைஞியே! உனக்கு இப்படிப்பட்ட குடிலபுத்திகள் இதுவரையில் என்றும் உண்டாகவில்லையே! ஆகையால் குடிலபுத்தியோடு சொன்னாயென்பதற்கு வழியில்லை; ராமனுடைய குணங்களை வெளியிடக்கடவ அவன் நடவடிக்கைகள் பலவற்றையும் பல தடவையாகச் சொல்லிக் கொண்டிருந்தனை யாகையால் மனப்பூர்வமாகச் சொல்லவில்லையென்றும் எண்ணமுடியாது. அப்படிப்பட்ட உன் ப்ரீதிக்கு இப்பொழுதுரைக்கும் வார்த்தை பொருந்தவில்லையே; இதுவென்? தேவி! நீ தர்மத்தை உல்லங்கனஞ் செய்ய பயப்படுந்தன்மையள்; அந்தபயம் இப்பொழுது எங்குப் போயிற்று? இல்லையாயின்—உலகத்தில் மிகவும் புகழ் பெற்று உன் ப்ரீதிக்குப் பாத்ரமாகி தர்மஸ்வபாவனுமாகிய ராமனைப் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் அரண்யவாஸஞ் செய்யும்படி யனுப்புவது என்னும் தர்மத்தில் மனஞ்செலுத்திய உனக்கு எப்படி ருசிக்கின்றது? அவன் மிகவும் ஸுகுமாரமாயிருப்பவன்; தர்மத்திலேயே மனத்தைத் திடமாக நிலைப்படுத்திக்கொண்டிருப்பவன். அப்படிப்பட்டவன் மிகக் கொடுமையான அரண்யத்தில் வாஸஞ்செய்வது உன்னைப்போன்றவளுக்கு எப்படி இனிப்பாயிருக்கும்? அழகிய கண்களுடையவளே! உன்னுடைய எண்ணம் எப்பொழுதும் மங்களமாயிருக்குமே யன்றி இங்ஙனம் கொடிதாயிராதே; இப்பொழுது ஏன் இப்படி விபரீதமா

யிருக்கின்றதோ? ராமன் தர்மஸ்வபாவனாயிருப்பதுபற்றி யும் அவனது திருமேனி ஸுகுமாரமா யிருப்பதுபற்றி யும் உனக்கு மனத்தில் வருத்தமுண்டாகாமற்போன போதிலும் அது அப்படி யிருக்கட்டும். அவன் எப் பொழுதும் உனக்கு சுஶ்ரூஷை செய்யுந்தன்மையனன் றோ? அந்த சுஶ்ரூஷையைப் பார்த்தாயினும் நீ அவனி டம் இரங்கவேண்டாமா? காண்போர்கண்களைக் கவ ரும்படியான அழகிய ஆகாரத்தை யுடைய ராமனைத் தேசத்தினின்றும் போக அனுப்பும்படி நீ வேண்டுவதற் குக் காரணமென்? ராமன் பரதனைக்காட்டிலும் மே லாகவே உனக்கு எப்பொழுதுஞ் சுஶ்ரூஷை செய்து கொண்டிருப்பவனன்றோ? ஆகையால் ராமனைக்காட்டி லும் பரதன் உன்னிடத்தில் பாராட்டும் விசேஷம் ஒன் றும் எனக்குத் தோற்றவில்லை. ராமன் செய்வது ஒரு சுஶ்ரூஷைமாத்ரமேயன்று; அவன் உனக்கு சுஶ்ரூஷை யும் செய்வான்; உன்னை மிக மேலாகவும் பாவிப்பான்; உன்னைப் பூஜிப்பான்; நீ சொன்ன கார்யங்களைத் தலை யால் தாங்கிச்செய்வான். இவையெல்லாம் அந்தப் புரு ஷஶ்ரேஷ்டனாகிய ராமனைக்காட்டிலும் அதிகமாக உனக்கு எவன் செய்வான்? ஸ்த்ரீகள் பல ஆயிரம்பேர் இருக்கின்றனர்; வேலைக்காரர்களும் அப்படியே அனே கம்பேர் இருக்கின்றனர்; இவர்களில் ஒரு ஸ்த்ரீக்காயி னும் ஒரு வேலைக்காரனுக்காயினும் ராமன்மீது அவன் தன்னைப் பரிபவப்படுத்தினதாகச் சொன்னதாவது அவ னை நிந்தித்ததாவது இது வரையில் நேர்ந்ததில்லை. ஆ கையால் அவனை எந்த அபராதத்தைக்குறித்து அரண் யத்திற்குப் போகச் செய்வோம்? மிருகங்களிற் சிங்கம் போல் புருஷர்களிற் சிறந்த அந்த ராமன் இயற்கையா கவே மனந்தெளியப்பெற்று ஸமஸ்த ப்ராணிகளுக்கும் மிருதுவான மொழிகளை மொழிந்தும் தேசத்திலுள்ள

ஜனங்கள் அனைவர்க்கும் இஷ்டத்தைக் கொடுப்பது முதலிய ப்ரிய கார்யங்களைச் செய்தும் கைகொடுத்து ஸ்வாதீனப்படுத்திக்கொள்கின்றனன். ஆனது பற்றி ஜனங்கள் எல்லோர்க்கும் ராமனிடத்தில் மிகுந்த ப்ரீதி உண்டாயிருக்கின்றது. அந்த ரகுகுலதிலகன் தயா வீரன், தானவீரன், தர்மவீரன், பராக்ரமவீரன். ஆகையால் பூதங்களுக்கு ஹிதஞ்செய்கையாகிற ஸத்யத்தினால் ஸ்வர்க்காதி லோகங்களை வென்று ஸ்வாதீனப்படுத்திக் கொள்கின்றனன்; தானஞ் செய்து தரித்ரர்களை வசப்படுத்துகின்றனன்; சுஶ்ரூஷை செய்து பெரியோர்களைத் தனக்கு ரஹஸ்யார்த்தங்களுபதேசிக்கும்படி செய்து கொள்கின்றனன்; கபடஞ்செய்யாமல் யுத்தத்தில் நன்கு நிலைபெற்று தனுஸ்ஸைக் காட்டின மாத்ரத்திலேயே சத்ருக்களை வெல்லுகின்றனன். ஸத்யமும், [1] பரலோகார்த்தம்செய்கிற கோதானம்முதலிய தானங்களும், தவமும், இஹலோகத்தில் எல்லோர்க்கும் ப்ரீதி உண்டாவதற்காகச் செய்யும் த்யாகமும், எல்லாரிடத்திலும் நல்ல ஹ்ருதயத்தோடிருக்கும் ஸ்னேஹமும், பாஹ்யாப்யக்தரசுத்தியும் (உள்ளும்புறமும் பரிசுத்தனுயிருக்கையும்) நிஷ்காபட்யமும் (கபடமற்றிருக்கையும்) பிறர் மனத்தை அனுவர்த்தித்திருக்கையும், தத்த்வஜ்ஞான ரூபமான வித்யையும், பெரியோர்களுக்குப் பரிசர்யை செய்கையும் ஆகிய இக்குணங்கள் ராமனிடத்தில் எப்பொழுதுந் தப்பாது நிலைபெற்றிருக்கின்றன. தேவீ! கபடமற்றிருக்கையென்பது எப்படிப் பட்டவர்க்கும் நேருவது அரிதாயிருக்கும்; அப்படிப்பட்ட உத்தம குணம் ஸம்ருத்தமாயிருக்கப்பெற்று மற்றை தானுதி குணஸம்ருத்தியும் பொருந்தி தேவர்களுக்கு நிகராகி மஹர்ஷிகளோடொத்து விளங்குகின்ற அருமையான ராமனிடத்தில் காட்டுக்கு அனுப்பிவிடவேண்டுமென்ற இப்பாதகத்

---

1 பரலோகார்த்தம்—பரலோகத்திற்காக.

தை நீ எப்படி விரும்புகின்றனே? அவன் ஸாமான்ய ஜனங்களுக்குங்கூட ப்ரியங்களையே உரைப்பவன்; இனி நம்மைப்போன்றவர் விஷயத்திற் சொல்ல வேண்டுமா? அவன் எப்பொழுதாயினும் யாருக்காயினும் ஏதேனும் ஓர் அப்ரியவார்த்தை சொல்லியிருப்பானோ என்று எவ்வளவு தூரம் ஆலோசித்துப் பார்க்கினும் அங்ஙனம் அவன் சொன்னதாக எனக்குத் தெரியவில்லை. அப்படிப்பட்ட ராமனுக்கு அப்ரியத்தை மனத்திலுங்கூட நினைக்கமாட்டேன். இனி உனக்காக, (உன்னைப்போன்ற ஒரு பெண்பிள்ளை இங்ஙனம் கடுஞ்சொற்கள் சொன்னதற்காக) எல்லோர்க்கும் மனக்களிப்பைத் தருந்தன்மையனாகிய அந்த ராமனை, (வயிறார நான் பெற்ற அந்த ராமனை), அப்ரியத்தை மனத்திலுங்கூட நினைக்கப்பொருத நான் என்வாயால் 'நீ காட்டுக்குப்போவாய்' என்று எப்படி சொல்லுவேன்? பொறுமையும், இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டிருக்கையும், த்யாகமும், ஸத்யமும், தர்மமும், [1] க்ருதஜ்ஞதையும், எந்த ப்ராணிகளுக்கும் ஹிம்ஸை செய்யாமையும் ஆகிய இவையும் மற்றும் பல மஹாகுணங்களும் எவனிடத்தில் குடிகொண்டிருக்கின்றனவோ, அப்படிப்பட்ட ராமன் தவிர எனக்கு மற்றொரு கதி யாது? அப்படிப்பட்ட ரக்ஷகனை எப்படி கைவிடுவேன்? கைகேயி! நானோ முதிர்ந்து கிழவனாயினன்; ஆயுளின் முடிவு நெருங்கப்பெற்று, இன்றோ நாளைக்கோ சாகப்போகின்றனன்; ஆனதுபற்றி என் நிலைமையைப்பற்றிச் சோகிக்க வேண்டியதாயிருக்கின்றது; திக்கின்றி உன்னை அடிக்கடி வேண்டி வருந்துகின்றனன்; இப்படிப்பட்ட என்னிடத்தில் நீ அருள் புரிய உரியவளாயிருக்கின்றனே. ஸமுத்ரத்தை அகழியாகப்பெற்ற ஸமஸ்த பூமண்டலத்திலும் எனக்கு யாது வருகின்றதோ, அதையெல்லாம் உனக்குக் கொடுக்கின்றனன்; ராமனிடத்தில் மாத்ரம் நீ கோபஞ்செய்யாதிருப்பாயாக. கைகேயீ! உனக்கு அஞ்ஜலி செய்கின்றனன்;

---

1 க்ருதஜ்ஞதை—செய்த உபகாரத்தை மறவாமலிருக்கை.

உனது பாதங்களையும் பிடித்துக்கொள்கின்றனன்; ராமனைக் காக்கவேண்டும்; இவ்விஷயத்தில் ப்ரதிஜ்ஞை தப்பி அதர்மத்தில் விழாதபடி என்னையும் பாது காப்பாயாக' என்றனன். இங்ஙனம் துக்கத்தினால் பரிதபித்துப் பிதற்றிக்கொண்டும் மூர்ச்சித்துப் பூமியில் விழுந்து புரண்டுகொண்டும் 'ராமனையும் இப்படி விட்டிருக்க நேருமா' என்று சோகாதிசயத்தில் மூழ்கி வருந்தி 'இந்த சோகஸாகரத்தினின்றும் என்னை ஈடேற்றுவாயாக' என்று அடிக்கடி வேண்டிக்கொண்டுமிருக்கிற அம்மஹாராஜனைப் பார்த்துக் கைகேயி மிகுந்த கோபாவேசத்தினால் கண்கொண்டு காணமுடியாத ரௌத்ராகாரம் பெற்றுச் செவி கொடுத்துக் கேட்க முடியாத மிகவும் கொடிய மொழியை மொழிந்தனள். 'அரசே! நீ, எனக்கு வரங்களைக் கொடுத்துவிட்டு, கொடுத்ததற்குப் பின்பு பரிதப்பிப்பாயாயின், வீரனாகிய நீ இனி 'இப் பூமண்டலத்தில் நானே தார்மிகன்' என்று எப்படி சொல்லிக்கொள்ள முடியும்? இவ்வுலகில் பல ராஜர்ஷிகள் உளர்; அவர்கள் எப்பொழுதாயினும் உன்னோடு ஒன்றாகக் கலந்து தர்மப்ரஸங்கஞ் செய்ய நேரும்பொழுது 'உனக்கு உபகாரஞ் செய்த கைகேயிக்கு நீ இரண்டு வரங்கள் கொடுத்தனையே; அவ்வரங்களுக்கு அப்பெண்பிள்ளை உன்னை யாது வேண்டினள்? அதற்கு யாது கொடுத்தனை?' என்று கேட்பார்களாயின், தர்மங்களெல்லா முணர்ந்தவனே! அப்பொழுது நீ மறுமொழி யாதுரைப்பாய்? 'எவள், நான் யுத்தத்தில் மூர்ச்சித்துப் போகையில் ப்ரயத்னப்பட்டு என்னை அப்புறங்கொண்டு சென்று சிசிரோபசாரங்கள் செய்து பாதுகாத்தனளோ; ஆனதுபற்றியே, நான் எவளுடைய அனுக்ரஹம் பெற்று இப்பொழுது பிழைத்திருக்கின்றேனோ; அப்படிப்பட்ட கைகேயிக்குக் கொடுத்த வரங்களை நான் பொய் செய்தேன்' என்று மொழியப்போகின்

றனையோ? ஆகையால் நீ ப்ரதிஜ்ஞை தவிரவேண்டாம். நீ இப்பொழுதே வரங்களைக் கொடுத்து இதற்குள்ளேயே அதைக் கொடுக்கிற எண்ணம் தப்பி வேறு பல உரைகளை உரைக்கின்றனை. நீ அரசன்; நீயே இப்படி செய்வாயாயின், இனி 'அரசர்களெல்லோரும் இவனைப் போலவே பொய் பேசுவார்கள்!' என்று அரசர்களெல்லோர்க்கும் [1] கலங்கத்தை உண்டாக்கப் போகின்றனை. 'நிறைவேற்ற முடியாத ப்ரதிஜ்ஞையை எப்படி நடத்த முடியும்?' என்றுரைப்பாய்; அது வேண்டாம். [2] சைப்யனென்னும் ஓரரசன், பருந்துக்கும் புருவுக்கும் வந்த விரோதத்தில், புரு தன்னைச் சரணமடைகையில், தன் சரீரமாம்ஸத்தை அறுத்துப் பருந்துக்குக் கொடுத்துப் புருவைக் காப்பாற்றினன். [3] அலர்க்கனென்னும்

---

1 கலங்கம்—தோஷம்.

2 முன்பு சைப்யமஹாராஜனுடைய தானசீலத்தைப் பரீக்ஷிக்க விரும்பி, இந்த்ரன் பருந்தாகவும், அக்னிதேவன் புருவாகவும் உருவந் தரித்து ஒன்றைப் பக்ஷிப்பதற்காக மற்றொன்று விரோதித்துக் கொண்டு வருவதாக நடனஞ் செய்துகொண்டே இருவரும் சைப்யனிடம் வந்தனர். அப்பொழுது புரு பருந்துக்கு பயந்து சைப்யனது மடியில் விழுந்து சரணம் அடைகையில், அவன் அதற்கு அபயங் கொடுத்தனன். பிறகு பருந்து வந்து, தனக்குப் புரு தெய்வாதீனமாக நேரிட்ட ஆஹாரமாகையால் அதைத் தனக்குக் கொடுக்கும்படி வேண்டிக்கொள்ள, அம்மன்னவன் 'அதைக் கொடேன்; வேண்டுமானால் வேறு மாம்ஸங் கொடுக்கிறேன்' என்று மொழிய, பருந்து 'உன் தேஹமாம்ஸத்தையே கொடுப்பாயாக' என்று கேட்கவும், சைப்ய மஹாராஜன் தன் தேஹமாம்ஸத்தை அறுத்துப் பருந்துக்குக் கொடுத்துப் புருவைக் காப்பாற்றினனென்னும் புராண கதையை இங்குக் கண்டுகொள்வது.

3 அலர்க்கனென்னும் ராஜர்ஷியிடம் ஒரு கண்ணில்லாத ப்ராஹ்மணன் வந்து 'உன் கண்களை எனக்குக் கொடுப்பாயாக' என்று

ராஜர்ஷி தன் கண்களை ஓரந்தணனுக்குக் கொடுத்து உத்தமகதியைப் பெற்றனன். [1] ஸமுத்ரராஜனும் முன்பு தான் செய்த ப்ரதிஜ்ஞையைத் தவறுமல் கரையைத் தாண்டாதிருக்கின்றனன். சைப்யன் முதலிய இப்படிப்பட்ட பூர்வர்களின் வ்ருத்தாந்தத்தை நினைத்தாயினும் செய்த ப்ரதிஜ்ஞையைப் பொய் செய்யாமல் நிறைவேற்றுவாயாக. நீயா செய்யப் போகின்றனை! துர்ப்புத்தி! நீ ஸத்யமென்னுந்தர்மத்தை விட்டு ராமனை ராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்து எப்பொழுதும் கௌஸல்யையோடுகூடி ஸுகமாக விளையாடிக்கொண்டிருக்க விரும்புகின்றனை. உனது எண்ணந் தெரிந்தது. இனி பொறுப்பேனே? நான் வேண்டிக்கொண்டது தர்மமாயினும் அதர்மமாயினும் ஆகட்டும்; நல்லதாயினும் கெட்டதாயினும் ஆகட்டும்; ஸத்யமாயினும் ஸரி; அஸத்யமானாலும் ஸரி; நீ எனக்குக் கேட்டவற்றைக் கொடுக்கிறேனென்று செய்த ப்ரதிஜ்ஞையை மாத்ரம் செய்தே தீரவேண்டும்; அதற்கு மாறுதலில்லை. ப்ரதிஜ்ஞையைத் தவறி ராமனுக்கு அபிஷேகஞ் செய்விப்பாயாயின், இப்பொழுதே உன்னெதிரில் நீ பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே விஷத்தை நன்கு பானஞ் செய்து ப்ராணன்களை விடுவேன். ராமன் ராஜாவாகப் பெற்று, அவனது தாயான கௌஸல்யைக்கு ஜனங்களெல்லோ

---

வேண்டிக்கொண்டனன். அதற்கு அந்த ராஜர்ஷி தன் கண்களைப் பிடுங்கி அந்த ப்ராஹ்மணனுக்குக் கொடுத்தானென்னுங் கதை இங்குக் கண்டுகொள்வது.

1 முன்பு தேவர்கள்ஸமுத்ரத்தைப் பார்த்து 'நீ உன் கரையைத் தாண்டி வாராதிருக்க வேண்டும்' என்று ப்ரார்த்திக்க, 'அப்படியே செய்கிறேன்' என்று அந்த ஸமுத்ரம் ப்ரதிஜ்ஞை செய்ததாகத் தெரியவருகின்றது.

ரும் கைகளைக் கூப்பிக்கொண்டிருக்கையில், அவள் அதையெல்லாம் பெற்றுக் கொண்டு பெரிய மேனுணிப்புடன் இருக்க, அதை ஒரு தினமாயினும் காண்பேனுயின், பிழைத்திருப்பதைவிட எனக்குச் சாவதே நலம். ராஜனே! ராமனை அரண்யத்திற்கு அனுப்புவது தவிர மற்றேது செய்யினும் எனக்கு ஸந்தோஷம் உண்டாகாதென்று பரதன் மேலும் என்மேலும் ஆணையிட்டுச் சொல்லுகின்றனன்' என்று இவ்வளவாகச் சொல்லி, பிறகு வாயை மூடிக்கொண்டிருந்தனள். அரசன் எவ்வளவு வேண்டி முறையிட்ட போதிலும் அக்கைகேயி மறுமொழி ஒன்றுங்கூறவில்லை. தசரதனும் ராமனைக் காட்டுக்கு அனுப்பி, பரதனுக்கு ராஜ்யத்தில் பட்டங் கட்டவேண்டுமென்று கைகேயிமிகவும் அமங்களகரமான வரம் வேண்டக் கேட்டு இந்த்ரியங்களெல்லாங் கலங்கப் பெற்று ஒரு முஹூர்த்தகாலம் அவளோடு ஒன்றும் பேசாமல் அன்பு நாயகியாயிருந்தும் அப்ரியங்கள் மொழிவதை ஆலோசித்துக் கோபத்தினல் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தனன். தசரத பரதனுக்குப் பட்டங்கட்டச் சொல்வதனுல் துக்கத்தையும், ராமனைக் காட்டுக்கு அனுப்பச் சொல்வதனுல் சோகத்தையும் கொடுத்துக்கொண்டு வஜ்ரம்போல் கடுமையாகி மனத்திற்கு மிகவும் அப்ரியமாயிருக்கிற அக்கைகேயியின் வார்த்தையைக் கேட்டு அரசன் ஸுகமென்பது சிறிது மில்லாதிருந்தனன். அம்மன்னவன் பயங்கரமான கைகேயியின் நிச்சயத்தையும் தான் செய்த கோரமான ப்ரதிஜ்ஞையையும் நினைத்து அதற்கு [1] ப்ரதீகாரம் எதுவுந் தோற்றுமையால் 'ராமா' என்று பெருமூச்சுவிட்டு அறுப்புண்ட மரம்போல் கிழே விழுந்தனன். அம்மன்னவன், பைத்யம் பிடித்து மதிகெட்டவன் போலவும், ஸன்னிபாதத்தினுல் இயற்கை மாறின ரோகி போலவும், மந்த்ரத்தினுல் வீர்யமற்றிருக்கிற ஸர்ப்பம்

1 ப்ரதீகாரம்—தடை.

போலவும் புலப்பட்டுக் கொண்டிருந்தனன். பிறகு அவ் வரசன் இரக்கமான சொற்களுடன் கைகேயியைப் பார்த்து 'இவ்வனர்த்தத்தை உனக்கு நலமென்று தோற் றும்படி துர்ப்போதனை செய்தவர் யாரோ? பிசாசம் பிடித்தவள்போல் 'இது தகும், இது தகாது' என்று தெரியாமல் என் முன்னே பிதற்றுகின்றனை; உனக்குச் சிறிதாயினும் வெட்கம் உண்டாகவில்லையே! முன்பு நீ இளமைப் பருவத்துடனிருக்கும்பொழுது உன் சீலம் இப்படி கெட்டிருப்பதாக எனக்குத் தோற்றவில்லை; இப்பொழுது நீ ப்ரௌடையானவுடன் அது ஏதோ விபரீதமானாற்போல் புலப்படுகின்றது. 'பரதனை ராஜ் யத்தில் நிறுத்த வேண்டும்; ராமனைக் காட்டில் வைக்க வேண்டும்'என்று இப்படி க்ரூரமான வரத்தை விரும்பு கின்றனை; எதனால் உனக்கு இப்படிப்பட்ட பயம் உண் டாயிற்று? பர்த்தாவாகிய எனக்கும் உலகத்திற்கும் பர தனுக்கும் ப்ரியஞ் செய்ய விரும்புவாயாயின், பரதனு க்கு ராஜ்யாபிஷேகம் செய்யவேண்டும் என்னும் இவ்வ பிப்ராயத்தையும் ராமனைக் காட்டுக்கு அனுப்பவேண்டு மென்னும் இக்கொடுங்கருத்தையும் விட்டுத் தொலைப் பாயாக. தயையில்லாத காதுகையே! ராமனைக் காட் டுக்கு அனுப்பவேண்டுமென்கிற இக்கொடுங் கருத்தும் மனத்தில் உண்டாகக் கூடுமா? இப்படிப்பட்ட உனக் குத் தயையென்பது எங்கிருந்து நேரப்போகின்றது? நீ அல்ப புத்தியுடையவள்; ஆனது பற்றியே உனக்கு இப்படிப்பட்ட பாபக்கருத்து உண்டாயிற்று. நீ பூர்வ ஜன்மத்தில் பாபஞ் செய்யுந்தன்மையளாயிருந்தனை; ஆகையாற்றான் உனக்கு இவ்வல்ப புத்தி நேரிட்டது. ராமனாயினும் நானாயினும் உனக்கு யாது அப்ரியத்தைச் செய்து உன்னை வருத்தப் படுத்தினோம்? என்னிடத்தி லாவது ராமனிடத்திலாவது யாது அபராதம் உனக்குப் புலப்படுகின்றது? நீ நினைத்தபடியே பரதன் ராஜ்யத்

தை அங்கீகரிப்பானு? அவன் தர்மத்தில் ராமனைக்காட்டிலும் மேலானவனென்று நான் நினைக்கின்றனன்; அப்படிப்பட்ட பரம தார்மிகனுகிய பரதன், நீ என்ன செய்தபோதிலும், ராமனைத் தொலைத்து ராஜ்யத்தை அங்கீகரிக்கமாட்டான். ஐயோ! காட்டுக்குப் போவென்று நான் சொல்லுகையில், வெலவெலத்து வர்ணம் மாறி ராஹுவால் பிடிக்கப்பட்ட சந்த்ரன் போலிருக்கின்ற ராமனது முகத்தை நான் எப்படி பார்ப்பேன்? மந்த்ரிகளுடன் கூடி நன்கு ஆலோசித்து ஏற்பாடு செய்து, ஸ்னேஹிதர்களோடு கலந்து திடமாக நிச்சயித்து ராமாபிஷேகஞ் செய்யவேண்டுமென்னு மபிப்ராயங்கொண்டனன். இப்பொழுது, நன்கு நிலைபெற்றிருக்கின்ற தன் ஸேனையைப் பகைவர் அடித்தோட்டக் காண்பதுபோல், நன்கு நிச்சயித்த அவ்வபிப்ராயம் தலைகீழாகத் திரும்பியிருக்க எப்படி காண்பேன்? ராமாபிஷேகத்திற்காகப் பல திசைகளினின்றும் அழைப்பிக்கப்பெற்று வந்திருக்கின்ற அரசர்கள் என்னைப் பார்த்து என்ன சொல்லுவார்கள்? அவர்கள், 'இக்ஷ்வாகுவம்சத்திற் பிறந்த பாலனுகிய அந்த ராமன் வெகுகாலமாக ராஜ்யபரிபாலனஞ் செய்தானே? இப்பொழுது அரண்யத்திற்குப் போகின்றானே! இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்தும் இந்தத் தசரதமன்னவன் புத்தியில்லாதிருக்கின்றனன். ஏதோ தெய்வவசத்தினுல் வெகுகாலம் ராஜ்யபரிபாலனஞ்செய்தானன்றித் தெளிவுள்ளவனுகத் தோற்றவில்லை. தெளிவிருக்குமாயின், ராமனை இப்படியுஞ் செய்வானே?" என்று, ஐயோ! என்னைப் பரிஹாஸஞ் செய்வார்களன்றே? அரசர்களைப் பற்றிய வார்த்தை அப்படியிருக்கட்டும். இன்னும் வயது சென்றவர்களும் குணங்களமையப் பெற்றவர்களும் பல பெரியோர்களிடத்தில் பலவாறு கல்வியைக் கற்றறிந்தவர்களுமாகிய பலரும் வந்து 'ராமன் எங்கே? ஏன் பட்டாபிஷேகம் நடக்கவில்லை?' என்று என்னைக் கேட்பார்களாயின், அப்பொ

ழுது அவர்களுக்கு நான் என்ன சொல்லக்கடவேன்? 'கைகேயிக்கு முன்பு இரண்டு வரங்கள் கொடுத்திருந்தனன்; அவ்விரண்டுக்கும் கைகேயி, ராமனைக் காட்டுக்கு அனுப்பவேண்டுமென்றும், பரதனுக்குப் பட்டங் கட்ட வேண்டுமென்றும் என்னைப் பீடிக்கையில் ராமனைக் காட்டுக்கு அனுப்பினேன்' என்று நடந்த வ்ருத்தாந்தத்தைச் சொல்வேனாயின், இதற்கு முன்பு வஸிஷ்ட வாமதேவாதி மஹர்ஷிகள் எதிரே நின்று கேட்டுக்கொண்டிருக்க, மஹாஸபையில் 'ராமனுக்கு நாளைய தினம் பட்டாபிஷேகம் நடத்தப்போகிறேன்' என்று நான் சொன்ன வார்த்தை அஸத்யமாய் விடுமல்லவா? அதுவும் அப்படியிருக்கட்டும். ராமனைக் காட்டுக்கு அனுப்புகையில், கௌஸல்யை என்னைப்பார்த்து என்ன சொல்வாள்? இப்படிப்பட்ட அபகாரத்தைச் செய்து அவளுக்கு என்னவென்று மறுமொழி கூறுவேன்? கௌஸல்யை எப்பொழுதும் எனக்கு ப்ரியத்தையே விரும்புகின்றனள்; புதல்வனான ராமனிடத்திலும் மிகுந்த ப்ரீதியுடையவள்; தாஸியைப்போல் எனக்குப் பரிசர்யை செய்பவள்; தோழியைப்போல் சூது முதலிய விநோதங்களுக்கும் ஸஹாயமாயிருப்பவள்; பார்யையைப்போல் தர்மானுஷ்டானங்களுக்கு உடன்பட்டிருப்பவள்; மற்றொரு பார்யையை மணம்புரியும் பொழுது உடன்பிறந்தவளைப்போல் உபலாலனஞ் செய்பவள்; தாயைப்போல் போஷணாதிகளை நடத்துபவள். இப்படி யிருப்பவளேயன்றிப் பட்டத்து மஹிஷி யென்னும் மிடுக்குடன் வெறுமனே யிருக்கப் பொறாள். அவள் அந்தந்த விதங்களால் என்னை அனுவர்த்தனஞ் செய்யும்பொழுது அந்தந்த ஸமயங்களுக்குரியபடி ஸத்காரங்களை நான் செய்யவேண்டியிருந்தும், உனக்குக் கோபம் வருமேயென்று அவளைச் சிறிதும் ஸத்கரிக்காமலே யிருந்துவிட்டனன். [1] வ்யாதிக்ரஸ்தனாயிருப்பவன் ஒருவன் அபத்யங்களான வ்யஞ்ஜனங்களுடன் அன்னத்தைப் புசிப்பானாயின்,

1 வ்யாதிக்ரஸ்தன்—வ்யாதியால் பீடிக்கப்பட்டவன்.

அது பின்பு பாதிப்பதுபோல், நான் முன்பு தெரியாமல் உனக்குச் செய்த நல்ல உபகாரங்களெல்லாம் இப்பொழுது உன்னுடைய [1] தௌர்ஜன்யத்தைக் காணவே 'இப்படிப்பட்ட பாபிஷ்டைக்கு உபகாரஞ் செய்தோமே' என்று என்னைப் பாதிக்கின்றன. அப்படி உபகாரஞ் செய்திரேனாயின், இப்படிப்பட்ட ப்ரீதியும் எனக்கு உண்டாயிராது; இவ்வருத்தமும் எனக்கு நேராது. ஸௌமித்ரை, நான் ராமனுக்குப் பட்டங்கட்டப்போகிறேனென்கிற நிச்சயத்தைத் திருப்பின மாறுதலையும், அன்றியே ராமனைக் காட்டுக்குப் போவென்று அனுப்புவதையுங் கண்டு 'ப்ரிய புத்ரனாகிய ராமனையே இங்ஙனஞ் செய்தனன்; அவன் புத்தி நிலையாயில்லை; பின்னும் மிக க்ரூரமாயிருக்கின்றது; இனி என் புதல்வனை என்ன செய்வானோ'? என்று பயமுற்றவளாகி என்னை எப்படி விஸ்வஸிக்கப்போகின்றனள்? ஐயோ! ஸீதையும், நான் மரணமடைவது, ராமன் காட்டுக்குப் போவது ஆகிய இவ்விரண்டு அநிஷ்டங்களையும் மிகவுந் தீனையாகி ஒரே ஸமயத்தில் கேட்கப் போகின்றனள். [2] ஐயோ! நான் காட்டுக்குப் போவென்று ராமனை அனுப்பிவிடுகையில் ராமனைப்பிரிந்திருக்கப் பொறாமல்ஹிமவத் பர்வதத்தின் தாழ்வரையில் கின்னரனை விட்டுப்பிரிந்த கின்னர மடந்தைபோல், ஸீதை மிகவும் துயரம் அடைந்து எனக்காக

---

1 தௌர்ஜன்யம்—துஷ்டத்தனம்.

2 இங்கு 'வைதேஹீ வதமே ப்ராணாந் ஶோசந்தீ க்ஷபயிஷ்யதி। ஹீநா ஹிமவதః பார்ஶ்வே கிந்நரேணேவ கிந்நரீ' என்பது மூலம். இதற்கு கோவிந்த ராஜர் வ்யாக்யானஞ் செய்யவில்லை. மஹேஶ்வர தீர்த்தவ்யாக்யானத்தின்படி பொருள் மேல்கூறப்பட்டது. 'ஐயோ! நான் ராமனைக் காட்டுக்குப் போவென்று அனுப்பி விடுகையில், ஸீதை அவனைப் பிரிந்திருக்கப் பொறாமல் ஹிமவத்பர்வதத்தின் தாழ்வரையில் அன்பனான கின்னரனைப பிரிந்த கின்னரமடந்தைபோல் மிகவும் துயரம் அடைந்து, நான் அதைப் பார்த்துப் பொறுக்கமுடியாமல் உடனே ப்ராணன்களை விடும்படியான மஹாதுக்கத்தை எனக்கு விளைவிப்பாள்' என்றும் பொருள் கூறலாமென்று தோற்றுகிறது.

வும் ராமனுக்காகவும் ப்ராணன்களை விட்டுவிடப் போகின்றனள். ராமன் பட்டணத்தைவிட்டுக் காட்டுக்குப் போய்க்கொண்டிருக்கையில், அதற்காக ஸீதையும் வருந்தி அழுதுகொண்டிருக்கையில், அது கண்டு நான் வெகுகாலம் ஜீவித்திருக்க விரும்ப மாட்டேன். நான் செத்துப்போனபின்பு நீ விதவையாகிப்பிள்ளையுடன்கூடி ராஜ்யஞ் செய்யப் போகின்றனை; இது நிச்சயம். தேவீ! ராமன் காட்டுக்குப் போகையில் பிறகு நொடிப்பொழுதும் நான் பிழைத்திரேன். உனது சரீரத்தின் அழகை மாத்ரமேகண்டு, நான் இதுவரையிலும் உன்னை நல்லவளென்று நினைத்திருந்தனன்; இப்பொழுது உன் குணங்கள் வெளியாகையில், மிகவும் கெட்டவளென்று எனக்கு நிச்சயப் படுகின்றது. கண்ணுக்கு இனிதாயிருக்கின்றதென்று விஷங்கலந்த சாராயத்தைக் குடித்துப் பின்பு அதன் துர்க்குணங்கள் தெரிந்து அனுபவிப்பவர்களின் கதி எனக்கு நேர்ந்தது. நீ இதுவரையில் மனக்கருத்தில்லாத நல்வார்த்தைகளை மொழிந்து கொண்டிருந்தனை. கடைசியில் வேடன் இனிய பாட்டுக்களைப்பாடி, அப் பாட்டுக்களால் மானைப் பிடித்து வசப் படுத்திக் கொண்டு அடித்துக்கொல்லுவதுபோல், என்னை அந்த நல்வார்த்தைகளால் வசப்படுத்திக் கொன்றுவிட்டனை. பிள்ளையை விலையாகக் கொடுத்துப் பெண்டாட்டியை வாங்கிக்கொள்கிற என்னை (க்ராம்யஸுகத்திற்காகப் பிள்ளையைக் கைவிடுகிற என்னைப்) பார்த்து, ராஜமார்க்கத்திலுள்ள பெரியோர்களெல்லோரும் [1]மத்யபானஞ் செய்த ப்ராஹ்மணனை திக்கரிப்பதுபோல் நிச்சயமாக திக்கரிப்பார்கள். ஐயோ! என்ன துக்கம் வந்தது! இப்படிபட்ட வருத்தம் எப்பொழுதும் உண்டாகவில்லையே! ஆ! இது என்ன கஷ்டம்! கஷ்டமென்பது இப்படியும் நேருமோ! இப்படிப்பட்டதை நான் எப்பொழுதும் அனுபவித்ததில்லையே! உனக்கு வரங்கொடுக்கிற விஷயத்தில் ராமனைக் காட்டுக்கு அனுப்பவேண்டுமென்று நீ

1 மத்யாபானம்—கள்குடித்தல்.

மொழிந்த க்ரூரமான வார்த்தையையுங்கூடப் பொறுத் திருக்கின்றேனே! இதை விட வேறு துக்கமும் வேண்டுமோ? இப்படிப்பட்ட துக்கம் பூர்வஜன்மத்தில் பண்ணின பாபத்தின்பலம்போல் [1] ப்ரதீகாரஞ் செய்யக்கூடாமல் எனக்கு ஸம்பவித்தது. பாபஸ்வபாவையே! நான் உன்னை இப்படிப்பட்டவளென்று தெரிந்துகொள்ளாமல் கழுத்திற் கட்டிச்சுருக்குப் போட்டுக்கொள்வதற்காகக் கயிற்றைக் காப்பாற்றி வைத்துக்கொண் டிருப்பதுபோல், நான் பாபிஷ்டனுகையால் வெகுகாலமாக உன்னைக் காப்பாற்றிக்கொண்டு வந்தனன். கடைசியில் அந்தக் கயிற்றைப்போலவே நீயும் என்னைக் கொல்லப்பார்க்கின்றனை. பாபாத்மாவாகிய எனக்கு இது யுக்தமே. இத்தனை நாளாக உன்னோடுகூடி க்ரீடித்துக்கொண் டிருந்தேனன்றி, உன்னை எனக்கு ம்ருத்யுவென்று தெரிந்துகொள்ளாமற் போயினன். ஒரு வாலிபன், வேண்டாமென்று சொல்வாரில்லாமல் தனியாயிருக்கும்பொழுது, தெரியாமல் க்ருஷ்ண ஸர்பத்தைக் (கருநாகத்தைக்) கையிற் பிடிப்பது போல், நானும் உன்னைக் கையால் பரிசித்தனன். அந்த ஸர்ப்பம் போலவே நீ எனது மரணத்திற்கு மூலமாயினையன்ரு! மஹானுபாவனும் எனக்குப்புதல்வனுமாகிய ராமனுக்கு துராத்மாவாகிய நான் தமப்பனுயிருந்தும், தமப்பனிருப்பதனு லுண்டான ஸுகம் நேராமற் போயிற்று; ஆகையால் அவன் தமப்பனில்லாத குழந்தையாயினன். அப்படி துராத்மாவாகிய என்னைப்பார்த்து இந்த ஜனங்களெல்லோரும் 'நமது அரசனுகிய தசரதன் ஒரு ஸ்த்ரீ நிமித்தமாக ப்ரியகுமாரனுகிய ராமனைக் காட்டுக்கு அனுப்புகின்ருனே; ஐயோ! இவன் மிகுந்த மூர்க்கத்தனமுள்ளவன்; கேவல காமுகன்' என்று நிந்திக்கப்போகின்றனர். இது நிச்சயம். துர்ப்புத்தியாகிய எனக்கு இது உரியதே. ஜனங்களுக்கும் அங்ஙனம் நிந்திப்பது உரியதே. மதியுடையவர் எவர்தான் இப்படிப்பட்ட அக்ரமத்தைப் பார்த்துப் பொறுத்துக்கொண்டிருப்பர்?

---

1 ப்ரதீகாரம்—தடை.

ராமன், இதுவரையில் வ்ரதங்களாலும் ப்ரஹ்மசர்யத்தினாலும் குருசிக்ஷையாலும் மிகுந்த ஶ்ரமங்களை அனுபவித்துக்காலத்தைப் போக்கினனன்றிச் சிறிதாயினும் ஸுகம் பெற்றவனன்று; இப்பொழுது ஸுகத்தை அனுபவிக்க வேண்டியதாயிருக்கையில், அவனுக்குக் கீழ் நடந்ததைக் காட்டிலும் பெருங்கஷ்டம் உண்டாயிற்று. அக்குமாரன், நான் 'காட்டுக்குப் போ' என்று சொன்ன மாத்ரத்திலேயே, அதற்கு மறுமொழி உரைக்கமாட்டான்; 'நல்லது அப்படியே ஆகட்டும்' என்று கூறுவான்; இது நிச்சயம். நான் 'வனத்திற்குப் போ' என்று கட்டளை யிடுகையில், அவன் போகாமல் ப்ரதிகூலமாக நடந்துகொள்வானாயின், அது எனக்கு ப்ரியமாகவே யிருக்கும்; ஆனல் அவன் எப்பொழுதும் அங்ஙனஞ் செய்யான். ராமன் கபடமறியாதவன்; மனம் நிர்மலமா யிருக்கப்பெற்றவன்; ஆகையால் என்னையும் தன்னைப் போலவே நிர்மல ஸ்வபாவனென்றே நினைப்பானுதலால், நான் உரைத்த வார்த்தைக்கு மற்றொரு கருத்தும் உண்டென்று தெரிந்துக்கொள்ளமாட்டான். ஆகையால் நான் அவனைக் 'காட்டுக்குப் போ' என்றுரைத்த மாத்ரத்திலேயே 'இதோ போகின்றேன்' என்று மொழிவானன்றிப், போகாமை எனக்கு உட்கருத்தென்றும் எனக்கிஷ்ட மென்றும் அறியான். ராமன் காட்டுக்குப் போனமாத்ரத்தில் உலகத்திலுள்ளவர் யாவரும் என்னை திக்காரஞ் செய்வார்கள். அந்த திக்காரத்தை நான் பொறுக்க முடியுமா? ஆனல் ம்ருத்யு என்னை இங்கிருக்கவொட்டாமல் தன் வீட்டிற்குக் கொண்டுபோய் விடுவான். நானும் மரணம் அடைந்து புருஷஶ்ரேஷ்டனுகிய ராமனும் காட்டுக்குப் போகையில் மிகுந்திருக்கிற கௌஸல்யை முதலிய எனது இஷ்டஜனங்களுக்கு நீ மற்றும் யாது பொல்லாங்கைச் செய்வாயோ! ராமன்

வனத்திற்குப் போகக் கண்டு, கௌஸல்யையும் மரணம் அடையாதிராள்; லக்ஷ்மணன், ராமனை விட்டுப் பிரிந்திருக்க மாட்டானுகையால் அவனேடு கூடவே காட்டுக்குச் செல்வான்; சத்ருக்னனும் தெய்வாதீனமாக இச்சமயத்தில் பரதனேடுகூடப் போயிருக்கிறுனுகையால் ஸமீபத்தில் இல்லை; ஸுமித்ரையானவள் இங்ஙனம் கௌஸல்யையையும் என்னையும் ராமனையும் தன் புதல்வர்களாகிய லக்ஷ்மண சத்ருக்னர்களையும் விட்டுப் பிரிந்திருக்க நேரில், இவ்வருத்தங்களைப் பொறுக்கமாட்டாமல் என்னேடு கூடவே மரணம் அடைவாள். கைகேயி! கௌஸல்யையையும் ஸுமித்ரையையும் என்னையும் என் புதல்வர்களாகிய ராம லக்ஷ்மண சத்ருக்னர்கள் மூவரையும் நரகம்போல் கோரமாகிய இவ்வருத்தத்தில் விழத்தள்ளி, அங்ஙனஞ் செய்த நீ ஸுகமா யிருப்பாயாக. இக்ஷ்வாகு வம்சமானது (ராஜ்யமானது) ஶாஶ்வதமாக நடந்து வந்து நற்குணங்களால் எங்கும் புகழ்ப்பெற்று வருகின்றது; ஆகையால் இப்படிப்பட்ட இவ்வம்சத்தைக் கலக்கத்தகாது; இனி நானும் ராமனும் இதை விட்டுப் போகையில் நீ இதைக் கலங்கும்படி பரிபாலிக்கப் போகின்றனை. ராமனைக் காட்டுக்கு அனுப்புவது பரதனுக்கு இஷ்டமாயிருக்குமாயின், நான் காலஞ் சென்றபின்பு, எனக்குச் செய்யவேண்டிய ப்ரேதக்ருத்யங்களை அந்த பரதன் செய்யவேண்டியதில்லை. ஐயோ! அடி துஷ்ட ஸ்வபாவையே! எனக்குச் சத்ருவா யிருப்பவளே! கைகேயி! இவ்வளவு செய்து இனியாவது நீ உன்கருத்து ஈடேறப் பெறுவாயாக. நானும் மரணம் அடைந்து ராமனுங் காட்டுக்குப்போன பின்பு, இப்பொழுது எல்லாரோடுங்கூடி அதி மங்கலமாக விளங்குகின்ற நீ அப்பொழுது விதவையாகி உன் பிள்ளையோடு கூட ராஜ்யம் செய்யப் போகின்றனை. நீ எனக்கு உலகத்தில் ஒப்பில்

லாத அபகீர்த்தியே வடிவுபெற்றாற் போலிருக்கின்றனை; நீயே மஹாஜனங்களின் முன்பு எனக்கு நேரிட்ட திரஸ்காரம்; ப்ராணிகள் அனைவர்க்கும் குறைவாகத் தோற்றும் அவமானமும் எனக்கு நீயே. இப்படி ராஜபுத்ரி என்னும் பேர்கொண்டு என் வீட்டில் வஸித்திருக்கின்றாயன்றி நிஜமாக நீ ராஜபுத்ரி எப்படியாவாய்? துஷ்டஸ்வபாவையாகிய நீ என் வீட்டிலிருப்பது பற்றியே இப்படிப்பட்ட அபகீர்த்தியும் பரிபவமும் அவமானமும் எனக்கு நேரிட்டன. பாபிஷ்டனுக்கு அவை உண்டாகுமல்லவா? அப்படியே பாபியாகிய எனக்கும் அவையே உண்டாயின. எனது அருமைக் குழந்தையாகிய ராமன் வேண்டியபொழுதெல்லாம் தேர்கள் யானைகள் குதிரைகள் முதலியவற்றில் ஏறித் திரிந்துகொண்டிருந்து இப்பொழுது மஹாரண்யத்தில் தனது பாதங்களைக் கொண்டு எப்படி திரியக்கூடும்? அவன் புசிக்கும் ஸமயத்தில் குண்டலங்களைத் தரித்த சமயற்காரர்கள் 'நான், நான்' என்று ஒருவர்க்கொருவர் போட்டியிட்டுக்கொண்டு மேலான அன்ன பானங்களைச் சமைப்பார்கள்; அப்படிப்பட்ட ஸுகுமாரனாகிய எனது குமாரன் அரண்யத்தில் துவர்ப்பும் கசப்பும் காரமுமான காய் கிழங்கு முதலிய ஆஹாரங்களைத் தின்றுகொண்டு எப்படி ஜீவித்திருப்பானோ? அவன் மிகவும் புகழ்பெற்ற மேலான வஸ்த்ரங்களைத் தரித்து வெகுகாலம் ஸுகமாகப் படுக்கையில் படுத்திருந்து, இனி அரண்யத்தில் காஷாய வஸ்த்ரங்களை உடுத்து வெறுந்தரையில் படுத்து எப்படியிருக்கப் போகின்றனன்? 'ராமனைக் காட்டுக்கு அனுப்பி பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்விப்பாய்' என்று முன்பின் ஆலோசியாமல் இங்ஙனம் கடினமாக மொழிவது யாருடைய உபதேசமோ? இப்படிப்பட்ட வார்த்தையை எவர்தான் ஸஹிப்பார்கள்? சீ! ஸ்த்ரீகள் கபட ஸ்பா

வமுடையவர்கள்; அவர்களுக்கு எப்பொழுதும் ரஹ ஸ்யமாகக் கெடுதி செய்துகொண் டிருக்கையே குணம். அவர்களுக்கு எப்பொழுதும் தமது கார்யத்திலேயே கண்; பிறர் கதியைப் பாராட்டமாட்டார்கள்; இவ் விஷயம் எங்கும் ப்ரஸித்தமே. சீ! அவர்கள் பாழாய் விடுவார்களாக. ஆயினும் அவர்களில் புண்யஸ்வபாவ முடையவர்களும் உளராகையால் ஸ்த்ரீகளெல்லோரை யும் இங்ஙனம் மொழியமாட்டேன்; பரதனது தாயொரு த்தியை மாத்ரமே இவ்விதம் மொழியலாகும். உன் கருத்து,உனக்கும் பிறர்க்கும் அனர்த்தத்தைக் கொடுக் கவற்றாயிருக்கின்றதே; நன்மை தீமைகளை ஆராயாமல் மனம்போடி உன் கார்யத்தையே நீ பார்த்துக்கொள் கின்றனை; இதுவென்? தயையின்றி என்னை வருத்தப்படு த்திப் பரிதபிக்கைக்காகவே நீ இங்ஙனங் கொடிய கருத் துக் கொண்டனையன்றோ? என்னால் உனக்கு யாது கெ டுதி நேரிட்டது? அல்லது உலகங்கட்கெல்லாம் ஹிதஞ் செய்யுந் தன்மையனாகிய ராமனாவது உனக்கு மாத்ரம் யாதுகெடுதியைச் செய்தனன்? தந்தைகள் தாம் ப்ரீதி செய்துகொண் டிருக்கும் பிள்ளைகளை விட்டாலும் விடக் கூடும்;அப்படியே பார்யைகளும் தாம்ப்ரீதி செய்வதற்கு இடமான கணவர்களை விட்டாலும் விடக்கூடும்; உலகத் திலுள்ளோர் இவ்விஷயத்தைப்பற்றி அவ்வளவாகப்பே சார்; ஆனதுபற்றி இதனால் எனக்கும் உனக்கும் ஒன்றும் நேராது. ஆனால் நான் காட்டுக்குப் போவென்று அனுப் புகையில் ராமன் துக்கஸாகரத்தில் மூழ்கியிருக்கக் கண்டு அதற்கு மூலமாயிருக்கிற உன்னை உலகத்தி லுள்ள ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுங் கூடக் கோபித் துக் கொள்ளும். உலகத்தில் தமப்பன்மார்களுக்குப் பிள்ளைகளிடத்தில் ப்ரீதி ஸாதாரணமாயிருப்பதுண்டு; எனக்கோ என்றால் பிள்ளைகளிடத்தில் ப்ரீதி அப்படிப் பட்டதன்று; அதிகமாயிருக்கின்றது. ஆகையால் தேவ

குமாரன்போல் ஸஹஜமான ஸௌந்தர்யம் பெற்று, மேலான ஆபரணங்களை யணிந்து, அலங்காரஞ்செய்து கொண்டு பின்னும் அழகுபொருந்தி மதித்த யானை போல் நடந்து வருகின்ற எனது குமாரனாகிய பூர்ண சந்த்ரன் போன்ற முகமுடைய அந்த ராமனை மனத் தில் நினைத்தபோதிலும் தூரத்தில் பார்த்தபோதிலும் எனக்கு எவ்வளவோ ஸந்தோஷமாயிருக்கின்றது; ஸமீ பத்தில் வரும்பொழுது கண்களாரக் காண்பேனாயின், எனது சரீரமெல்லாம் ஸந்தோஷம் அடைந்து புஷ்ட மாகப்பெற்று வலிவுகொண்டு அப்பொழுதே யௌவனப் பருவம் வரப்பெற்றாற்போலிருக்கின்றது. ஸூர்யன் இல் லாமற் போயினும் இந்த்ரன் மழை பெய்யாமற்போயி னும், ஸஞ்சாரமும் பிழைப்பும் உலகத்திலுள்ளவர்க்கு நேராமற் போகாதேயன்றி, ராமன் இங்கிருந்து காட்டுக் குப்போவது காண்பார்களாயின், ஒரு ஜந்துவாயினும் பிழைத்திராதென்றே என் புத்திக்குத் தோற்றுகின் றது. எனது விநாசத்தைக் கருதினவளும் எனக்குத் தீங்கைச் செய்பவளும் எனக்குச் சத்ருவுமாகிய உன்னை ம்ருத்யுவைப்போல் நான் இவ்வளவு காலமாக என் வீட் டில் வைத்துக்கொண்டிருந்தனன்; கொடிய விஷமுள்ள ஸர்ப்பம்போன்ற உன்னை நான் அறியாமல் வெகு கால மாக மடியிலிட்டுக்கொண்டிருந்தனன்; ஆகையால் நீ இப்பொழுது கடித்துக் கொன்றுவிட்டனை. என்னையும் ராமனையும் லக்ஷ்மணனையும் விட்டுப் பரதன் உன்னுடன் கூடிப் பட்டணத்தையும் ராஜ்யத்தையும் பந்துக்களையும் மற்ற அனைவரையும் கொன்றுவிட்டு ஸந்தோஷமாகப் பரிபாலனஞ் செய்யட்டும்; நீயும் இங்ஙனம் செய்து, எனது சத்ருக்களுக்கு ஸந்தோஷத்தின் மிகுதியைச் செய்துகொண்டிருப்பாயாக. அடி க்ரூரஸ்வபாவ முடை யவளே! புண்ணின்மேல் காரமிடுவதுபோலவும், விரல்

சுற்றின்மேல் உலக்கையிடுவது போலவும், ராமனை விட்டுப் பிரியவேண்டுமேயென்கிற வ்யஸனம் பெருகி வருகையில், அவனை 'அனுப்புவாய் அனுப்புவாய்' என்று மேன்மேலும் வருத்தப்படுத்துகின்ற காதுகையே! நீ ஆபத்தைப்பார்த்துஅடிக்குந்தன்மையள். நீஇப்பொழுதுஎன்னெதிரில் பார்யை யிருக்கவேண்டும் க்ரமம் தப்பி, ஸ்வாதந்த்ர்யம் மிகுந்து இவ்விஷயத்தில் இப்படிப்பட்ட க்ரூரமான உரைகளை உரைத்துக்கொண்டிருக்கிறு யல்லவா? அப்படிப்பட்ட உன் வாயிலிருந்து பற்கள் ஆயிரஞ் சுக்கலாய்ப் பிளந்து என்ன காரணத்தினுல் கிழே விழாதிருக்கின்றனவோ? ராமன் உனக்கு அஹிதமாயாவது அப்ரியமாயாவது யாதொருவார்த்தையும் மொழியான்; பருஷமாகப் பேசுவதே அவனுக்குத் தெரியாது; அப்படி ஸர்வஜனங்களுக்கும் மனக்களிப்பைக் கொடுக்கவல்ல நல்லுரைகளையே உரைக்குந் தன்மையனும், குணங்கள் பொருந்தியவனென்று யாவராலும் எப்பொழுதும் கொண்டாடப்பட்டவனுமாகிய ராமனிடத்தில் தோஷங்கள் இருக்கின்றனவென்று எப்படி உன்னுற் சொல்லமுடியும்? கேகயராஜனது வம்சத்தைப் பழி விளைத்துப் பாழாக்கும் பொருட்டுப் பிறந்த பாபிஷ்டையே! நீ மனக்களிப்பின்றிச் சோர்ந்திருப்பாயாயினும், நீ கோபத்தினுல் எரிந்துபோவாயாயினும், வ்யஸனத்தினுல் நாசமுறுவாயாயினும், சோகத்தினுல் ஆயிரஞ் சுக்கலாய்ப் பிளந்து பூமியில் விழுவாயாயினும், மற்றும் எதைது செய்வாயாயினும்,நீ எனக்கு மிக பயங்கரமாகவும் அஹிதமாகவும் மொழிகிற வார்த்தையை நான் நடத்தமாட்டேன். நீ தீட்டின கத்தியைப்போல் மிகவும் க்ரூரமாயிருப்பவள்; மனக்கருத்தில்லாமல் மேலுக்கு மாத்ரம் இனிய மொழிகளை மொழியுந்தன்மையள்; உனது ஸ்வபாவம்



539. தசரதன் கைகேயியை ஸமாதானப் படுத்துவதற்காக அவளது பாதங்களைப் பிடித்தல்.

மிகவும் க்ரூரமாயிருப்பது; என் குலத்தைப் பாழாக்கு வதற்கே நீ இதில் வந்து சேர்ந்தனை. ஆகையால் நீ எப்படி என் மனத்திற்கு இனிப்பைக் கொடுப்பாய்? அடி! எனது ஹ்ருதயத்தை அதற்கு மூலமாகிய ப்ராணன் களோடுகூடவே தஹித்து விடவேண்டுமென்று விரும்பு கின்ற நீ உயிரோடிருக்க நான் பார்க்கப்பொறேன். இப் படிப்பட்ட உன்னெதிரில் நானும் பிழைத்திருக்கப்பொ றேன். எனக்குப் பிழைப்பேயில்லை யென்றால், இனி ஸுகமென்பது எங்கிருந்து நேரப்போகின்றது? பிழைத் திருப்பேனாயினும், பிள்ளையைப் பிரிந்து எப்படி ஸுகம் பெறுவேன்? மற்றை உன்னோடாவது எனக்கு ஸுக மேது? ஆகையால் நீ எனக்கு பார்யையாயிருப்பது பற்றி எனக்குக் கெடுதி செய்யத்தகாது. உன் பாதங் களையாயினும் பிடித்துக்கொள்கின்றனன்; தேவீ! என் மீது அனுக்ரஹஞ் செய்வாயாக' என்றனன். அந்தத் தசரத மன்னவன், தான் மொழிந்தவற்றை லக்ஷயஞ் செய்யாமல் மீறி நடக்கின்ற அக்கைகேயிக்குத் தனது ஹ்ருதயம் வசப்பட்டிருக்கையில், தான் பூமியை யெல் லாம் பரிபாலனஞ் செய்பவனாயினும் தன்மனத்தைக் காத்துத் திருப்பிக்கொள்ள நேராமல், அநாதன்போல் (திக்கற்றவன்போல்) அழுதுகொண்டு நீட்டப்பட்ட அப் பெண்பிள்ளையின் பாதங்களில், வ்யாதிக்ரஸ்தன் திடங் தப்பித் தபீலென்று விழுவதுபோல் விழுந்தனன். ஆயி னும் அவன் அதற்குள் மூர்ச்சை அடைந்தானாகையால் அவளுடைய பாதங்களை ஸ்பர்சிக்க முடியாமல் வெறுந் தரையில் விழுந்தனன். பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---


## தசரதன் கைகேயியை மீளவும் வேண்டிக்கொள்ளல்.


மஹாராஜனுகிய தசரதன் இப்படிப்பட்ட துக்கங்களை அனுபவிக்கத் தக்கவனல்லன்; அங்ஙனம் வெறுந்தரையில் விழுந்திருக்கவும் அப்பெண்பிள்ளையின் பாதங்களில் விழுவதற்கும் உரியவனல்லன்; அப்படிப்பட்டவனுயினும் அங்ஙனம் தரையில் விழுந்து மிகவும் தீனமாக அழுதுகொண்டு, புண்யம் முழுவதுஞ் சென்றபின்பு பூமியில் விழுந்த யயாதியைப்போல் புலப்படுகின்ற அம்மஹாராஜனைக் கண்டு ஆனர்த்தமே வடிவாகக்கொண்ட அக் கைகேயி தன்கார்யங் கைகூடப் பெருமல், அதைச் சாதிக்கும் விஷயத்தில் லோகநிந்தை வருமேயென்று பயப்படாமலும், தசரதனுக்கு உண்டாயிருக்கிற பயத்தை லக்ஷயஞ் செய்யாமலும் அம்மன்னவனுக்கு மேலும் வெறுப்பைக் கொடுத்துக்கொண்டு, முன்பு கொடுத்த வரங்களே வேண்டுமென்று மீளவுந் தெரியப்படுத்த முயன்று, தன் கணவனுகிய அவ்வரசனை நோக்கி 'மஹாராஜனே! நீ 'நான் பொய் கூறேன்; பிடித்த வ்ரதத்தை யிடேற்ருமல் கைவிடேன்' என்று தன்னைத் தானே புகழ்ந்துகொள்கின்றனை. அப்படியாயின் எனக்குக் கொடுக்கிறேனென்ற வரத்தைக் கொடாமல் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு இன்னும் கடனுகவே வைத்துக்கொண்டிருக்க விரும்புகின்றனையே! இது ஏனே?' என்றனள். அம்மொழியைக் கேட்டு, அப்பொழுது அத்தசரதமன்னவன் மிகுந்த கோபங்கொண்டு ஒரு முஹூர்த்தகாலம் மூர்ச்சித்தாற்போலிருந்து பிறகு தெளிவு பெற்று ' ஐயோ! இப்படியுங் க்ரூரமாயிருப்பதுண்டா? அடி துஷ்டஸ்வபாவமுடையவளே! எனக்குப் பகையாயிருப்பவளே! நானும் மரணம் அடைந்து புருஷர்களிற் சிறந்த ராமனுங் காட்டுக்குப்போன பின்பு, நீ உன் கருத்

தெல்லாம் ஈடேறப் பெற்று ஸுகமாயிருப்பாயாக. நான் செத்தாயினும் ஸுகப்படுவேனோ? அதுவும் இல்லையே; இங்கு ராமனது [1] குசலத்திற் கண் வையாமல் உபேக்ஷித்து நான் ஸ்வர்க்கத்திற்குப் போனேனாயினும் அங்கு தேவதைகள் ராமனது குசலத்தைக் குறித்து 'ஓ மஹாராஜனே! புத்தியில்லாத ஒருபெண்பிள்ளைக்காக குணங்கள் பொருந்திய புதல்வனைக் கைவிடுவாயா?' என்று திக்காரஞ் செய்து கொண்டு வினவும் வார்த்தையை, ஐயோ! நான் எப்படி பொறுத்துக்கொள்வேன்? அங்கும் எனக்கு ஸுகம் நேராமற் போய்விட்டதே! 'ஸத்யமாகிற கயிற்றாற் கட்டுண்டு அவனை அனுப்பினேன்' என்று கேட்பவர்களுக்கு பதிலுரைக்கலா மென்கிறாயோ? அவர்கள் அங்ஙனம் வினவுகையில், 'கைகேயிக்கு முன்பு நான் கொடுத்த வரத்திற்காக அவளுக்கு ப்ரியஞ் செய்யவேண்டி ராமனைக் காட்டுக்கு அனுப்பினேன்' என்று உண்மையை உரைப்பேனாயின், இதற்கு முன்பு நான் ராமனைப் பார்த்து 'உனக்கு நாளையதினம் பட்டங்கட்டப் போகிறேன்' என்றுரைத்த வார்த்தை அஸத்யமாய் விடுமல்லவா? நான் முன்பு வெகுகாலம் பிள்ளையில்லாமலிருந்து பல ப்ரயாஸங்கள்பட்டு, யாவராலும் மேன்மைப்படுத்துகைக் குரியவனும் நீண்ட புஜதண்டங்களை யுடையனுமாகிய ராமனைப் பிள்ளையாகப் பெற்றனன்; அப்படிப்பட்ட பிள்ளையை நான் எங்ஙனங் கை விடுவேன்? மேலும் அவன் மிகுந்த ஔளர்யமுடையவன்; ஸமஸ்த வித்யைகளுங் கற்றறிந்தவன்; கோபத்தை வென்றவன்; பொறுமை மிகுந்திருப்பவன்; இங்ஙனம் நற்குணங்கள் பொருந்தி விளங்குந் தன்மையனும் தாமரையிதழ்போன்ற கண்களை யுடையவனுமாகிய ராமனை நான் எப்படி காட்டுக்குப் போவென்று அனுப்பு

1 குசலம்—க்ஷேமம்.

வேன்? கருநெய்தற் பூப்போன்ற கரிய நிறமுடையவனும் முழந்தாள் வரையிலும் நீண்டழகிய பாஹுதண்டங்களை யுடையவனும் மிகுந்த பலம் பொருந்தியவனும் மிக்க அழகு அமைந்தவனுமாகிய ராமனை, நான் தண்டகாரண்யத்திற்குப் போகும்படி எங்ஙனம் அனுப்புவேன்! அவன் ஸுகங்களை அனுபவிப்பதற்கே தகுந்தவன்; துக்கத்திற் சிறிதும் பழகாதவன்; மேலும் மிகுந்தமதியுடையவன்; அப்படிப்பட்ட ராமனுக்கு துக்கம் நேருகையில் நான் எப்படி காண்பேன்? துக்கத்திற்குச் சிறிதுந் தகாதிருக்கின்ற ராமனுக்கு நான் இப்பொழுது வருத்தங் கொடுக்காமலே இச்சரீரத்தைவிட்டு லோகாந்தரம் போகப் பெறுவேனாயின், அப்பொழுது எனக்கு ஸுகம் உண்டாகும். க்ரூரஸ்வபாவ முடையவளே! அடி பாபிஷ்டே! பகைவரிடத்தில் வீணாகாத பராக்ரமம் பொருந்தி, நம்மைப்போன்றவர் அனைவரிடத்திலும் ப்ரியத்தையே மொழிந்துகொண்டிருக்கிற ஸ்ரீராமனுக்கு அரண்யவாஸஞ் செய்யும்படியான அப்ரியத்தை ஏன் செய்கின்றாய்? இதனால் எனக்கு உலகமெங்கும் ஒப்பில்லாத அபகீர்த்தியும் என்றும் விடாத அவமானமும் விளையுமே' என்றனன். அங்ஙனம் அந்தத் தசரத மன்னவன் மனங்கலங்கப் பெற்று அழுதுகொண்டிருக்கும்பொழுது ஸூர்யன் அஸ்தமித்தனன்; ராத்ரியும் நெருங்கிவிட்டது. அன்றிரவு சந்த்ரமண்டலம் பரிபூர்ணமாக உதிக்கப்பெற்று அழகியதாகி ஸந்தோஷத்தைப் பொழிந்துகொண்டிருந்தபோதிலும், அதனுடைய மூன்று யாமங்களும், அங்ஙனம் வருத்தமுற்று அழுதுகொண்டிருக்கிற அம்மன்னவனுக்கு ஸுகமாயிருக்கவில்லை; ஆனால் மேன்மேலும் துக்கத்தையே வளர்த்திக் கொண்டிருந்தன. கிழவனாகிய அந்தத்தசரதமன்னவன் அப்படியே அனல் பறக்கும்படி

பெருமூச்செறிந்து கண்களை யெடுத்து ஆகாயத்தை நோக்கியிருத்தி மஹாரோகத்தினால் பீடிக்கப்பட்டவன் போல் கேட்பவர்களுக்கும் மனவருத்தம் உண்டாகும்படி 'நக்ஷத்ரங்களோடு விளங்குகின்ற ஓ ராத்ரியே! நீ விடியாதிருக்கவேண்டும்.[1] அது எனக்கு வேண்டாம். என்னிடத்தில் நீ தயை செய்யவேண்டும். இதோ கைகளைக் கூப்பி அஞ்ஜலி செய்து உன்னை வேண்டிக்கொள்கின்றனன். அப்படி இல்லையாயின், ராத்ரியிலன்றோ ஸ்த்ரீகளோடு மாரடி? உதயமாயின் மற்றைக் கார்யங்களேயன்றோ? ஆகையால் சீக்ரமாகவே தொலைந்து போவாயாக. எவளைப் பற்றி எனக்கு இப்படிப்பட்ட மஹாவ்யஸனம் உண்டாயிற்றோ அந்த க்ரூரஸ்வபாவமுடையவளை, அந்த மன இரக்கமில்லாதவளை, அந்தக் கைகேயியைப் பார்க்க எனக்கு இஷ்டமில்லை' என்று புலம்பினன். இங்ஙனம் புலம்பி அவ்வரசன் கைகளைக் கூப்பிக்கொண்டு மீளவும் கைகேயியை நல்வார்த்தை சொல்லித் திருப்ப முயன்று, அவளைப் பார்த்து 'தேவீ! நீ நல்ல ஸ்வபாவ முடையவளே! நான் இன்று வரையிலும் நல்ல ஆசாரங்களுடையனாகவே யிருந்தனன்; இப்பொழுது வருத்தமுற்று உன்னையே சரணமடைந்திருக்கின்றனன்; என் வயதைப்பார்க்கில், நான் இன்றோ நாளைக்கோ சாகப் போகிறவனாயிருக்கின்றனன்; விசேஷித்துப் பார்க்கில் ப்ரபுவாகவு மிருக்கின்றனன்; அப்படிப்பட்ட நான் ப்ரதிஜ்ஞை தப்பி ஆசாரங்கெட்டு வருத்தத்துடன் தீர்ந்துபோகாதிருக்கும்படி அனுக்ரஹஞ் செய்யவேண்டும். அழகிய இடையமைந்தவளே! ஒருவருமில்லாத இடத்தில் நான் ராமனுக்குப் பட்டங் கட்டப் போகிறேனென்கிற வார்த்தையைச் சொல்லவில்லை; ஸமஸ்த ஜனங்களுங் கூடிய மஹாஸபையிலன்

---

1 அது—விடிவது.

ளே நான் பட்டங்கட்டுகிற வார்த்தையைச்சொல்லினன். நான் புத்தியில்லாமல் அங்ஙனம் மொழிந்து விட்டனன். நீ நல்ல மனமுடையவளல்லவா? ஆகையால் என்னை வருத்தப்படுத்தாமல் என்னிடம் நன்கு அருள்புரிவாயாக. கறுத்தழகிய கடைக்கண்களுடையவளே! தேவீ! எனக்கு நீ அனுக்ரஹஞ் செய்யவேண்டும். உன் வரத்தின்படி நீ ராஜ்யத்தை வாங்கிக்கொண்டு நீயே அழிவில்லாத அந்தராஜ்யத்தை ராமனுக்குக் கொடுக்க, அவன் அதைப் பெறுவானாக; நீயும் அதனால் மிகுந்த கீர்த்தியைப் பெறுவாயாக. இடையின் பின்புறம் பெருத்து அழகாயிருக்கப்பெற்றவளே! அழகான முகமுடையவளே! நீண்டழகிய கண்கள் பொருந்தியவளே! நீ இங்ஙனஞ் செய்வாயாயின், இது எனக்கும் ராமனுக்கும் ப்ரபஞ்சத்திற்கும் பெரியோர்களுக்கும் பரதனுக்கும் ப்ரியமாயிருக்கும். ஆகையால் இங்ஙனஞ் செய்வாயாக' என்றனன். அந்தக்ரூரையாகிய கைகேயி, மிகவுந் துஷ்டஸ்வபாவமுடையவளாகையால், அழுது கண்கள் சிவந்து கண்ணீர் பெருகப்பெற்று நிர்மலஸ்வபாவனாகிய அவ்வரசன் கோபித்துக்கொண்டும் நல்வார்த்தை சொல்லியும் கையைக் கூப்பி வேண்டியும் மன இரக்கமுண்டாகும்படி பலவிதமாக எவ்வளவோ அழுதும், பர்த்தாவாகிய அம்மன்னவனது வார்த்தையின்படி நடக்க ஒப்புக்கொள்ளவில்லை. பிறகு அந்தத் தசரதன் அன்றையதினத்திற்குமுன்பெல்லாம் தனக்கு எப்பொழுதும் அனுகூலையாகவும் பதிவ்ரதையாகவு மிருந்த கைகேயி, அப்போது தெய்வாதீனமாக 'ராமனைக் காட்டுக்கு அனுப்பவேண்டும்' என்று அவ்வளவு ப்ரதிகூலமான மொழி கூறுவதைக் கண்டு வெகுகாலமாக அவளிடம் தனக்குண்டான பரிசயத்தினால் அவளது வார்த்தையை திக்காரஞ் செய்யநேராமல், பெற்றபிள்ளையைக் கைவிடவும் பொறாமல், செய்வது

தோற்றிருந்து மனவருத்தம் மேலிட்டு மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தனன். இப்படி நன்மனமுடைய அம்மஹாராஜன் மிக்க மனவருத்தமுற்றுப் பார்ப்போர்களுக்கு பயமுண்டாகும்படி பெருமூச்செறிந்துகொண்டிருக்கையில் அன்றிரவு கடந்து சென்றது. அப்பொழுது [1] வைதாலிகர் முதலியோர் வந்து அந்தத் தசரதமஹாராஜனை வழக்கப்படி எழுப்ப முயலுகையில், அம்மன்னவன் எழுப்பவேண்டாமென்று ஆஜ்ஞாபித்தனன். பதின்மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தசரதன் ராமனைக் காட்டுக்கு அனுப்ப விச்சயிக்கையும், ஸுமந்த்ரன் தசரதனிடம் வருகையும், ராமனை வரவழைக்கையும்.

புத்ர சோகத்தினால் பீடிக்கப்பட்டு ப்ரஜ்ஞையின்றித் தரையில் விழுந்து புரண்டுகொண்டிருப்பவனும் இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்த மஹானுபாவனாகையால் அத்தகைய துர்த்தசைக்குத் தகாதவனுமாகிய தசரதனைப் பார்த்து அந்தப் பாபிஷ்டையாகிய கைகேயி 'எனக்கு வரங்கொடுப்பதாக ப்ரதிஜ்ஞை செய்து, அதைக் கடந்து பாபத்திற்கே முயலுகின்றனை. மேலும், ப்ரஜ்ஞையில்லாமல் தரையில் விழுந்து புரளுகின்றனை. இதுவென்? நீ சொன்ன வார்த்தையைத் தவறாதிருக்கும் மர்யாதையில் நிலைநின்றிருப்பதே ந்யாயம். தர்மங்களையுணர்ந்த பெரியோர்கள் ஸத்யமே மேலான தர்மமென்று மொழிவார்களன்றோ? நான் ஸத்யமென்னும் தர்மத்தை அனுஸரித்தே வரங்கொடுக்கும்படி உன்னை வேண்டினேனன்றி அதர்மம் ஒன்றும்செய்யவில்லை. அரசே! முன்பு சைப்யனென்னும் மன்னவன் ப்ரதிஜ்ஞை செய்து

---

1 வைதாலிகர்—தாளமில்லாமல் வாயால் பாடுபவர்.

பக்ஷியாகிய பருந்துக்குத் தன் தேஹத்தை அறுத்துக் கொடுத்துச் சிறந்த கதியைப் பெற்றனன். அப்படியே மஹாதேஜஸ்வியாகிய அலர்க்கனும், வேதங்களின் கரையறிந்தவனாகிய ஓர் ப்ராஹ்மணன் தன் கண்களைக் கொடுக்கும்படி யாசிக்கையில், சிறிதாயினும் மனக்கலக்கம் இன்றித் தன் கண்களைப் பிடுங்கிக் கொடுத்தனன். ஸமுத்ரமும், தன் கரையைத் தான் ஸுகமாகவே தாண்ட முடியுமாயினும் அதைத் தாண்டுவதில்லையென்று ஸத்யம் செய்து அந்த ஸத்யத்தையே அநுஸரித்திருப்பது பற்றித் தான் ஸங்கல்பித்துக்கொண்டகாலம் முழுவதும் பொங்கிவரும்பொழுதெல்லாம் தன் கரையைத் தாண்டாதிருக்கின்றது. ஸத்யமே பரம ப்ராப்யமும் ப்ரணவ ஸ்வரூபமுமாகிய ப்ராஹ்மம்; ஸத்யத்தில் தான் தர்மங்களெல்லாம் நிலைபெற்றிருக்கின்றன; ஆகையால் ஸத்யமே தர்மத்திற்குக் கடைசி எல்லை; அழிவில்லாத வேதங்களும் ஸத்யத்தையே ப்ரதானமாகக் கூறுகின்றன. ஸத்யத்தினாலேதான் பரம புருஷார்த்தமாகிய மோக்ஷமும் ஸித்திக்கின்றது. ஆனதுபற்றி உனக்கு தர்மத்தில் புத்தி நிலைநின்றிருக்குமாயின், ஸத்யத்தைக் காட்டிலும் மேலான தர்மமில்லாமையால் ஸத்யத்தைப் பின்செல்வாயாக. நான் விரும்பிய வரத்தை நிறைவேற்றுவாயாக. நீ வேண்டுபவர்களுக்குத் தப்பாமல் வரங் கொடுப்பவனன்றோ? பின்னும், உலகத்திற் சிறப்புற்றவன். ஆகையால் தர்மத்தைப் பரிபாலனஞ் செய்வதற்காகவும், அதனுடைய அபிவ்ருத்திக்காகவும், உனது அன்பிற்கிடமாகிய நான் வேண்டிக்கொள்வதைப் பற்றியும், உன்புதல்வனாகிய ராமனை வனத்திற்கு அனுப்புவாயாக; இதை நான் உனக்கு மும்முறை சொல்லுகின்றேன். நீ எங்கும் மேன்மை பெற்றவனாகையால் ப்ரதிஜ்ஞையைத் தப்புவது உனக்கு யுக்தமல்ல. இப்பொழுது நீ எனக்

குச் செய்த இந்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றாவிடின், (ராமனைக் காட்டுக்கு அனுப்பாது போவாயாயின்,) நீ இங்ஙனம் என்னைச் சிறிதும் பாராட்டாமல் கைவிடுகையில் பிழைத்திருப்பேனோ? உன் முன்னிலையிற்றானே ப்ராணன்களை விட்டுவிடுவேன்' என்றனள். இப்படி கைகேயி மனத்திற் சிறிதும் சங்கையின்றி வரங்கேட்கையில், முன்பு இந்த்ரனுக்கு உடன் பிறந்தவனாகிய வாமனமூர்த்தி அவ்விந்த்ரனுடைய வேண்டுகோளுக்காகக் கட்டின பாசத்தை விடுவித்துக்கொள்ள முடியாதிருந்த [1]பலி சக்ரவர்த்தியைப் போல், அம்மன்னவனும் கைகேயிக்கு ஸத்யஞ் செய்திருப்பதுபற்றி அந்த ஸத்யபாசத்தை விடுவித்துக்கொள்ள முடியாதிருந்தனன். அவன் கைகேயிக்குச் சொன்ன வார்த்தையைத் தவறுவதற்கும், தவறாமல் ராமனைக் காட்டுக்கு அனுப்புவதற்கும் முடியாமல், நுகத்தடிக்கும் சக்ரத்திற்கும் நடுவில் அகப்பட்டுக்கொண்ட எருதுபோல் மிகவும் மனமயங்கி முகம் வாடி ஒன்றும் தோற்றாதிருந்தனன். அம்மன்னவன் துக்கத்தின் மிகுதியால் கலங்கிக் கண்களிரண்டிலும் கண்ணீர் பெருகப் பெற்றுக் குருடன்போல் ஒன்றுங் காணப்பெறாமல் மிக வருந்தமுற்றிருந்து, மீளவும் தைர்யத்தினால் மனத்தை அடக்கிக்கொண்டு கைகேயியைப் பார்த்து 'அடி பாபிஷ்டே! நான் அக்னியின் முன்பு மந்த்ர பூர்வமாகப் பிடித்த உன் கையை (உன்னைப் பாணிக்ரஹணஞ்செய்து கொண்டதை) விட்டுவிடுகிறேன்; இனி

1 பலி யென்னும் ஓர் அஸுரன் இந்த்ரனை ஜயித்து அவனுடன் விரோதித்து ஸ்வர்க்கலோகத்தை ஆக்ரமித்துக்கொண்டிருக்கையில் இந்த்ரனது தாயாகிய அதிதி யென்பவள் விஷ்ணுவை ப்ரார்த்திக்க, அவ்விஷ்ணுவும் வாமனனாக அவதாரஞ் செய்து பலியினிடஞ் சென்று அவனைப் பார்த்து மூன்றடி பூமியைத் தரும்படி யாசித்து, இரண்டடிகளால் உலகம் முழுவதும் அளந்து ஆக்ரமித்து மூன்றாவது அடியைக் கொடுக்கமுடியாதிருக்கின்ற பலியைப் பந்தனஞ் செய்தாரென்னும் கதையை இங்குக் கண்டுகொள்வது.

நீ எனக்கு பார்யையல்லை; நானும் உனக்கு பர்த்தா அல்லேன். அப்படி எனக்குப் பிறந்த உன் புதல்வனையும் உன்னுடன் கூடவே விட்டுவிடுகின்றேன். கைகேயி! இரவு போயிற்று; இனி ஸூர்யன் உதயமானவுடன் வஸிஷ்டர் முதலிய குருஜனங்கள் ராமாபிஷேகத்திற்காக ஸித்தப்படுத்தின ஸம்பாரங்களுடன் வந்து ராமனுக்கு அபிஷேகம் நடத்தவேண்டுமென்று தொந்தரவு செய்வார்கள்; இது நிச்சயம். ராமாபிஷேகம் தடைபடுமாயின், நான் பிழையேனுகையால் அப்பொழுது அபிஷேகத்திற்காக ஸித்தப்படுத்தின ஸம்பாரங்களைக் கொண்டு எனக்கு ராமனது கையினுலேயே உத்தரக்ரியைகளை நடத்த வேண்டும். அடி! 'ராமனே செய்யவேண்டுமென்பது ஏன்?' என்பாயோ? உனது ஆசாரம் மங்கலகரமாயிருப்பதல்ல; நீ விக்னஞ் செய்யாமற் போகாய். ஆகையால் ராமாபிஷேகத்திற்கு இடையூறு செய்வாயாயின், நீயும் உன்புதல்வனும் எனக்கு ஜலதர்ப்பணம் முதலியவற்றைச் சிறிதும் செய்யலாகாது. நான் முன்பு ராமாபிஷேகஞ் செய்வதாகச் சொன்னபொழுது ஜனங்களெல்லோரும் ஸந்தோஷத்தினுல் முகம் மலர்ந்திருக்கக் கண்ட கண்களால், இப்பொழுது ராமன் காட்டுக்குப்போவது கேட்டு மனக்களிப்பின்றி வடிவில் ஆநந்தந் தொலைந்து தலை வணங்கப் பெற்றிருக்கையில், அவர்களைப் பார்க்கப் பொறேன்' என்றனன். மஹானுபாவனுகிய அம்மஹாராஜன் அங்ஙனங் கைகேயியோடு சொல்லிக்கொண்டிருக்கையிற்றுனே, சந்த்ரன் விளங்கவும் நக்ஷத்ரங்கள் ப்ரகாசிக்கவும் பெற்றுத் துலக்கமுற்றிருந்த அந்த ராத்ரி கடந்து செல்ல, உதயமாயிற்று. அந்த ராத்ரி முழுவதும் இடைவிடாமல் ராமசிந்தனம் நடந்து வந்ததனுல் பரிசுத்தமாக விளங்கிற்று. உடனே ராமதர்சனத்தைக்கொடுக்க

வற்றாயிருக்கையால் கடந்து செல்லும்பொழுதும் அழகாகவே சென்றது. பிறகு பாப [1]ஸமாசாரமுடைய அந்தக் கைகேயி தன்கார்யம் நிறைவேறவில்லையே யென்கிற பெருங் கோபத்தினால் மனமயங்கி மெய்ம்மறந்து பிறர் செவியில் நாராசம்போல் விழுந்தெரிக்கவற்றாகிய வாக்யங்களை மொழியக் கற்றறிந்தவளாகையால் மீளவும் அம்மன்னவனை நோக்கி 'ஓ மஹாராஜனே! விஷவ்யாதிபோல் தேஹமெங்கும் வ்யாபித்து எரிக்கின்ற இப்படிப் பட்டவர்த்தையை ஏன்சொல்லுகின்றனை? எவ்விதஸங்கடத்திலும் மனவருத்தமின்றிய உன் புதல்வனாகிய ராமனை நீ மனவருத்தப்படாமல் இவ்விடத்திற்கு வரவழைக்கவேண்டும். என் புதல்வனுக்கு ராஜ்யத்தில் பட்டங்கட்டி, ராமனைக் காட்டில் திரியும்படி அனுப்பி எனக்கு எதிரிகள் ஒருவரும் இல்லாதபடி செய்து நீ செய்த ப்ரதிஜ்ஞையைப் பரிபாலனஞ் செய்வாயாயின், நீ செய்யவேண்டிய கார்யங்களெல்லாஞ் செய்து நிறைவேறப் பெற்றவனாவாய்; இல்லையாயின், நீகடைத்தேற நேராது' என்று இங்ஙனம் பருஷமாகப் பேசி முடித்தனள். கூர்மையுள்ள சவுக்கினால் அடிக்கப்பட்டு நோயுண்ட உயர்ந்த குதிரைபோல் அம்மன்னவன் பலவாறு பருஷங்களான பேச்சுக்களால் தூண்டப்பட்டு வருத்தமுற்றவனாகி அந்தக் கைகேயியைப் பார்த்து [2]'நான் தர்மபாசத்தினால் கட்டுண்டவனாயினன். எனது அறிவுத் தொலைந்து விட்டது. தர்மஸ்வபாவனும் எனக்கு அன்பனும் மூத்த குமாரனுமாகிய ராமனைப் பார்க்க விரும்புகின்றேன்' என்றனன். பின்பு புலபுல வென்று பொழுது விடிந்து ஸூர்யோதயமாகையில் பட்டாபிஷேகத்திற்கு நிச்சயிக்

1 ஸமாசாரம்—நடத்தை.

2 இவ்வாக்யத்தினால் ராமனைக் காட்டுக்கு அனுப்ப அரசன் கொஞ்சம் அனுமதியைத் தெரிவிக்கின்றனன்.

கப்பட்டதும் பரிசுத்தமுமாகிய புஷ்ய நக்ஷத்ர யோக முஹூர்த்தமும் ஸமீபித்து வந்தது. அப்பொழுது நற்குணங்கள் பொருந்தியவஸிஷ்ட மாமுனிவர்,சிஷ்யர்கள் சுற்றிலுஞ் சூழப்பெற்று, ஊருக்குவெளியிலிருக்கிற ஸரயூநதிக்குச் சென்று ஸ்நானஞ் செய்து பரபரப்புடன் பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய ஸாமக்ரிகளுடன் அயோத்யா பட்டணத்திற்குள் வந்தனர். அங்ஙனம் அம்முனிவர் வரும்பொழுது ஜனங்கள் அப்பட்டணத்து வழிகளை ஜலந்தெளித்து நன்கு விளக்கிச் சுத்தப்படுத்தி யிருந்தனர். ஆங்காங்கு நாட்டப்பட்ட மேலான டக்கையங்களால் அப்பட்டணஞ் சிறந்த சோபையுடன் விளங்கிற்று. அங்கு நாற்புறங்களிலும் பலவகைப் புஷ்பங்கள் இறைக்கப்பட்டிருந்தன. அந்நகரம் ஆங்காங்கு நாநாவித புஷ்பமாலைகளிட்டு அலங்காரஞ்செய்யப் பெற்று அழகாயிருந்தது. ஜனங்களெல்லோரும் ஸந்தோஷித்துத் திரிந்துகொண்டிருந்தனர். கடைகளில் சரக்குகள் நெருங்கிநெக்கரித்திருந்தன. எங்குப் பார்த்தபோதிலும் பெரிய வேடிக்கைகளும், எங்குப்போயினும் ராமனது அபிஷேகத்தைப்பற்றிய உத்ஸாஹமும் புலப்பட்டுக்கொண்டிருந்தன. இப்படி தேவேந்த்ரனது அமராவதியைப்போல் விளங்குகின்ற அப்பட்டணத்தைக் கடந்து மிகவும் அழகாயிருக்கின்ற அந்தப்புரத்தைக் கண்டனர். அங்குப் பலவகைப் பறவைகள் கூட்டங் கூட்டமாய்க் கூவிக்கொண்டிருந்தன. அங்குப் பட்டணத்து ஜனங்களும் நாட்டுப்ரஜைகளும் ப்ராஹ்மணர்களும் நெருங்கி யிருக்கையில் அவ்வந்தப்புரம் மிகவும்அழகாயிருந்தது.யாகஞ் செய்விக்கத் தெரிந்தவர்களும் ஸபிகர்களுமாகிய ப்ராஹ்மணோத்தமர்கள் அங்கு நாற்புறமும் நிறைந்திருந்தனர். ரிஷிகளில் சிறந்த வஸிஷ்டர் அவ்வந்தப்புரத்தின் அருகிற்சென்று அங்கு நெக்கரித்துக் கொண்டிருக்கிற நாகரி

கர் முதலிய அந்த ஜனங்களைக் கடந்து மிகுந்த ஸந்தோஷத்துடன் அந்தப்புரத்தினது வாசற்றிண்ணையில் உட்கார்ந்தனர். மஹாதேஜஸ்வியாகிய வஸிஷ்டர், தசரத மஹாராஜனது மந்த்ரியும் ஸாரதியுமாகிய ஸுமந்த்ரன் அபிஷேக மஹோத்ஸவத்திற்காகச் செய்துகொண்ட அழகிய அலங்காரத்துடன் மிகவும் இனியனாகிப் புலப்பட்டுக்கொண்டு தனது க்ருஹத்தினின்றும் புறப்பட்டு அந்தப்புரத்து வாசற்படியின் அருகில் வரக்கண்டு, ஸமர்த்தனாகிய அந்த ஸூதபுத்ரனை நோக்கி 'நான் இவ்விடம் வந்திருக்கின்றேனென்று அரசனுக்கு வேகமாகச் சென்று சொல்வாயாக. ராமாபிஷேகத்திற்காக இதோ கங்கா ஜலங்கள் நிறைந்த பொற்குடங்களும், ஸமுத்ர ஜலம் நிறைந்த பொற்குடங்களும் வந்திருக்கின்றன. அத்திப்பலகையிற் செய்த ராஜபீடமும் அபிஷேகத்திற்காகக் கொண்டுவரப்பட்டது. ஸகல தான்யங்களும் நானுவித கந்தங்களும் பலவகை ரத்னங்களும் ஸித்தமாயிருக்கின்றன. அப்படியே தேனும் தயிரும் நெய்யும் பொரிகளும் தர்ப்பங்களும் புஷ்பங்களும் பாலுங் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. பின்னும், அழகிய கன்னிகைகள் எட்டுப் பேர்களும், மதித்துச் சிறந்ததொரு யானையும், நான்கு குதிரைகள் கட்டப் பெற்றுப் பளபளவென்று விளங்குகின்ற தேரொன்றும், கத்தியும், மேலானதொரு வில்லும், மனிதர் வஹிக்கும் வாஹனமும் (பல்லக்கும்), சந்த்ரன்போல் வெளுத்தழகிய சத்ரமும் (குடையும்), வெளுத்த இரண்டு சாமரங்களும், தங்கக் கிண்ணியும், பொற்கயிறு கட்டிய முசுப்புள்ள வெள்ளைக் காளையும், பிடரி மயிர்கள் நிறைந்திருப்பதும் நான்கு பற்கள் முளைக்கப் பெற்றதும் மிகுந்த கொழுப்புள்ளதுமாகிய உயர்ந்த குதிரையும், ஸிம்ஹாஸனமும், புலித்

தோலும், எரிகிற அக்னியும் ஸித்தமாயிருக்கின்றன. அப்படியே ஸமஸ்த வாத்யங்களும் வந்திருக்கின்றன. வாரஸ்த்ரீகளும், அலங்கரித்துக் கொண்டிருக்கிற மற்றைப் பெண்களும் வரவழைக்கப் பட்டு வந்திருக்கின்றனர். ஆசார்யர்களும் மற்றும் ப்ராஹ்மணர்களும் இதோ வந்து ஸித்தமாயிருக்கின்றனர். பின்னும், பசுக்களும் புண்யங்களாகிய மற்றை ம்ருகங்களும் பக்ஷிகளும், ஆயத்தமாயிருக்கின்றன. சிறந்தநாகரிகர்களும் தலைமையுள்ள நாட்டுப்புறத்து ஜனங்களும் வர்த்தகர்களும் அத்யாபகர்களும் தந்தமது வீதியிலுள்ள ஸகல ஜனங்களோடும் வந்திருக்கின்றனர். இவர்களே யன்றி இன்னும் அநேகம்பேர்களும் மனக்களிப்புடன் இனிய உரைகளை மொழிந்துகொண்டு அரசர்களோடுகூட ராமாபிஷேகத்தை எதிர்பார்த்துக்கொண்டு நிற்கின்றனர். நன்கு ஸூர்யோதயமாகையில், நன்மையை விளைவிக்கவற்றாகிய இன்றையதினத்தின் புஷ்ய நக்ஷத்ரத்தில் ராமனுக்கு ராஜ்யாபிஷேகஞ்செய்யும்படி மஹாராஜனை த்வரைப்படுத்துவாயாக' என்றனர். அம்மஹானுபாவர் சொன்ன வார்த்தையைக்கேட்டு ஸுமந்த்ரன் ராஜாக்களில் சிறந்தவனாகிய தசரதமன்னவனைப் புகழ்ந்துகொண்டே அந்தப்புரத்திற்குச் சென்றனன். அரசன் வாசற் காப்பவர்களுக்கு 'இந்த ஸுமந்த்ரன் அந்தப்புரத்திற்குள் வருவானாயின், யதேச்சமாக உட்புக விடுங்கள்' என்று சொல்லியிருக்கிறானாகையால் உள்ளே நுழைய நேரப் பெற்ற வ்ருத்தனாகிய அந்த ஸுமந்த்ரன் உள்ளே புகும்பொழுது அவர்கள் அவனைத் தடுக்கமுடியாதிருந்தனர். அவர்கள் அரசனுக்கு ப்ரியமானவற்றைச் செய்ய விரும்பினவர்களாகையால் ஸுமந்த்ரன் உள்ளே புகுவது ராஜனுக்கு ப்ரியமென்று தெரிந்துகொண்டு எப்படி தடுப்பார்

கள்? அந்த ஸுமந்த்ரன் அரசனது அருகில் சென்று நின்று, அம்மன்னவனுக்கு நேர்ந்திருக்கும் துரவஸ்தையைத் தான் அறியாதாகையால் மிகவும் ஸந்தோஷங்களைத் தெரிவிக்கின்ற வாக்யங்களால் தசரதனைப் புகழ முயன்று அந்த வேளைக்குத்தகுந்தபடி அரசனது மாளிகையில் கைகளைக் கூப்பிக்கொண்டு அவ்வரசனை இங்ஙனம் துதி செய்தனன். 'தேஜஸ்வியாகிய ஸமுத்ரராஜன் பரிபூர்ண சந்த்ரோதயகாலங்களில் அவனது கிரணங்கள் தன்மேற் படப்பெற்று மனமகிழ்ந்து மிகுந்த ஆநந்தத்துடன் எப்படி உத்ஸாஹப்படுகின்றானோ, அப்படியே பெருமைபொருந்திய நீயும் உனக்கேற்றபடி ஆநந்தம் பெறுவாயாக. இவ்வேளையிற்றான் மாதலி இந்த்ரனைப் புகழ்ந்தனன்; அவ்விந்த்ரனும் ஸமஸ்ததானவர்களையும்ஜயித்தனன். அப்படிப்பட்ட இந்தக் காலத்தில் அப்படியே நானும் உன்னைப்புகழ்ந்து எழுப்புகின்றனன். நீயும் இந்த்ரனைப்போல் ஸமஸ்த சத்ருக்களையும் ஜயிப்பாய். அங்கங்களாகிய சிக்ஷைமுதலிய வித்யைகளோடுகூடிய வேதங்கள்ஸர்வஸ்வாமியாகிய [1]ப்ரஹ்மதேவனுக்கு ஸ்ருஷ்டிக்கு

---

1 'நாமரூபஞ்சபூதாநாம் க்ருத்யாநாஞ்ச ப்ரபஞ்சநம் ।வேதசப்தேப்ய ஏவாதௌ தேவாதீநாஞ் சகார ஸ' (தேவதைகள் முதலிய ப்ராணிகளுடைய நாமத்தையும், ரூபத்தையும், செய்யவேண்டிய கார்யப் பரப்புக்களையும், அந்த ப்ரஹ்மதேவன் வேத சப்தங்களைச்கொண்டே தெரிந்து நடத்தினன்) என்று ஸ்ருஷ்டிக்கு வேண்டிய அந்தந்த அர்த்தங்களை வேதங்கள் தெரிவித்துக்கொண்டிருக்கையில் ப்ரஹ்மதேவன் செய்தானென்கிற விஷயம் இங்குக் கண்டு கொள்வது. அல்லது 'வேதேப்ய ஏவ ஸூராதீந் பதார்யாஞ் ஜ்ஞாத்வ வேயாஸ் தாந் ஸ்ருஜதி' (ப்ரஹ்மா, வேதங்களைக்கொண்டே பதார்த்தங்களை அறிந்து அவைகளைப்படைக்கின்றான்,) என்கிற ஸ்ருதியைப் பற்றி பூமி முதலியவற்றின் ஸ்ருஷ்டியைக் குறித்து வேதம் போதிக்கிறதென்பது யுக்தமென்று கண்டுகொள்வது.

வேண்டிய அர்த்தங்களைத் தெரிவித்து அஜ்ஞானமாகிற நித்ரையினின்றும் எழுப்புவதுபோல், நானும் உன்னை, வேண்டிய கார்யங்களைச் செய்வதற்காக எழுப்புகின்றனன். ஸூர்யனும் சந்த்ரனும், ப்ராணிகள் எல்லோர்க்கும் ஆதாரமாகி நல்ல ஸ்வபாவமுடைய பூமியை உதயாஸ்தமய காலங்களில் எழுப்புவதுபோல், இப்பொழுது நான் உன்னை எழுப்புகின்றனன். மஹாராஜனே! நீ ராமாபிஷேக மஹோத்ஸவத்தின்பொருட்டு ஸகல ஜனங்களுக்கும் [1] நயனானந்தமாகிய மங்களாலங்காரங்களைச் செய்துகொண்டு ஸஹஜமாகவே விளங்குகின்ற உனது மூர்த்தி மேலும் விளங்கப்பெற்று, [2] மேருபர்வதத்தினின்றும் ஸூர்யன் உதிப்பதுபோல் எழுந்திரு. ககுத்ஸ்த்தவம்சத்திற் பிறந்த மஹானுபாவனே! உனக்குச் சந்த்ர ஸூர்யர்களும் [3] பார்வதீரமணனும், குபேரனும், வருணனும், அக்னிதேவனும், தேவேந்த்ரனும் வெற்றியைக் கொடுப்பார்களாக. ராமாபிஷேகத்திற்கு உபயோகப்படுவது பற்றி [4] மஹனீயமாகிய ராத்ரியுங் கடந்துவிட்டது. உனக்குச் செய்ய வேண்டிய கார்யங்களையெல்லாம் நாங்கள் செய்துவைத்திருக்கின்றனம். ராஜ ஶ்ரேஷ்டனே! நீ எழுந்திருந்து, மேல் நடத்த வேண்டிய கார்யங்களை நடத்துவாயாக. ராமனது அபிஷேகத்திற்கு வேண்டிய த்ரவ்யங்களெல்லாம் ஸித்

1 நயனானந்தமாகிய-கண்களுக்கு ஸந்தோஷத்தை விளைக்கும்படியான.

2 ஸூர்யன் மேருபர்வதத்தைச் சுற்றிவருகிறானன்றி அதினின்றும் உதிப்பதில்லை. ஆகையால் (மேருபர்வதத்தினின்றும) என்னில்— ஸூர்யரதத்தின் இருசு மேருவில் ஸம்பந்தித்திருக்கையால் அப்பர்வதத்தினின்றும் எழுந்திருக்கையென்று தெரியவருகின்றது.

3 பார்வதீரமணன்-ருத்ரன். 4 மஹனீயமாகிய--புகழத்தக்கதாகிய.

தப்படுத்தப் பட்டிருக்கின்றன. பகவானுகிய வஸிஷ்டமாமுனிவர் நகரத்து ஜனங்களும் நாட்டிலிருந்து வந்த ப்ரஜைகளும் வர்த்தகர்களும் கையைக் கூப்பிக்கொண்டு சூழ்ந்திருக்கப் பெற்று ப்ராஹ்மணர்களோடுகூடக் காத்துக்கொண்டிருக்கின்றனர். ஆகையால ராமனுக்கு அபிஷேகஞ் செய்யும்படி சீக்ரத்தில் ஆஜ்ஞை செய்வாயாக. காப்பவரில்லாத பசுக்களைப் போலவும், நாயகனில்லாத ஸைன்யம் போலவும், சந்த்ரனில்லாத ராத்ரி போலவும், விருஷபமில்லாத [1] ஆநிரைபோலவும், ராஜாவைக்காணுத ராஜ்யம் மனக்களிப்பின்றிக் கெட்டுப்போய்விடும். ஆகையால் வேகமாக எழுந்திருந்து ப்ரஜைகளுக்கு தர்சனங் கொடுப்பாயாக' என்று இங்ஙனம் ஸுமந்த்ரன், மனத்திற்கு ஸமாதானம் உண்டாகும்படி நல்வார்த்தை பொருந்தியும் விடியற்காலத்தில் எழுப்புவது ஜயகரமாகையால் அப்படிப்பட்ட ப்ரயோஜனத்தைக் கொடுக்கவற்றுமாகச் சொன்னவார்த்தையைக் கேட்டவுடன் அவ்வரசனுக்குச் சோகம் மேன்மேலும் பரம்பி நின்றது. பிறகு தன் புத்ரனுக்கு நேரிடுகிற துர்த்தசையை நினைத்து ஸந்தோஷமின்றி, தார்மிகனுகையால் ஸத்யத்தைத் தவற முடியாமல் வ்யஸனப்பட்டுக் கொண்டிருக்கிற அம்மஹாராஜன் சோகத்தினுல் சிவந்த கண்களுடன் அந்த ஸாரதியைத் தலையெடுத்துப் பார்த்து 'ஓ ஸுமந்த்ரனே! இப்பொழுதே நான் மர்மங்களில் அறுப்புண்டிருக்கின்றனன்; இந்த ஸ்தோத்ரவாக்யங்களால் என்னை நீ மீளவும் அம்மர்மங்களில அறுக்கின்றனே' என்றனன். ஸுமந்த்ரன், செவிகொடுத்துக் கேட்க முடியாதபடி மொழிந்த மன்னவனது கருணமான வார்த்தையைக் கேட்டும், கண்கொண்டு காணமுடியாமல் மனக்களிப்பின்றிமுகம்வாடி யிருக்கின்ற அம்மன்ன

1 பசுக்கூட்டம்.

வனைக் கண்டும், பயந்து கைகளைக் கூப்பிக்கொண்டு அவ்விடம் விட்டுக் கொஞ்சதூரம் ஒதுங்கியிருந்தனன். அரசன் மனவருத்தத்தினால் தானாகப் பேசுவதற்குச் சக்தியற்றிருக்கையில், அப்பொழுது ராஜநீதிகளுக்குரியபடி தன் கார்யங்களுக்கு வேண்டிய விசாரங்களையறிந்த கைகேயி ஸுமந்த்ரனைப் பார்த்து 'அப்பா ஸுமந்த்ரனே! அரசன் ராமனது அபிஷேகத்தைப்பற்றிய ஸந்தோஷத்தினால் உத்ஸாஹம் மேலெழப் பெற்று இரவெல்லாங் கண் விழித்திருந்து பரிஶ்ரமப்பட்டது பற்றி இப்பொழுது நித்ரைக்கு அதீனமாயிருக்கின்றனன். ஆகையால் நீ வேகமாகச் சென்று மிகவும் புகழ் பொருந்திய அந்த ராஜ குமாரனை அழைத்துக்கொண்டு வருவாயாக. உனக்குச் சுபம் உண்டாகுக. இவ்விஷயத்தில் விசாரம் வேண்டாம்' என்றனள். அரசனது வார்த்தையைக் கேட்டு 'ஏதோ அனர்த்தம் வந்துவிட்டதென்று சங்கித்துக்கொண்டிருக்கிற அந்த ஸுமந்த்ரன் கைகேயியின் வார்த்தையைக் கேட்டு 'மற்றொன்றும் இல்லை. இனி மங்கலமே' என்று எண்ணிக்கொண்டு ஸந்தோஷப்பட்டு 'அரசனது அனுமதியைப் பற்றியே கைகேயி இங்ஙனம் மொழிந்தனள்' என்று மனக்களிப்புடன் புறப்பட்டுப் போயினன். அவன் அப்பொழுது கைகேயி தன்னைப் பார்த்து 'ராமனை அழைத்துக்கொண்டு வா' என்று வேகமாக அனுப்பினதைப் பற்றித் தன் மனத்தில் [1] 'ஸரி தெரிந்தது. தர்மந்தெரிந்தவனாகையால் தசரதன் ராமனது பட்டாபிஷேகத்திற்காக அவனை இங்கே வர

1 இதற்கு மூலம்—'வ்யக்தம் ராமாபிஷேகார்த்தம் இஹாயாஸ்யதி தர்மவித்' என்று. இங்கு (ஆயாஸ்யதி) என்கிற பதம் (ஆயாபயிஷ்யதி) என்கிற பதத்தின் பொருளைக் கொடுக்கிறதெனக் கருதி (தசரதன் ராமனது பட்டாபிஷேகத்திற்காகவே அவனை இங்கே வரவழைக்

வழைக்கப் போகின்றனன். (தர்மங்களை அறிந்தவனாகிய ராமன் பட்டாபிஷேகத்திற்காகவே இங்கு வரப் போகின்றனன்) என்று சிந்தித்து, ஸந்தோஷம் மேன்மேலும் பெருகப்பெற்று மஹாபாஹுவாகிய ராமனைப் பார்க்கவிரும்பிக் கலங்காப்பெரு நகரமாகிய அயோத்யாபுரத்தின் நடுவில் இருப்பதால் ஸமுத்ரத்தின் இடையிலிருக்கிற ஓர் ஓடைபோல் விளங்குகின்ற அவ்வந்தப்புரத்தினின்றும் புறப்பட்டுச் சென்று ஜனங்கள் நெருங்கப்பெற்றிருக்கிற அதன் வாசற்படியை எதிரே பார்த்து, உடனே அங்கிருந்து வேகமாகப் புறப்பட்டு வாசற்படியின் அருகில் வந்து முன்னே இருக்கிற அரசர்களைக் கண்டு, பிறகு சிறந்த தனங்களையும் காணிக்கைகளையும் கொண்டு வந்து கும்பல் கூடி வாசலண்டை வந்திருக்கிற பலவகைப் பட்டணத்து ஜனங்களையுங் கண்டனன். பதினான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராமாபிஷேக ஸம்பாரவர்ணனம்.

வேதங்களின் கரை கண்ட அந்த ப்ராஹ்மணோத்தமர்கள் யாவரும் அன்றிரவெல்லாமங்கிருந்து, பிறகு உத

---

கப் போகின்றனன்) என்று கூறப்பட்டது. முன்புள்ளோரும் சிலர் இவ்விதம் எழுதியிருக்கிறார்கள். (ஆயாஸ்யதி) என்கிற பதத்திற்கு (வரப்போகிறார்) என்றே பொருள் கருதி 'தர்மந்தெரிந்தவராகையால் தசரத சக்ரவர்த்தி ராமாபிஷேகத்திற்காக இங்கே வரப்போகிறார்' என்று கூறுகின்றனர். அப்பொழுது(இங்கே) என்பதற்கு (கைகேயியின் மாளிகைக்கு) என்றே பொருளாக வேண்டும். அவ்விடத்திற்கு அவன் முன்பே வந்திருக்கிறானாகையால் வரப்போகிறதாகச் சொல்வது எப்படி பொருந்துமோ தெரியவில்லை. மற்றுஞ் சிலர்—'தர்மஜ்ஞனாகிய ராமன் பட்டாபிஷேகத்திற்காகவே இங்கு வரப்போகின்றனன்' என்று எழுதுகின்றனர். அப்பொழுது 'வ்யக்தம் ராமோபிஷேகார்த்தமிஹாயாஸ்யதி தர்மவித்' என்று பாடமாக வேண்டும். இதைக் கருதியே இவ்வார்த்தத்தை ( ) என்கிற அடையாளத்துடன் சேர்த்திருக்கின்றோம்.

யமாகையில் ராஜபுரோஹிதராகிய வஸிஷ்டருடன் ஸபைக்கு வந்து சேர்ந்தனர். பின்னும் மந்த்ரிகளும் ஸைன்யத்திலுள்ள முக்யாதிகாரிகளும் பட்டணத்திலுள்ள[1] ப்ராமுகர்களும் ராமாபிஷேகத்தைப் பார்க்க நேர்ந்தது பற்றி மிக்க மனக்களிப்புடன் அவ்விடம் வந்து கலந்தனர். பிறகு மாசுமறுவின்றி நிர்மலயாக ஸூர்யோதயமாகையில் புஷ்ய நக்ஷத்ரமும் வருகையில், ராமனது ஜன்ம லக்னமாகிய கர்க்கடலக்னமும் அத்துடன் கலக்கையில், ராமாபிஷேகத்திற்காக வேண்டிய த்ரவ்யங்களையெல்லாம் ப்ராஹ்மணோத்தமர்கள் ஸித்தஞ் செய்து வைத்தனர். ஸுவர்ணமயமான ஜலகும்பங்களும், நன்கு அலங்காரஞ் செய்யப் பெற்று அரசர்கள் உட்காருவதற்கு உரியதுமாகிய பீடமும், தோஷமொன்றுமின்றி விளக்கமுற்ற புலித்தோல் பரப்பப்பெற்ற தேரொன்றும் அங்குப் புலப்பட்டன. கங்கை யமுனை இவை இரண்டும் கலக்குமிடமாகிய ப்ரயாகமென்னும் புண்ய தீர்த்தத்தினின்றும் பரிசுத்தங்களாகிய இதர நதிகளினின்றும் மடுக்களினின்றும் கிணறுகளினின்றும் ஓடைகளினின்றும் ஜலங்கள் கொண்டுவரப்பட்டிருந்தன. கிழக்கு முகமாகப் பாய்கிற கங்கை கோதாவரி முதலியநதிகளினின்றும், ஊர்த்[2]வமுகமாகப் பாய்கிற ப்ரஹ்மாவர்த்தம் ருத்ராவர்த்தம் முதலியவற்றினின்றும், வடக்கு முகமாகவும் தெற்கு முகமாகவும் குறுக்கே பெருகி வருகின்ற கண்டகி சோணபத்ரம் முதலிய நதிகளினின்றும், பாயாமல் தேங்கி யிருக்கின்ற புண்ய ஸரஸ்ஸுக்களினின்றும், ஸமஸ்த ஸமுத்ரங்களினின்றும் ஜலங்கொண்டு வந்திருந்தனர். பொரிகளோடுகூடிப் பாலுள்ள அத்திக்கொத்து முதலியவைகளும் போடப்பெற்று, தாமரையும் கருநெய்

1 ப்ரமுகர்—தலைமையுள்ளவர்.

2 மேல்முகமாக.

தலும் இடப்பெற்றுப் பாவன ஜலங்கள் நிரம்பின பொற் குடங்களும் வெள்ளிக்குடங்களும் விளக்கமுற்றிருந்தன. தேனும் தயிரும் நெய்யும் பொரியும் தர்ப்பமும் புஷ்பமும் பாலும் ஸித்தஞ் செய்து வைக்கப்பட்டிருந்தன. பின்னும் புஷ்பங்களைச் சூடிச் சந்தனம் பூசி மையிட்டுக்கொள்வது முதலியமங்கலாசாரங்களுஞ் செய்துகொண்டு ஸமஸ்த ஆபரணங்களுந் தரித்தவேசிகளும் ஸித்தமாக விளங்கி நின்றனர். சந்த்ர கிரணங்கள் போல் புலப்படுகின்ற வெளுத்த காந்திகளுடன்கூடி, ரத்னங்களிழைத்த பொற்பிடியு மிடப்பெற்ற மேலான சாமரமும் கந்த புஷ்பாதிகளால்அலங்கரிக்கப்பட்டு ராமனுக்காக ஸித்தமா யிருந்தது. சந்த்ரமண்டலம்போல் வட்டமாகி வெளுத்து நிர்மலமாய் விளங்குவதும்பட்டாபிஷேகத்திற்காகச் செய்விக்கப்பட்டதுமாகிய மேலான வெண்குடையும் ஆயத்தமா யிருந்தது. வெள்ளைக் காளையும் லக்ஷணங்களெல்லாம் பொருந்திய வெளுத்த குதிரையும் ஸித்தப் படுத்தப்பட்டிருந்தன. இடைவிடாது மதஜலத்தைப்பெருக்குவதும் மிகுந்த அழகு பொருந்தியதும் அரசர்கள் ஏறத்தக்கதுமாகிய பட்டத்துயானையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. ஸர்வாபரணங்களும் அணிந்து மங்கலத்தின் பொருட்டு ஏற்படுத்தப்பட்ட எட்டுக் கன்னிகைகளும் ஸித்தமாகக் காத்துக்கொண்டிருந்தனர். வீணை முதலிய ஸமஸ்த வாத்யங்களும் ஸித்தமாயிருந்தன. அப்படியே ஸ்துதி பாடகர்களும் மற்றுமுள்ளவர்களும் ஆயத்தமாயிருந்தனர். இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்த அரசர்களுக்குப்பட்டாபிஷேகம் நடக்கும்பொழுது அவர்களது ஆசாரத்தின்படி எந்தெந்த பதார்த்தங்கள் சேர்த்துவைப்பது வழக்கமோ, அவ்விதமாகவே அதற்கு வேண்டிய ரத்னம் முதலிய அப்பதார்த்தங்களையெல்லாம் கொண்டு அவ்வரசர்கள் மஹாராஜனது கட்டளை

யின்படி ராமாபிஷேகத்திற்காக அம்மன்னவனது அந்தப்புரத்து வாசற்படியிற்கூடி அவன்புலப்படாதிருப்பது பற்றி 'நாம் வந்திருப்பதை அரசனுக்குச் சொல்பவன் யாவனோ? அரசன் இதுவரையிலும் தர்சனங் கொடாதிருக்கின்றனன். பொழுது விடிந்து ஸூர்யனும் உதயமாயினன். சிறந்த மதியுடைய ராமனது பட்டாபிஷேகத்திற்காக வேண்டிய த்ரவ்யங்களெல்லாம் ஸித்தமாயிருக்கின்றன' என்று தமக்குள் தாமே நினைத்துக் கொண்டிருந்தனர். இங்ஙனம் அம்மன்னவர்கள் நினைத்துக்கொண்டிருக்கையில், அரசனிடம் மிகுந்த ஸத்காரம் பெற்றிருக்கிற அந்த ஸுமந்த்ரன் பூமண்டலத்திற் கெல்லாம் ப்ரபுக்களாகிய அவ்வரசர்களனைவரையும் நோக்கி 'அரசனால் கட்டளை யிடப் பெற்று நான் ராமனை அழைத்துக்கொண்டு வருவதற்காக அவனிடம் வேகமாகப் போகின்றனன். நீங்கள் அரசனுக்கு மிகவுங் கௌரவிக்கத் தக்கவர்கள்; ராமனுக்கு மேன்மேலும் கௌரவிக்கத் தக்கவர்கள். ஆயுள் வளரப்பெற்றவர்களாகிய உங்களது வசனத்தின்படி நான் இப்பொழுதே விழித்துக்கொண்டெழுந்திருக்கிற அரசனிடஞ் சென்று அவனைப்பார்த்து 'உனக்கு ஸுகமா? நீ ஏன் வெளிப் புலப்படா திருக்கின்றனை?'' என்று வினவுகின்றேன்' என்று மொழிந்து அரசர்களின் புராதன வ்ருத்தாந்தங்களை யெல்லா மறிந்த அம்மந்த்ரி மீளவும் அரசனது அந்தப்புரத்து வாசற்படியினருகிற் சென்றனன். அவன் நினைத்தபோதெல்லாம் தடையின்றி அந்தப்புரத்திற்குள் புகக்கூடுமாகையால், அப்பொழுதும் [1] நிராடங்கமாக உள்ளே நுழைந்து அரசனைக் கண்டு அப்பொழுது அவனது வம்சத்தைப்புகழ்ந்து அவனதுபடுக்கை யறையுட் புகுந்து அங்கே நின்றனன். அங்ஙனம் அம்மந்த்ரி அரசனது படுக்கை யறையுட் புகுந்து திரைக்கு இப்

1 தடையில்லாமல்.

புறத்தில் நின்றுகொண்டு ரகுகுலதிலகனுகிய அம்மஹா ராஜனைக் குணங்கள் பொருந்திய ஆசிர் வசனங்களைக் கொண்டு 'ககுத்ஸ்த குலாலங்காரனே! சந்த்ரனும் ஸூர்யனும் சிவனும் குபேரனும் வருணனும் அக்நி தேவனும் தேவேந்தரனும் உனக்கு விஜயத்தைக் கொடுப்பார்களாக. ஓ ராஜஶ்ரேஷ்டனே! [1] மஹநீய மாகிய ராத்ரி கடந்தது. நீ கட்டளையிட்ட கார்யங்கள் எல்லாம் இதோ செய்தாய்விட்டது. எழுந்திருப்பாயாக. மேல் செய்யவேண்டிய கார்யங்களைச் செய்வாயாக. ரகு குலத்திற் பிறந்த மஹாநுபாவனே! ப்ராஹ்மணர்களும் ஸைன்யத்திலுள்ள முக்யாதிகாரிகளும் பட்டணத்தி லுள்ள [2] ப்ரமுகர்களும் வந்து உன்னைப்பார்க்க விரும்பு கின்றனர்; ஆகையால் விழித்துக்கொண்டு எழுந்திருப் பாயாக' என்று புகழ்ந்தனன். பிறகு தசரத மன்ன வன் எழுந்திருந்து, ஆலோசனைகளில் தேர்ந்தவனும் அப்பொழுது அவ்வாறு தன்னைப் புகழ்கின்றவனுமாகிய அந்த ஸுமந்த்ரனைப் பார்த்து, மொழிந்தனன். 'கை கேயி, 'ஸாரதியே! ராமனை அழைத்துக்கொண்டு வரு வாயாக' என்று மொழிந்தனள்; அதற்கு நான் குறுக்குச் சொல்லாதிருந்தேனுகையால் அதை நானும் ஒத்துக் கொண்டேனென்பதில் ஸந்தேஹமில்லை; ஆகையால் அதுவும் எனது கட்டளையேயாகின்றது; அப்படிப்பட்ட எனது ஆஜ்ஞையை நீ இங்ஙனம் உல்லங்கனஞ் செய்த தற்குக் காரணமென்? அப்பொழுது நான் நித்ரையிலி ருந்தேனுகையால் அது எனது ஆஜ்ஞையோ அன்ருே என்று ஸம்சயித்தனையோ? இப்பொழுது எனக்கு நித்ரை யில்லை; நீ இப்பொழுது இவ்விடத்திற்கு ராம னைச் சீக்கிரத்தில் அழைத்துக்கொண்டு வருவாயாக'

1 மஹநீயம்—கொண்டாடத்தக்கது. 2 ப்ரமுகர்—தலைவர்,

என்று அந்தக் கைகேயிக்காக ஸாரதியாகிய ஸுமந்த்ரனுக்கு மன்னவன் மீளவும் கட்டளையிட்டனன். அவனும் அரசனது ஆஜ்ஞையைக் கேட்டு அம்மன்னவனுக்குத் தலைவணக்கி நமஸ்காரஞ் செய்து 'இனி நான் நெடுநாளாய் நிரம்பவும் விரும்பியிருந்த ராமாபிஷேகம் நடக்கும்' என்று தனக்குள் எண்ணமிட்டுக் கொண்டு ராஜ க்ருஹத்தினின்றும் புறப்பட்டு நிர்மல ஸ்வபாவனுகையால் மற்றை யாது கெடுதியும் இருக்கிறதாகத் தெரிந்துகொள்ளாமல் மனக்களிப்புற்று மேனியெங்கும் ஒளியிடப்பெற்று ராஜ சிஹ்னங்கள் அமைக்கப்பெற்ற த்வஜங்களாலும் சிஹ்னமில்லாத வெறும் த்வஜங்களாலும் அலங்காரஞ் செய்யப்பெற்று அழகிய ராஜமார்க்கத்தைப் பார்த்துக்கொண்டே வேகமாகச் சென்றனன். அவ்வாறு போகும்பொழுது அங்கு ஸகல ஜனங்களும் ராமனைக் குறித்தும் அவனது பட்டாபிஷேகத்தைக் குறித்தும் சொல்லிக்கொள்ளுகிற வார்த்தைகளைக்கேட்டு மிக்க மனக்களிப்புற்றனன். பிறகு அந்த ஸுமந்த்ரன் கைலாஸ சிகரம்போல் வெளுத்து மிகவும் உயர்ந்து தேவேந்த்ரனது மாளிகைபோல் மிகுந்த ஒளி பொருந்தி மிகவும் அழகாயிருக்கிற ஸ்ரீராம க்ருஹத்தைக் கண்டனன். அந்த க்ருஹத்திற்குக் கதவுகள் மிகவும் பெரியனவாயிருந்தன. அங்குத் திண்ணைகள் பலவும் விளங்கின, அதில் ஆங்காங்கு ஸுவர்ண ப்ரதிமைகள் அமைத்த சிகரங்கள் அனேகம் ப்ரகாசித்தன. மற்றும், எங்குப் பார்க்கிலும் ஸுவர்ண ப்ரதிமைகளே புலப்பட்டுக் கொண்டிருந்தன. அதன் வெளி வாசற்படியில் மணிகளும் பவளங்களும் இழைக்கப்பட்டிருந்தன. அது சரத்காலத்தில் புலப்படுகிற வெளுத்த மேகம்போல் மிகவும் வெளுப்பான கிரணங்களைப் பொழிந்துகொண்டு மேருபர்வதத்தின் குஹைபோல் கம்பீரமாகி வாசற்படிகளில் கட்டப்பட்ட மேலான பொற்பூமாலைகளி னிடையில் தளதள வென்று விளங்குகின்ற பெரிய ரத்னங்களால் ப்ரகாசித்துக் கொண்டிருந்தது.

அங்கு எங்குப் பார்க்கிலும் முத்துக்களும் ரத்னங்களும் நெருங்கி விளங்கின. அங்குச் சந்தன[1] அகுரு தூபங்கள் குழகுழ வென்று மணங் கமழ்ந்துகொண்டிருந்தன. இங்ஙனம் பலவகை மணங்கள் வீசப்பெற்றிருப்பதுபற்றி மலயபர்வதத்தின் ஸமீபத்திலிருக்கிற சந்தனோத்பத்தி ஸ்தானமாகிய தர்த்துர பர்வதத்தின் சிகரம்போல் அது புலப்பட்டது. பின்னும், அது ஸாரஸப் பறவைகளும் மயில்களும் கொஞ்சிக் குலாவப்பெற்று மிகவும் ப்ரகாசித்தது. அழகாய்ச்செய்யப்பட்ட செக்காய் ப்ரதிமைகளும் சுவர்கள் ஸ்தம்பங்கள் முதலியவற்றில் நிரம்பியிருந்தன. மேலும், அதில் பலவகைக் கோலங்களும் விசித்ரமாய்ச் செய்யப்பட்டிருந்தன. ஒளி மிகுந்திருப்பதனால் அது ஸமஸ்த ப்ராணிகளுடைய மனத்தையுங் கண்ணையும் கவர்ந்து கொண்டிருந்தது. இவ்வளவேயன்றி, அது ஸூர்ய சந்த்ரர்களைப்போல் ப்ரகாசித்துக் கொண்டு குபேர க்ருஹம்போலவும் தேவேந்த்ரன் மாளிகைபோலவும் விளக்கமுற்றிருந்தது. அங்குப் பலவகைப் பறவைகளும் ஆங்காங்கு உலாவிக் கொண்டிருந்தன. மேலும், அது மேரு சிகரம்போல் பளபளவென்று அழகாயிருந்தது. ஜனங்கள் அதனருகில் குவியல் குவியலாகக் கையைக்கூப்பிக்கொண்டு நாற்புறமும் நிரம்பியிருந்தனர். மேலும், நாட்டுப்புறத்து ஜனங்கள் ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கபோகிறதென்று முகத்தில் ஸந்தோஷம் பெருகப் பெற்று, மிகுந்த உத்ஸாஹத்துடன் கூடி நதர்களை யேந்திக்கொண்டு அங்கெங்கும் சூழ்ந்திருக்கையில் அம்மாளிகை மிகவும் அலங்காரம் பெற்றிருந்தது. அங்ஙனம் மஹாமேகம்போல் ப்ரகாசித்துக்கொண்டு மிகவும் உயர்ந்து நன்கு அலங்காரமுஞ் செய்யப்பெற்றுப் பலவகை ரத்னங்களிழைக்கப் பட்டுக் குள்ளர்களாலும் கூனர்களாலும் எங்கும் நெருங்கப்பெற்று விளங்குகின்ற

1 அகுரு-அகில்.

ஸ்ரீராமக்ருஹத்தைக் கண்டனன். அந்த ஸுமந்த்ரன் ஜனங்கள் நிறைந்திருக்கிற அந்தராஜக்ருஹத்தைப்பார்த்துக்கொண்டே, மேல்கட்டுள்ளதும் சிறந்தழகிய குதிரைகள் கட்டப்பெற்றதுமாகிய தனது ரதத்தை ராமக்ருஹத்திற்கு எதிராக ஓட்டிக்கொண்டு சென்று பட்டணத்திலுள்ள ஸமஸ்த ஜனங்களுக்கும் மனக்களிப்புண்டாகச் செய்தனன். பிறகு அந்த ஸாரதியாகிய ஸுமந்த்ரன் மஹா தனஸம்ருத்தியுள்ளதும், மான்களும் மயில்களும் எங்கும் நிரம்பி யிருப்பதும், மிகப் பெருமை யுள்ளதுமாகிய அந்த ராமனது மாளிகைக்குட் சென்று சேர்ந்தனன். ராமன் மேலான வஸ்துக்களையே அநுபவிக்கத் தகுந்தவனுகையால் அவனதுக்ருஹமும் அங்ஙனம்மேன்மை பெற்றிருப்பது அற்புதமன்று. ஸுமந்த்ரன் அங்ஙனம் ராமனது மாளிகையைச் சேர்ந்து, தேவேந்த்ரனது மாளிகையுட் புகுந்தாற்போல் மிகுந்த மனமகிழ்ச்சிகொண்டு மேனியெங்கும் மயிர்க்கூச்ச லுண்டாகப் பெற்றிருந்தனன். பிறகு அந்த ஸுமந்த்ரன், கைலாஸ பர்வதம்போல் உயர்ந்து. வெளுத்து விளங்கவற்றும் நன்கு அலங்காரஞ் செய்யப் பெற்றிருப்பனவும் தேவபவனம் போன்றவைகளுமாகிய பல கட்டுகளைத் தாண்டிச்சென்றனன். அங்கு ராமனது மனத்திற்கு மிகவும் இனியர்களும் அவனது மதப்படி நடப்பவர்களுமான புருஷர்கள் பலரும் புலப்பட்டனர். அவன் அவர்களையுங் கடந்து அந்தப்புரத்தின் ஸமீபத்திற் சென்றனன். அவன், அவ்விடத்தில் ஜனங்கள் மிகுந்த ஸந்தோஷத்துடன் ராமாபிஷேகத்தைக்குறித்தும், அந்த ராஜகுமாரனுக்கும் மற்ற ஸமஸ்தலோகங்களுக்கும் மங்களங்கள் எல்லாம் உண்டாகவேண்டுமென்பது பற்றியும் சொல்லிக் கொண்டிருக்கிற வார்த்தைகளை மிக்க மனக்களிப்புடன் செவிகொடுத்

துக் கேட்டனன். ஸுமந்த்ரன், மஹேந்த்ரபவனம் போல் மிகவும் அழகு பொருந்திப் பலவகை ம்ருகங்களும் பக்ஷிகளும் குலாவப் பெற்று மேருபர்வத சிகரம்போல் உயர்ந்து மிகுந்த ஒளிபொருந்தி விளங்குகின்ற ஸ்ரீராம னது வாஸக்ருஹத்தைக் கண்டனன். அங்குக் கைகளைக் கூப்பி நதர்களை யேந்திக்கொண்டு வாஹனங்களினின் றும் இறங்கிக் கோடி கோடியாகவும் பரார்த்தக் கணக் காகவும் கணக்கிட முடியாதபடி வந்திருக்கிற நாட்டுப் புறத்து ஜனங்கள் ராமக்ருஹத்தின் த்வாரத்திற்குப் போகும்வழியில் நிறைந்திருக்க அந்த ஸுமந்த்ரனுக்குப் புலப்பட்டனர். பின்பு மஹாமேகம்போலவும் பெருத்த பர்வதம்போலவும் விளக்கமுற்று மதம்பிடித்து மா வெட்டியையும் லக்ஷயஞ் செய்யாமலிருப்பதும் அடக்க முடியாததும் மிகவும் அழகு பொருந்தியதும் ராமன் ஏறத் தகுந்ததும் மிகவும் உயர்ந்த சரீரமுடையதுமாகிய சத்ருஞ்ஜய மென்னும் யானையும் அவனுக்குப் புலப்பட் டது. அந்த ஸாரதி, மேலும், ஸர்வாலங்காரங்களும் அணிந்து ஆயிரமாயிரமாகப் புலப்படுகிற மந்த்ரி சிகா மணிகளும், அரசனுக்கு ப்ரியமாயிருப்பவர்களும் ரத கஜ துரகங்களோடு வந்து அங்கு ஒன்றுகூடி இருக்கையில் அவர்களெல்லோரையும் தாண்டி, ஸமஸ்த ஸம்பத்துக் களும் நிறைந்து விளங்குகின்ற அந்தப் புரத்திற்குப் போய்ச் சேர்ந்தனன். ஸுமந்த்ரன், பர்வத சிகரம் போலவும் இங்குமங்கும் சலியாத பெரியமேகம்போலவும் விளங்கிப்பெருப்பெரிய மெத்தைகளுடன் கூடிப் பெருமை பொருந்திய தேவவிமானங்களுக்கும் மேலான க்ருஹ ஸமூஹங்களுடன் ப்ரகாசிக்கின்ற அவ்வந்தப்புரத்திற் குள் பலவகை ரத்னங்களுக்கு ஸ்தானமாகிய ஸமுத்ரத் திற்குள் மகரமீன் ப்ரவேசிப்பதுபோல், ஒரு தடையு மின்றி ப்ரவேசித்தனன். பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுமந்த்ரன் ராமனைக் கைகேயீ தசரதர்களினருகில் அழைத்துக்கொண்டு வருதல்.

அரசர்களின் புராதன வ்ருத்தாந்தங்களை யெல்லாம் அறிந்தவனாகிய அந்த ஸுமந்த்ரன், அபிஷேகத்தைப் பார்க்கும் பொருட்டு வந்திருக்கிற ஜனங்களால் நிறைந்திருக்கின்ற அவ்வந்தப்புரத்து வாசற்படியைக் கடந்து மிகுந்த ஜனக்கூட்ட மில்லா திருக்கின்ற இரண்டாவது கட்டிற்குள் புகுந்தனன்; அங்கு யௌவனப் பருவம் நிரம்பின புருஷர்கள் பலர் ஈட்டியையும் வில்லையும் தரித்துக் காதுகளில் மெருகுடன் ப்ரகாசிக்கின்ற குண்டலங்களும் தகதகவென்று விளங்கப்பெற்றுப் பராக்கின்றி புத்தியை நிலை நிறுத்திக்கொண்டு ராமனிடத்தில் ப்ரீதி மிகுந்திருக்கப் பெற்றுக் காத்துக் கொண்டிருக்கக்கண்டனன். [1] மேலும் அவ்விடத்தில் காவியாடை உடுத்து நன்கு அலங்காரஞ் செய்துகொண்டு அந்தப்புரத்தில் வேலை செய்யும் பெண்டிர்களுக்குத் தலைவர்களாகிக் கையில்

1 இதற்கு மூலம்—

'தத்ர காஷாயிணோ வ்ருத்தாந் வேத்ரபாணீந் ஸ்வலங்க்ருதாந்।

தர்ஶ விஷ்டிதாந் த்வாரி ஸ்த்ர்யத்யக்ஷாந் ஸுஸமாஹிதாந்'

இதற்கு விசேஷார்த்தம்— (காஷாயிண:) காவிவஸ்த்ரந் தரித்தவர்கள் ராமனுக்கு ப்ரீதியுண்டாகும் பொருட்டு அலங்காரார்த்தமாகக் காவிச்சொக்காய்களை தரித்துக்கொண்டிருப்பவர்கள். (வ்ருத்தாந்) வ்ருத்தர்கள். தொண்ணூற்றைந்து வயது சென்றவர்கள். அவ்வளவு வயதுள்ளவர்களையே அந்தப்புரத்தில் ஏற்படுத்தவேண்டுமென்று தெரிகின்றது. (வேத்ரபாணீந்) பிரம்புகளைக் கையிற் பிடித்துக் கொண்டிருப்பவர்கள்—ராமன் வில்லைப்பிடித்து லோகங்களை ரக்ஷிக்குமாறு தாம் பிரம்புகளைக் கையிற் பிடித்துக்கொண்டு ராமனைக் காப்பவர். (ஸ்வலங்க்ருதாந்-ஸு-அலங்க்ருதாந்) நன்கு அலங்கரிக்கப்பட்டவர்கள். ராமன் சக்ரவர்த்தி மாளிகையில் திருமஞ்சனங்கொண்

பிரம்பைப் பிடித்துக்கொண்டு அவ்வந்தப்புரத்து வாசற் படியிலிருந்து மிக்க மன வூக்கத்துடன் பாதுகாத்துக் கொண்டிருக்கிற சில வ்ருத்தர்களைக் கண்டனன். அந் தக்கட்டிலுள்ள அப்புருஷர்கள் எல்லோரும் ராமனுக்கு ப்ரியத்தைச் செய்பவராகையால் ஸுமந்த்ரனைக் கௌர விப்பது ராமனுக்கு ப்ரியமென்பதை அறிந்து அவன் வருவதைக் கண்டு பரபரப்புடன் சடக்கெனத் தமது ஆஸனங்களினின்றும் எழுந்திருந்தனர். ஸுமந்த்ரன் அரசர்களைப் பணிவதில் மிகுந்த வல்லமை அமைந்தவ னுகையால் முன்பு தெரியப்படுத்தாமல் தானே உட்புக வேண்டிய மேன்மை யுள்ளவனுயினும் அந்தப்புரத்து மர்யாதையைப் பற்றித் தானுக உள்ளே புகாமல் விநயத் துடன் அவர்களைநோக்கி 'ஸுமந்த்ரன் வாசலில் வந்து காத்துக்கொண் டிருக்கிறுனென்று ராமனுக்குச் சீக்ர மாகச் சொல்லுங்கள்' என்றனன். அவர்களும் தமது ப்ரபுவாகிய ராமனுக்கு ப்ரியத்தைச் செய்ய விருப்பமுற் றவர்களாகையால் சீக்ரமாகவே ராமனிடஞ் சென்று பார்யையோடு கூடியிருக்கிற அந்த ஸ்ரீராமபிரானைக் கண்டு ஸுமந்த்ரன் வாசலில் வந்திருக்கிறுனென்று மொழிந்தனர். ராமன் அவர்கள் விண்ணப்பத்தினுல்

---

டருளி அமுதுசெய்து தனது திவ்யாந்தப்புரத்திற்கு வரும்பொழுது அந்தச் சக்ரவர்த்தியைப் போலவே இவர்களும் ராமனுக்கு அந்தரங் கர்களாயிருப்பவர்களாகையால் மிகுந்த ப்ரீதியோடு ராமனை எடுத்து மடியிலிட்டு ஆலிங்கனஞ்செய்து உச்சி மோந்தபின்பே விடுவார்கள். ஆகையால் ராமனது குங்குமங் கஸ்தூரிமுதலிய திவ்ய லேபங்கள் தமது தேஹங்களில் படப்பெற்று அவைகளால் அலங்காரஞ் செய்யப் பட்டவர்கள். (ஸு) நன்ருக-என்கையால் ஸீதாராமர்களின் அலங்கா ரத்தைக் காட்டிலும் இவர்களுடைய இவ்வலங்காரமே மிகவும் அழகா யிருக்குமென்று கருத்து.

ஸுமந்த்ரன் வந்திருப்பதை அறிந்து அவன் [1] தனது தகப்பனருக்கு அந்தரங்கனு யிருப்பவனுகையால் அவனைத் தனக்கும் அந்தரங்கனுகக் கொண்டு ரகுகுல திலகனுகிய தமப்பனருக்கு ப்ரியத்தை விரும்பித் தான் பார்யையுடன் இருக்கிற அவ்விடத்திற்கே அவனை வரவழைத்தனன். [2] அப்பொழுது ராமன் நன்கு அலங்காரஞ் செய்துகொண்டு, வராஹ ருதிரம்போல் சிவந்த வர்ணம் பொருந்தியதும் குமுகுமென்று மணங்கமழப் பெற்றதும் பரிசுத்தமுமாகிய மேலான சந்தனம் பூசிக்

---

1. அப்படிப்பட்ட இடத்திற்கு வரவழைக்கையாலேயே அவனைத் தான் அந்தரங்கனுக நினைத்திருப்பதைத் தெரிவித்தனன். இப்படி தான் ஸுமந்த்ரனைக் கௌரவித்தது தெரியுமாயின் தசரதன் ஸந்தோஷிப்பானென்று ராமன் கருத்து.

2 இதற்கு மூலம்.

'தம் வைஶ்ரவணஸங்காஶ முபவிஷ்டம் ஸ்வலங்க்ருதம்।
ததர்ஶ ஸூத: பர்யங்கே ஸௌவர்ணே ஸோத்தரச்சதே ॥
வராஹருதிராபேண ஶுசிநாச ஸுகந்திநா।
அநுலிப்தம் பரார்த்யேந சந்தநேந பரந்தபம்॥
ஸ்திதயா பார்ஶ்வதஶ்சாபி வாலவ்யஜநஹஸ்தயா।
உபேதம் ஸீதயா பூயஶ் சித்ரயா ஶஶிநம் யதா'

இதற்கு விசேஷார்த்தம் -- (வைஶ்ரவணஸங்காஶம்) குபேரனைப் போன்றவன். குபேரனைப்போல் அளவற்ற ஐஶ்வர்யமுடையவன். வைஶ்ரவணன் 'காமேஶ்வரோ வைஶ்ரவணோ ததாது' என்கிற ஶ்ருதியின்படி தாதாவாகையால் அவனைப்போல் தாதாவா யிருப்பவனென்று பொருள். அதாவது—தன்னருகிலிருப்பவர்களுக்குத் தனது ஸௌந்தர்யத்தின் பூர்ணுநுபவத்தைக் குபேரனைப்போல் கொடுப்பவனென்றபடி. (ஸௌவர்ணே) ஸுவர்ணமயமானது. தன்மேல் உட்கார்ந்திருக்கிறவனுக்குத் தக்கது. பொன்மலை தன் மேல் படிந்த நீலமேகத்தை எப்படி விளங்கச் செய்யுமோ, அப்படியே தன்மேல் உட்கார்ந்திருக்கிற ஸ்ரீராமனை விளங்கச் செய்யவற்றென்றபடி. (ஸோத்தரச்சதே) மேல் பரப்புகிற வஸ்த்ரத்தோடுகூடி

குபேரனைப்போல் விளங்கிப் பகைவரை அடக்கவல்ல மஹா பராக்ரமம் பொருந்தி, சிறந்த படுக்கை பரப்பின

யது. புஷ்பம்போல் ஸுகுமாரமாகிய ராமனது திருமேனிக்குத் தகுந்தபடி மிகவும் மிருதுவான மேல்பரப்பை யுடையது. இப்படிப் பட்ட, (பர்யங்கே) மஞ்சத்தின் மீது. ராமனுடைய அப்படிப்பட்ட ஐஶ்வர்யத்திற்கு அனுரூபமும் அபூர்வமுமாகி அழகான ரசனையும் பொருந்தி விளங்குகின்ற மஞ்சமென்றபடி. இப்படி யிருப்பது பற்றியே— 'பர்யங்கமக்ர்யாஸ்தரணம்நாநாரத்நவிபூஷிதம்| தமபீச்சதி வைதேஹீ ப்ரதிஷ்டாபயிதும் த்வயி' (மேலான துப்பட்டி பரப்பப்பெற்று நானாரத்னங்களால் அலங்காரமும் செய்யப் பெற்று விளங்குகிற அம்மஞ்சத்தையும் உன்னிடத்தில் ஸ்தாபித்து வைக்கும்படி ஸீதை விரும்புகின்றனள்.) என்று அம்மஞ்சத்தை ஸுயஜ்ஞரிடத்தில் ஸ்தாபித்துவைக்கின்றனன். (உபவிஷ்டம்) உட்கார்ந்திருக்கின்றனன். 'ஸஹ பத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயண முபாகமத்' (நீண்டழகிய கண்களையுடைய பத்னியுடன்கூடி நாராயணனை உபாஸித்தனன்.) என்கிறபடியே பகவத் த்யானபரனு யிருப்பவனென்றபடி. (ஸ்வலங்க்ருதம்) நன்கு அலங்காரஞ் செய்துகொண்டிருப்பவன். த்யானத்திற்கு அனுகூலமாகிய அஞ்ஜலியால் அலங்கரிக்கப் பட்டவனென்றபடி. அல்லது—திவ்ய மாலையால் அலங்கரிக்கப் பட்டவன். இப்படிப்பட்ட, (தம்) அவனை. (ஸுதோதஷ்டிர்ஶ) ஸுதன் கண்டனன். உத்கர்ஷ முடையவரெல்லோரிலும் மேலான ராமனுடைய தர்சனம் தாழ்ந்தவரெல்லோரிலும் மேலான ஸுதனுக்குக் கிடைத்தது. அவனுடைய பாக்யாதிசயம் எப்படிப்பட்டதோ என்று கருத்து. பர்யங்க வித்யையிற் சொல்லுகிறபடி முக்த புருஷர்களுக்கே அனுபவிக்கத் தக்க திவ்ய வேஷத்தை ஆ! ஸுதன் அனுபவித்தானென்று ராமனது ஸௌசீல்யாதிசயம் தோற்றுகின்றது. ஸௌசீல்யமாவது—தாழ்ந்தாரோடும் ஒரு நீராகப் புரையறக் கலந்திருக்கை. 'ஸ்ரக்சந்தநவநிதா:' (மாலை, சந்தனம், பெண்டிர்) என்று சொல்லப்பட்ட போக்ய வஸ்துக்களில் முதலான திவ்யமாலாயோகம் சொல்லப்பட்டது. இனி திவ்ய சந்தனயோகத்தைச் சொல்லுகிறார்—(வராஹருயிராபேண சந்தநேந) வராஹருதிரத்துக் கொப்பான சந்தனத்தினுல். வராஹருதி

ஸுவர்ண மயமான மஞ்சத்தில் உட்கார்ந்திருந்தனன். ஸீதை பக்கத்தில் நின்று சாமரத்தை வீசிக் கொண்

ரம்—பன்றி ரக்தம். பன்றி ரக்தம் மிகவும் சிவப்பாயிருக்கு மென்று ப்ரஸித்தம். குங்குமப்பூவைச் சேர்த்துக் கலந்திருக்கையால் பன்றி ரத்தம்போன்றதென்று கருத்து. அல்லது—ஸீதையினுடைய ஹஸ்த கமலத்தினால் பூசப்பட்டதாகையால் அவளது சிறந்த ஹஸ்தத்தின் காந்தியுடன் கூடிச் சிவந்திருக்கிற தென்றபடி. (ஶுசிநா) நிர்மலமானது. ஸீதையுடைய ஹஸ்தத்தால் பரிசிக்கப் பட்டதுபற்றிப் பவித்ரமாயிருக்கவற்று. (ஶுசிநாச) நிர்மலமாயு மிருக்கிறது. இங்குச் சகாரத்தால் ஸீதையின் கையிற்படுவதால் உண்டான சைத்ய விசேஷமும் பொருந்தியதென்று குளிர்ச்சியும் கூட்டப்படுகிறது. (ஸுகந்யிநா) நல்ல வாஸனையுடையது. 'ஸர்வகந்த:' என்று ஸமஸ்தகந்தங்களும் பொருந்தியிருப்பது ஸ்ரீதேவிக்கும் ஸமானமாகையால் ஸ்ரீரூபையாகிய ஸீதாதேவியின் கரஸ்பர்சத்தாலுண்டான மிதமின்றிய வாஸனையோடு கூடியதென்றபடி. (பரார்த்யேந) ஶ்ரேஷ்டமானது. ஸீதையால் பூசப்பட்டது பற்றி ஶ்ரேஷ்டமான தென்றபடி. இப்படிப்பட்ட லக்ஷணங்கள் பொருந்திய, (சந்தநேந) சந்தனத்தினால் (அனுலிப்தம்) பிறகு பூசப்பட்டவன். அதாவது—அர்த்தச் சந்தனத்தை ராமன் ஸீதைக்குப் பூசினபின்பு ஸீதை ராமனுச்குப் பூசினதென்று ஸூசிப்பிக்கப்படுகிறது. (பரந்தபம்) பகைவரைத் தபிக்கச் செய்ய வல்லவன். இப்படிப்பட்ட தன் ஸௌந்தர்யத்தை அனுபவிக்கைக்கு விரோதியா யிருப்பவர்களைத் தொலைக்க வல்லவனென்றபடி. அப்ராக்ருத ஸ்திரீயோகத்தைச் சொல்லுகின்றார்—(பார்ஶ்வத: ஸ்திதயா) பக்கத்தில் நின்றுகொண்டிருப்பவளும். (வாலவ்யஜநஹஸ்தயா) சாமரத்தைக் கையிற்கொண்டவளுமாகிய. (சாபி) என்று நிபாதம் முன்பு சொல்லியவற்றோடு ஸமுச்சயத்தைக் காட்டுகிறது. அதாவது ராமனது மேனியில் சந்தனத்தைப் பூசியும் சாமரத்தைக் கையிற் பிடித்துக் கொண்டும் பக்கத்தில் நின்றவளென்றபடி. இப்படிப்பட்ட (ஸீதயா) ஸீதையோடு (பூய: உபேதம்) மீளவுங் கூடியிருக்கிற, அல்லது நன்கு சேர்ந்திருக்கிற. ஸீதை விநயத்துடன் பக்கத்தில் நின்றுகொண்டு சாமரத்தை வீசிக்கொண்டிருந்தனள். இது முதலிற் கொஞ்சக்கூடுகையாகின்றது. அங்ஙனம் வீசிக்கொண்டிருந்து அப்

டிருந்தனள். இங்ஙனம் அவன், பக்கத்தில் நின்றுகொண்டிருக்கிற ஸீதையோடுகூடி இருமடங்காக விளங்கிச் சித்ரா நக்ஷத்ரத்துடன் கூடிய சந்த்ரன்போல் ப்ரகாசித்துக் கொண்டிருக்கையில் ஸுமந்த்ரன் கண்டனன். [1] அந்த ஸுமந்த்ரன் வினயத்தை வெளிப்படுத்தவேண்டிய விதம் அறிந்தவன்; மேலும் அரசனைத் துதிசெய்யும் வகையெல்லாம் உணர்ந்தவன்; ஆகையால் அவன் தனது சரீர காந்தியின் மிகுதியால் ஸூர்யன்போல்

---

பொழுதுண்டான அவனது சோபா விசேஷத்தைக்கண்டு தானாகவே அவனைக் கட்டி யணைத்துக் கொண்டனள். ஆகையால் இது மீளவும் நன்கு சேர்ந்திருக்கை யாகின்றது. (ஹ்ரியஃ) என்றவிதற்கு (விராஜமானம்) என்றொருபதத்தைக் கூட்டி (ஹ்ரியோ விராஜமானம்) ஸீதையோடு கூடியிருக்கையால் மிகவும் ப்ரகாசிக்கின்றவனென்று பொருள் சிலர் கூறுகின்றனர். ஸீதா ராமர்களின் அப்பொழுதுண்டான சேர்க்கையின் அதிசயத்தை த்ருஷ்டாந்த மூலமாக விசதீகரிக்கிறார்—(சித்ரயா) சித்திரை மாதத்துப் பூர்ணிமையிலுள்ள சித்ராநக்ஷத்ரத்தோடு, (உபேதம்,) கூடின-உதித்த, (ஶஶிநம் யயா (சந்த்ரனைப் போன்றிருப்பவன். பின்னும் (சித்ரயா) என்றது சித்ரா நக்ஷத்ரத்தோடு சேர்க்கையால் சந்த்ரனுக்குண்டான அதிஶயம்போல் ஸீதாயோகத்தினல் ராமனுக்குண்டான அதிசயம் சொல்லப்பட்டது. (உபேதம்) என்கையால் உதிக்கும்பொழுது சந்த்ரன் சிவந்திருப்பதுபோல், பன்றிரத்தத்துக்கொப்பான சந்தனம் பூசிக்கொண்டமையால் ராமனுக்குண்டான சிவப்பு தோற்றுகின்றது. (ஶஶிந ) என்கையால் ஸீதை ஆலிங்கனம் பண்ணிக்கொள்ளும்பொழுது அவளது ஸ்தனங்களிலுள்ள மேலான சந்தனம் மார்பில் படியப்பெற்ற ராமன் சந்த்ரன்போல் ப்ரகாசித்தானென்று தெரிகின்றது. இப்படிப்பட்ட ராமனை (ददर्श) ஸுமந்த்ரன் கண்டனன். கண்படைத்ததற்குப் பயன் பெற்றானென்று கருத்து.

[1] இதற்கு மூலம்--

'தம் தபந்த மிவாதித்ய முபபந்நம் ஸ்வதேஜஸா।
வவந்தே வரதம் வந்தீ விநயஜ்ஞோ விநீதவத்'

இங்கு (ஆதித்யம்) ஸூர்யனை என்ற இடத்தில் ஒருமையில் கவிக்குக் கருத்தில்லை. அப்படியாயின், இது 'திவி ஸூர்யஸஹ-

ப்ரகாசித்துக் கொண்டிருப்பவனும் ஆஸ்ரிதர்களுக்கு வேண்டிய வரங்களை அளிப்பவனும் ஸீதையோடு கூடியவனுமாகிய ராமனைக்கண்டு மிக்க வினயத்துடன் ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்தனன். தசரதன் தான் ஏகாந்தத்தில் க்ரீடித்துக்கொண்டிருக்கும் பொழுதும் சயனித்துக்கொண்டிருக்கும்பொழுதும் உட்கார்ந்திருக்கும் பொழுதும் ஸுமந்த்ரனை மிகுந்த விஸ்வாஸத்துடன் அருகில் உட்காரவைத்துக் கொண்டிருப்பான்; ஆகையால் அரசனுக்கு இப்படி அந்தரங்கனுயிருப்பது பற்றி ஸுமந்த்ரன ராமனைப் பார்த்துக் கைகளைக் கூப்பிக்கொண்டு அந்தரங்கர் விசாரிப்பது போலவே

---

ரஸ்ய' என்கிற வாக்யத்திற்கு விருத்தமாகும். அல்லது—(ஆதித்யம்) என்றவிதனுல் ஸூர்ய ஸஹஸ்ரமென்கிற அபிப்ராயம் ஸித்தியாதிருந்தபோதிலும் (தப்தமாதித்யமிவ) என்கையால் ஆயிரம் ஸூர்யர்கள்போல் தேஜஸ் ஸமூஹத்துடன் ப்ரகாசிக்கிறவனென்று ஸித்திக்கின்றது. இதனுல் அபூதோபமை யேற்படுகிறதாகையால் ஒரு ஸூர்யன் ராமனுக்கு ஸிகரன்றென்பது ஸித்தமாகின்றது. (ஸ்வதேஜஸா) ஸ்வபாவிகமாகிய தனது அஸாதாரண தேஜஸ்ஸினுல்-மற்றொன்றால் கற்பிக்க முடியாததும் பிறர்க்கு ஸாதாரணமன்றியுமிருக்கிற தேஜஸ்ஸினுலென்றபடி. (தப்தம் ஆதித்யமிவ தேஜஸா உபபந்நம்) நன்குவிளங்குகிற ஆதித்யன்போல் தேஜஸ்ஸோடு கூடியவனென்று கூட்டிக்கொள்க. (இந்தீவரஸ்யாமம்) ஸ்வபாவமாகவே ஸ்யாமவர்ணமுடையவன். ஆதித்ய வர்ணமுடையவனென்று சொல்லுகையால் தீபத்தில் வர்த்தியின் நடுவில் கறுப்பான காந்தியும் சுற்றிலும் பரவுகின்ற வெளுத்த காந்திப்ரவாஹமும் போல் ராமனது திருமேனி கறுப்பாகவும் அதைச் சுற்றி வ்யாபித்திருக்கிற காந்தி வெளுப்பாகவும் விளங்குகின்ற தென்றும் தோற்றுகின்றது. (தம வைஸ்ரவணஸங்காஸம்) என்பது முதலாக (ஸ்வதேஜஸா) என்றதீருக ஸுபாஸ்ரயமான விக்ரஹ விசேஷம் சொல்லப்பட்டது. பின்னும் (ஈதர்ஸ) என்கையால் கண்ணுக்கு ஸாபல்யம் முன்பு சொல்லப்பட்டது. இங்கு (வவந்தே) என்கையால் சிரஸ்ஸுக்கு ஸாபல்யமும் ஸுமந்த்ரனுக்கு உண்டாயிற்றென்று சொல்லப்பட்டது.

'[1] விஹாரசய்யாஸனங்களில் ஸுகமா?' என்று க்ஷேமம் விசாரித்து மீளவும் அவனை நோக்கி 'ராமா! கௌஸல்யையின் வயிற்றில் பிறந்த ஸத்புத்ரனே! உன்னைப் பெற்ற கௌஸல்யை நல்ல பிள்ளையைப் பெற்றவளாயினள். உன் தந்தையாகிய தசரதனும் கைகேயி தேவியும் உன்னைப் பார்க்க விரும்புகின்றனர். அவ்விடம் போவாயாக. காலதாமதஞ் செய்யவேண்டாம்' என்றனன். புருஷர்களிற் சிறந்தவனாகிய ராமன் ஸுமந்த்ரன் அங்ஙனஞ் சொல்லக்கேட்டு, மிகுந்த ஒளி விளங்கப் பெற்று மிக்க மனக்களிப்புற்று அவனைக் கௌரவப்படுத்திப் பின்பு ஸீதையைப் பார்த்து 'தேவீ! தேவனும் தேவியும் சேர்ந்து என் விஷயமாகப் பட்டாபிஷேகத்தைக் குறித்து ஏதோ ஆலோசனைசெய்கின்றனர், இது நிச்சயம். மனமயங்கச் செய்கிற அழகிய கண்களையுடையவளே! கைகேயி எனக்கு ப்ரியத்தை விரும்புந்தன்மையள்; மேலும், மிகுந்த வல்லமை யமைந்தவள். ஆனது பற்றியே அரசன் தான் மிகவும் வயது முதிர்ந்தவனாகையால் 'பரதன் வரும்வரையில் ராமாபிஷேகத்தை நிறுத்தக் கூடாது' என்று அபிப்ராயப் படுவதை ஊஹித்துத் தெரிந்துகொண்டு எனக்காக அரசனை அவஸரப் படுத்துகின்றனள். எதற்கோ அவஸரப் படுத்துகிறாளென்று ஸந்தேஹப்படவேண்டாம். அவள் என்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவள்; மஹாராஜனை அனுவர்த்திக்குந்தன்மையள்; உலகத்தின் மேன்மையில் விருப்பமுள்ளவள்; ஆகையால் அவள் பட்டாபிஷேகமாகிற இந்த ப்ரயோஜனத்தை எனக்கு நிறைவேற்ற விரும்புகிறதாகத் தோற்றுகின்றது. மஹாராஜர் ப்ரியபார்யையாகிய கைகேயியுடன் கூடி, என் ப்ரயோஜனத்தை மிகவும் விரும்புகிற ஸுமந்த்ரனை என்னிடம் தூதனாக அனுப்

1. விஹாரம்-விளையாடல்-ஶய்யா-படுக்கை-ஆஸனம்-இருத்தல்.

பினர். இதெல்லாம் உன்னுடைய ஸௌபாக்யப் பெருக்கின் பயனே. அங்கு எப்படிப்பட்ட ஸபை சேர்ந்திருக்கின்றதோ, அப்படிப்பட்ட தூதன் வந்தனன். அவர் என் மேன்மையையே விரும்புகிறவராகையால், என் மேன்மையை விரும்பும்படியான தூதனை அனுப்பினர். ராஜா இப்பொழுதே எனக்குப் பட்டாபிஷேகஞ் செய்யக்கூடும். இது நிச்சயம். ஸந்தோஷமாயிற்று! இப்பொழுது இவ்விடமிருந்து சீக்ரமாகச் சென்று ராஜாவையும் கைகேயியையும் பார்க்கின்றேன். நான் இல்லையென்று நீ வருந்த வேண்டாம். பரிஜனங்கள் இருக்கின்றனர்; அவர்களுடன்கூட ஸுகமாயிருப்பாயாக. அவர்களுடன் மனக்கவலையுற்றிருக்க வேண்டாம்; மனக்களிப்புடன் விளையாடிக் கொண்டிருப்பாயாக' என்றனன். [1] ராமன் மனக்களிப்புறச் செய்கிற உரைகளால் இங்ஙனம் கௌரவிக்கையில், கறுத்து அழகான கண்களையுடைய ஸீதையும்

1 இதற்கு மூலம்—

'பதி ஸம்மாநிதா ஸீதா ஹர்த்தார மஸிதேக்ஷணா।
ஆத்வார மநுவவ்ராஜ மங்கலாந்யபிதத்யுஷீ',

இதற்கு விசேஷார்த்தம்—(பதிஸம்மாநிதா) பதியால் கௌரவிக்கப்பட்டவள். பதி தன் கண்டத்திலிருந்த முத்துமாலையைக் கழற்றி அவளுக்குக் கொடுத்து கௌரவித்தானென்றபடி, ராமன் பாதபல்லவங்களைத் தொட்டு நல்லவார்த்தை சொல்லப் பெற்றவளென்று பெரியோர்களின் கருத்து. ஸீதை பர்த்தாவினிடத்தில் அவ்வளவு கௌரவம் பெறுதற்கு உரியவளென்று தெரிவிக்கைக்காக ராமனைக்காட்டிலும் ஸீதைக்குள்ள வைலக்ஷண்யத்தை சொல்லுகிறார்—(ஸீதா) ஸீதையென்றால்—கலப்பையின் வழி. அதிற் பிறந்தவளாகையால் இவள் அயோனிஜையா யிருப்பவள். அதுபற்றி ராமனைக் காட்டிலும் அதிசய முடையவளாகையால் அவளிடத்தில் அவ்வளவு கௌரவம் ராமனுக்குத் தக்கதேயென்று கருத்து. (அஸிதேக்ஷணா) கறுத்த கண்களை யுடையவள். ராமன் முத்துமாலையைக் கொடுக்கையில், இவளும் கறுத்த கடாக்ஷங்களை யிடுவதால் கருநெய்

பர்த்தாவுக்கு மங்களங்கள் உண்டாகவேண்டுமென்று சிந்தித்துக் கொண்டே 'ராஜஸூய யாகத்திற் செய்ய வேண்டிய அபிஷேகத்திற்குத் தகுந்திருக்கிற உனக்கு ப்ராஹ்மதேவன் இந்த்ரனுக்குச் செய்தாற்போல், அரசன் ப்ராஹ்மணர்கள்வந்து நடத்துவிக்கிற யௌவராஜ்யாபிஷேகத்தை இப்பொழுது நடத்த உரியவனாயிருக்கின்றனன். [1] பின்பு நீ ராஜஸூய யாகத்தில் தீக்ஷைபெற்று வ்ரதத்தில் முயற்சி கொண்டு மேலான க்ருஷ்ணாஜினக்

---

தற்பூ மாலையைக் கொடுத்தாளென்றபடி. (ஹர்த்தாரம்) 'பர்த்தாவை' (ஆதிவாரம்) வாசற்படி வரையில் (அநுவவ்ராஜ) தன்னை எப்பொழுதும் மனத்திலேயே தரித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீராமபிரானைப் பிரியமுடியாமல் பட்டமஹிஷியாகிய தான் போகத்தக்க ப்ரதேசம் வரையில், அதாவது—அந்தப்புரத்தின் வாசல் வரையில் போனாளென்றபடி. (மங்கலாந்யபிதியுஷீ) மங்கலங்களைச் சிந்தித்துக்கொண்டே போயினள். ராமனது ஸௌந்தர்யத்திற்கு யாது கெடுதி உண்டாகுமோ வென்று மனக்கலக்கமுற்று மங்கலாசாஸனஞ் செய்துகொண்டு பின்றொடர்ந்து சென்றாளென்றபடி. (அபிதியுஷீ) மனத்தில் சிந்தித்துக்கொண்டே, பர்த்தாவைக் குறித்த மங்கலாசாஸனமாகையால் வ்யக்தமாகச் சொல்லாமல் மனத்தில் அநுஸந்தித்துக்கொண்டே சென்றாளென்று கருத்து.

இதற்கு மூலம்—

1 'தீக்ஷிதம் வ்ரதஸம்பந்நம் வராஜிநதரம் ஶுசிம்।
குரங்கஶ்ருங்க பாணிஞ்ச பஶ்யந்தீ த்வாம் பஜாம்யஹம்'

இதற்கு விசேஷார்த்தம்—(தீக்ஷிதம்) நவனீதாப்யஞ்ஜனஞ் செய்து கண்களில் மையிட்டுகொண்டு யஜமான வேஷத்துடனிருக்கிற. (நவனீதாப்யஞ்ஜனம் — வெண்ணெயைத் தடவிக்கொள்ளுதல்) இந்த யஜமான வேஷத்திற்கு 'யந்நவநீதேநாப்யங்க்தே ஸர்வா ஏவ தேவதா: ப்ரீணாதி யதாங்க்தே சக்ஷுரேவ ப்ராத்ருவ்யஸ்ய வ்ருங்க்தே' என்கிற ஶ்ருதி ப்ரமாணம். (வ்ரதஸம்பந்நம்) வஸிஷ்டர் ஒருநாள் உபவாஸ மிருக்க வேண்டுமென்றால்—நான் ஸுகுமாரனென்று முனி இங்ஙனம் மொழிந்தானென்று எண்ணித்து 'திஸ்ரோ

தரித்துப் பரிசுத்தமாக மான்கொம்பைக் கையிற் பிடித்துக்கொண்டிருக்கையில் உன்னை நான் கண்ணாரக்கண்டு

---

ராத்ரீர்தீக்ஷிதஸ் ஸ்யாத், ஷட் ராத்ரீர் தீக்ஷிதஸ் ஸ்யாத்' என்கிற ச்ருதியின்படி மூன்று நாள் ஆறு நாள் உபவாஸ மிருப்பவ னென்றபடி. ஆனதுபற்றியே (ஸம்பங்கம்) என்று சொல்லப்பட்டது. ஸம்பங்க மென்றால் ஸம்ருத்தி யுடையவனென்றபடி. (வ்ரதஸம்பங்கம்) வ்ரதஸம்ருத்தி யுடையவனென்கையால் இப்பொருள் கூறப்பட்டது. (வராஜிநயரம்) வஸ்த்ரத்தை உடுத்துக்கொள்வதைத் காட்டிலும் க்ருஷ்ணாஜினத்தை உடுத்துவது ஸ்ரேஷ்டமென்று சொல்லுகையால் ம்ருதுவான வஸ்த்ரத்தையும் விட்டு க்ருஷ்ணாஜினத்தை உடுத்திருப்பவனென்றபடி. (ஶுசிம்) பரிசுத்தனாயிருக்கிற. எந்த ஸ்த்ரீயையும் தொடலாகாது; தர்ம பத்நியாகையால் ஸீதையைப் பரிசித்தால் தோஷமில்லை யென்று ரிஷி மொழிந்தாராயின், ஸீதையினது வஸ்த்ரத்தின் தலைப்புப் படினும் 'கூடுமோ கூடாதோ, இதனால் என்ன அசுத்தி நேருமோ' என்று சங்கித்து ஸ்நானஞ்செய்வான். இனி மற்றவற்றைத் தொட்டால் சொல்லவேண்டுமோ வென்று கருத்து. (குரங்கஶ்ருங்கபாணிம்) மான் கொம்பைக் கையிற் பிடித்துக் கொண்டிருப்பவன். கண்டூயனத்திற்காக மான்கொம்பைக் கையில் தரித்திருப்பவனென்றபடி. கண்டூயனம்—தினவு சொரிந்து கொள்ளல். 'ஏகவஸ்த்ர யரோஸன்வீ' (ஒரு வஸ்த்ரம் உடுத்து வில்லைப் பிடித்து) என்று சொல்லப்பட்ட அப்பொழுதுள்ள வேஷம் அழகா யிருப்பினும் அதைக் காட்டிலும் தினவு சொரிந்து கொள்வதற்காக மான் கொம்பைப் பிடித்துக் கொண்டிருந்த வேஷம் மிகவும் அழகாயிருந்ததென்று அதின் அதிசயந் தோற்றுகின்றது. இப்படிப்பட்ட (த்வாம்) உன்னை (பஶ்யந்தீ) பார்க்க விரும்பி. பார்க்கும் பொருட்டென்று பொருள். தர்சனத்தின் பொருட்டன்றோ பகவானைப் பஜிப்பது. அப்படியே ஸீதையும் தர்சனத்தை விரும்பினவளாகி, (பஜாமி) பஜிக்கிறேனென்றனள். வரப்போகிற ஒரு பலத்தை விரும்பும்பொழுது அதற்கு அவாந்தரமான பலத்தை விரும்பாதொழியினும், தப்பாமல் விரும்பினதேயாகும். ஆகையால் ஸீதை ராமாபிஷேகம் நடக்கவேண்டுமென்று விரும்பும்பொழுது, அவ்வபிஷேகத்திற்கு இடையூறு உண்டாகாமை யென்னும் அவாந்தர பலமும் விரும்பப் பட்டதே.

பணிவேனுக. உன்னைக் கிழ்த்திசையில் தேவேந்த்ரனும், தென்திசையில் யமனும், மேற்குத்திசையில் வருணனும், வடதிசையில் குபேரனும் பாதுகாப்பார்களாக' என்று மங்களமுண்டாகும்படிக்கு ப்ரார்த்தித்துக்கொண்டே அவனை வாசற்படிவரையிலும் பின்றொடர்ந்து சென்றனள். பின்பு பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய மங்களாசாரங்களைச் செய்துகொண்டு விளங்குகின்ற ஸ்ரீராமன் ஸீதையிடம் அனுமதி பெற்றுக்கொண்டு ஸுமந்த்ரனுடன் கூடி, பர்வதகுஹையில் படுத்துக்கொண்டிருக்கிற ஸிம்ஹம் அப்பர்வதத்தினின்றும் வெளிப்புறப்படுவது போல் தன் க்ருஹத்தினின்றும் புறப்பட்டு, வாசலில் வணக்கத்துடன் கைகளைக்கூப்பிக்கொண்டிருக்கிற லக்ஷ்மணனைக் கண்டனன். பிறகு புருஷ சிகாமணியாகிய அந்த ராஜகுமாரன், நடுக்கட்டிலிருந்த தனது நண்பர்களோடு கலந்து பட்டாபிஷேகத்தின் பொருட்டு வந்திருக்கிற ஜனங்களெல்லோரையுங் கண்டு அவர்களது அருகிற் சென்று இனிய உரைகளால் அவர்களை ஆனந்தப்படுத்தி, பிறகு அக்னியைப்போல் விளங்குவதும் புலித்தோல் போர்க்கப் பெற்றதும் வெள்ளியால் செய்யப்பட்டதுமாகிய மேலான ரதத்தின்மேல் ஏறினன். அந்த ரதம் மேகம்போல் கம்பீரமாக ஒலித்துக்கொண்டு நெருக்கமில்லாமல் வேண்டிய விசாலமுள்ளதாகி ரத்னங்

---

யாகுமாகையால், அதை ஸ்பஷ்டமாக ப்ரார்த்திக்கவில்லை. எப்படியென்னில்-ஸாவித்ரி யமனுக்குத் தன் பர்த்தாவைக் காட்டி இவனால் எனக்குப் பல புத்ரர்கள் பிறக்கவேண்டுமென்று வேண்டும்பொழுது, அவன் பூர்ணயுஸ்ஸாயிருக்கவேண்டு மென்னும் அவாந்தர பலத்தை வேண்டா தொழியினும் வேண்டினதாகவே யாயிற்று. அப்படியே இங்கு மென்றுணர்க.

களாலும் ஸ்வர்ணங்களாலும் அலங்காரஞ் செய்யப் பெற்று மிகவும் அழகாய் விளங்கிற்று. பின்னும் அது மிருந்த காந்தியுடன் ப்ரகாசித்துக்கொண்டிருப்பது பற்றிப் பார்ப்போர் கண்களைப் பிடுங்குவது போன்ற தாகி ஸூர்யன்போல் ஜ்வலித்துக்கொண்டிருந்தது. யானைக்குட்டிபோல் புலப்படுகின்ற குதிரைகள் கட்டப் பெற்றதும் வேகமாய்ச் செல்லுவதுமாகிய அந்த ரதத் தின்மீது, ஆயிரங்கண்ணனாகிய தேவேந்த்ரன் குதிரைக ளோடு கூடிய தனது ரதத்தின்மீது ஏறுவதுபோல், ராமன் ஏறிக்கொண்டு மிக்க ஒளி விளங்கப்பெற்று வேக மாகச் சென்றனன். தனது காந்தியால் ஜ்வலித்துக் கொண்டிருக்கிற அந்த ராஜகுமாரன், ஆகாயத்தில் மிருந்த சப்தத்தோடு கூடிய மேகம்போல் தனது ரதத் தின் சப்தத்தினால் திசைகளை யெல்லாம் ஒலிக்கும்படி செய்துகொண்டு [1] மஹேந்த்ர பர்வதத்தினின்று சந்த் ரன் வெளிப்புறப்படுவதுபோல் க்ருஹத்தினின்று புறப் பட்டனன். அவனது தம்பியாகிய லக்ஷ்மணன் ஒரு கையில் குடையையும் மற்றொரு கையில் சாமரத்தையும் தரித்து ரதத்தின் பின்புறத்தில் நின்றுகொண்டு தமைய னுக்கு வெயில் முதலியவை படாதபடி பாதுகாத்துவந்த னன். பின்பு ராமன் புறப்பட்டுக்கொண்டிருக்கையில் ஜனங்களெல்லோரும் கும்பலாகக் கலகலவென்று நாற் புறத்திலும் சப்தஞ் செய்தனர். பிறகு அச்சமயத்தில், சிறந்த குதிரைகளின்மேலும் மலைபோன்ற முக்யமான யானைகளின்மேலும் ஏறிக்கொண்டு வேலைக்காரர்கள் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் ராமனைப் பின் றொடர்ந்து போயினர். அந்த ராஜகுமாரனுக்கு முன்பு, கவசந்தரித்துச் சந்தனமும் அகிலும் பூசிக்கொண்டு, கத்தியையும் வில்லையும் தரித்து, அவனுடைய மங்க

1 இங்குமஹேந்த்ரமென்பது உதய பர்வதமென்று கோவிந்தராஜர்.

னத்தை விரும்புந்தன்மையராகிய சூரர்கள் பலரும் நடந்தனர். பின்பு அம்மன்னவர்மைந்தன் புறப்பட்டுப் போகும்பொழுது மார்க்கத்தில் வாத்யத்வனிகளும் ஸ்துதி பாடகர்களது ஸ்தோத்ர சப்தங்களும் சூரர்களுடைய ஸிம்ஹநாதங்களும் செவிப்பட்டன. அப்பொழுது ஸ்த்ரீகள் எல்லோரும் மேலான ஆடைகளை உடுத்துச் சிறந்த ஆபரணங்களை அணிந்து நன்கு அலங்காரஞ் செய்து கொண்டு உப்பரிகைகளின் மீது ஏறிச் சாளரங்களினருகில் வந்து நின்றுகொண்டு புஷ்பவர்ஷங்களை இறைக்கையில், பகைவரை அடக்கும் பராக்ரம சாலியாகிய அந்த வீரன் அவைகளை அங்கீகரித்துக்கொண்டு சென்றனன். பிறகு தமது அவயவங்களெல்லாவற்றிலும் ஓர் மாசு மறுவின்றி மிகவுமழகுடையவர்களாகிய மடந்தையர் மணிகளில் சிலர் உப்பரிகையின்மீதேறி யிருந்தும், சிலர் பூமியிலிருந்தும், ராமனுக்கு மனக்களிப்பைச் செய்ய விரும்பி அவனைப் பார்த்து 'ராமா! நீ ஸஹஜமாகவே தாய்க்கு ஸந்தோஷத்தைக்கொடுக்குந் திறமுடையவன். அப்படிப்பட்ட உன்னை இப்பொழுது உன் தாயாகிய கௌஸல்யைகண்டு மேன்மேலும் ஆனந்தப்படுவதற்கு ஸந்தேஹம் உண்டோ? நீ போகிற போக்கு ஸபலமாகப் பெற்றுப் பிறகு தந்தையினது ராஜ்யத்தில் வீற்றிருக்கக் கண்டு கௌஸல்யை பேரானந்தம் பெறப்போகின்றனள். இது நிச்சயம்' என்று மேலான மொழிகளை மொழிந்து [1] வந்தனஞ் செய்தனர். அப்பெண்மணிகள் யாவரும், ராமனது மனத்திற்கு மிகவும் இனியளாகிய ஸீதாதேவியை மடந்தையரெல்லோரிலும் மிக்க மேலாக நினைத்தனர். ஆனது பற்றியே அவர்கள் அவளைப் பற்றி 'ரோஹிணி சந்த்ரனுடன் சேருவதுபோல் அப்பெண் மணி ராமனோடு சேர்ந்தனள். ஆகையால் பூர்வஜன்

1 வந்தனம்—ஸ்தோத்ரம்.

மத்தில் இம்மாதரசி பெருப்பெருத்த தவம் முறையே செய்திருக்கவேண்டும். இதற்குச் சந்தேகமில்லை' என்று புகழ்ந்தனர். இங்ஙனம் உப்பரிகையின்மீதேறி யிருந்த அந்தப் பெண்டிர்கள் மொழிந்த இனிய உரைகளை, ராமன் ராஜமார்க்கத்தில் போய்க்கொண்டே செவியுற்றனன். ராமன் நாட்டுப்புறத்திலிருந்து வந்த ஜனங்களும் பட்டணத்துஜனங்களும் தன்னைக்குறித்து மிகுந்த ஸந்தோஷத்துடன் 'இந்த ராமன் ராஜானுக்ரஹத்தினால் இப்பொழுது விஸ்தாரமுள்ள ராஜ்ய லக்ஷ்மியைப் பெறுவதற்குப் போகின்றனன். இப்படிப்பட்ட ராமன் நமக்குப் பரிபாலனஞ் செய்பவனாக நேரக்கூடுமாகையால் நமது விருப்பமெல்லாம் இப்பொழுது நிறைவேறக்கூடும். இவன் வெகுகாலமாக ஜனங்கள் விரும்பி யிருந்தபடி இப்பொழுது இந்த ராஜ்யத்தை யெல்லாம் ஆளப்பெறுவது இந்த ஜனங்களது பாக்யமே. ஏனென்னில்-இவன் அரசனாயிருப்பானாயின், ஒருவனுக்கும் ஒரு காலத்திலும் ப்ரியம் நேராமற்போகையாவது, அப்ரியம் நேருகையாவது ஸம்பவிக்காது' என்று இங்ஙனம் மொழிகிற பற்பல இனிய உரைகளைச் செவியுற்றனன். இங்ஙனம் இருக்கையில், அந்த ராஜகுமாரன், குதிரைகள் கனைத்துக்கொண்டும், யானைகள் ஙீங்காரஞ் செய்துகொண்டும் பின்றொடர்ந்துவர, ஸ்துதி பாடகர்களும் ஸூதமாகதர்களும் மேலான வாத்யக்காரர்களும் 'ஜயவிஜயீபவ' என்று புகழ்ந்துகொண்டு முன்னே போகையில், மிகுந்த மிடுக்குடன் குபேரன்போல் ப்ரகாசித்துக்கொண்டு சென்றனன். ஆண்யானைகளும் பெண்யானைகளும் குதிரைகளும் தேர்களும் ஆங்காங்கு நிறைந்து நெக்கரித்துக்கொண்டிருக்கையில், நாற்சந்திவீதிகளில் முழுவதும் ப்ரஜைகளெல்லோரும் கும்பல்கூடி நிரம்பி யிருக்கையில்

அலங்காரமா யிருக்கும் பொருட்டுக் குவியல் குவியலாக ரத்னங்கள் இழைக்கப்பெற்று விற்பனைக்காகப் பரப்பப் பட்டிருக்கிற பலவகைச் சரக்குகள் நிரம்பி அழகான ராஜமார்க்கத்தை ராமன் பார்த்துக்கொண்டு சென்றனன். பதினாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் தசரதனிடம் வருதல்.

அந்த ராமன் பட்டாபிஷேக சோபை நன்கு விளங்கப்பெற்றுத் தனது நண்பர்கள் எல்லோரும் ஆனந்திக்கும்படி ரதத்தில் ஏறிக்கொண்டு, பதாகைகளும் த்வஜங்களும் அவ்வவ்விடங்களில் கட்டப்பெற்று மேலான அகரு தூபவாஸனைகள் எங்கும் நிறைந்து பலவகை ஜனங்களும் நிறைந்திருக்கிற அயோத்யாபுரத்தைக் கண்டனன். அதில் மேகங்களை நிகர்த்த வெளுத்துள்ள மாளிகைகள் நெருங்கப்பெற்று அகரு தூபமிடப்பெற்று அழகான ராஜவீதியின் நடுவே சென்றனன். பின்னும், அந்த ராஜகுமாரன் அந்தராஜவீதியில் ராசிராசியாக மேலான சந்தனக் கட்டைகளும், அவ்வித அகிற் கட்டைகளும், சிறந்த மற்ற பரிமள த்ரவ்யங்களும், குவியல் குவியலாக வைத்திருக்கிற மெல்லிய வெண்பட்டு வஸ்த்ரங்களும், பூச்சிப்பட்டு வஸ்த்ரங்களும், தொளைக்கப்படாத புதிய முத்துக்களும், இடைவிட்டு வேறுவேறாக வைக்கப்பட்ட ஸ்படிகராசிகளும், மேலும் பலவித கடைச் சரக்குகளும், நானாவகைப் பண்யாரங்களும் நெருங்கி ஸ்வர்க்கத்தினுள்ள தேவமார்க்கம்போல் ப்ரகாசித்துக் கொண்டிருக்கக் கண்டனன். அந்த ராஜகுமாரன், தயிரும் அக்ஷதைகளும் ஹவிஸ்ஸும் பொரியும் சந்தன அகரு தூபங்களும்

மணங்கமழ்கின்ற பலவகைப் புஷ்பமாலைகளும் நானாவித வாஸனைகளும் நிரம்பப்பெற்று எப்பொழுதும் அழகாயிருக்கின்ற நாற்சந்தி வீதிகளோடு கூடிய அந்த ராஜமார்க்கத்தின் வழியாக நண்பர்கள் செய்யும் பலவித ஆசிர்வாதங்களைச் செவியேற்றுக் கொண்டும், எல்லோரையும் அவரவர்களுக்கு உரியபடி கௌரவப்படுத்திக் கொண்டும் சென்றனன். ராமனது நண்பர்கள் எல்லோரும் அவனைக் குறித்து 'ராமா! நீ இப்பொழுது பட்டாபிஷேகஞ் செய்யப்பெற்று, உனது பாட்டன்மார்களும் முப்பாட்டன்மார்களும் ஆசரித்து வந்த மார்க்கத்தையே அனுஸரித்து எங்களைப் பரிபாலித்து வருவாயாக. நாங்கள், ராமன் ராஜாவாயிருக்கப்பெறில், இப்பொழுது இவனது தந்தையும் பூர்வர்களான இவனது பாட்டன்மார்களும் மிகுந்த ப்ரீதியுடன் நமக்கு எவ்வளவு ஸுகத்தைக் கொடுத்து வந்தனர்களோ, அதைக் காட்டிலும் மேலானஸுகத்துடன் வஸித்திருக்கநேரும். [1] இப்பொழுது எங்களுக்குச் சாப்பாடு எதுக்காக? வேண்டியதில்லை. சாப்பிட்டது போதும். போகங்களும் மற்றும் ஐபஹோமாதி புருஷார்த்தங்களும் இப்பொழுது

---

1 இதற்கு மூலம்.—

'அலமத்ய ஹி புக்தேந பரமார்த்தைரலஞ்ச ந:'

இதற்கு விசேஷார்த்தம்—(அத்ய புக்தேந) இப்பொழுது சாப்பிடுவதனால். இப்பொழுது அனுபவிக்கிற ஐஹிக விஷய போகங்களால். (அலம்) இதற்கு (ஸாமர்த்யம்) என்று ஒரு பதத்தைக் கூட்டிக் கொள்ளவேண்டும். (அலம்) என்றவிது நிஷேதத்தைச் சொல்லுகிறது. (அலம் ஸாமர்த்யம்) ஸாதிக்க வேண்டிய தொன்றுமில்லையென்று பொருள். ராமாபிஷேகத்தைக் கண்டு களிக்கப் பெறவோமாயின், நமது பசியெல்லாம் தீருமாகையால், நாம் இப்பொழுது சாப்பிடவேண்டுவது எதுக்கு? ராமன் அபிஷேகங் கொண்டருளி வீதியார வரக் காண்போமாயின், நாம் ஸகல ஆனந்தங்களையும் அனுப

செய்தவையே போதும். ராமன் ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் நடக்கப்பெற்று மீளவும் தன்மாளிகைக்குப் போகும்பொழுது அவனுடைய ஸௌந்தர்யத்தைப் பார்க்க நேருமாயின், அதுவே நமக்குப் போதுமானது. ஏனென்னில்—ராமன் மிகுந்த ஒளியுடன் ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் பெற்றிருப்பது நமக்கு எப்படி மிகவும் ப்ரியமாயிருக்குமோ, அப்படியே அதையொழிந்த மற்றையாதும் அவ்வளவு ப்ரியமா யிருக்கநேராது' என்று தமக்குள் தாம் சுபகரமாகத் தன்னைப் புகழ்ந்து சொல்லிக்கொள்கிற வார்த்தைகளையும் மற்றும் பிறருடைய வசனங்களையும் கேட்டுக்கொண்டு கம்பீர ஸ்வபாவனாகையால் உதாஸீனன்போல் யாதொருஸந்தோஷமும் இன்றி நிர்விகாரனாகவே ராஜ மார்க்கத்தில் போயினன். புருஷர்களில் ஒருவனாயினும், ராமன் கண்பார்வையைக் கடந்து வெகுதூரம் போயினபின்பும், அவனது [1]மோஹனாகாரத்தில் படிந்திருக்கிற மனத்தையாவது கண்களையாவது திருப்பிக்கொள்ள வல்லவனாகவில்லை. இனி அருகிலிருக்கும்பொழுது அவர்கள் எப்படி இருப்பார்களென்பது சொல்லவேண்டுமோ? புருஷர்கதியே இப்படியாயின், இனிப் பெண்களின் ப்ரேமாதிசயத்தை எவ்வி

---

விப்போமாகையால் நமக்கு மற்றை ஐஹிகவிஷய போகங்களால் என்ன ப்ரயோஜனமென்றபடி. (பரமார்த்தை:) மோக்ஷபர்யந்தமான புருஷார்த்தங்களாலும். அல்லது—பரமபுருஷார்த்த ஸாதனங்களாகிய ஜபஹோமத்யாநாதிகளாலும் (அலம் ஸாத்யம்) ஸாதிக்க வேண்டுவதொன்றுமில்லை. அவைகளாலும் நமக்கு ப்ரயோஜன மில்லையென்றபடி. அவைகளால் ஸாதிக்கவேண்டிய பரமபுருஷார்த்தமாகிய ராமாபிஷேகத்தை நாம் இன்று காணப்பெறவோமாயின், இனி அவைகளால் நமக்கு என்ன ப்ரயோஜனமென்று கருத்து.

1 மோஹனாகாரம்—அழகின் மிகுதியால் மதிமயக்கச் செய்யும் வடிவு.

விதம் உரைக்கலாகும்? [1] எவன் ராமனைப் பாராதிருக்கின்றானோ, ராமனும் எவனைப் பாராதிருக்கின்றானோ,

---

1 இதற்கு மூலம்—

'யஶ்ச ராமம் நபஶ்யேத்து யஞ்ச ராமோ நபஶ்யதி।

நிந்திதஸ் ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே'

இதற்கு விசேஷார்த்தம்—(யஃ) எவன். (ராமஞ்ச) ராமனை, பார்க்கும்பொழுதே தனது ஸௌந்தர்யாதிசயமென்னும் பரிபூர்ணமான அம்ருத ரஸப்ரவாஹத்தில் மூழ்கப்படுத்துபவன்போலிருப்பவனை யென்றபடி. (யஶ்ச) எவனாயினும். எவ்வளவு விலக்ஷணனாயிருப்பினுமென்றபடி. (நபஶ்யேத்) பாராதிருப்பானோ. ஸ்தோத்ரஞ் செய்வது ஸல்லாபமாடுவது ஸத்காரஞ் செய்வது முதலிய கார்யங்களைச் செய்யாமற் போயினும், கண்ணில்லாத அசேதனங்களைக் காட்டிலும் தான் வேறுபட்டவனென்கைக்கு ஸூசகமாகக் கண்ணாரப் பார்க்கவாயினும் பாரானோ என்றபடி. ஆனதுபற்றியே (யம்) எவனை, (ராமோபி ந பஶ்யதி) ராமனும் கடாக்ஷிக்கவில்லையோ. ஒருவன் அபிமுகனாயிருக்கிலன்றோ பகவான் கடாக்ஷிப்பது? ஆகையால் எவன் ராமனைக் காணவில்லையோ, அப்படிப்பட்டவனை ராமனும் கடாக்ஷிக்கமாட்டானென்றபடி. இங்கு 'யஶ்ச ராமம் நபஶ்யேத்' (எவன் ராமனைப் பாராதிருக்கிறானோ)என்கையால்—ராமனது விக்ரஹ ஸௌந்தர்யத்தால் இழுக்கப்பட்டு எல்லோரும் ராமனையே காண்பார்களென்றும், 'யஞ்ச ராமோ ந பஶ்யதி' (எவனை ராமன் கடாக்ஷிக்கமாட்டானோ) என்கையால்—ராமன் ஸமஸ்த லோகங்களுக்கும் ப்ரியனாகவே புலப்பட்டுக்கொண்டிருப்பவனாகையால், எவனும் அவனைப் பாராதிருக்கநேராது; அவனைப் பார்த்தானாகில் அவனால் கடாக்ஷிக்கப்படாதிருக்கமாட்டானென்றும் ஸித்திக்கின்றது. ஆகையால் அப்படிப்பட்ட ராமனைப் பாராதவனும், அப்படிப்பட்ட ராமனால் கடாக்ஷிக்கப் பெறாதவனும் (லோகே) உலகத்தில் (நிந்திதோ வஸேத்) காலதத்வமுள்ளதனையும் நிந்தனைக்கிடமாகவே யிருப்பான். பாராமையாலுண்டான பாபமே இப்படி நிந்தனைக்கிடமாகயிருக்குமென்று கருத்து. (லோகே நிந்திதஃ) அவனை நிந்திப்பதற்குத் தகாதவன் ஒருவனும் உலகத்தில் இல்லையென்றபடி. பரஸ்த்ரீகமனம் முதலிய பாபத்தில் ஆழ்ந்தவனைப்போல் எல்லோரும் நிந்திப்பார்களென்று கருத்து. (ஏநம்) இவனை. இப்படிப்பட்ட பாபிஷ்டனை. (ஸ்வாத்மாபி) தன்

அவன் உலகமெங்கும் நிந்தனைக்கிடமா யிருப்பான். உலகமே யன்று; அவன் தானும் இவனை நிந்தித்துக் கொள்வான் அந்த ராமன் தர்மஸ்வபாவனுகையால் நான்கு வர்ணத்தவர்களிடத்திலும் அவரவர்களது வயதுக்குத் தகுந்தபடி தயை செய்துகொண்டிருப்பான்; ஆகையால்

---

மனஸ்ஸூம். அல்லது - தனது ஆத்மாவும். தானே யென்றபடி. (விகர்ஹதே) விசேஷித்து நிந்திக்கின்றது. (நிந்திக்கிருன்.) லோகத்தைக் காட்டிலும் மேலாகவே நிந்திக்கின்றது. (கிருன்.) தன்னை எவர் நிந்தித்தபோதிலும் நிந்திக்காமல் தன்னிடத்தில் ப்ரீதியையே பாராட்டிக்கொண்டிருக்கிற மனமுங்கூட அவனை லோகத்தைக்காட்டிலும் அதிகமாகவே நிந்திக்கின்றதென்று கருத்து. இங்ஙனம் கோவிந்தராஜர் கூறுவர்.

(ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே) தனது ஆத்மாவும் இவனை மிகவும் நிந்திக்கின்றது. ஒருகாலத்திலும் ராமனுல் பார்க்கப்பெருதவனையும், ராமன் ஸமீபத்திலிருக்கும்பொழுது கண்களாலும், ஸமீபித்திராதபொழுது மனத்தினுலும் பாராதவனையும் உலகம் மாத்ரமே நிந்திக்குமென்பதில்லை. அவன் தன்னைத் தானுகவும் 'சீ! நான் எவ்வளவு தௌர்ப்பாக்யசாலியோ' என்று நிந்தித்துக் கொள்வானென்றுபொருள். அல்லது எவன் ராமனைத் தானிருக்குமிடத்திற்கு வரும்பொழுதும் பாரானே, ஆனதுபற்றியே எவனை ராமன் தானிருக்குமிடத்திற்கு வந்தபொழுதும் பாரானே, அப்படிப்பட்டவனை; ஸாக்ஷாத் பரப்ரஹ்மமேயாகிய ராமமூர்த்தியை அனுபவிக்கும்படியான அத்ருஷ்டமில்லாதவனுகையால் இங்கும் அங்கும் உள்ள ப்ராணிகள் எல்லோரும் நிந்திப்பார்களென்று கருத்து. ப்ரயாஸமின்றி, ராமரூபனுகிய அந்தப் பகவானை ப்ரத்யக்ஷமாகச் செய்த மாத்ரத்தினுல் மோக்ஷத்தை ஸம்பாதிக்கக்கூடியதாயிருக்கையில், இப்படிப்பட்ட அத்ருஷ்டத்திற்கு விலக்காயிருப்பவன் எப்பொழுதும் ஸம்ஸாரத்தைக் கடக்கமாட்டானென்றபடி. ஆனதுபற்றியே-(ஸ்வாத்மா) அந்தர்யாமியாகிய பகவான், 'இவன் பாபிஷ்டன்; ராமதர்சனரூப முக்தியைக் கைப்பற்றி ஸம்ஸாரத்தைக் கடக்கப் பெருதிருக்கின்ருன்' னென்று மிகவும் நிந்திக்கின்றனன். என்று பொருள். இங்ஙனம் மஹேஸ்வரதீர்த்தர் சொல்லுவர்.

அவர்கள் எல்லோரும் அவனை அநுஸரித்தே இருப்பார்கள். அந்த ராஜ குமாரன், நாற்சந்திவீதிகளிலும்தேவாலயங்களிலும் பௌத்தாலய வ்ருக்ஷங்களிலும் ஸபைமுதலியவற்றிலும் ப்ரதக்ஷிணமாகச் சென்று அவைகளைக் கடந்து ராஜக்ருஹத்தைக் கிட்டி அதில் தந்தை வஸித்திருக்கும் இடத்திற்குள் ப்ரவேசித்தனன். அம்மாளிகையில் பற்பல உப்பரிகைகளின் சிகரங்கள் மங்களகரங்களாகி மேகக்குழாங்கள்போல் விளங்கிக் கைலாஸ சிகரங்கள்போல்வெளுத்து மிகவும் உயர்வுற்று மேற்கிளம்பி ஆகாயத்தை அளாவி வெளுத்த விமானங்கள்போல் புலப்பட்டுக்கொண்டிருந்தன. மேலும், அதில் பலவகை ரத்னங்கள் இழைக்கப்பெற்று [1] வர்த்தமான மென்னும் பேர்கொண்ட கட்டட விசேஷங்கள் பொருந்திய [2]மந்திரங்களும் பற்பல விளங்கலுற்றிருந்தன. இப்பூமண்டலம் முழுவதிலும் அதற்கு ஒப்பானமாளிகை மற்றொன்று கிடையாது. இங்ஙனம் தேவேந்த்ரனுடைய மாளிகைபோல் விளக்கமுற்றுச் சிறந்திருக்கிற தமப்பனது வாஸக்ருஹத்தில், அந்த ராஜகுமாரன் மேனியெங்கும் ஒளி விளங்கப்பெற்று மிக்க அழகுடன் ப்ரவேசித்தனன். அப்புருஷசிரோமணி, வில்லாளிகள் காத்துக்கொண்டிருக்கிற மூன்று கட்டுக்களைச் சிறந்த குதிரைகள் பூட்டப்பெற்றதேரி லேறிக்கொண்டே கடந்து சென்று, பிறகு தேரினின்றும் இழிந்து அப்பால் இரண்டு கட்டுக்களைப் பாதசாரியாகவே தாண்டி இவ்வாறு எல்லாக் கட்டுக்களையுங் கடந்து தன் பின்னோடு வந்த ஜனங்களைத் திருப்பியனுப்பி அந்தப்புரத்திற்குப் போயினன். பிறகு அந்த ராஜ குமாரன் தமப்பனிடம் செல்லுகையில், அப்பொழுது அவன்பின்னே வந்த ஜனங்க ளெல்லோரும் ஸந்தோஷமுற்று ஸமுத்ரம் சந்த்ரோதயத்தை எதிர்

---

1 வர்த்தமானம்—மேன்மேலும் வளர்ந்துபோகும்படி மிக்க உயரமாகக் கட்ட ஆரம்பித்த கட்டடம்.

2 மந்திரம்—மாளிகை.

பார்ப்பதுபோல், அந்த ராமன் திரும்பிவருவதை எதிர் பார்த்துக் கொண்டிருந்தனர். பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

கைகேயி ராமனுக்குத் தான் வரங்கேட்ட வ்ருத்தாந்தத்தைக் கூறுதல்.

அந்த ராமன், முழுவதும் ஒளியின்றி உலர்கின்ற முகத்துடன் மிகவும் தீனனாகி மேலான மஞ்சத்தில் உட்கார்ந்து கைகேயியோடிருக்கின்ற தந்தையைப் பார்த்து மிக்க மனவூக்கங்கொண்டு வணக்கத்துடன் முன்பு தமப்பனது பாதங்களில் நமஸ்காரஞ் செய்து பிறகு கைகேயியின் சரணங்களில் விழுந்து வந்தனஞ் செய்தனன். அப்பொழுது மன்னவன் 'ராமா' என்றுரைத்து, உடனே கண்களில் கண்ணீர் வந்து நிரம்பித் தளும்பவும் துக்கம் மிதமின்றி மேலெழவும் பெற்று, ராமனைப் பார்க்கவாவது பேசவாவது வல்லமையற்றிருந்தனன். அம்மன்னவனுடைய உருவம் இதுவரையில் எப்பொழுதும் அவ்வாறு புலப்பட்டதேயில்லை; அப்பொழுதோ என்றால் 'இவனுக்கு என்ன ஆபத்து வந்ததோ' என்று பார்க்கும்பொழுதே பெரிய பயத்தை விளைத்துக்கொண்டிருந்தது. அத்தகைய மன்னவனைக்கண்டு, எப்படிப் பட்ட ஸங்கடங்களுக்குங் கலங்காத ராமனுங்கூட, தன்னைக்குறித்து அவன் துக்கமுற்றிருப்பானோ என்னவோவென்று சங்கித்து, ஸர்ப்பத்தைக் காலால் மிதித்துப் பயமுறுவதுபோல் மிக்க பயமுற்று நின்றனன். மஹாராஜன் கலக்கமுறுதிருக்குந் தன்மையனாயினும் கலக்கமுற்று இந்த்ரியங்கள் களிப்பின்றி மழுங்கவும் துக்கமும் ஸந்தாபமும் மிதமின்றி மேலெழவும் பெற்று வருந்திப் பெருமூச்சு விட்டுக்கொண்டு மனங்கலங்கி மயங்கி அலைகளை வீசுகின்ற ஸமுத்ரம் போலவும், மஹாதேஜஸ்வியாயினும் ராஹுக்ரஸ்தனாகி ஒளிமழுங்கினஸூர்யன்போலவும், அதிநிர்மல ஸ்வபாவனாயினும் அபத்தம் மொழிந்த

மஹர்ஷி போலவும், மனக்களிப்பின்றிப் புலப்படக்கண்டு ராமனுக்கு மிகவும் பயமுண்டாயிற்று. அவன், தமப்பனுருக்கு,இங்ஙனம் நேரிடுமென்று மனத்திலில் நினைப்பதற்கும் சக்யமல்லாத அப்படிப்பட்ட துக்கம் உண்டானதை விசாரித்துப் பூர்ணிமையினன்று கலக்கமுற்ற ஸமுத்ரம் போல் குழப்பமுற்றனன்; மற்றும், தந்தைக்கு ஹிதஞ் செய்வதிற்றுனே மிக்க மனவூக்க முடையவனுகையால், அப்பொழுது அம்மன்னவனைக் குறித்துத் தனக்குள் ‘இதுவென்! இப்பொழுது மாத்ரம் அரசனுக்கு என்னைப்பார்த்தும் ஸந்தோஷம் உண்டாகாதிருக்கின்றதே! மற்றைப் பொழுதெல்லாம் தந்தை கோபமுற்றிருப்பாராயினும் என்னைப் பார்த்த மாத்ரத்திலேயே மனத் தெளிவு பெற்றிருப்பார். அப்படிப்பட்ட அவருக்கு இப்பொழுது என்னைப் பார்த்தும் மனம் ஸந்தோஷப் படாதிருப்பதேனே’ என்று சிந்தித்தனன். அந்த ராஜ குமாரன் மனத்திற் களிப்பின்றி முகத்திலும் ஒளி மாறப் பெற்று மனவருத்தத்தினல் பீடிக்கப்பட்டவனுகிக் கைகேயிக்கு நமஸ்காரஞ் செய்து, பிறகு அவளைப் பார்த்து ‘நான் மனநிலைமை தப்பி அபராதம் ஏதுஞ் செய்யவில்லையே! ஆயினும் என் தந்தை ஏன் கோபித்துக்கொண்டிருக்கிருரோ, அதற்குக் காரணத்தை எனக்குத் தெரியப்படுத்துவாயாக. நீயும் இவரது மனக் கலகத்தைப் போக்குவாயாக. இவர் எப்பொழுதும் என்னிடத்தில் மிகுந்த வாத்ஸல்யத்தோடிருப்பவர்; அப்படிப்பட்ட இவர் இப்பொழுது மனக்கலக்கமுற்றுச் சிறிதுந் தெளிவின்றி முகம் வெலவெலத்து வருந்தி என்னிடம் பேசாதிருக்கின்றுர்; இது ஏனே? இவருக்குச் சரீரவ்யாதியாவது மனேவ்யாதியாவது ஒன்றும் இல்லையன்று? மனிதர்களுக்கு எப்பொழுதும் ஸுகமே நேரிடுவது கஷ்டமன்று? ஆகையால்

ஸம்சயப்படுகின்றேன். பரதன் பார்வைக்கு மிகவும் இனியனுகப் புலப்படுவான்; அக்குமாரனுக்கு அசுபம் ஒன்றும் இல்லையன்ரு? மஹாபலனுகிய சத்ருக்னனுக்காவது, எனது தாய்மார்களில் எவருக்காவது அமங்களம் ஒன்றும் உண்டாக நேராதன்ரு? எனது தந்தையாகிய மஹாராஜருக்கு ஸந்தோஷத்தைச் செய்யாமலாவது, அவர் சொன்ன கார்யத்தைச் செய்யாமலாவது ஒரு முஹூர்த்த காலமும் பிழைத்திருக்கப் பொறேன். இனி அவர் கோபித்துக் கொண்டிருப்பாராயின், என் நிலைமையையென்னவென்று சொல்லக்கூடும்? மனிதன், தான் இந்த உலகத்தில் பிறக்கைக்கு எவனைக் காரணமென்று அறிவானே, அப்படிப்பட்ட ப்ரத்யக்ஷ தெய்வமாகிப் புலப்படுகின்ற அந்தத் தமப்பனுக்கு எப்படி உட்பட்டு நடவாதிருக்க முடியும்? அவஶ்யமாக உட்பட்டே இருப்பான். நீ, மிகவும் ப்ரியமாயிருப்பவளென்று கர்வித்தாவது கோபித்துக் கொண்டவாது, அவரது மனம் களிப்பற்றிருக்கும்படி பருஷமாக ஏதாயினும் மொழிந்திருப்பாயோ? தாயே! அரசனுக்கு இதுவரையில் ஒருகாலும் உண்டாகாத இவ்விகாரம் எதனுல் உண்டாயிற்ளூ? நான் கேட்கின்றேன். இதை எனக்கு உள்ளபடி சொல்லவேண்டும்' என்றனன். மஹானுபாவனுகிய ராமன் இங்ஙனம் வினவுகையில், கைகேயி, பெருமிடுக்குள்ள துக்கத்தை விளைக்கின்ற வார்த்தையை எப்படி கூறலாமென்று சிறிதும் வெட்கமின்றியும், காட்டுக்குப் போவென்று சொல்லுகைக்கு மனவருத்தமின்றியும் மனவுறுதியுடன் பரதனுக்குப் பட்டங்கட்டவேண்டுமென்கிற தன் ஹிதத்தையே உத்தேசித்து ராமனைப் பார்த்து 'ராமா! அரசனுக்குக் கோபமுமில்லை; மற்றை யாது வ்யஸனமும் இல்லை; இவருக்கு மனத்தில் ஒரு விருப்பம் மாத்ரம் இருக்கின்

றது. நீ யாது நினைப்பாயோவென்று பயப்பட்டு அதைச் சொல்ல முடியாதிருக்கின்றனர். நீ ப்ரியபுத்ரனாகையால் உனக்கு அப்ரியத்தைச் சொல்ல இவருக்கு வாய் ஆடாதிருக்கின்றது. இவர் எந்தக் கார்யத்தைச் செய்வதாக எனக்கு ப்ரதிஜ்ஞை செய்தாரோ, அந்தக் கார்யத்தை நீ அவஶ்யம் செய்து முடிக்கவேண்டும். இம்மன்னவர் ஸத்யத்தையே சொல்பவரென்னும் வ்ரதமுடையவர்; அப்படிப்பட்ட இவர், முன்பு என்னைக் கௌரவிக்க வேண்டிய காலத்தில் எனக்கு வரத்தைக் கொடுத்துக் கௌரவித்து, இப்பொழுது அடாவழக்காடுங் கேவலனைப்போல் 'ஏன் கொடுத்தோம்' என்று துக்கப்படுகின்றனர். இவ்வரசர் எனக்கு வரங் கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து, ஆற்றில் ஜலம் போயினபின்பு அணை கட்ட விரும்புவதுபோல், இப்பொழுது 'ஏன் ப்ரதிஜ்ஞை செய்தோம்' என்று வீணாகச் சிந்திக்கின்றனர். ராமா! ஜகத்திற்குத் தர்மமே மூலம். இதைப் பெரியோர்களெல்லோரும் தெரிந்து மொழிவார்கள். ஆகையால் அரசன் உனக்காக என்னிடத்தில் கோபித்துக்கொண்டு ஸத்யமென்னுந் தர்மத்தை விடாதிருக்கும்படி செய்வாயாக. மன்னவர் மொழியும் வார்த்தை உனக்கு நன்மையாயினும் தீமையாயினும் நீ அதைத் தவறாமல் செய்வாயாயின், நானே எல்லாவற்றையுஞ் சொல்லி விடுகிறேன். அரசர் மொழியும் வார்த்தை உன்னிடத்தில் பயனற்றுக் கெடாதிருக்குமாயின், நீயும் செய்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்வாயாயின், இப்பொழுது நான் அவருக்குப் பதிலாக நின்று கூறுகின்றேன். மன்னவர்தாமே என் மொழியாரென்பாயாயின், அவர் உன் முகத்தைப் பார்த்து அவ்வார்த்தையை மொழியார்' என்றனள். ராமன் கைகேயி சொன்ன இவ்வசனத்தைக் கேட்டுத் 'தமப்பனர் வார்த்தையை நான் உல்லங்கனஞ் செய்வே



0. கைகேயி ராமனுக்குத் தான் வரங்கேட்டதைக் கூறுதல்.
ராமன் அரண்யத்திற்குப் போவதாக ஒப்புக்கொள்ளுதல்.

னென்று இவள் சங்கிக்கும்படியான நிலைமை நேரிட்ட தா?' என்று மனவருத்தமுற்று, அரசனது ஸமீபத்தில் அவளைப்பார்த்து 'சீ! என் பிழைப்பு எதுக்காக? தாயே! என்னைப்பார்த்து இவ்விதமான வார்த்தை மொழியத் தகாது. மன்னவர் ஆஜ்ஞாபித்தாராயின், அக்னியிலும் விழுவேன்; அதிக்ரூரமான விஷத்தையுங்கூடப் பருகு வேன்; ஸமுத்ரத்திலும் விழுவேன். இவர் எனக்குக் குரு; மேலும் தமப்பனர்; இவ்வளவேயன்றி மன்னவர்; எனக்கு மேன்மையைத்தானே விரும்புந்தன்மையர். இப்படிப்பட்ட இவர் கட்டளையிடுவாராயின், எந்தக் கார்யமாயினும் செய்யாதிருப்பேனே? ஆனதுபற்றி, தாயே! அரசரது விருப்பம் யாதோ, அதைச் சொல்வா யாக. அதை நான் செய்கிறேன். செய்வதாக ப்ரதிஜ் ஞையுஞ் செய்கின்றேன். ராமனுக்கு நாக்கு இரண்டல் லவே! ஒருதரஞ் சொன்ன வார்த்தையை மீளவும் இர ண்டாந்தரம் இல்லையென்று மொழியான்' என்றனன். கைகேயி மேன்மைக்கிடமில்லாதவள்; ஆகையால் சிறி துங் கபடமின்றி நன்மையுடன் ஸத்யத்தையே மொழி யுந் தன்மையனாகிய ராமனைப் பார்த்து மிகவுந் தாருண மான வசனத்தை மொழிந்தனள். ராகவா! முன்பு தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் யுத்தம் நடந்தபொ ழுது அம்மஹாயுத்தத்தில் உன் தந்தையாகிய இம்மன்ன வர், சரீரம் முழுவதும் பாணங்கள் நாட்டப்பெற்று மூர்ச் சித்துக் கிடக்கையில், நான் அப்புறங்கொண்டு சென்று [1] சைத்யோபசாரங்களைச் செய்து அப்புண்களை யாற்றிக் காப்பாற்றினன். அதற்காக அவர் எனக்கு இரண்டு வரங்களைத் தந்தனர். ராகவா! நான் அவ்விரண்டுவரங் களுக்கும் பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கவேண்டு மென்றும், நீ இப்பொழுதே தண்டகாரண்யத்திற்குப் போகவேண்டுமென்றும் மன்னவரை வேண்டிக்கொண்ட

1 சைத்யோபசாரம்—குளிர்ச்சியைக் கொடுக்கவல்ல உபசாரம்.

னன். நீ புருஷர்கள் எல்லோரிலுஞ் சிறப்புற்றவன்; ஆகையால் உன் தமப்பனுரையும் உன்னையும் சொன்ன வார்த்தையைத் தவறுதவர்களாகச் செய்ய விரும்புவாயாயின், இப்பொழுது நான் சொல்லுகிற வார்த்தையைக் கேட்பாயாக. நீ தந்தையின் கட்டளையில் தப்பாமல் நிலை பெற்றிருப்பாயாக. அவர் எனக்கு ப்ரதிஜ்ஞை செய்தபடி நீ பதினன்கு ஸம்வத்ஸரங்கள் அரண்யத்தில் வாஸஞ் செய்யவேண்டும். ராகவா! உனக்கு அபிஷேகம் செய்வதற்காக அரசன் ஸித்தப்படுத்தி வைத்திருக்கிற ஸம்பாரங்களை யெல்லாங் கொண்டு பரதனுக்கே பட்டாபிஷேகஞ் செய்யவேண்டும். நீ இந்தப் பட்டாபிஷேகத்தை இழந்து பதினன்கு ஸம்வத்ஸரங்கள் தண்டகாரண்யத்தில் ஜடைகளையுங் க்ருஷ்ணாஜினத்தையுந் தரித்து வாஸஞ் செய்யவேண்டும். பரதன் அயோத்யா நகரத்திலிருந்து நாநாவித ரத்னங்கள் நிறைந்து ரத கஜ துரகங்களோடுகூடியிருக்கின்ற இந்த ராஜ்யத்தைப் பரிபாலனஞ் செய்துகொண்டிருப்பானாக. இப்படி இவ்விரண்டு வரங்களைக் கொடுக்கவேண்டிய காரணத்தைப் பற்றி இம்மன்னவர் மிகுந்த மன இரக்கமுண்டாகப் பெற்றிருப்பதனால் ப்ரிய குமாரனாகிய உன்னைக் காட்டுக்கு அனுப்பும்படி வந்ததேயென்று மனவருத்தமுற்று முகம் வாடி வதங்கப்பெற்று உன்னைப் பார்க்கமுடியாதிருக்கின்றனர். நீ ரகுவம்சத்திற் பிறந்தவன்; அரசனது வசனத்தின்படிக்குச் செய்வாயாக. நீ பெரிதான ஸத்ய பரிபாலனஞ் செய்து அரசனை அஸத்யதோஷத்தினின்றும் கடக்கச் செய்வாயாக' என்றனள். இப்படி அவள் பருஷவசனங்களைச் சொல்லிக்கொண்டிருக்கையில், ராமனுக்கு முகம் வாடுகை முதலிய வெளியிற்றோன்றும் சோகவிகாரங்கள் எவையும் உண்டாகவில்லை; மனத்திலும் வருத்தஞ் சிறிதும் உண்டாகவில்லை. அரசனோ

என்றால் மஹானுபாவனாயினும் புத்ரனை இனிவிட்டுப் பிரிய நேரிட்டதேயென்றும் வ்யஸனத்தினால் தபித்து மிகவும் துயரம் அடைந்தனன். பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் காட்டுக்குப் போகிறேனென்று கைகேயிக்குக் கூறுதல்.

ராமன் எப்படிப்பட்ட சத்ருக்களையும் அடக்க வல்லவன்; அப்படிப்பட்ட மஹாவீரனாகையால், அவன், அப்ரியமாயிருப்பதும், ஆனதுபற்றியே மரணத்தோடொத்ததுமாகிய அவ்வார்த்தையைக் கேட்டும் துக்கப்படாமல் கைகேயியைப்பார்த்து 'அப்படியே ஆகட்டும். நீ சொன்னபடியே பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடக்குமாக. நானும் மன்னவர் செய்த ப்ரதிஜ்ஞையின்படி ஜடைகளையும் க்ருஷ்ணாஜினத்தையும் தரித்து இங்கிருந்து புறப்பட்டுக் காட்டில் வாஸஞ்செய்யப் போகின்றேன். அது ஒரு பெரிதன்று. ஆனால் பகைவரை அடக்கவல்ல மஹாவீரராகிய இம்மன்னவர் என்னை முன்போலவே ஏன் ப்ரீதியுடன் பாராட்டாதிருக்கின்றனர்? துக்கத்தினாலேயா? ஆயினும் என்னுடைய ஸ்வபாவம் அவருக்குத் தெரியுமே. ப்ரீதியுடன் பாராட்டாதிருப்பதேனோ? இதைமாத்ரம் தெரிந்துகொள்ள விரும்புகின்றேன். தேவீ! நீ மனவருத்தமுற்றிருக்கவேண்டாம். நான் உன் முன்னிலையிற்றானே சொல்லுகின்றேன். உன் கண்ணுக்கு முன்னே நார்த்துணிகளையும் ஜடைகளையும் தரித்துக் காட்டுக்குப் போகின்றேன். நீ மிகுந்த ஸந்தோஷம் பெற்றிருப்பாயாக. மன்னவர் எனக்கு மேன்மையை விரும்பும் ஹிதர்; ஆசார்யர்; மேலும் என்னைப் பெற்ற தந்தை; பிறர் செய்த உபகாரங்களை நன்கு அறிந்தவர்; மேலும், தான்

செய்த வரப்ரதானத்தை அறிந்து நடத்துந் திறமுடைய வர். இப்படிப்பட்ட அவர் எனக்குக் கட்டளையிடும்பொழுது சங்கையின்றி அவர்க்கு ப்ரியமான கார்யம் எதைத் தான் செய்யமாட்டேன்? எதுவாயினுஞ் செய்வேன். ஆயினும் அரசர் பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யும் விஷயத்தைத் தானாகவே என்னுடன் சொல்லவில்லை யென்கிற இந்த ஸங்கடம் மாத்ரம் என் மனத்தைக் கொளுத்துவதுபோல் பாதிக்கின்றது. 'உனக்கு அப்ரிய மாகிய இதை லஜ்ஜையின்றி மன்னவர் எப்படி சொல் வார்' என்கிறாயோ? அது வேண்டாம். நான் ஒருவர் [1]ப்ரேரணமின்றித் தானாகவே என் தம்பியாகிய பர தனுக்கு [2]ஸீதையையாயினும், ராஜ்யத்தையாயி னும், ப்ரியமான ப்ராணனையாயினும், தனத்தையாயி னும் மிகுந்த ஸந்தோஷத்துடன் கொடுத்துவிடுவேன். அப்படிப்பட்ட நான், எனது தந்தையாகிய மன்னவர் தாமாகவே ஆஜ்ஞையிடுவாராயின், அது உனக்கு ஸந் தோஷத்தைக்கொடுக்கும்ப்ரயோஜனமாயிருக்குமாயின் சொன்னபடி செய்கிறேனென்கிற என் ப்ரதிஜ்ஞையும் ஈடேறப் பெறுமாயின், இப்படிப்பட்ட ஸந்தர்ப்பங்களில் ராஜ்யம் முதலியவற்றைப் பரதனுக்குக் கொடுத்து விடு வேனென்பதைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? இவ் விஷயத்தில் எனக்குச் சிறிதும் அப்ரீதி உண்டாகாது. ஆகையால் இனி ஸங்கோசப்படவேண்டாமென்று நீ அவருக்கு ஸமாதானஞ் சொல்வாயாக. மன்னவர் பூமி யில் கண்களை நிலைநிறுத்தி மெதுவாகக் கண்ணீர் விடு கின்றாரே; இது என்? இதற்குக் காரணம் ஒன்றையும் காணேனே. இப்பொழுது மன்னவரது கட்டளைப்படி

1 ப்ரேரணம்-தூண்டுதல்.

2 ஸீதையை யாயினும் கொடுத்துவிடுவேன்— தனுர்ப்பங்கஞ் செய்தபொழுது பரதன் அபேக்ஷிப்பானாயின்; அவனுக்கு ஸீதை யைக் கொடுத்து விவாஹஞ் செய்விப்பேனென்ற கருத்து.

தூதர்கள் வேகமாகப் போகுங் குதிரைகள் மீது ஏறிக் கொண்டு மாமாவினகத்திலிருக்கிற பரதனை அழைத் துக்கொண்டு வரப் போவார்களாக. நான், தந்தை தா மாகவே என்னுடன் சொல்லவில்லையே யென்கிற விசார மேயில்லாமல், இதோ பதினான்கு ஸம்வத்ஸரங்கள் வா ஸஞ் செய்யும்பொருட்டு வேகமாக தண்டகாரண்யத் திற்குப் போகின்றேன்' என்றனன். கைகேயி ராமன் மொழிந்த அந்த வார்த்தைகளைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்து ராமனனுப்ரயாணத்தில் அக்கறையுள்ளவளா கிப் போவென்று த்வரைப்படுத்திக்கொண்டு அவனைப் பார்த்து 'இப்படியே ஆகட்டும். தூதர்கள் பரதனை மா மாவினகத்திலிருந்து அழைத்துக் கொண்டு வருவதற் காக வேகமுள்ள குதிரைகள்மீது ஏறிக்கொண்டு போ வார்கள். அதைப்பற்றி நீ சிந்திக்கவேண்டாம். நீ புறப் படுவதைப் பார்ப்பாயாக' என்று மொழிந்து, தனக்குள் 'பரதன் தமையனிடத்தில் பக்தியுடையவன். அவன் வரும் வரையில் ராமன் இங்கிருப்பானாயின், இவனைக் காட்டுக்குப் போகவொட்டான். அப்பொழுது என்கார் யம் பசையற்றுப் போய்விடும்' என்னும் நினைவு கொண் டவளாகி, ராமனை நோக்கி 'வனத்திற்குப் போவதில் விருப்பமுற்றிருக்கின்ற நீ காலவிலம்பஞ் செய்வது யுக்த மன்றென்று எனக்குத் தோற்றுகின்றது. ஆகையால் நீ வேகமாக அரண்யத்திற்குப் போகவேண்டும்; புருஷஸ் ரேஷ்டனே! மன்னவர் தம் ப்ரதிஜ்ஞையை ராமன் நடத் துவானோ, நடத்தமாட்டானோவென்று லஜ்ஜைப்பட்டு உன்னோடு ஒன்றும் பேசாதிருக்கின்றனர். இவ்வளவே யன்றி மற்றொன்றும் இல்லை. ஆகையால் நீ இதற்காக விசாரப்படவேண்டியது [1]அனுவஸ்யகம். அவரே நேரில் சொல்ல வேண்டுமென்கிற பிடிவாதத்தை விடுவாயாக. நீ கடுக அரண்யத்திற்குச் சென்று அவரது லஜ்ஜையை

1 அனுவஸ்யகம்-அவஸ்யமன்று.

யும் தைனயத்தையும் போக்குவாயாக. ராமா! நீ இப்பட்டணத்தினின்றும் வேகமாகப் புறப்பட்டுக் காட்டுக்குப் போகாதிருக்கும் வரையிலும் உன் தந்தை ஸ்னானமுஞ் செய்யார்; போஜனமும் செய்யார்' என்றுமொழிந்தனள். அரசன் கைகேயி சொன்ன கொடிய வார்த்தைகளைக் கேட்டு 'சீ! என்னகஷ்டம்' என்று பெருமூச்சுவிட்டு, சோகத்தில் மூழ்கி மூர்ச்சை அடைந்து ஸுவர்ணத்தினால் அலங்காரஞ் செய்யப்பெற்று மிகவுமழகாயிருக்கிற அந்த மஞ்சத்தின்மேல் தபீலென்று விழுந்தனன். ராமனும் அங்ஙனம் விழுந்த மன்னவனை எழுந்திருக்க எடுத்துக் கைகேயி போ போவென்று த்வரைப்படுத்திக் கொண்டிருப்பது பற்றிச் சவுக்கினால் அடிக்கப்பட்ட குதிரைபோல் காட்டுக்குப்போகப் பரபரப்புற்றனன். அவ்வளவேயன்றிப் பாபிஷ்டையாகிய கைகேயி 'காட்டுக்குப்போ' என்று தாருணமான கெடுதி உண்டாகும்படி உரைத்த அந்த அப்ரியமான வார்த்தையைக் கேட்டும் மனவருத்தமென்பது சிறிதும் உண்டாகப் பெறாமல் அவளைப்பார்த்து '[1]தாயே! நான் பணத்தைப் பாராட்டுந்தன்மையனல்லேன்; ஆகையால் எனக்கு உலகத்திலிருந்து ராஜ்யமாளவேண்டுமென்னும் பேராசை இல்லை. இவ்வுலகத்தில் வஸித்திருக்க வேண்டுமென்றாவது, இவ்வுலகத்தை ஸ்வாதீனப்படுத்திக்கொள்ள வேண்டுமென்றாவது எனக்கு விருப்பமில்லை. நான் ரிஷியைப் போன்றிருப்பவன். தர்மத்தை மாத்ரமே [2] அவலம்பித்திருப்பவன். மற்றை எதுவும் எனக்கு இஷ்டம் அன்று. இதை நீ தெரிந்து கொள்வாயாக. தமப்பனாருக்கு

---

1 கைகேயி 'பரதன் வந்தால் தனக்கு ராஜ்யத்தைக் கொடுத்து விடுவான்' என்று ராமன் நினைத்ததாகச் சங்கித்திருந்தனள். ராமனுடைய இந்த வாக்யத்தினால் தனத்திலாவது ராஜ்யத்திலாவது அவனுக்கு அபேக்ஷையில்லையென்கையால் அவ்வாசங்கை பரிஹரிக்கப்பட்டதென்று தெரியவருகின்றது.

2 ஆதாரமாகப் பிடித்துக்கொண்டிருப்பவன்.

ப்ரியமான கார்யம் எதுவாயினும் ஒன்று என்னாற் செய்யக்கூடியதாயிருக்குமாயின், அது என் ப்ராணன்களை விட்டுச் செய்யவேண்டியதாயிருக்குமாயினும், அப்படிப்பட்ட கார்யத்தை ஸித்தமாகச் செய்துவிட்டேனென்றே நினைத்துக்கொள். தந்தைக்குக் கால்கைகளைப்பிடிப்பது முதலிய சுஶ்ரூஷைகள் செய்வதும், அவர் சொன்ன கார்யத்தைச் செய்வதுமாகிய இவற்றைக்காட்டிலும் மேலான தர்மானுஷ்டானம் ஒன்றும் இல்லை. தமப்பனார் தாமே அரண்யத்திற்குப் போவென்று எனக்குச் சொல்லாமற் போனபோதிலும் நீ சொன்னதே போதுமானது; உன்வார்த்தையைப் பற்றி இப்பொழுதே ஜனங்களின்றிய அரண்யத்திற்குச் சென்று அங்குப் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் வாஸஞ் செய்கின்றனன். அம்மா! கைகேயி! நீ மற்றை யாவரைக் காட்டிலும் மேலாகவே என்னை ஆஜ்ஞாபிக்கக்கூடிய சக்தியுடையவள்; ஆகையால் உன் வார்த்தையை நான் அவஶ்யமாகக் கேட்கவேண்டியவனாகி அப்படியே செய்ய ஸித்தமாயிருக்கையில் 'பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யவேண்டும்; நீ அரண்யத்திற்குப் போகவேண்டும்' என்று என்னுடன் சொல்லாமல் மன்னவரிடம் சொல்லி வரமாகக் கேட்டாயாகையால், நீ என்னிடத்தில் நல்லகுணமுண்டென்று சிறிதாயினும் விசாரிக்காமற் போயினை. இப்பொழுதே போவென்றாயன்றோ; நான் என் தாயாகிய கௌஸல்யையிடம் அனுமதி பெற்றுக் கொண்டு, ஸீதைக்கு நல்வார்த்தை சொல்லி ஸமாதானப்படுத்தி வருமளவும் அவகாசங் கொடுப்பாயாக. அதற்குப் பின்பு நிமிஷமாயினும் நில்லாமல் இன்றையதினமே மஹத்தான [1] தண்டகாரண்யத்திற்குப் போகின்றனன். பர

1 தண்டனென்பவன் இக்ஷ்வாகுவின் பிள்ளை. அவனுடைய ராஜ்யமும் அவன் பேரையிட்டுத் தண்டகமெனப்படும். சுக்ரனுடைய

தன் ராஜ்யத்தைப் பரிபாலனஞ் செய்துகொண்டு தந்தைக்குச் சுஶ்ரூஷை செய்யும்படி நீ பார்த்துக் கொள்ளவேண்டும். தமப்பனுக்குச் சுஶ்ரூஷை செய்வது வெகுகாலமாக நடந்து வருகிற தர்மம்; ஆனதுபற்றியே சொல்லுகின்றேன்' என்றனன். தமப்பனாகிய தசரதமன்னவன், ராமன் சொன்ன வார்த்தையைக் கேட்டு மிகவுந் துயரத்தினால் அடியுண்டு சோகத்தினால் கண்ணீர்களை அடக்கமுடியாமல் பெருங் குரலுடன் கதறலிட்டனன். ராமன், அங்ஙனம் மூர்ச்சித்துப்ராஜ்ஞை தப்பியிருக்கிற தமப்பனுக்கு நமஸ்காரஞ் செய்து, அப்படியே துஷ்டஸ்வபாவையாகிய கைகேயிக்கும் வந்தனஞ் செய்து, அப்படிப்பட்ட கஷ்டத்திற்குச் சிறிதாயினும் மனவருத்தங் கொள்ளாமல், பிதாவின் வாக்யத்தைப் பரிபாலனஞ் செய்யும்படியான புண்யம் கிடைத்ததேயென்று முகத்தில் மேன்மேலும் ஒளி வளரப் பெற்றுப் புறப்பட்டனன். அங்ஙனம் அவன் தமப்பனாகிய தசரத மன்னவனுக்கும் கைகேயிக்கும் ப்ரதக்ஷிணம் செய்து அவ்வந்தப் புரத்தினின்றும் புறப்பட்டு வெளியே வந்து தனது நண்பர்களைக் கண்டனன். ஸௌமித்ரா தேவியின் வயிறு குளிரும்படிக்குப் பிறந்து மேன்மேலும் ஆனந்தத்தை விளைக்குந் தன்மையனாகிய லக்ஷ்மணன் ஸமீபத்திலேயே யிருந்தது பற்றி நடந்த வ்ருத்தாந்தங்களை யெல்லாம் உணர்ந்து கண்களிரண்டிலுங் கண்ணீர் நிரம்பித் ததும்பப்பெற்று மிகுந்த கோபாவேசமுங்கொண்டு அந்த ராமனுக்குப் பின்னே போயினன். மங்கல பதார்த்தங்களையும் தேவாலயங்களையும் மற்றும் மேன்மையுள்ள பதார்த்தங்களையும் ப்ரதக்ஷிணம் பண்

---

டைய சாபத்தினால் அவனது ராஜ்யம் முழுவதும் மண் மழை பெய்யப்பெற்று மறைந்து க்ரமத்தில் அரண்யமாகித் தண்டகாரண்யமென்று கூறப்படுகின்றது.

ணிக்கொண்டு போகவேண்டு மென்னும் விதியைப்பற்றி ராமன் அங்கு அபிஷேகத்திற்காக ஸித்தப்படுத்தி வைத்திருக்கிற மங்கலவஸ்துஸம்பாரங்களுக்கு ப்ரதக்ஷிணம் செய்து, அவற்றில் அபேக்ஷை யில்லாமையால் கண்வைக்காமல் [1]'பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடக்க வேண்டு'மென்று நினைவிட்டுக் கொண்டு அவற்றில் தேவதாஸன்னிதானம் உண்டாயிருப்பது பற்றி மர்யாதைக்காக மெதுவாகப் போயினன். உலகங்களுக்கெல்லாம் ஆனந்தத்தைக் கொடுக்குந் தன்மையனாகிய ஸ்ரீராமபிரானுடைய முகத்தில் ஒளி எப்பொழுதும் அளவற்றிருக்கும்; அம்முகவிகாஸம் அப்பொழுது மேன்மேலும் மிகுந்து வந்ததேயன்றி ராஜ்யம் கை சோர்ந்தது பற்றி எள்ளளவாயினும் மாறிப் போக வில்லை. பின்னும், என்றும் இல்லாத காந்தியுடன் கூடி அழகாய் விளங்கியது. ஆகையால், ராத்ரி பரந்து வருகையில் சந்த்ரனது காந்தி குறையாதிருப்பது போலவே ஸித்தமான ராஜ்யம் கைசோர்ந்து போயினும் ராமனது முகத்தின் ஒளி சிறிதும் மாறாதிருந்தது. பூமண்டலத்தை யாள்கையாகிற ராஜ்யத்தை விட்டுக் காட்டுக்குப் போகப் பறந்துகொண்டிருக்கிற ஸ்ரீராம பிரானுக்கு, ஸர்வலோகங்களையும் அதிக்ரமித்து மானவமானங்களில் கண்வையாமலிருக்கும் மஹாயோகி

---

1 இங்கு 'ஸாபேக்ஷ:' என்று மூலம். பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கவேண்டு மென்னு மபேக்ஷையோடு கூடினவனாகியென்று பொருளென்பர் கோவிந்தராஜர். இதற்கு மஹேஸ்வர தீர்த்தர் சொல்லும் பொருளாவது—(அபகதா ஈக்ஷா-அபேக்ஷா. உபேக்ஷயா ஸஹித: ஸாபேக்ஷ:) அபேக்ஷையென்றால் அபேக்ஷை யில்லாமை. அத்தோடு கூடியவன் ஸாபேக்ஷன். அந்த மங்கல வஸ்து ஸம்பாரங்களில் அபேக்ஷையில்லாமலென்றபடி. அன்றியே—(அபேக்ஷா அயோவீக்ஷணம். தயா ஸஹித: ஸாபேக்ஷ:) அபேக்ஷை யென்றால் கீழ்ப் பார்வை. அத்தோடு கூடியவன். அல்லது (ஸாபேக்ஷ:) காட்டுக்குப் போவதில் அபேக்ஷையுடையவ னென்பது.

யைப்போல், மனத்தில் சிறிதும் விகாரம் உண்டாகா திருந்தது. அந்த ராமன் அதிதீரஸ்வபாவனுகையால் மங்கலகரமான குடையையும நன்கு அலங்காரஞ் செய்யப்பெற்று அழகான சாமரங்களையும் வேண்டாமென்று தடுத்து விட்டு, தன் பரிஜனங்களையும் பட்டணத்து ஜனங்களையும் துறந்து ரதத்தின்மேல் ஏருமல் தன் விபத்தைப் பற்றித் தனக்குத் துயரம் இல்லாமற்போன போதிலும், நம்மைப்பற்றிப் பிறர்க்குத் துக்கம் உண்டாகின்றதே யென்று பிறர் வருத்தம் பொருமையால் தனக்கு நேரிடுந் துயரத்தை மனத்திலேயே அடக்கிக்கொண்டு வெளிக் காட்டாமல் இந்த்ரியங்களையும் நிக்ரஹஞ்செய்து இந்த அப்ரியமான வார்த்தையைச் சொல்லும் பொருட்டுத் தாயாகிய கௌஸல்யையின் மாளிகைக்குப் போயினன். ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கப் போகிறதென்று அலங்காரஞ் செய்துகொண்டு காந்தி மேன்மேலும் மலரப்பெற்று ஸ்ரீராமனைச் சுற்றிக்கொண்டிருக்கும் ஜனங்களுக்கு,ஸத்யஸந்தனும் ஸ்ரீமானுமாகிய ராமனது முகத்தில் மனவருத்தத்தைத் தோற்றுவிக்கும்படியான விகாரங்கள் எவையும் புலப்படவில்லை. சரத்காலத்தில் மிகுந்த காந்தியுடன் ப்ரகாசிக்கின்ற சந்த்ரன் தனது ஒளியை விடாதிருப்பதுபோல், மஹாபாஹுவாகிய ராமன் தனக்கு ஸ்வபாவ ஸித்தமான ஸந்தோஷத்தைச் சிறிதுங் கைவிடாதிருந்தனன். பெரும்புகழனுகிய அம்மஹாநுபாவன் மஹாதீரனுகி மனவருத்தத்திற்கு உட்படாதவனுகையால் சிறிதும் விகாரமின்றி ஜனங்கள் எல்லோரையும் இனிய உரைகளால் கௌரவப் படுத்திக்கொண்டு தாயான கௌஸல்யை யினிடம் போயினன். மஹாபராக்ரமசாலியும் ப்ராதாவுமாகிய லக்ஷ்மணன் தமையனேடு ஸுகதுக்காதி குணங்களெல்லாம் ஒத்திருக்கப் பெற்றவனுகையால் ராமனுக்கு உண்டான துக்கத்தைப் பற்றித் தனக்கும் துக்கம் உண்டாகப்பெற்று அதை

மனத்திலேயே அடக்கிக்கொண்டு ராமனைப் பின்றொடர்ந்து சென்றனன். ராமன் கௌஸல்யையினுடைய மாளிகைக்குச் சென்று அங்குத் தனக்கு அபிஷேகம் நடக்கப்போகிறதென்று ஜனங்கள் மிகுந்த ஸந்தோஷமுற்றிருப்பதைக் கண்டு, அப்பொழுது தனக்கு நேரிட்டிருக்கிற ராஜ்யநாசத்தையும் சிந்தித்து, அதனால் அவஶ்யமாக மனவருத்தம் உண்டாகவேண்டியதாயிருப்பினும் தான் வருத்தப்படுவது கண்டால் தனக்கு வேண்டிய ஜனங்கள் ப்ராணனை விட்டுவிடுவார்களென்று சங்கித்துத் துயரத்தையெல்லாம் உள்ளேயே அடக்கிக்கொண்டு வெளிக்கு ஒன்றும் புலப்படாதிருக்கும்படி சிறிதும் விகாரமுறாதிருந்தனன். பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராமன் கௌஸல்யையோடு தான் காட்டுக்குப் போவதைச் சொல்லுவதும், கௌஸல்யா விலாபமும்.

புருஷ சிகாமணியாகிய அந்த ராமன் கைகேயிக்கும் தசரதமஹாராஜனுக்கும் கையைக் கூப்பி நமஸ்காரஞ்செய்து வெளிப்புறப்பட்டு வருகையில், அப்பொழுது அந்தப்புரத்திலுள்ள ஸ்த்ரீகளெல்லோரும் மனவருத்தம் பொறுக்கமாட்டாமல் ஐயோவென்று கூக்குரலிடப் பெரும் சப்தம் ஒன்று உண்டாயிற்று. அந்த ராஜபார்யைகள் ராமனைக்குறித்து 'ராமன், தந்தை சொல்லாமற்போயினும், அந்தப்புரத்திலுள்ள நம்மெல்லோர்க்கும் வேண்டிய கார்யங்களைத் தானே செய்து நமக்குத் திக்காகி நம்மைப் பாதுகாத்துக்கொண்டிருப்பான்; அப்படிப்பட்ட ராமன் இப்பொழுது ஊரைவிட்டுக் காட்டுக்குப் போகின்றானே! தன் தாயாகிய கௌஸல்யைக்கு

எப்படி மனவூக்கத்துடன் சுஶ்ரூஷைகள் செய்துகொண்டிருப்பானே, அப்படியே பிறந்தது முதலாக நமக்கும் சுஶ்ரூஷை செய்துகொண்டிருக்கின்றனன். ராமன், தன்னைப் பிறர் எவ்வளவு கடினமாகப் பேசினபோதிலும் கோபங்கொள்ளமாட்டான்; மேலும் பிறர்க்குக் கோபத்தை விளைக்கும்படியான கார்யங்களைச் சிறிதும் செய்யமாட்டான்; வீணாக்ராஹங் கொண்டு கோபித்துக் கொள்பவரெல்லோரையும் மனத்தெளிவுறச் செய்யும் தன்மையன். அப்படிப்பட்ட ராமன் இப்பொழுது பட்டணத்தை விட்டுக் காட்டுக்குப் போகின்றனன். ஐயோ! நமது அரசனுக்குப் புத்தி கெட்டுப்போயிற்று. ஆனது பற்றியே ஸகல பூதங்களுக்கும் ரக்ஷகனாகிய ராமனைக் காட்டுக்கு அனுப்பி ப்ராணிலோகங்களை யெல்லாம் நாசஞ் செய்கின்றனன்' என்று எல்லோரும் பர்த்தாவாகிய தசரதனை நிந்தித்துக்கொண்டு கன்றுகளை விட்டுப் பிரிந்த பசுக்களைப்போல் கூக்குரலிட்டழுதனர். தசரதன் தானாகவே புத்ரசோகத்தினால் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தனன்; பின்னும், அவ்வந்தப்புரஸ்த்ரீகளது அழுகுரலைக் கேட்டு மேன்மேலும் மனவருத்தம் வளரப் பெற்று வெட்கத்தினாலும் வருத்தத்தினாலும் மஞ்சத்தின்மேல் ஒடுக்கலுற்றிருந்தனன். ராமனோ என்றால் அவர்களது கூக்குரலைக்கேட்டு மிகவும் ஸங்கடப்பட்டு யானையைப்போல் பெருமூச்சுவிட்டுக் கொண்டு, இந்த்ரியங்களை யெல்லாம் அடக்குந்தன்மையனாகையால் மனவருத்தத்தை மேலெழவொட்டாமல் மறைத்துத் தம்பியாகிய லக்ஷ்மணனுடன் கூடித் தாயாருடைய அந்தப்புரத்திற்குப் போயினன். அவன் அங்குப் போகும்பொழுது, அரசன் கௌரவிக்கும்படியான பெருமை பொருந்திய[1] த்வாரபாலாத்யக்ஷனாகிய வ்ருத்தபுருஷன் வாசற்படி

1 த்வாரபாலாத்யக்ஷன்—வாசற்காப்பவர்களில் தலைவன்.

யில் உட்கார்ந்திருக்கவும், மற்றும் பல வாசற் காப்பவர் நின்றிருக்கவும் கண்டனன். அவர்கள் எல்லோரும் ராமனைப் பார்த்தமாத்ரத்திலேயே திடீரென்று எழுந்திருந்து, ஜயசீலர்களில் மேன்மை பெற்றிருக்கிற ரகுகுலாலங்காரனான அந்த ராமனுக்கு 'ஜய விஜயீபவ' என்று ஆசீர்வாதஞ் செய்தனர். அவன் அங்ஙனம் முதற் கட்டைக் கடந்து இரண்டாவது கட்டில் ப்ரவேசித்து அங்கு வேதங்களை யெல்லாம் அறிந்தவர்களும் அரசனால் நன்கு ஸத்காரஞ் செய்யப் பெற்றவர்களுமாகிய வ்ருத்த ப்ராஹ்மணர்களைக் கண்டனன். ராமன் அந்த ப்ராஹ்மணர்களுக்கு நமஸ்காரஞ் செய்து அந்தக் கட்டையுங் கடந்து, பிறகு மூன்றாவது கட்டுக்குச் சென்று அங்கு வாசலில் காத்துக் கொண்டிருக்கிற வ்ருத்த ஸ்த்ரீகளையும் சிறு பெண்களையும் கண்டனன். அப்பொழுது அந்த ஸ்த்ரீகள் மிகுந்த ஸந்தோஷத்துடன் வாழ்த்தி மேன்மைப்படுத்தி மாளிகைக்குள்ளே நுழைந்து பரபரப்புடன் அவனது தாயாகிய கௌஸல்யைக்கு ராமன் வந்தானென்னும் ப்ரிய ஸமாசாரத்தைச் சொல்லினர். அப்பொழுது கௌஸல்யை ராத்ரியெல்லாம் நியமத்துடன் நித்ரையின்றிக் கண்விழித்திருந்து பொழுது விடிந்தவுடன் புதல்வனது மேன்மையை விரும்பி விஷ்ணு தேவனைப் பூஜித்துக்கொண்டிருந்தனள். கௌஸல்யை எப்பொழுதும் வ்ரதங்களை ஆசரிப்பதில் ஆஸக்தியுடையவள்; மேலும், அப்பொழுது அவள் வெண்பட்டு வஸ்த்ரத்தை உடுத்து மங்கலாலங்காரங்களையுஞ் செய்து கொண்டு ஸந்தோஷத்துடன் ப்ராஹ்மணர்களைக் கொண்டு ஹோமஞ்செய்வித்துக் கொண்டிருந்தனள். அப்பொழுது ராமன் மங்கலகரமான அன்னையது அந்தப்புரத்திற்குட்சென்று அங்கு ப்ராஹ்மணர்களைக்கொண்டு ஹோமஞ் செய்வித்துக்கொண்டிருக்கிற தாயைக்கண்டனன்; பின்னும், அவ்விடத்தில் தேவகார்யத்தின் பொ-

ருட்டு ஸித்தப்படுத்தப்பட்ட த்ரவ்ய ஸமூஹங்களையுங் கண்ணுற்றனன். அங்குத் தயிரும் அக்ஷதைகளும் நெய்யும் குழைக்கட்டைகளும் ஹவிஸ்ஸுக்களும் பொரிகளும் வெளுத்த பூமாலைகளும் பாயஸமும் எள்ளுப்பண்யாரமும் ஸமித்துகளும் ஜலம் நிறைந்த பூர்ணகும்பங்களும் ராமனுக்குப் புலப்பட்டன. வெண்பட்டு வஸ்த்ரம் தரித்து ஜலமெடுத்து விஷ்ணுதர்ப்பணஞ் செய்துகொண்டு வ்ரதோபவாஸங்களால் இளைத்துந் தேவதையைப்போல் திவ்யகாந்தியுடன் விளங்குகின்ற தாயாரை ராமன் கண்டனன். அப்பொழுது த்யானஞ் செய்துகொண்டிருந்தாளாகையால் வெகுநேரங்கழித்து, பெற்றவயிறு குளிரும்படிக்குப் பிறந்த குமாரனுகிய ராமன் வந்திருப்பது கண்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்து பெண் குதிரை தன் குட்டியைக் கண்டு எதிர்கொள்வதுபோல் புதல்வனை எதிர்கொண்டனள். அங்ஙனம் எதிர்கொண்டு வருகின்ற தாய்க்கு ராமன் நமஸ்காரஞ் செய்தனன். பிறகு அந்தக் கௌஸல்யையும் கைகளை நீட்டி ராமனை ஆலிங்கனஞ் செய்துகொண்டு உச்சிமோந்தனள். கௌஸல்யை ஸஹஜமாகவே பிள்ளையினிடத்தில் வாத்ஸல்யமுடையவள்; மேலும், பகைவரால் எதிரிடக்கூடாத பராக்ரமம் பொருந்திய அப்படிப்பட்ட புதல்வனிடத்தில் ப்ரீதியின் மிகுதி சொல்லத்தரமோ? அங்ஙனம் அவள் தன் புதல்வனுகிய ராமனைப்பார்த்து அவனுக்கு ப்ரியமும் ஹிதமுமான இம்மொழியை மொழிந்தனள். 'வ்ருத்தர்களும் தார்மிகர்களும் மஹானுபாவர்களுமாகிய ராஜர்ஷிகளைப்போல், நீ [1]தீர்க்காயுஷ்யத்தையும், பெருங்கீர்த்தியையும், உன்குலத்திற்குத் தகுந்த தர்மத்தையும் பெறுவாயாக. ரகுவம்சத்திற் பிறந்த ராமனே! உன் தந்தை சொல்தவறார்; அவர் ப்ரஜைகளை தர்மந்

1 நீண்ட ஆயுளையும்.

தவறுது நடத்துக் திறமுள்ள மன்னவர். ஆகையால் தான் தர்மத்தினின்றுந் தவறுர். இது உனக்குத் தெரியாதோ? நான் சொல்லவேண்டுமோ? ஆனதுபற்றி இன்னும் பட்டாபிஷேகத்தைப்பற்றி ஆரம்பிக்கவில்லையேயென்று ஸந்தேஹப் படவேண்டாம். தர்மஸ்வபாவராகையால் உன்னை இப்பொழுதே யௌவராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ் செய்துவிடுவார்' என்றனள். தாயாகிய அந்தக் கௌஸல்யை இங்ஙனம் மொழிந்து மீளவும் 'குழந்தாய்! போஜனஞ் செய்ய வருவாயாக' என்றழைத்து ஆஸனம் இடுகையில், ஒருவர் தனக்காக இட்டுவைத்த ஆஸனத்தில் உட்காராமற் போனபோதிலும் கையினுலாவது அதைப் பரிசிக்க வேண்டுமென்னும் விதியைப்பற்றி, அதைக் கையினுற் பரிசித்து விட்டு அங்ஙனம் மொழிகின்ற தாயைப்பார்த்து 'காட்டுக்குப் போகிறேன்' என்று எப்படி சொல்வேனென்று கொஞ்சம் வெட்கித்துக் கைகளைக் கூப்பிக்கொண்டு இயற்கையாகவே வணக்கம் பொருந்தியவனுகையால், பின்னும் அன்னையிடத்திலுள்ள கௌரவத்தைப்பற்றி மிக்க வணக்கத்துடன் தான் தண்டகாரண்யத்திற்குப் புறப்பட்டுப்போகும் விஷயத்தைப்பற்றி அனுமதிகேட்கத் தொடங்கினன். 'தாயே! இப்பொழுது பெருத்த பயம் ஒன்று வந்திருக்கின்றது. இது உனக்குத் தெரியாது. இவ்விஷயம் உனக்கும் ஸீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் துயரத்தை விளைக்கவற்றுயிருக்கும். ஆயினும் சொல்லாமல் தீராது. அது மற்றென்றும் அன்று. நான் தண்டகாரண்யத்திற்குப் போகப்போகிறேன். எனக்கு இந்த மணிமயமான ஆஸனம் எதுக்காக? [1] தர்ப்பாஸனத்தில் உட்கார

---

1 இதற்கு 'விஷ்டராஸநயோர் யோஹி காலோ உயம் மாமுப்

வேண்டுங் காலமன்றோ இதோ எனக்கு வந்திருக்கின்றது. நான் தேனையும் கிழங்குகளையும் பழங்களையும் தின்றுகொண்டு, சமையற்காரர் சமைத்த மேலான மாம்ஸந் தின்பதை இழந்து முனியைப்போல் ஜனஸஞ்சாரமில்லாத வனத்தில் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் வாஸஞ் செய்யப்போகின்றனன். மஹாராஜன் பரதனுக்கு யௌவராஜ்யங் கொடுக்கின்றனன்; என்னையோ, தாபஸனுக்கித் தண்டகாரண்யத்திற்குப் போகும்படி செய்தனன். அங்ஙனம் தந்தையினால் கட்டளையிடப் பெற்ற நான் வானப்ரஸ்தர் செய்யுங் கர்மங்களை ஆசரித்துக்கொண்டு பழங்களையுங் கிழங்குகளையும் தின்று தேஹயாத்ரை நடத்திக்கொண்டு [1] ஆறு வர்ஷங்களும் எட்டு வர்ஷங்களும் ஜனஸஞ்சாரமின்றிய அரண்யத்தில் வஸித்திருக்கப்போகின்றேன்' என்றனன். அப்பட்டமஹிஷியும் ராமன் அங்ஙனம் மொழியக்கேட்டுக் காட்டில் கோடாலியால் வெட்டப்பட்ட மரத்தின் கிளைபோலவும், ஸ்வர்க்கத்தினின்றும் பூமியில் விழுந்த தேவ ஸ்த்ரீ போலவும், திடீரென்று மூர்ச்சித்துக் கீழே விழுந்தனள். துக்கத்திற்குச் சிறிதும் தகாதவளும் தனக்குத் தாயுமாகிய அந்தக் கௌஸல்யை அங்ஙனம் மூர்ச்சித்து அறுப்புண்ட வாழைமரம்போல் தரையில் விழுந்திருக்கையில், ராமன் கண்டு அவளை எழுந்திருக்க எடுத்தனன். பாரத்தை வஹித்ததனால் மிகவும் ஶ்ரமப்பட்டு அந்த ஶ்ரமம் தீருகைக்காகப் பூமியில் விழுந்து

ஸ்யிதஃ' என்று மூலம். விஷ்டரமென்றால் இருபத்லதந்து தர்ப்பங்களால் செய்யப்பட்ட தாபஸர்களின் ஆஸனம்.

1 இங்கு 'ஷட்சாஷ்டௌச வர்ஷாணி' என்று மூலம். பதினான்கு வர்ஷங்களென்றால் அதிகமாகத் தோற்றுமென்று ஆறு வர்ஷங்களும் எட்டு வர்ஷங்களுமென்று குறைவாகத் தோற்றும் பொருட்டுச் சொல்லினன்.

புரண்டு எழுந்திருந்து ஓய்ந்திருக்கிற பெட்டைக் குதிரை போல் அக கௌஸல்யையும் துக்கத்தின் மிகுதியைப் பொறுக்க முடியாமல் கிழே விழுந்து ஸமஸ்த அவயவங்களிலும் புழுதி நிரம்பப்பெற்று ராமன் எழுந்திருக்க எடுக்கையில் எழுந்திருந்தனள். அப்பொழுது ராமன் தனது தாயாருடைய தேஹம் முழுவதும் தூசி போகும்படி தன் கைகளால் தடவிக்கொடுத்தனன். அவள் ஸுகத்தை யனுபவிப்பதற்கே உரியவள்; அப்படிப்பட்ட பட்டமஹிஷியாகிய கௌஸல்யை துக்கத்தினால் பீடிக்கப்பட்டுத் தன்னைச்சேவித்துக்கொண்டிருக்கிற புருஷஶ்ரேஷ்டனாகிய ராமனைப் பார்த்து லக்ஷ்மணன் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது மேல்வருமாறு கூறினள். 'பிள்ளாய்! நான் துக்கத்தை யனுபவிப்பதற்காகவே நீ எனக்குப் பிள்ளையாகப் பிறந்தனை. நீ பிறக்காமல் போவாயாயின் நான் மலடியாயிருப்பேனாயினும் 'பிள்ளையில்லையே' என்கிற துக்கத்தோடிருப்பேனன்றி அதைக் காட்டிலும் மேலாகிய இப்படிப்பட்ட துக்கம் எனக்கு நேரிட்டிருக்காது. குழந்தாய்! மலடியாயிருப்பவளுக்கு 'பிள்ளையில்லையே' என்கிற ஒரு துக்கம் மாத்ரமேயன்றோ மனத்தில் உண்டாயிருப்பது. இப்படி பிள்ளையைப் போக்கிப் பூமியில் விழுந்து புரண்டு கதறும்படியான துக்கம் மற்றொன்று நேராதன்றோ. பர்த்தா பெரிய ஆண்மையுடன் சிறந்த மேனாணிப்புற்றிருப்பினும், மிகுந்த அநுராகத்தோடு ஸந்தோஷப்படுத்தவேண்டிய ஸமயங்களில் நான் ஜ்யேஷ்டபத்னியாயிருப்பதற்குரியபடி ஆபரணம் ஐஶ்வர்யம் முதலிய எவ்வித மங்கலத்தையாயினும், மற்றும் பர்த்தா கௌரவப்படுத்துவது முதலியவற்றாலுண்டான எவ்வித ஸுகத்தையாயினும் இதுவரையில் அனுபவித்தறியேன். பிள்ளை பிறந்த பிறகாயினும் அந்த பலத்தினால் அவைகளை அனுபவிக்கலாமோவென்று நினைத்துக்

கொண்டிருந்தனன்; அதுவும் எனக்கு நேராமற்போய் விட்டது. [1]இனி என்னைக்காட்டிலும் கீழ்ப்பட்டவர்களாகிய சக்களத்திகள் என்னைக் குறித்து என்மனம் இரண்டாகப் பிளந்துபோகும்படி மிகவும்கொடிய மொழிகளைப் பலவும் உரைக்கையில் எல்லோர்க்கும் மேலா

---

1 இதற்கு மூலம்—

'ஸா வஹூந்யமநோஜ்ஞாநி வாக்யாநி ஹ்ருதயச்சிதாம்।
அஹம் ஶ்ரோஷ்யே ஸபத்நீநாமவராணாம் வரா ஸதீ'

விசேஷார்த்தம்— (ஸா அஹம்) அப்படிப்பட்ட நான். இதுவரையிலும் ஸுகத்தையே அனுபவித்து வந்த நான். (ஹ்ருதயச்சிதாம்) மனத்தைப் பிளக்கத் தக்கவர்களும். பர்த்தாவின் மனத்தை என்னிடத்தில் புகவொட்டாமல் வைரஸ்யத்தை உண்டாக்கி வேறுபடுத்துபவர்களென்றபடி. (அவராணாம்) தாழ்ந்தவர்களுமான. பெரியவளாகையால் தானொருத்தியே அங்ஙனம் பருஷமாகப் பேசத் தகுந்தவளேயன்றித் தன்னை அங்ஙனஞ் சொல்லத் தகாதவர்களென்றபடி. (ஸபத்நீநாம்) சக்களத்திகளுடைய. தனக்கு உட்பட்டவர்களல்லரென்றபடி. (வஹூநி) பல. இதனால் முன்புங்கூட அவர்கள் பருஷமாகப் பேசுவது கொஞ்சம் உண்டென்றபடி. (அமநோஜ்ஞாநி) இனியவையல்லாத. பருஷமானவை யென்றபடி. இதனால்—முன்பு இனிய உரைகளுங் கலந்திருக்குமென்று தோற்றுகிறது. இப்பொழுது சிறிதும் இனிமை யென்பதே இல்லை. கேவலம் பருஷமான மொழிகளே. (வாக்யாநி) வாக்யங்களை. ஸூசகமான பதங்களன்று. (வராஸதீ) மேற்பட்டவளா யிருந்து கொண்டு. மேன்மைப் பட்டிருப்பவள் கீழ்ப்பட்டவர்களிடம் வார்த்தை கேட்பது மிகவும் துக்கமென்று கருத்து, நான் கீழ்ப்பட்டவளா யிருப்பேனாயின், இந்தத்துக்கஞ் சிறிதும் உண்டாகாதென்றபடி. (ஸபத்நீநாம்) சக்களத்திகளுடைய. இங்குச் கோபத்தினால் பஹுவசனம் (பன்மை). கைகேயி ஒருத்தியைத் தானே குறித்துச் சொல்லுகிற வார்த்தையாகையால் ஒருமையிற்றானே கருத்து. இங்குத் திடீரென்று 'என் வீட்டிற்கு வாராதே' என்றுரைப்பது, கோபங்கொண்டு பர்த்தாவி னெதிரில் 'இவ்விடம் விட்டு அப்புறம் போ' என்றுரைப்பது, 'பிள்ளை யில்லாதவளுக்கு வேடிக்கையென்?' என்றுரைப்பது இது முதலியவை சக்களத்திகள் சொல்லும் பருஷவார்த்தைகளென்றுணர்க.

யிருந்துகொண்டு கேட்கப் போகிறேனன்ரு. ஸ்த்ரீ களுக்குச் சக்களத்திகளிடம் வார்த்தை கேட்பதைக் காட்டிலும் மிகுந்த மனவருந்தம் யாதிருக்கின்றது? ஆகையால் என் துக்கத்தையும் என் அழுகையையும் இவ்வளவென்று சொல்லத் தரமில்லை; அவைகளுக்கு முடிவேயில்லை. பலவந்தனுகிய நீ ஸமீபத்திலிருந்தபோதிலும் இவ்வாறு என்னைத் திரஸ்காரஞ்செய்வதை நீ பார்த்துக் கொண்டிருந்தனை யல்லவா? இனி நீயும் தூரத்தில் போனபின்பு சொல்லவேண்டுமோ? இனி எனக்கு மரணமேயன்றி வேறில்லையென்பது நிச்சயமே. பர்த்தா என்னை எப்பொழுதும் நிராகரித்துக்கொண்டே யிருப்பவனுகையால், அவன் என் மேன்மையைக் கெடுத்து, என்னைத் தாழ்ந்தவளாகச் செய்துவிட்டனன். ஆகையால் கைகேயியின் தாஸீஜனங்களோடு ஸமானையாகவோ, அதுவும் இல்லையாயின் அவர்களைக் காட்டிலுந் தாழ்ந்தவளாகவோ ஆய்விட்டனன். மற்ருெரு துக்கத்தையுஞ் சொல்லுகிறேன்; கேள். எவனுவது ஒருவன் என்னை ஸேவித்திருப்பானுயின், அல்லது ஒருவன் ஸேவை செய்யுமவ்வளவு பாக்யம் எனக்கு ஏது? எவனுயினும் ஒருவன் என்னை அநுஸரித்திருப்பானுயின் அவன் அரசனுகிய கைகேயியின் புதல்வனைப் பார்த்து அந்தப் பயத்தினுல் என்னேடு பேசவுமாட்டான். அந்தக் கைகேயியோ எப்பொழுதும் என்மீது கோபத்தினுல் கரும்புருமென்ற முகத்தோடு கடுமையாய்ப் பேசிக்கொண்டிருப்பாள். பிள்ளாய்! இனி இப்படிப்பட்ட துர்க்கதியைப் பெற்ற பின்பு, அவளது அத்தகைய முகத்தை நான் எப்படி காண்பேன்? குழந்தாய்! கைகேயியின் கோபம் உனக்குத் தெரியாதா? அவள் கோபத்திற்கு ஒருநாளும் ஒழிவில்லையே! அவ்வித கோபத்து

டன் கடுமையாகப் பேசுகிற அவள் முகத்தை நோக்கி ருக்கிற நான் எப்படி பார்த்திருக்கமுடியும்? அவள் பேச்சைக் கேட்டு எங்ஙனம் பொறுத்திருப்பேன்? [1] ராமா! நீ பிறந்தது முதற்கொண்டு இப்பொழுதைக்குப் பதினேழு

1 இங்கு—

'தஸ ஸப்தச வர்ஷாணி ஜாதஸ்ய தவ ராவவ'

என்று மூலம். ராமனது வயதை இங்கு விசாரிக்கவேண்டியதாயிருக்கின்றது. வனத்திற்குப் போகும் ஸமயத்தில் கௌஸல்யை 'தஸ ஸப்தச வர்ஷாணி' (பதினேழு வர்ஷங்கள்) என்றனள். விஸ்வாமித்ரமஹர்ஷி ராமனை அனுப்பவேண்டுமென்று வேண்டினபொழுது தசரதன் 'ஊநஷோடஸவர்ஷோமே ராம:' (இன்னும் ராமனுக்குப் பதினாறு வயது நிரம்பவில்லை) யென்றனன். அந்த ஸம்வத்ஸரத்தில்தானே ராமனுக்கு விவாஹமாயிற்று. ஸீதை 'உஷித்வா த்வாதஸ ஸமா இக்ஷ்வாகூணாம் நிவேஸநே' (இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்த மஹானுபாவர்களது க்ருஹத்தில் பன்னிரண்டு ஸம்வத்ஸரங்கள் வஸித்திருந்து) என்று விவாஹமான பின்பு பன்னிரண்டு ஸம்வத்ஸரங்கள் அயோத்யையி லிருந்ததாகச் சொன்னாளாகையால் தசரதன் சொன்னதும் விவாஹம் நடந்ததுமாகிய பதினாறு வருஷங்களும், விவாஹம் நடந்தபின்பு கடந்த பன்னிரண்டு வருஷங்களும் கூட்டினால் காட்டுக்குப் போகும்பொழுது இருபத்தெட்டு வருஷங்களாகின்றன. ஸீதை, 'மமபர்த்தா மஹாதேஜாவயஸா பஞ்சவிம்ஸக:! அஷ்டாதஸஹி வர்ஷாணி மம ஜந்மநி கண்யதே' (மஹாதேஜஸ்வியாகிய என்பர்த்தாவுக்கு இருபத்தைந்து வயது. எனக்குப் பதினெட்டுவயது) என்று காட்டுக்குப் போகும்பொழுது ராமனுக்கு இருபத்தைந்து ஸம்வத்ஸரங்களென்று சொல்லினள். இங்ஙனம் காட்டுக்குப் போகும்பொழுது ராமனுக்கு, கௌஸல்யை சொல்லுகிறபடி பதினேழு வயதாகவும், தசரதனது வார்த்தையின்படி இருபத்தெட்டு வயதாகவும், ஸீதைசொன்ன ப்ரகாரத்திற்கு இருபத்தைந்து வயதாகவும் புலப்படுகின்றது. இம்மூன்றும் பொருந்துவது எப்படி என்னில்—மூன்றுக்கும் ஸங்கதி உண்டு. எப்படியெனில்—கௌஸல்யை 'தஸ ஸப்தச வர்ஷாணி ஜாதஸ்ய தவ ராவவ' என்று சொன்ன வாக்யத்தில் 'ஜாதஸ்ய' என்று த்விதீய ஜன்

ஸம்வத்ஸரங்களாக, உனக்கு யௌவராஜ்யம் வந்து என்

மத்தைச் சொல்லுகிறது. த்விதீயஜன்மம்—உபநயனம். உபநயன கர்மத்தினல் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்கள் மூவர்க்கும் த்விதீயஜன்மம் உண்டாகிறதென்று ஸ்ம்ருதிகளிற் சொல்லப் பட்டிருக்கிறது. த்விதீயஜன்மம்—இரண்டாவது ஜன்மம். அதில் 'கர்ப்பைகாதஶேஷு ராஜந்யம்' (கர்ப்பத்தினின்றும் பதினோராவது வயதில் க்ஷத்ரியனுக்கு உபநயனம்) என்று ஸூத்ரத்தில் 'ஏகாதஶே ஷு' என்று பஹுவசனத்தைப்பற்றி க்ஷத்ரியர்களுக்கு உபநயனம் கர்ப்பத்தினின்று ஒன்பதாவது வயதிலும் கர்ப்பத்தினின்று பத்தா வது வயதிலும் கர்ப்பத்தினின்று பதினோராவது வயதிலும் செய் யலாமென்று தோற்றுவிக்கைக்காகவாகையால் க்ஷத்ரியனுகிய ராம னுக்குக் கர்ப்பத்தினின்று ஒன்பதாவது வயதில், அதாவது பிறந்த எட்டாவது வயதில் உபநயனம் நடந்தது. இவ்வெட்டு வர்ஷங்களைக் கூட்டாமல் எட்டாவது வயதில் நடந்த உபநயனம் முதலாக எண் ணிப் பதினேழு வர்ஷங்களாயின வென்று கௌஸல்யை மொழிந் தனள். ஸீதை எட்டு வர்ஷங்களையும் பதினேழு வர்ஷங்களையும் கூடச்சேர்த்துக்கொண்டு 'வயஸா பஞ்சவிம்ஶக:' என்று இருபத்தை ந்து வயதென்ருளாகையால் கௌஸல்யையின் கணக்குக்கும் ஸீதை யின் கணக்குக்கும் விரோதம் இல்லை. இனித் தசரதனது கணக் கோடு ஸங்கதி விசாரிக்கவேண்டும். தசரதன் 'ஊநஷோடஶவர்ஷோ மே ராம:' (ராமன் குறைந்த பதினறு வயதுடையவன்) என்ருன். அந்தக் குறை எவ்வளவு என்று தெரிந்துகொள்ளவேண்டும். தசர தன் விஶ்வாமித்ரரோடு அனுப்பின ஸம்வத்ஸரத்திலேயே ராமன் மாரீசனேடு யுத்தஞ்செய்தானுகையால், அவன் ராமனைக் குறித்து, 'பாலோ த்வாதஶவர்ஷோ௨யமக்ருதாஸ்த்ரஶ்ச ராகவ:' என்று ராமனுக்குப் பன்னிரண்டு வயதென்று ராவணனேடு சொல் லினன். ஆகையால் விவாஹகாலத்தில் ராமனுக்குப் பன்னிரண்டு ஸம்வத்ஸரங்கள். விவாஹமான பின்பு 'ஸமா த்வாதஶ தத்ரா ஹம் ராகவஸ்ய நிவேஶநே। புஞ்ஜாநாமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ' என்றும், 'உஷித்வா த்வாதஶ ஸமா இக்ஷ் வாகூணாம் நிவேஶநே' என்றும் ஸீதை பன்னிரண்டு வர்ஷங்கள் அயோத்யையில் வஸித்திருந்ததாகச் சொல்லுகையால், தசரதன்

தூக்கம் தீரவேண்டுமென்று விரும்பிக்கொண்டு நாள்க

சொன்ன விவாஹத்திற்கு முந்தின பன்னிரண்டு வர்ஷங்களும் ஸீதை சொன்ன விவாஹத்திற்குப் பிற்பட்ட பன்னிரண்டு வர்ஷங் களுஞ் சேர்ந்து இருபத்து நான்கு ஸம்வத்ஸரங்கள் ஆகின்றன. 'தத்ர த்ரயோதசே வர்ஷே ராஜா மந்த்ரயத ப்ரபு:' (அந்த விவா ஹத்தின் பின்பு பதின்மூன்றாவது வர்ஷத்தில் அரசன் ராமனுக்குப் பட்டங்கட்ட ஆலோசித்தனன்) என்று ஸீதை சொல்லுகையால் ராமன் இருபத்து நான்கு வயது நிரம்பி இருபத்தைந்தாவது வயதில் வனத்திற்குப் போனானென்பது ஸித்திக்கின்றது. இங்ஙனம் 'ஊந ஷோடசவர்ஷ:' என்கைக்குப் பன்னிரண்டு வர்ஷங்களாகக் கரு த்துக் கொண்டோமாயின், தசரதனது கணக்கும் ஸங்கதமாகின் றது. ஆகையால் ராமனுக்கு எட்டாவது வயதில் உபநயனமும், பன் னிரண்டாவது வயதில் விவாஹமும், பிறகு பன்னிரண்டு வர்ஷங் கள் அயோத்யாவாஸமும், இருபத்தைந்தாவது வயதில் அரண்யப்ர வேசமுமென்று ஸித்தம். மேலும் 'மம பர்த்தா மஹாதேஜா வய ஸா பஞ்சவிம்சக:। அஷ்டாதச ஹி வர்ஷாணி மம ஜந்மநி கண்யதே' என்று ராமனுக்கு இருபத்தைந்தாவது வயதில் ஸீதை தனக் குப் பதினெட்டு வயதென்று சொல்லுகையால் ஸீதை ராமனைக் காட்டிலும் ஏறக்குறைய ஏழுவயது பிற்பட்டவளென்று தெரிகின் றது. அப்பொழுது விவாஹத்தின் பொழுது ராமனுக்குப் பன்னி ரண்டுவயதாகையில், ஸீதைக்கு ஐந்துவயதென்று தோற்றுகின்றது. ஆனால், ஸீதை காட்டுக்குப் போகும்பொழுது பதினெட்டுவயதில் அயோத்யையிலிருந்த பன்னிரண்டு வர்ஷங்களைக் கழிக்கையில் ஆறு வர்ஷங்கள் மிகுகின்றனவாகையால் ஸீதைக்கு முன்பு சொன்ன ஐந்து வர்ஷங்கள் நிரம்பி ஆறாவது வர்ஷத்தில் விவாஹம் நடந்ததெ ன்று ஸித்திக்கின்றது. ஆயினும் ராமன் விவாஹமாயினவுடனே 'ஸீ தயா ஸார்த்தம் விஜஹார பஹூந்ருதூந்' என்று ஸீதையோடு ஸம் போகஸுகம் அனுபவித்ததாகச் சொல்லுகையால் பன்னிரண்டு வய துள்ளபாலனுக்கு அது எப்படி சேருமென்று வினவலாகாது. மிகவும் ஸௌகுமார்யத்தோடிருப்பினும் ப்ரௌடசரீரனாகையால் அவனுக்கு இதுகூடும். இந்தக் காரணத்தைப் பற்றியே ஸீதாதேவிக்கும் ஆறா வது வயதிலேயே யௌவனாரம்பம் பொருந்துகின்றது. ஆயினும், பன்னிரண்டு வயதுள்ள பாலனும் ஆறுவயதுள்ள பாலையும் ஸம்போ

ளைக் கடத்திக்கொண்டிருக்கின்றனன். சக்கவர்த்திகளின்

கஸௌகம் அனுபவிப்பது கூடாதென்றும், ராமனுக்குக் காட்டுக்குப் போகும்பொழுது இருபத்தெட்டு வயது ஆகவேண்டுமென்றும் சிலர் கருத்து. அவர் சொல்லுவது யாதெனில்—'ஊநஷோடஶவர்ஷ:' என்கிறவிடத்தில் பதினாறு வயதிற்குச் சிலமாதங்களே குறைந்திருக்கவேண்டுமேயன்றி நான்கு வர்ஷங்கள் குறைந்திருப்பதாகச்சொல்லத்தகாது. சிலமாதங்கள் குறைந்த பதினாறு வயதுள்ளவனென்று பொருள் ஆகும்பக்ஷத்தில் தசரதன் விச்வாமித்ரரோடு 'பாலோ ஹ்யக்ருதவித்யஶ்ச நவேத்திச பலாபலம்' (பாலன்; வித்யையில் தேர்ந்தவனல்லன்; பலாபலங்களை அறியான்') என்று பதினாறு வயதுள்ளவனைக் குறித்துச்சொல்ல நேருமாவென்னில்—'பால ஆஷோடஶாத் வர்ஷாத்' (பதினாறுவயதுவரையில் பாலன்) என்னும் வசனத்தைப்பற்றியும் பால்ய யௌவன ஸந்தியின்பொழுது பாலனென்று வ்யவஹரிக்கக்கூடுமானது பற்றியும் பாலனென்றானென்று தெரிகின்றது. ஆனல் அந்த ஸம்வத்ஸரத்திலேயே மாரீசன் 'பாலோ த்வாதஶவர்ஷோऽயமக்ருதாஸ்த்ரஶ்ச ராகவ:। அஜாதவ்யஞ்ஜந: ஶ்ரீமாந் பத்மபத்ரநிபேக்ஷண:' (இந்த ராமன் பன்னிரண்டுவயதுள்ளவன், பாலன், அஸ்த்ரவித்யையில் தேராதவன், மீசை முதலிய புருஷசிஹ்னங்கள் இவனுக்கு இன்னும் உண்டாகவில்லை' யென்று மீசையில்லாத பன்னிரண்டு வயதுள்ள பாலனாகச் சொல்லுகையால் பதினாறு வயதென்பது எப்படியென்னில்—மாரீசன் யுத்தபயத்தினால் ப்ரமித்தாவது, அல்லது ராவணனைப் பயப்படுத்துகைக்காவது அங்ஙனஞ்சொல்லி யிருக்கக்கூடும். இல்லையாயின், தன்னை வாயவ்யாஸ்தரம் எய்து தூரத்தில்போக எறிந்த வில்லாளியை 'அக்ருதாஸ்த்ர:' என்றுரைப்பானா? இப்படியே பதினாறு வயதுள்ளவனைப் பன்னிரண்டு வயதுள்ளவ னென்றனன். வில்வித்யை தெரியாத அந்த பால்யத்திலேயே என்னை இவ்வளவு செய்தனன்; இப்பொழுது வயதில் நம்மெல்லோரையும் எவ்வளவு செய்யமாட்டான் என்று ராவணனுக்குச் சங்கை உண்டாகும்பொருட்டே இங்ஙனம் அவன் பொய் உரைத்தானென்று தெரிகின்றது. 'அஜாதவ்யஞ்ஜந:' என்றது 'இக்கன்னிகைக்கு இடையில்லை' என்பதுபோல் அதிசயோக்தி. கொஞ்சமாக மீசை தலைகாட்டுகிறதென்று பொருளேயன்றி மீசை

இயற்கையைச் சேர்ந்த வ்ருத்தாந்தங்களுக்கு உரிய வயதும் பலமும் க்ஷீணிக்கப்பெற்றவளாயினும், சக்கனத்தியின் துர்வாக்யங்களைக் கேட்டமையாலுண்டான மனவருத்தத்தினல் கலகலத்திருப்பவளாயினும், சக்களத்திகளிடம் திரஸ்காரம் பெறும்படியான இந்த அளவில்லாத மனவருத்தத்தை வெகுகாலம் பொறுத்திருக்கப் போறேன். நான் பூர்ண சந்த்ரன் போன்ற உனது அழகான முகத்தைப் பார்க்கப் பெறுதவளாகி, தைன்யம் மிகப்பெற்றுத் திக்கின்றிய பிழைப்பைக்கொண்டு எங்ஙனம் பிழைத்திருப்பேன்? நான் பாக்யமற்றிருப்பவளாகையால், உபவாஸங்களிருந்து தேவதைகளை த்யானஞ்செய்து பல வ்ரதங்களை நடத்தி, மிகுந்த கஷ்டத்துடன் உன்னை வளர்த்ததெல்லாம், இங்ஙனம் உன்னைக்

---

யில்லையென்று பொருளல்ல. 'ஏகவஸ்த்ரதரோ யந்வீ ஶிவீ கநகமாலயா' (ஒரு வஸ்த்ரம் உடுத்துப் பொன்மாலை சிகையிலிடப்பெற்று) இங்கு 'ஏகவஸ்த்ரதரஃ' என்றால்—ஒரு வஸ்த்ரந் தரித்திருந்தானென்று பொருளல்ல; வஸ்த்ரத்தை யெல்லாம் ஒன்றாகச் சேர்த்து இடையில் சுற்றிக்கொண்டு யுத்தத்திற்கு ஸித்தமாயிருந்தானென்று பொருள். ('வயஸா பஞ்சவிம்ஶகஃ' இருபத்தைந்து வயதுடையவன்) என்றவிடம் எப்படி சேருமென்னில்—எப்பொழுதும் இருபத்தைந்து வயதுள்ளவன்போல் புலப்படுபவனென்று நித்யயௌவனம் தெரிகின்றது. தேவதைகளும் எப்பொழுதும் இருபத்தைந்து வயதுள்ளவர்களைப்போல் புலப்படுவார்களென்பது ப்ரஸித்தம். ஆகையால் கௌஸல்யை 'ஸர்ஹை காஷ்மேஷே ராஜ்யம்' என்று பதினேழாவது வயதில் நடக்கும் உபநயனம் முதலாகக் கணக்கிட்டுப் பதினெட்டுவயதென்றனள். ஆகையால் மொத்தத்திற் கூட்டுகையில் ஜன்மகாலம் முதலாக இருபத்தெட்டு வர்ஷங்களாகின்றன. ஆனதுபற்றி ராமனது வனப்ரவேச ஸமயத்தில் இருபத்தெட்டு வயதென்பதுஸித்தம் என்று சொல்லுகின்றனர். ஆயினும் ஸீதை ஸன்யாஸியாகவந்த ராவணனைப் பார்த்து 'வயஸா பஞ்சவிம்ஶகஃ' (இருபத்தைந்து வயதுள்ளவன்) என்னும் வார்த்தை ஶாபபயத்தினல் சொன்னளாகையால் இதுவே யதார்த்தமாகவேண்டும். ஆகையால் இதைப்பற்றி ராமனுக்கு வனப்ரவேசஸமயத்தில் வயஸ்ஸு இருபத்தைந்தென்பதே ஸித்தம்.

காட்டுக்குத் துரத்தி மனவருத்தப் படுவதற்காகவே ஆய்விட்டது. வர்ஷாகாலத்தில் புதுப்ரவாஹம் வந்து மோதப்பெற்ற மஹாநதியின் கரை உடைவதுபோல், இப்படிப்பட்ட துக்க வார்த்தையைக் கேட்ட என் மனம் வெடித்துப் போகவேண்டியிருக்க வெடிக்காதிருக்கின்றதே! ஆகையால் இதைக் கெட்டிக் கல்லென்று நினைக்கிறேன். ஸிம்ஹம், அழுதுகொண்டிருக்கிற பெண்யானைக் கண்டால் அடித்துக் கொல்வதுபோல், என்னை யமன் உடனே கொல்லவேண்டியதாயிருக்கச் செய்தேயும் கொல்லாதிருப்பதனால் எனக்கு நிஜமாகச் சாவில்லை. என்னை வைத்துக்கொள்வதற்கு யமலோகத்தில் இடமும் இல்லையென்பதாகவே எனக்குத் தோற்றுகின்றது. எனது ஹ்ருதயமும் தேஹமும் இப்படிப்பட்ட துக்கத்தில் மூழ்கப் பெற்றும், வெடித்துச் சுக்கலாய்த் தரையில் விழாதிருக்கின்றன; ஆகையால் இவை இரும்பினால் செய்யப்பட்டு மிகவுங் கடினங்களாயிருப்பவை யென்பதே நிஜம். மேலும், தெய்வம் ஏற்படுத்தின காலந் தவிர மற்றைக் காலத்தில் மரணம் நேரிடாதென்பது ஸத்யமே யன்றோ. ஆகையால் கொல்லும்படியான இப்படிப்பட்ட துக்கம் வந்தபோதிலும் எனக்குச் சாவு எங்கிருந்து நேரப்போகின்றது? நான் ஸந்தானம் உண்டாகவேண்டுமென்று செய்த வ்ரதங்களும் தானங்களும் த்யானங்களும் மிகவும் பயனற்றவைகளாயின; நடத்தின தவங்களும் களர் பூமியில் விதைத்த விதைபோல் நிஷ்பலமாயின; மற்ற துக்கங்களெல்லாவற்றிலும் இதுவே எனக்குப் பெரிய துக்கமாயிருக்கின்றது; இதுவரையில் எந்நாளும் அனுபவிக்காத துக்கமன்றோ இது. மிகுந்த மனவருத்தம் வந்து பீடிக்கும்பொழுது, எவராயினும், ஏற்பட்ட காலம் நேரமற்போன போதிலும், தம்மிஷ்டப்படி ப்ராணன்களை விடக்கூடுமாயின், நான், கன்றுக்குட்டியை விட்டுப் பிரிந்திருக்க முடியாத பசுவைப்

போல், உன்னை விட்டுப் பிரிந்திருக்கப் பொறுமல் இப்பொழுதே யமனது கொலுமண்டபத்திற்குப் போய்ச் சேர்ந்திருப்பேன். இப்படி செய்ய முடியாதிருக்கின்றதே. அகால மரணம் உண்டாகமற் போனபோதிலும், ராமா! சந்த்ரன் போல் ப்ரகாசிக்கின்ற அழகிய முகமுள்ள உன்னைக் கண்ணாரப் பார்த்துக்கொண்டிருப்பது நேராமல் விட்டுப் பிரிந்து இங்கு அநாதைப் பிழைப்புப் பிழைத்திருப்பதனால் ப்ரயோஜனம் ஒன்றும் இல்லை; ஆகையால், பசு மிகவும் திடம் தப்பி வாத்ஸல்யத்தினால் கன்றுக் குட்டியைப் பின்றொடர்ந்து செல்வதுபோல், நானும் உன்னுடன் கூடவே காட்டுக்கு வருகின்றேன்' என்றனள். அங்ஙனம் அந்தக் கௌஸல்யை அப்பொழுது துக்கம்பொறுக்கமுடியாமலும், ராமனை விட்டுப் பிரிந்து சக்களத்தியால் தனக்கு நேரக்கூடிய மஹாவ்யஸனத்தை நினைத்தும் ராமன் ஸத்யபாசத்தினால் கட்டுண்டிருப்பதைக் கண்டும் தன் புதல்வன ஒருவரால் கட்டப்பட்டிருக்கக் கண்ட கின்னர மடந்தையைப்போல் மிக்க மனவருத்தத்துடன் கூக்குரலிட்டழுதனள். இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

லக்ஷ்மணன் கௌஸல்யைக்கு ஸமாதானம் மொழிதலும், ராமன் ஸத்யந் தப்பக் கூடாதென்று கூறுதலும்.

அங்ஙனம் ராமனுடைய தாயாகிய கௌஸல்யை கதறிக்கொண்டிருக்கையில், அது கண்டு லக்ஷ்மணன் மிகவும் முகவொளி மழுங்கப்பெற்று அவளது மனவருத்தத்தை அடக்குவதற்காக, [1]அப்பொழுதைக்குத் தகுந்த வசனத்தை மொழிந்தனன். 'கௌரவிக்கத் தகுந்த

---

1 இங்கு 'தத்காலஸத்ருசம் வச:' என்று மூலம். அந்தக் காலத்துக்குத் தகுந்த வார்த்தையை. அதாவது—அப்பொழுது கௌஸல்யையின் மனவருத்தத்தைப் போக்குவதற்காக அவ்வாறு பேசினனன்றி மனப்பூர்வமாக அங்ஙனஞ் சொல்லவில்லையென்று கருத்து.

மஹானுபாவையே! பெண்ணாகப் பிறந்தவளொருத்தியின் வார்த்தைக்கு உட்பட்டு ராமன் ராஜ்யத்தை விட்டுக் காட்டுக்குப் போவது உனக்கேயன்றி எனக்குங்கூட ஸம்மதப்படவில்லை. அரசனும் முதிர்ந்த கிழவனாயிருக்கின்றனன்; ஆகையால் அவனது புத்தி தலைகீழாயிருக்கின்றது. மேலும், ஶப்தாதி விஷயங்களால் பறியுண்டு அவற்றில் மிகுந்த மனவிருப்பங் கொண்டவன்; மன்மதனுக்கு அதீனமாயிருப்பவன்; ஆகையால் இப்படிப்பட்டவன், கைகேயி தூண்டிக்கொண்டிருக்கையில், எந்த வார்த்தையைத் தான் சொல்லாதிருப்பான்? அயுக்தங்கள் நூறாயினுஞ் சொல்லுவான். ஆகையால் அவன் வார்த்தையைப் பாராட்டலாகாது. 'ராஜா என்ன செய்வார்? இது ராமனது தோஷம்' என்பதற்கு அவகாசமே இல்லை; ராஜ்யத்தை விட்டுக் காட்டுக்குப் போயிருக்கும்படி வெளியே துரத்துவதற்குரிய ராஜத்ரோஹமாவது, மற்றும் எந்த மஹாபாதகமாவது ராமனிடத்தில் இருப்பதாக எனக்குப் புலப்படவில்லை. (வ்ருத்தனாகிய தந்தை காமவிகாரத்துக்கு ஆளாகி ஸ்த்ரீயுடன் கூடி லஜ்ஜையென்பது சிறிதுமில்லாமல் இங்ஙனஞ் செய்கின்றானாகையால், தர்மத்தினின்றுந் தவறின அரசனைக் கொலைசெய்வதுபோல், அவனைக் கொன்றுவிடுகின்றேன்) ராமனுக்கு மிகவும் சத்ருவாயிருப்பவனாவது, ராமனால் அவமானம் பெற்றவனாவது எவனாயினும் ராமன் மேல் பரோக்ஷத்திலும் தோஷஞ்சொல்லுகிறவன் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இனி ப்ரத்யக்ஷத்தில் சொல்பவன் எவன்? ஆகையால் ராமனிடத்தில் தோஷமென்பது சிறிதும் அனுமானிக்கவுங் கூட முடியாது. தேவதைகளைப் போன்றவனாகிக் [1]கௌடில்யமென்பதின்றிப்பெரியோர்களால் நன்கு கற்பிக்கப்பெற்று இந்த்ரியங்களை யெல்லாம் தன்வழி போகவொட்டாமல் வென்று,

---

1 கௌடில்யம்-மனக்கோணல்.

பகைவரிடத்திலும் ப்ரீதியைப்பாராட்டிக்கொண்டு தர்மமே வடிவங்கொண்டாற் போல் புலப்படுகின்ற ராமன் நிர்த்தோஷனென்பது ப்ரத்யக்ஷமாயிருக்க, அப்படிப்பட்ட [1] பிள்ளையை எந்தக்காரணமும் இன்றித் தார்மிகனாயிருப்பவன் எவன்தான் கைவிடுவான்? அப்படிப்பட்ட குமாரனாகிய ராமனைக் காரணமொன்றுமின்றியே கைவிட்ட தசரதன் தார்மிகனல்லன்; துஷ்டனாகையால் அவன் வார்த்தையைக் கைபற்றலாகாது. ஆனதுபற்றி முதிர்ந்தவனாயினும் [2] வயதுவரப்பெற்றவன்போல் காமாவேசபரவசனாகிய மன்னவன் மொழிந்த அவ்வார்த்தையை, ராஜநீதியைப் பற்றி ஆலோசிப்பானாயின் எந்தப் புதல்வன் தான் மனப் பூர்வமாக அங்கீகரிப்பான்? அண்ணா! உன்னைக் காட்டுக்கு அனுப்பும் விஷயம் எவனுக்கும் தெரியாதிருக்கும் பொழுது முன்னமே நீ என்னுடன் கூடி ராஜ்யத்தையெல்லாம் ஸ்வாதீனப்படுத்திக் கொள்வாயாக. நான் வில்லைத் தரித்துப் பார்ஶ்வத்தில் நின்று பாதுகாத்துக் கொண்டிருக்கையில், யமனைப் போல் மிகவும் பயங்கரமாய்ப் புலப்பட்டுக் கொண்டு நிற்கின்ற உன்னெதிரில் உன்னைக்காட்டிலும் அதிக பௌருஷங் காட்டவல்லவன் எவன்? அப்படிப்பட்ட உனது ஆஜ்ஞையை எவன் தான் உல்லங்கனஞ் செய்ய நேரும்? ஆண்சிங்கமே! இவ்வயோத்யா நகரத்திலுள்ள ஜனங்கள் உனக்குப்ரதிகூலம் ஏதாயினும்செய்ய முயல்வார்களாயின், அவர்களெல்லோரையும் கூரானபாணங்களைக்கொண்டு முடித்து அயோத்யையில் ஒருமனுஷ்யனும் இல்லாது போகும்படிக்குச் செய்கின்றனன். இன்னும் பரதன் பக்ஷத்தை அவலம்பித்திருப்பவர்களாயினும், அவனுக்கு ஹிதத்தை விரும்பும் மற்றை எவராயினும் எங்காயினும புலப்படுவார்களாயின், அவர்களெல்லோரையும் கொன்றுவிடுவேன். மிருதுவாயிருப்பவன்

1 பிள்ளை யென்கையால் தோஷம் இருந்தாலும் விடக்கூடாத ஸம்பந்தமுடையவனென்றமை தோற்றுகிறது.

2 வயது—காமவிகாரத்திற்கிடமான இளம்பருவம்.

அவமதிக்கப் படுவானென்பது ப்ரஸித்தமேயல்லவா? ஆகையால் மிருதுவாயிராமல் தீக்ஷ்ணமாக நாம் கார்யத்தைச் செய்யவேண்டும். நமது தந்தை துஷ்டனுகி, கைகேயி உத்ஸாஹப்படுத்துகையில் அவளது வார்த்தையைக் கேட்டு நமக்குப் பகைவனுகி விரோதஞ் செய்வானுயின், அவனை முன்பின் பாராமல் விசாரமின்றிப் பிடித்து அடித்துக் கொன்றுவிடுவோம், அவ்வளவு கடுமை கூடாதாயின், கட்டிப் போகட்டு வைப்போம். இங்ஙனஞ் செய்வதற்கு ப்ரமாணம் உண்டு. “ஆசார்யனுயினும் தந்தையாயினும் கர்வித்துக் காமாதிகளுக்கு உட்பட்டு ‘இது தகும், இது தகாது’ என்று தெரியாமல் எல்லை மீறித் தப்புவழியே நடப்பானுயின், அவனுக்குத் தண்டனை செய்யவேண்டும்” என்று தர்மசாஸ்த்ரம் சொல்லுகிறது. புருஷசிகாமணீ! அது அப்படியிருக்கட்டும். உனக்கு தர்மத்தின்படி ப்ராப்தமாயிருக்கின்ற இந்த ராஜ்யத்தை அரசன் நம்மை அவமதிக்கும்படியான எந்த பலம் தனக்கு இருக்கிறதென்று, அல்லது உனக்குக் கொடாதிருப்பதற்கு எந்தக் காரணம் உளதென்று நினைத்து உனக்குக் கொடுக்காமல் கைகேயிக்குக் கொடுக்க விரும்புகின்றனன். அவனுக்கு அப்படிப்பட்ட பலமும் காரணமும் இரண்டும் இல்லை. பகைவரை அடக்கவல்ல பராக்ரமம் பொருந்திய உன்னோடும் என்னோடும் மிக்க மேலான விரோதத்தை ஏறிட்டுக்கொண்டு பரதனுக்கு ராஜ்யங்கொடுக்க இம்மன்னவனுக்கு யாது வல்லமை யிருக்கின்றது. நானுங்கூட பரதனைப்போல் தாயாதியே; ஆயினும் எனக்கு ஸத்யமாகவே அண்ணனுகிய ராமன்மீது மனப்பூர்வமான அனுராகம் உண்டு; உளதென்று உன் முன்பு நான் ஸத்யத்தின் மேலும் தனுஸ்ஸின் மேலும் தானத்தின் மேலும் தேவதார்ச்சனம் முதலியவற்றின் மேலும் ப்ரமாணஞ் செய்கின்றனன். ஃ அம்மா! எரிகின்ற நெருப்பிலாயினும்

ராமன் குதிப்பானாயின், நான் அவனுக்கு முன்னதாகவே அதில் குதித்துவிட்டேனென்று நிச்சயம் பெறுவாயாக. இனி அவன் காட்டுக்குப் போவானாயின், நானுங்கூடவே போவேனென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? ஸூர்யன் உதித்துக் கிரணஸமூஹங்களால் இருட்டைப் போக்குவதுபோல் நானும் பராக்ரமத்தினால் உன் துக்கத்தைப் போக்குகிறேன்; என் பராக்ரமத்தை அன்னையும் பார்க்கட்டும்; ராமனும் பார்ப்பானாக' என்றனன். இங்ஙனம் மஹானுபாவனாகிய லக்ஷ்மணன் சொன்ன வார்த்தையைக் கேட்டுக் கௌஸல்யை அழுதுகொண்டே 'துக்கம் தீருமா!' என்னும் விருப்பத்துடன் ராமனைப் பார்த்து 'குழந்தாய்! உன் தம்பி லக்ஷ்மணன் சொல்லுகிற வார்த்தைகளைக் கேட்டனையன்றோ? அவை உனக்கு ஸம்மதமாயின், இதற்குமேற் செய்யவேண்டிய கார்யங்களைச் செய்வாயாக. எனது சக்களத்தியாகிய கைகேயி அதர்மமாகச் சொன்ன மொழியைக் கேட்டுச் சோகத்திலாழ்ந்து பரிதபித்துக் கிடக்கிற என்னைக் கைவிட்டு இங்கிருந்து நீ போகக்கூடாது. நீ தர்மங்களெல்லாம் அறிந்தவன்; ஆகையால் பரமதார்மிகனாயிருந்து தர்மத்தை ஆசரிக்க வேண்டுமென்று விருப்பமுறுவாயாயின், நீ இங்குத்தானே இருந்து எனக்குச் சுஶ்ரூஷை செய்துகொண்டு ஒப்பின்றிய இம்மேலான தர்மத்தை ஆசரிப்பாயாக. மாத்ரு சுஶ்ரூஷையைக் காட்டிலும் மேலான தர்மம் இல்லையன்றோ! முன்பு கஶ்யபரது குமாரர்களில் ஒருவன் தாய்க்குச் சுஶ்ரூஷை செய்ய விரும்பி அதற்காக நியமத்துடன் க்ருஹத்திலேயே வாஸஞ்செய்துகொண்டிருந்து மாத்ருசுஶ்ரூஷையென்னும் பெருந்தவத்தைப் பெற்று ஸ்வர்க்கலோகஞ் சென்றனன். உனக்கு உன் தந்தையாகிய மஹாராஜன்

எப்படி கௌரவத்துடன் பூஜிக்கத் தகுந்தவனோ, அப்படியே நானும் தாயாகையால் பூஜிக்கத்தக்கவள்; ஆகையால் தமப்பன்வார்த்தையைப்போலவே என்வார்த்தையையும் நீ அங்கீகரிக்கவேண்டுவது ஆவஶ்யகம். காட்டுக்குப் போக நான் அநுமதி கொடுக்கமாட்டேன். நீ இங்கிருந்து எப்படியாயினும் அரண்யத்திற்குப் போகக் கூடாது. உன்னைத் துறந்த பின்பு எனக்குப் பிழைப்பு எதுக்காக? ஸுகந்தானும் எதுக்கு? நீ இல்லாமல் இங்கேயிருந்து ஸமஸ்த போகங்களையும் அநுபவிப்பதைக் காட்டிலும், உன்னோடுகூடப் புல்லைத் தின்றுகொண்டாயினும் இருப்பதே எனக்கு நன்று. துக்கத்தினால் தடுமாறுகின்ற என்னைத் துறந்துவிட்டுக் காட்டுக்குப்போவாயாயின், நான் இங்கு ப்ராயோபவேசஞ் செய்ய முயன்று அன்னபானங்களின்றியிருந்து ப்ராணன்களை விட்டுவிடுவேனன்றி எவ்வளவும் பிழைத்திருக்கப் போறேன். [1] உனக்காக நான் ப்ராணனை விடுங்காரணத்தைப் பற்றி, நதீபதியாகிய ஸமுத்ரம் அதர்மத்தை ஆசரித்து ப்ரஹ்மஹத்யைக் கொப்பான பாபத்தைப் பெற்றாற்போல்,

1 ப்ரஹ்மஹத்யையாவது ப்ராஹ்மணனைக் கொல்லுவதாலுண்டான பாதகம். ஸமுத்ரத்திற்கு ப்ரஹ்மஹத்யை உண்டானது எங்குந் தெரியவில்லையாகையால், இங்கு ப்ரஹ்மஹத்யையாவது ப்ராஹ்மணனால் உண்டான ஹிம்ஸையென்று பொருள் கொள்வோமாயின், ஸமுத்ரம் பிப்பலாதனென்னும் ப்ராஹ்மணனுக்கு அபகாரஞ் செய்கையில், அந்த ப்ராஹ்மணன் ஒரு தேவதையை எவி ஸமுத்ரத்தைப் பீடித்தானாகையால் பிப்பலாதனென்னும் ப்ராஹ்மணனால் உண்டான ஹிம்ஸையையே ஸமுத்ரத்திற்கு ப்ரஹ்மஹத்யையாக இங்குக் கொள்ளவேண்டும். அன்றியே கௌஸல்யை, முதலில் காஶ்யபர் மாத்ரு ஶுஶ்ரூஷை செய்து அதற்குப் பலமாக ஸ்வர்க்கலோகம் பெற்றதைச் சொல்லி, இப்பொழுது மாத்ரு ஶுஶ்ரூஷை செய்யாத பக்ஷத்தில் உண்டாகும் துஷ்பலத்துக்கு உதாஹரணமாக

உலகமெங்கும் ப்ரஸித்தமாகும்படி நீயும் துர்க்கதியைப் பெறுவாய்' என்றனள். அவ்வாறு கதறிக்கொண்டு முக வொளி மழுங்கப் பெற்றிருக்குந் தாயாகிய கௌஸல்யை யைப் பார்த்து ராமன் தர்மஸ்வபாவனுகையால், தர்மம் பொருந்திய வசனங்களைக்கொண்டு 'தாயே! உன் வார்த் தையின்படி நடப்பது அவஶ்யமே; ஆயினும் தந்தை யின் வார்த்தை முந்தினதாகையால் பலமுடையதாயிரு க்கின்றது. ஆகையால் தந்தையின் வார்த்தையை அனு வாயினும் நான் தவறுவது யுக்தமன்று. உன்னைத்தலை சாய்த்து வணங்கி என்னிடத்தில் மனக்கலக்கமில்லா திருக்கும்படி வேண்டுகின்றனன்; நான் தந்தையின் வச னத்தை அனுஸரித்துக் காட்டுக்குப் போக விரும்பு கின்றனன்; எனக்கு அனுமதி கொடுப்பாயாக. 'எனக்கு அனர்த்தத்தை விளைக்கிற தந்தையின் வசனத்தை எப் படி அனுஷ்டிக்கலாம்?' என்னில் சொல்லுகிறேன். ஸகல சாஸ்த்ரங்களையும் உணர்ந்தபண்டிதரும் தர்மங்களை நன்கு அறிந்தவரும் சாஸ்த்ரங்களிற் சொல்லியபடி வ்ரதங்களை அனுஷ்டிப்பதில் மிக்க மன ஊக்கமுடைய வருமாகிய கண்டு மஹர்ஷி பித்ருவசனபரிபாலனத்திற்காகக் கோ வதமும் செய்தனர். முன்பு நமது வம்சத்தில் ஸகர சக் ரவர்த்தியின் குமாரர்கள் அனைவரும் தந்தையாகியஸகர ரசக்ரவர்த்தியின் கட்டளைப்படி பூமியைத் தோண்டிக் கொண்டு சென்று மிகவும் பயங்கரமாகிய வதத்தைப் பெற்றனர். ஜமதக்னியின் புதல்வனாகிய பரசுராமன் தந் தையினது வசனத்தைப் பரிபாலனஞ் செய்ய முயன்று

---

ஸமுத்ரத்தைச் சொன்னுளென்று கருத்துக்கொண்டபோது—ஸமு த்ரம் மாதாவுக்கு மனவருத்தத்தை உண்டாக்கின அதர்மத்தினுல் (வீரஹ்மஹத்யாம்) ப்ரஹ்மஹத்யையை - ப்ரஹ்மஹத்யையாலுண் டாகுமவ்வளவு நரக விசேஷத்தைப் பெற்ருளென்னும் புராண கதை இங்குக் கண்டுகொள்வது.

பெற்ற தாயாகிய ரேணுகையைத் தன் கைகளாலேயே கொன்றுவிட்டனர். இப்படி பசுவையும் தம்மையும் பெற்ற தாயாரையும் கொன்று தமப்பனது ஆஜ்ஞையை நிறைவேற்ற வேண்டியதாயிருக்கின்றதே! இனித் தாய்க்குக் கொஞ்சகாலம் மனவருத்த மாத்ரத்தை உண்டுபண்ணுவதற்காகப் பின்வாங்கி அப்படிப்பட்ட தந்தையின் ஆஜ்ஞையைத் தவிர்ந்து காட்டுக்கு எப்படி போகாதிருக்க நேரும்? தாயே! தேவர்களோடொத்தவர்களாகிய கீழ்ச் சொன்ன கண்டு மஹர்ஷி முதலானவர்களும் இன்னும் மற்றவர்களும் செய்தபடி நானும் எனது தந்தைக்கு ஹிதமாக அவரது வார்த்தையை உத்ஸாஹத்துடன் நடத்துவேனன்றி வீண் செய்யமாட்டேன். நான் ஒருவனே இங்ஙனம் தந்தையின் ஆஜ்ஞைப்படி செய்கிறேனென்பது இல்லையன்றோ? தேவி! இப்பொழுது நான் உனக்குச் சொன்ன மஹானுபாவர்களும் செய்திருக்கிறார்களே. நான் உனக்கு மனவருத்தத்தை விளைவிக்கவேண்டுமென்று, இதுவரையிலும் இல்லாமல் பூர்வாசாரத்திற்குவிருத்தமாயிருக்கும்படியான புதியதான ஒரு தர்மத்தைச் செய்யவில்லை. மஹானுபாவர்களான [1] பூர்விகர்கள் ஸம்மதித்து அனுஸரித்துப் போந்த இங்

1 (பூர்வர்கள் ஸம்மதித்து அனுஸரித்துப் போந்த) என்கையால் 'பூர்வர்கள் ஸம்மதிக்காதவைபோல் அல்ல இது' என்று தோற்றுவிக்கப்பட்டது. அதாவது—சந்த்ரன் செய்த தாரா ஸம்போகம் முதலியவை போலல்லவென்ற கருத்து. சந்த்ரன் செய்த தாரா ஸம்போகத்தைப் பெரியோர்கள் அங்கீகரிக்கவில்லை. பரதாரகமனத்தைப் பெரியோர்கள் நிந்திக்கிறார்களல்லவா? ஆனால் கோவதம் மாத்ருவதம் முதலிய பூர்விகவ்யாபாரங்கள் ஸாஹஸகார்யமாகையால் அதர்மங்களேயன்றோ வென்னில்—அப்படியன்று. பித்ருநியோகமின்றியில் செய்தபொழுதே அவை ஸாஹஸகார்யங்களாகின்றன. ஆகையால் தந்தையின் கட்டளையினால் செய்யும்பொழுது அவை அதர்மங்களாகா. 'பிதுர்வசநம் மாதா கௌரவேணாதிரிச்யதே' (பூஜ

தப் பித்ருவாக்ய பரிபாலனமென்னும் க்ரமத்தை அனுஸரிக்கிறேனன்றி வேறில்லை. பூலோகத்தில் அவஶ்யமாகப் பித்ருவசனபரிபாலனஞ் செய்யவேண்டியதாகையால் அதைச் செய்யாதிருக்க முடியாது. ஒருகால் தாய் முதலிய மற்றவர்களுக்கு மனவருத்தம் உண்டாகக் கூடியதாயினும் தமப்பனது ஆஜ்ஞையைச் செய்பவனுக்கு எவ்வித கெடுதியும் நேரிடாது' என்றனன். ராமன் வார்த்தை சொல்லக் கற்றறிந்தவர்கள் யாவரிலும் அப்படியே மேலான வில்லாளிகள் அனைவரிலும் மேன்மை பெற்றிருப்பவன்; அவன் தாயுடன் இவ்வாறு மொழிந்து, பிறகு லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மண! உனக்கு என்னிடத்திலுள்ள ஸ்னேஹத்திற்கு நிகரில்லை; உன் பராக்ரமும் பலமும் ப்ரதாபமும் மற்றை யாவர்க்கும் உண்டாக நேராதவை. இதை நான் அறிவேன். சுபலக்ஷணங்கள் அமைந்திருக்கப் பெற்றவனே! என் தாயாகிய கௌஸல்யை ஸத்யத்தின் ஸ்வரூபத்தையும் சாந்தி ஸ்வரூபத்தையும் அறியாதவளாகையால் மிகுந்த மனவருத்தங் கொண்டிருக்கின்றனள். அவையெல்லாந் தெரிந்த நீ ஏன் இப்படி மொழிந்தனை? உலகத்தில் ஸமஸ்த புருஷார்த்தங்களிலும் தர்மமே ஶ்ரேஷ்டமா யிருப்பது. ஏனென்னில்—தர்மத்திலேயே ஸத்யம் நிலைபெற்றிருக்கின்றது. உத்தமமான இந்தப் பித்ருவாக்யபரிபாலனமுங்கூட தர்மத்தையே ஆஶ்ரயித்திருப்பதானதுபற்றி இதனால்மிகுந்த தர்மம் உண்டாகக்கூடியது. தர்மத்தில் நிலை நின்று அதை

---

யத்வத்தில் தந்தையைக் காட்டிலும் தாய் நூறு மடங்கு மேலானவள்.) என்கிற வசனம் சுஶ்ரூஷை செய்யும் விஷயத்திலேயன்றி ஆஜ்ஞாபரிபாலனத்திலன்று. தந்தையே ஷியாமகனுகையால் தந்தையினுஜ்ஞையே தாயின் ஆஜ்ஞையைக்காட்டிலும் அதிசயித்திருக்குமென்று தெரியவருகின்றது..



625. ராமன் லக்ஷ்மணனது கோபத்தையும் கௌஸல்யையின் மனவருத்தத்தையும் போக்குதல்.

யே பலமாக விரும்புந்தன்மையன். தந்தைக்காவது தாய்க்காவது ப்ராஹ்மணனுக்காவது சொன்னபடி செய்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து தவறலாகாது. நானும் தந்தைக்குச் சொன்னபடிசெய்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்தனன்; ஆகையால் எனக்குத தந்தையின் ஆஜ்ஞையைச் சிறிதும் உல்லங்கனஞ் செய்யமுடியாது. 'கைகேயியின் ஆஜ்ஞையேயன்றித் தந்தையின் ஆஜ்ஞை எங்கிருந்து வந்தது' என்பாயோ? தந்தையின வார்த்தையைப் பற்றியேயன்று கைகேயி என்னைக் காட்டுக்குப் போவென்று கட்டளையிட்டனள். ஆகையால் தமப்பனுரையுங் கொன்று ராஜ்யத்தைக் கைப்பற்றவேண்டுமென்று மிகுந்த மிடுக்குள்ள [1] ராஜதர்மத்தைப் பொருந்திய இக்கொடும்புத்தியைத் துறப்பாயாக. [2] தர்மத்தையே கைப்பற்றுவாயாக. இனிமேல் இப்படிப்பட்ட கொடுந்தன்மையில் மனஞ் செலுத்தவேண்டாம். என் புத்தியை அனுஸரித்து நடந்துகொள்வாயாக' என்றனன். ராமன் இவ்வாறு ஸ்நேஹத்தினல் இனிதாயிருக்கும்படி தம்பியாகிய லக்ஷ்மணனுக்கு மொழிந்து மீளவும் கௌஸல்யையைப் பார்த்துத்தலை வணக்கி [3]வந்தித்துக் கைகளைக்கூப்பிக்கொண்டு மொழிந்தனன். 'தேவீ! நான் காட்டுக்குப் போகின்றனன். எனக்கு அனுமதி கொடுப்பாயாக. என் ப்ராணன்களின் மேல் உனக்கு ஆணையிடுகிறேன். என்னிஷ்டத்தை நீ மறுப்பாயாயின், என் ப்ராணன்களை உபேக்ஷை செய்தவளாவாய். ஆகையால் நான் அரண்யத்திற்குப் போகத் தடை சொல்லவேண்டாம்.

---

1 இங்கு-ராஜாக்களாவார் — கேவலசூரர்கள்.

2 கேவல நீதியையன்றித் தர்மத்தோடு கூடிய நீதியை அனுஷ்டிக்க வேண்டுமென்று இங்குக் கருத்து. தர்மத்தை விட்டுக் கேவல நீதியையே அவலம்பிக்கத் தகுமென்று லோகாயதமதம். அதை இந்தச் சாஸ்த்ரங் கண்டித்து தர்மத்தையே செய்யவேண்டுமென்று ஸ்தாபிக்கின்றது. ஆகையால் லக்ஷ்மணன், ஆங்காங்கு லோகாயதமத விஷயங்களை உபந்யஸிக்கையில் ராமன் அவைகளைக் கண்டித்து தர்மத்தையே ஸ்தாபித்துக்கொண்டு செல்வானென்பது ரஹஸ்யம்.

3 வந்தித்து-நமஸ்காரஞ் செய்து.

சுபமாகப் போய் வரும்படிக்கு எனக்குச் செய்யவேண்டிய மங்கலாசாரங்களை நடத்துவாயாக. 'என் வார்த்தைப்படி நடக்கவேண்டாமோ?' என்றுரைக்க வேண்டாம். முதலிற் சொன்ன தந்தையின் வார்த்தைப்படி அரண்யத்திற்குச் சென்று என் ப்ரதிஜ்ஞையைத் தீர்த்துக்கொண்டு, முன்பு ஸ்வர்க்க லோகத்தை விட்டயயாதி மீளவும் அதை அடைந்தாற்போலவே அரண்யத்தினின்றும் திரும்பி அயோத்யாபுரத்திற்கு வந்து விடுவேன். 'அத்தனை நாள் வரையில் நான் உன்னை எங்ஙனம் பிரிந்திருப்பேன்' என்ன வேண்டாம். தாயே! என் பிரிவாலுண்டாகும் சோகத்தை மனத்திலேயே நன்கு அடக்கிக் கொண்டிருப்பாயாக; இதைப்பற்றி நீ சோகிக்கலாகாது. தந்தையின் வசனத்தை நிறைவேற்றிவிட்டு மீண்டு நான் இவ்விடம் வந்து சேருகிறேன். ஆகையால் அதுவரையில் இந்த சோகத்தை அடக்கிக்கொண்டிருப்பாயாக. தந்தையின் ஆஜ்ஞையை நிறைவேற்ற வேண்டிய பாரம் என்னொருவனுடையது மாத்ரமேயன்று; தந்தையின் ஆஜ்ஞையை நீயும் நானும் ஸீதையும் லக்ஷ்மணனும் ஸுமித்ரையும் ஆகிய நாமெல்லோரும் கலந்து நிறைவேற்ற வேண்டியவர்களாயிருக்கின்றனம். இது அநாதிகால மாரம்பித்து நடந்து வருந்தர்மமேயன்றி நானுகக் கற்பித்துச் சொல்லுவதன்று. தாயே! நீ இந்தப் பூஜாத்ரவ்யங்களை விட்டுத் துயரத்தை மனத்தில் அடக்கிக்கொண்டு, நான் வனவாஸத்திற்காக முயன்ற புத்தியை நீயும் அனுமதி செய்து என்னை அனுப்ப வேண்டும். இப்புத்தி பித்ரு வசன பரிபாலன மென்னுந் தர்மத்தை அனுஸரித்திருப்பதாகையால் நீயும் இதை அனுஸரிக்க வேண்டியதாயிருக்கின்றது' என்றனன். ராமன் அவ்வாறு மிகுந்த தர்மம் பொருந்தியதாகவும் பெருமிடுக்குடன் கூடியதாகவும் மனக்கலக்கமின்றியதாகவும் மொழிந்த வார்த்தையைக் கேட்டு மூர்ச்சையடைந்தவள் போலிருந்த அம்மஹாராஜ மஹிஷி மனத்தெளிவுபெற்று மீளவும் ராமனைப் பார்த்துமேல் வரு

மாறுமொழிந்தனள். 'பிள்ளாய்! உன்னைப் போஷித்து வளர்த்தது முதலிய எனது தர்மத்தைப் பற்றியும் ஸ்நேஹத்தைப் பற்றியும் தேஹஸம்பந்தத்தைப் பற்றியும், உனக்குத் தந்தை யெப்படியோ அப்படியே நானும் மேன்மைப் படுத்துகைக்குரிய பெருந்தன்மையுடையவளாகையால் தந்தையின்வார்த்தையைப்போலவே எனது வார்த்தையையும் நீ தவறலாகாது. ஆகையால் உனக்குக் காட்டுக்குப் போகும்படி அநுமதி கொடுக்க மாட்டேன். இவ்வாறு மிகவுந் துக்கித்துக் கொண்டிருக்கிற என்னைக் கைவிட்டு நீ புறப்பட்டுப் போவது யுக்தமன்று. நீ இல்லாமல் எனக்கு இந்த உலகத்தில் பிழைப்பு எதுக்காக? மற்ற பந்துக்கள் தான் எதுக்கு? பரலோகத்தால் தான் ப்ரயோஜனம் என்? பித்ருலோகஞ் சென்று[1]ஸ்வதை பெறினும் பலன் என்? ஸ்வர்க்கலோகம் பெற்று அம்ருதத்தைப் பானஞ் செய்யினும் ஸுகம் ஏது? ஆனந்தத்தைக் கொடுக்கவல்ல மஹர்லோகம் முதலாக மேலுள்ள லோகங்களில் உள்ள ப்ராணிஸமூஹங்கள் எல்லோரும் எதிரே வந்து நிற்பதைக்காட்டிலும், ஒரு முஹூர்த்தகாலமாயினும் உன்னருகில் இருக்க நேருமாயின் அதுவே மிகவும் சிறப்புற்றதாம். எனக்கு அதைக்காட்டிலும் ஒரு முஹூர்த்தகால மாயினும் நீ என் முன்பு நிற்பதே மிகுந்த நலமாகத்தோற்றுகின்றது' என்றனள். [2]மனிதர்கள் கொள்ளிக்கட்டையைக் கொண்டு

---

1 பித்ருக்களுக்குக் கொடுக்கும் ஹவிஸ்ஸு.

2 'நரைரிவோல் காபிரபோஹ்யமாநோ மஹாகஜோ த்வாந்தமநுப்ரவிஷ்ட:। பூயப்ரஜஜ்வால விலாபமேநம் நிஶம்ய ராம: கருணம் ஜநந்யா:' என்று மூலம். இது கோவிந்தராஜீயபாடம். 'நரைரிவோல்காபி ரபோஹ்யமாநோ மஹாகஜோ த்வாந்தமநுப்ரவிஷ்ட: । ஸீத்யா ப்ரஜஜ்வால விலாபமேநம் நிஶம்ய ராம: கருணஞ் ஜநந்யா:' என்று மஹேஶ்வரதீர்த்த பாடம். இதற்கு—ராத்ரியில் மனிதர்கள். கொள்ளிக்கட்டைகளைக் கொண்டு பயப்படுத்துகையில், (த்வாந்தம்)

பாதித்து வரவொட்டாமல் தடுத்தபோதிலும் அதைப் பொருள் செய்யாமல் பிடித்த வழியேபோகும் மஹாகஜம்போல், கௌஸல்யையும் லக்ஷ்மணனும் க்ரூரமான வார்த்தைகளைச் சொல்லி வேண்டாமென்று தடுத்தபோதிலும் ராமன் தர்ம மார்க்கத்தையே தொடர்ந்து செல்பவனாகையால், தாயாகிய கௌஸல்யை மிகவும் மன இரக்கமுண்டாகும்படி இவ்வாறு கூக்குரலிட்டதைக் கேட்டும், மேன்மேலும்[1] ஸம்ப்ரமத்துடன் தான் பிடித்ததையே நிலை நிறுத்த முயன்றனன். ப்ரஜ்ஞையற்றவள் போன்ற தாயாரையும் இரக்கந் தோற்றும்படி மனவருத்தமுற்றிருக்கின்ற லக்ஷ்மணனையும் பார்த்து, ராமன் தர்மத்தில் நிலைநின்றவனாகையால் அப்படிப்பட்ட தர்மஸங்கடத்தில் அவனைப் போன்றவனே உரைக்கத் தகுந்தனவும் தர்மத்தினின்று நழுவாதவைகளுமாகிய வார்த்தைகளை இங்ஙனம் மொழிந்தனன். 'லக்ஷ்மணா! உனக்கு என்னிடத்தில் உள்ள பக்தியையும் உன்பராக்ரமத்தையும் நான் எப்பொழுதும் அறிந்திருக்கிறேனென்பது உனக்குந் தெரிந்த விஷயமே? நீயோ என்றால் தர்மத்திலேயே நிலை நின்றிருக்கவேண்டுமென்னும் எனது அபிப்ராயத்தை நன்கு தெரிந்துகொள்ளாமல் தாயுடன் கூடி மிகவும் மனவருத்த முண்டாகும்படி என்னைப் பீடிக்கின்றனை. அப்பா! [2] தர்மத்திற்குப் பலன்களாகிய

---

இருட்டில் அகப்பட்டுக்கொண்ட மஹாகஜம் எப்படி, (ஹீத்யா) பயத்தினால், (ப்ரஜ்வலேத்) மிகவும் பரிதபிக்குமோ அப்படியே தன் தாயினுடைய கருணமான அழுகுரலைக் கேட்டு, (ப்ரஜஜ்வால) பரிதபித்தவனாயினன்—என்று பொருள் கொள்ளவேணும்.

1 ஸம்ப்ரமம்—பரபரப்பு.

2 அன்றியே—'உலகத்தில் பலஸாதனங்களாக சாஸ்த்ரங்களில் விச்சயிக்கப்பட்ட தர்மம் அர்த்தம் காமம் ஆகிய மூன்று புருஷார்த்தங்களும். அனுகூலையும் ப்ரீதிக்கிடமாயிருப்பவளும் ஸுபுத்ரவதியுமாகிய பார்யையைப்போல், பலத்திற்கு ஸாதனங்களே யாகும்.

ஸௌக்யங்களை உண்டுபண்ணும் காரணங்கள் தர்ம அர்த்த காமங்களென்று லோகத்தில் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றன. அந்தப் புருஷார்த்தங்கள் அனைத்தும் அந்த தாமத்திலேயே நிலை நின்றிருக்கும். அனைத்துக்கும் அதுவே ஆதாரம். இதற்கு ஸந்தேஹம் இல்லை. ஒரு பார்யை அனுகூலையாகி தர்மத்தையும், அன்பிற்கிடமாயிருந்து காமத்தையும், நற்குணமுள்ள பிள்ளையைப் பெற்றவளாகி அப்புத்ரனது பாக்யரேகையால் அர்த்தத்தையும், எப்படி விளைவிக்க வல்லளோ, அப்படியே ஒரு தர்மத்தை அனுஷ்டித்தோமாயின், அதனால் ஸௌக்யத்தைக் கொடுக்கும்படியான அர்த்தம் காமம் முதலிய ஸமஸ்த புருஷார்த்தங்களும் ஸித்திக்கின்றன. எந்தக் கார்யத்தில் தர்மம் அர்த்தம் காமம் என்கிற இம்மூன்று புருஷார்த்தங்களும் நேரிடாவோ, அப்படிப்பட்ட கார்யத்தைச் செய்ய விரும்பலாகாது. தர்மம் ஸித்திக்கும்படியான கார்யத்தையே செய்யவேண்டும். 'தர்மமில்லாமல் கேவலம் அர்த்த காமங்களை விளைவிக்கவல்ல கார்யங்களை ஏன்செய்யலாகாது' என்பாயாயின், உலகத்தில் கேவலம் அர்த்தத்தில் மனஞ் செலுத்தி அதற்காக முயற்சி செய்பவன் உலகமெங்கும் த்வேஷத்துக்கிருப்பிடமாகின்றனன். கேவலம் காமத்

---

இப்படி மூன்றும் ஸமானமாகப் பலஸாதனங்களாகுமாயின், அவைகளில் எதையாயினும் ஒன்றைக் கைப்பற்றலாகாதோவென்னில் அப்படியன்று. மூன்றும் உண்டாகாமல் தர்மம் மாத்ரமே விளையும்படியான கார்யத்திற்கே முயற்சி செய்யவேண்டும். ஏனென்னில்— அர்த்தத்தில் மனஞ் செல்லப்பெற்றவன் த்வேஷத்திற்கிடமாகின்றனன். காமத்தில் மனவூக்கங் கொண்டிருக்கையும் நன்றன்று. ஆகையால் கேவலதர்மமே ஆஸ்ரயிக்கத்தக்கதா யிருக்கின்றது' என்றும் பொருள் கொள்ளலாகும்.

திற்றுனே ஆழ்ந்திருக்கையும் அவ்வளவு [1] ப்ரசஸ்தமா யிருப்பதன்றல்லவா? நமக்கு அவர் ஆசார்யர்; மேலும், மன்னவர்; பின்னும், வயது சென்றவரும் தந்தையுமா யிருக்கின்றனர். அவர், கோபத்தினுலாவது, ஸந்தோஷத்தினுலாவது, அல்லது காமத்தினுலாவது தான் செய்த ப்ரதிஜ்ஞையைப் பரிபாலனஞ் செய்யவேண்டு மென்னும் தர்மத்தைப்பற்றி ஏதாயினும் ஒரு கார்யத்தைச் செய்ய நமக்குக் கட்டளையிடுவாராயின், கொடுந்தன்மையனு யிருப்பவன் செய்யானேயன்றி, நன்மனமுடையவன் எவன்தான் செய்யாதிருக்க முடியும்? நான் க்ரூரஸ்வபாவனல்லேன். ஆகையால் தந்தையைக் கொண்டு பரதனுக்குப் பட்டாபிஷேகத்தையும் எனக்கு வனவாஸத்தையும் செய்வித்து அவரது ப்ரதிஜ்ஞையைப் பரிபூர்ணமாகவே செய்யவேண்டிய ப்ரகாரங்களில் ஒன்றும் தவருமல் நடத்தித் தீருவேனன்றி, நடத்தாதிருக்க முடியாது. அப்பா! அவர் எனக்கும் பரதனுக்கும் ஆஜ்ஞையிட ப்ரபுவாயிருக்கின்றனர்; தாயாகிய கௌஸல்யைக்கும் அவர் பர்த்தாவாகையால் விசேஷித்து மேன்மைப்படுத்தவேண்டியவர். ஆகையால் கௌஸல்யைக்கும் அவரது ஆஜ்ஞையை மீறிப்போகலாகாது. மேலும், அவளுக்கு அவரே கதி. அவருடைய ஸஹவாஸமே அவளுக்கு தர்மம் (அவரே அவளுக்குப் பரலோகத்தில் நேரிடவேண்டிய நன்மைக்கு ஸாதனம்.) தர்மத்தைத் தவருமல் நடத்துந் தன்மையனும், பூர்விக ராஜர்களைக் காட்டிலும் விசேஷித்துத் தனக்கு ப்ரியதமான மார்க்கத்தின்படி நடக்கும் ஸ்வபாவனுமாகிய அப்படிப்பட்ட பர்த்தா பிழைத்திருக்கையில் பட்டமஹிஷியாகிய இந்தக் கௌஸல்யை, பர்த்தா லோகாந்தரஞ் செல்லப்பெற்று வித

1 ப்ரசஸ்தம்—புகழத்தக்கது.

வையாகிப் பிள்ளையைப் பின்றொடர்ந்து செல்லுகிற மற்றொரு மடந்தையைப்போல், என்னுடன் கூடக் கானகத்திற்கு எப்படி வரக்கூடும்? தாயே! பர்த்தா ஜீவித்திருக்கப்பெற்ற உனக்கு என்னுடன் கூட வருவது யுக்தமன்றாகையால் நான் காட்டுக்குப் போகும்படி எனக்கு அநுமதி கொடுப்பாயாக. ஸ்வர்க்கத்தினின்றும் நழுவின யயாதி, அஷ்டகன் முதலிய தன் தௌஹித்ரர்களது ஸத்ய வசனத்தின்படி மீளவும் ஸ்வர்க்கஞ் சென்று சேர்ந்தாற்போலவே, நானும் பதினான்கு ஸம்வத்ஸரங்களென்கிற நியமம் முடிந்த உடனே மீளவும் ஸுகமாக இவ்விவிடம் வந்து சேரும்படிக்கு [1] எங்களுக்கு மங்கலாசீர்வசனங்களை நடத்துவாயாக. நான் தர்மத்தைக் கைவிட்டு [2] வெறும்புறமான ராஜ்யத்திற்காகப் பெரும்

---

1 இதற்கு—'குருஷ்வநஃ ஸ்வஸ்த்யயநாநி தேவி' என்று மூலம். (நஃ) என்றால் எங்களுக்கு என்று பொருள். 'அஸ்மதோ த்வயோ ஸ்ச' என்று த்விவசனத்திற்கு (இருமைக்கு) பஹுவசனாதேசம் (பன்மை) உண்டாகையால் (எங்களுக்கு) என்றால் எங்களிருவர்க்கும் எனக்கும் லக்ஷ்மணனுக்கும் என்று த்விவசனமே (இருமையே) கொள்ளவேணும். எப்படியென்னில்—இன்னும் ஸீதை தன்னுடன் காட்டுக்கு வருவாளென்கிற அபிப்ராயம் ராமனுக்குத் தெரியாது. 'தீப்தமக்நிமரண்யம்வா யதி ராமஃ ப்ரவேக்ஷ்யதி। ப்ரவிஷ்டம் தத்ர மாம்தேவி த்வம் பூர்வமுபதாரய' (ஜ்வலித்துக்கொண்டிருக்கிற அக்னியிலாவது அரண்யத்திலாவது ராமன் ப்ரவேசிப்பானாயின், என்னை அவ்வக்னியில் அவனுக்கு முன்பாகவே ப்ரவேசித்தவனாக நிச்சயித்துக் கொள் என்று லக்ஷ்மணன் சொல்லியிருக்கையால் அவன் தன்னோடு வருவது ராமனுக்குத் தெரிந்தேயிருக்கின்றது. ஆகையால் (நஃ) என்றால் 'எனக்கும் லக்ஷ்மணனுக்கு' மென்றே ராமன் சொல்லக்கூடுமாகையால் த்விவசனத்தில் (இருமையில்) கருத்துக்கொள்ளவேணும்.

2 வெறும்புறமான—ராஜ்யத்தை அங்கீகரித்தால் பித்ரு வசன பரிபாலன ரூபமான தர்மத்திற்கு ஹானி வருகின்றமையால் தர்மசூன்யமான என்று பொருள்.

பயனை விளக்கவல்ல கீர்த்தியை உபேக்ஷிக்கவல்லனல்லேன். பிழைத்திருப்பது ஸ்வல்பகாலம்; இதற்காக அதர்மத்தைச் செய்து மிகவுந் துச்சமாகிய பூமியைச் சம்பாதிக்க நான் சிறிதும் விரும்பமாட்டேன்' என்றனன். அந்தப் புருஷசிகாமணி இங்ஙனம் தாய்க்குக் கலக்கந் தீர்த்துக் கைகேயி தன்னை வேகமாகப் போவென்று தூண்டிச் சொன்னபடியால் தண்டகாரண்யத்திற்குப் போக நிச்சயித்துக்கொண்டு தம்பியாகிய லக்ஷ்மணனுக்குத்[1] தனது அபிப்ராயத்தை நன்கு தெரிவித்துத் தாயை ப்ரதக்ஷிணஞ் செய்ய மனத்தில் ஸங்கல்பித்துக்கொண்டனன். இருபத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் லக்ஷ்மணனுக்குக் கைகேயி
னிடத்திலுள்ள கோபத்தை
அடக்குதல்.

அனந்தரம் மனவருத்தத்தினால் முகவொளி மழுங்கப்பெற்றுத் தனக்கு மிகவும் அந்தரங்கர்களாயிருப்பவர்களைக்காட்டிலும் மேன்மேலும் மிகுந்திருக்கிற மனப்ரீதியுடையவனாகையால் தனக்கு நேரிடும் விபத்தைக் கண்டு மனம் பொறுக்கமாட்டாமல் பரிதபித்துக் கொண்டிருப்பவனும் பெருத்த ஸர்ப்பம்போல் நெடு மூச்செறிந்து

---

1 இதற்கு (ஶ்ராவய) என்று மூலம். தனது மதத்தை. அதாவது—தர்மரஹஸ்யத்தைப் போதித்தானென்று பொருள். 'உலகத்தில் தர்மம் அர்த்தம் காமம் என்று புருஷார்த்தங்கள் ப்ரஸித்தங்களாயிருக்கின்றன. அவைகளில் தர்மம் எல்லாவற்றிற்கும் மூலமாயிருக்கையாலும் மற்றையிரண்டும் அபாயத்தோடு கூடினவைகளாகையாலும் கேவல தர்மத்தையே கைப்பற்றவேண்டும்' என்கையே ராமனது கருத்து.

கொண்டு கோபாவேசத்தினுல் கண்கள் மிகவும் அகன்றிருக்கப் பெற்றவனும் தனக்கு மிகவும் ப்ரீதிக் கிடமாயிருப்பவனும் உடன்பிறந்தவனுமாகிய லக்ஷ்மணனைத் தனக்கு [1] அபிமுகமாகச் செய்துகொண்டு, ராமன் மனத்தை வென்ற மஹானுபாவனுகையால் எல்லாவற்றிலும் தடையின்றி விளங்கவல்ல தனது பலத்தைக் கொண்டு தன் மனோவிகாரங்களை வெளிக்காட்டாமல் உள்ளேயே அடக்கிக்கொண்டு மேல் வருமாறு கூறினன். 'நீ தந்தை முதலியவர்களிடத்திலுள்ள கோபத்தையும், எனக்கு இவ்வாறு ஸம்பவித்ததே யென்கிற சோகத்தையும் விட்டு, தைர்யத்தையே முக்யமாக அவலம்பித்து ஆரம்பித்த அபிஷேகம் நின்றுவிட்டதே யென்கிற இவ்வவமானத்தையும் பாராட்டாமல் விட்டுவிடுவாயாக. மிகுந்த ஸந்தோஷத்தை ஏற்றுக்கொண்டு இப்பொழுது என்னபிஷேகத்திற்காக ஸித்தப்படுத்தி வைத்திருக்கிற அலங்காரம் முதலிய எல்லாவற்றையும் சீக்ரத்தில் தொலைத்து விடுவாயாக. அபாயமின்றிய கார்யத்தைச் செய்ய முயற்சி கொள்வாயாக. லக்ஷ்மணு! எனது அபிஷேகத்திற்காக ஸம்பாரங்களைச் சேர்க்கும் விஷயத்தில் உனக்கு உண்டாயிருக்கிற உத்ஸாஹத்தை, அபிஷேகத்தை நிறுத்திக் காட்டுக்குப் போவதற்குரிய நார்த்துணி முதலியவற்றைச் சித்தப்படுத்துவதில் உபயோகப்படுத்துவாயாக. 'ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடந்து விடுமோ?' என்று என்னுடைய பட்டாபிஷேகத்தைப்பற்றி மனத்தில் பரிதபித்துக் கொண்டிருக்கிற எனது தாயாகிய கைகேயிக்கு 'ராமன் லக்ஷ்மணனோடுகூடி ஆலோசித்துக் கொண்டிருக்கின்றனன்; லக்ஷ்மணனுடன் கலந்து மீளவும் ராஜ்யத்தைப் பிடித்துக்கொள்வானே' என்கிற ஸந்தேஹம் உண்டாகாதிருக்கும்படி செய்வாயாக. எனக்கு அபிஷேகம்

1. எதிர்முகமாக.

நின்றுபோயிற்றே யென்று மனத்தில் பரிதபித்துக் கொண்டிருக்கிற என் தாயாகிய கௌஸல்யைக்குத் 'தந்தையின் ஆஜ்ஞையைத் தடுக்கலாகாது. ஆகையால் ராமன் காட்டுக்குச் சென்று பதினான்கு ஸம்வத்ஸரங்களே இருக்கப் போகிறானாகையால் பின்பு இவ்விடம் வந்து சேருவானல்லவா? அந்தப் பதினான்குஸம்வத்ஸரங்களும் அல்பகாலத்திலேயே தீர்ந்து போய்விடும். ஆகையால் நீ இதற்காக மனவருத்தப் படலாகாது' என்று மீளவும் திரும்பிவருகிற விஷயத்தில் ஸந்தேஹம் இல்லாதிருக்கும்படி ஸமாதானஞ் சொல்வாயாக. ஸுமித்ராபுத்ரனே ! அவள் மனத்தில் 'இவன் அரண்யத்திற்குச் சென்றால் மீளவும் திரும்பி வருவானோ வரமாட்டானோ' என்கிற ஸந்தேஹத்தைப் பற்றிய வருத்தம் உண்டா யிருக்கின்றதல்லவா? மற்றும், அக்கைகேயியின் மனத்தில் 'இவன் அரண்யத்திற்குப் போவானோ? மாட்டானோ?' என்கிற ஸந்தேஹத்தைப் பற்றின வருத்தம் உண்டாயிருக்கின்றதல்லவா? அங்ஙனம் அவ்விருவர் மனோ துக்கங்களையும் போக்காமல் ஒரு முஹூர்த்தகாலமும் பொறுத்திருக்கமாட்டேன். தாயாகிய கைகேயிக்காவது கௌஸல்யைக்காவது தந்தைக்காவது ஓரெள்ளளவு அபகாரமாயினும் தெரிந்தாவது தெரியாமலாவது செய்ததாக எனக்குத் தோற்றவில்லை. நந்தந்தை எப்பொழுதும் பொய்யுரைப்பவரல்லர்; பேசின வார்த்தையைத் தவறார்; அவரது பராக்ரமமோ எங்கும் வீணாகாதிருக்கவற்று; ஆகையால் அவருக்கு இந்த பூலோகத்தில் எதிலும் பயம் இல்லை; ஆயினும், 'செய்த ப்ரதிஜ்ஞையைத் தவறுவோமாயின் பரலோகமும் தவறுமே' என்றும் 'பரலோகத்தில கஷ்டப்பட வேண்டியதாயிருக்குமே' என்றும் பரலோகத்தைப்பற்றியே பயப்படுகின்றனர்; அவருக்கு அந்த பயம் இல்லாதிருக்குமாக. இப்பொழுது நடந்துகொண்டிருக்கிற எனது பட்டாபிஷேக ப்ரயத்னம் நிற்காமற் போகுமாயின், அவருக்குத் தான் கைகேயிக்கு வரங்கொடுத்த வார்த்தை ஸத்

யமாக வில்லையேயென்கிற மனஸ்தாபம் உண்டாகும். அவருக்கு மனஸ்தாபம் உண்டாகுமாயின் அது என்னை யும் வருந்தச் செய்யும். ஆனது பற்றி 'லக்ஷ்மண! அபி ஷேகத்தைப் பற்றிய இவ்வலங்கார [1] ஸம்விதானங்களை விட்டு இப்பொழுதே இவ்விடமிருந்தே அரண்யத்திற் குப் போக விரும்புகின்றனன். நான் இப்பொழுது அரண் யத்திற்குப் போவேனாயின், ராஜகுமாரியாகிய கைகேயி தான் நினைத்த கார்யம் ஈடேறப் பெற்று யாதொரு கலக்கமும் இன்றித் தன் புதல்வனாகிய பரதனுக்கு நிரா டங்கமாகப் பட்டாபிஷேகத்தை நடத்திக் கொள்வாள். நான் நார்த்துணிகளையும் க்ருஷ்ணாஜினத்தையும் உடுத் து ஜடைகளையும் தரித்துக் காட்டுக்குப் போயின பின்பு கைகேயிக்கு மனத்தில் ஸந்தோஷம் உண்டாகும்; நான் போகாதிருக்கும் வரையிலும் அது உண்டாகாது. நான் அரண்யத்திற்குப் போகவேண்டுமென்று புத்தியை நிலைநிறுத்தி விட்டனன்; அதற்காக மனத்தையும் நன்கு ஸமாதானப் படுத்திக்கொண்டனன். அப்படி ஸித்தப்பட்டிருக்கிற என்னை காட்டுக்குப் போகாமலி ருந்து நானே ஆயாஸப்படுத்த லாகாது. மேலும், எவர் ஸத்யத்தைப் பரிபாலிக்க முயன்று என்னைக் காட் டுக்கு அனுப்புவதாக நிச்சயஞ் செய்துகொண்டு, அதற் காக மனத்தை மிக்க ப்ரயாஸத்துடன் திடப்படுத்திக் கொண்டிருக்கின்றாரோ, அப்படிப்பட்ட எனது தந்தை யை வருத்தப்படும்படி செய்யலாகாது. இவ்வளவே யன்றி, எனது அபிஷேகத்தை நிறுத்தி விடவேண்டு மென்னும் புத்தியை யாவர் ஸங்கல்பித்துக் கொண்டு அதற்காக மனத்தில் நிச்சயஞ் செய்துகொண் டிருக்கி றார்களோ, அப்படிப்பட்ட மந்தரை முதலிய ஜனங்க ளுக்கும் மனவருத்தம் விளைக்க லாகாது. ஆகையால் சீக்ரமாகவே காட்டுக்குப் புறப்பட்டுப் போகின்றனன்.

1 ஸம்விதானம்-ஏற்பாடு.

விலம்பஞ் செய்யலாகாது. லக்ஷ்மணா! என்னைக் காட்டுக்கு அனுப்புவதற்கும் எனக்குக் கொடுத்த ராஜ்யத்தை மீளவும் திருப்பி வாங்கிக்கொள்வதற்கும் கைகேயி காரணம் அன்று; இதற்குத் தெய்வமே காரணமென்று தெரிந்துகொள்ள வேண்டும். தாயாகிய கைகேயிக்குப் பிறந்த இவ்வபிப்ராயம் தெய்வத்தினாலே தான் உண்டாயிருக்க வேண்டும்; இல்லையாயின் என்னிடத்தில் மிகுந்த ப்ரீதியோடு வாத்ஸல்யம் பெருகப் பெற்றிருந்த அவ்வம்மைக்கு, என்னைப் பீடிக்க வேண்டுமென்கிற இப்புத்தி எப்படி உண்டாகும்? அழகியனே! உனது உருவம் அழகாயிருப்பதுபோல் உனது புத்தியும் அழகாயிருக்கவற்று; ஆகையால் நான் சொன்னவற்றை நீ நன்கு ஆலோசித்துப் பார்ப்பாயாக. இதுவரையில் எப்பொழுதாயினும் நான் தாய்மார்களிடத்தில் 'பெற்றதாய் இவள், சக்களத்தித் தாய் இவள்' என்னும் பேதபுத்தியைப் பாராட்டினதில்லை யென்பது உனக்கே தெரிந்திருக்குமல்லவா? அந்தக் கைகேயியும் என்னிடத்திலும் தன் புதல்வனாகிய பாதனிடத்திலும் பேதம் பாராட்டாதிருப்பதை நீ அறிவாயல்லவா? இங்ஙனம் இருக்கையில்—தெய்வத்தின் தூண்டுதல் இல்லாதிருக்குமாயின், அப்படிப்பட்ட கைகேயிக்கு என்னிடத்தில் இப்படிப்பட்ட துர்ப்புத்தி எப்படி உண்டாகக்கூடும்? முதலே பிடித்து அவளது வாத்ஸல்யத்தை அனுபவித்திருக்கிற நான் அவள் இப்பொழுது அபிஷேகத்தை மாற்றவேண்டுமென்றும் காட்டுக்குப்போக வேண்டுமென்றும் சொல்ல முடியாத பயங்கரமான வாக்யங்களைச் சொல்வது கண்டால், இதற்குத் தெய்வம் தவிர மற்றேதும் காரணமாக எனக்குத் தோற்றவில்லை. அவள், தனக்கு என்னிடத்தில் உண்டான வாத்ஸல்யத்தை மாற்றிக்கொள்ளக் காரணம் ஒன்றும் புலப்படவில்லை.

ஆகையால் தெய்வமே இவையெல்லாவற்றிற்கும் காரணம். [1]மேலும், அவள் மெதுவான ஸ்வபாவமுடையவள்; பின்னும், ராஜகுமாரியாயிருப்பவள். இப்படிப்பட்ட அவளது தயாதிகுணங்கள் நமக்குத் தெரியாதவையல்ல. அத்தகையளான அவ்வம்மை, அல்ப ஸ்வபாவமுள்ள மற்றொரு மடந்தையைப்போல் தனது பர்த்தாவின் முன்னிலையில் என்னைப் பீடிக்கும்படியான மொழிகளை உரைக்க நேருமா? நேராது. அங்ஙனம் மொழிவதற்கு

---

1 இதற்கு—

கயம் ப்ரக்ருதிஸம்பந்நா ராஜபுத்ரீ தயாகுணா।

வி ரூயாத் ஸா ப்ராக்ருதேவ ஸ்த்ரீ மத்பீ டாம் ஹர்த்ருஸந்நிதௌ’ என்று மூலம். இதற்கு விசேஷார்த்தம்—(ப்ரக்ருதிஸ்ம்பந்நா) ஸாது ஸ்வபாவமுள்ளவள். (ராஜபுத்ரீ) ராஜாவின் புதல்வி. மஹாகுலத்திற் பிறந்தவள். (தயாகுணா) அப்படிப்பட்ட குணங்கள் அமையப்பெற்றவள்; அவளது தயாதிகுணங்களை முன்பு நாம் அநுபவித்திருக்கிறோம். இம்மூன்று விசேஷணங்களால்—நல்ல ஸ்வபாவமும் பெருங்குலமும் மேலான குணங்களும் சொல்லப்பட்டன. (ஸா) அப்படிப்பட்ட லக்ஷணங்கள் பொருந்திய அந்தக் கைகேயி, (ப்ராக்ருதாஸ்திரீவ)புத்தியில்லாத இழிகுலப் பெண்பிள்ளைபோல். அதாவது—தனக்கு விருத்தமான துஸ்ஸ்வபாவமும் துஷ்குலமும் துர்க்குணங்களுமுள்ள நீசஸ்த்ரீயைப்போல். (ஹர்த்ருஸந்நிதௌ) பர்த்தாவின் எதிரில் மற்றையெவனோ ஒருவன் முன்னிலையிலன்று, தூதர் முதலியவர்கள் மூலமாகவுமன்று. தன் குலாதிகளுக்குத் தகுந்தபடி தான் மிகவும் அடங்கி நடக்கவேண்டிய பர்த்தாவின் கண்முன்னிலையிலேயே. (மத்-பீடாம்) தனது மிதமில்லாத ஸ்நேஹத்திற்குப் பாத்ரமாகிய என்னைப் பீடிப்பதை. வெறும் அப்ரியத்தையன்று, மிகவும் பீடிக்கும்படியான மொழிகளை. (கயம்) எப்படி (வி ரூயாத்) மொழிவாள். ஸூசனையாகச் சொல்வதன்று. ஸ்பஷ்டமாகச் சொல்வாள். இவ்வளவு ஸந்தர்ப்பங்களைப்பற்றிக் கைகேயிதானே இங்ஙனம் மொழிவது அஸங்கதமாயிருக்கின்றதாகையால் தெய்வமே இதற்குக் காரணமென்று கருத்து.

தெய்வமே காரணம். தெய்வத்தின் மஹிமை இப்படிப் பட்டதென்று சிந்திக்கவும் முடியாதது. ஸமஸ்த பூதங்களிலும் எதிலாவது அந்த தெய்வம் செய்யும் கார்யத்தைத் திருப்ப நேராது. இது யாவர்க்கும் வெளிச்சமே. எனக்குக் கையில் வந்த ராஜ்யம் தப்பிப்போயிற்று. அந்தக் கைகேயிக்கு நெடுநாளாக அழியாதிருந்த ப்ரீதியும் அழிந்து போய்விட்டது. ஆக எங்களிருவர் நிலையும் தலைகீழாக மாறிப்போய்விட்டது. ஆகையால் தெய்வத்தின் செயலுக்கு எங்கும் மாறுபாடில்லை. லக்ஷ்மணா! 'தெய்வமென்று ஒன்று உளதென்பது எப்படி? இருக்குமாயின், புருஷ ப்ரயத்னத்தினால் அதை மாற்றிவிடலாகாதோ' என்று வினவுவாயாயின், சொல்லுகின்றேன், கேட்பாயாக. நாம் செய்யுங் கார்யங்களின் பலன்களைப் பற்றி தெய்வமென்றொன்று உளதென்று அறியவேண்டியதா யிருக்கின்றது. நாம் மிகவும் பாடுபட்டு மிகுந்த ப்ரீதியுடன் செய்யுங் கார்யங்களில் சிலவற்றிற்குப் பயன் உண்டாகக் காண்கிறோமில்லை. நாம் ஆதரமில்லாமற் செய்யுங் கார்யங்களிலும் சிலவற்றிற்கு மிகுந்த பயன் உண்டாகக்காண்கின்றனம். இப்படிப்பட்ட பயன்களுக்கு தெய்வத்தையொழிய மற்றெதையுங் காரணமாகச் சொல்ல நேராது. ஆகையால் தெய்வமொன்றுளதென்று அனுமானத்தினால் ஸித்திக்கின்றது. கார்யம் பலிப்பது பற்றியே தெய்வமுளதென்றறியலாமன்றி மற்றைப்படி தெய்வத்தை அறிவதற்கு வேறு ஸாதனமில்லை. ஆகையால் தெய்வத்தை எப்பொழுதும் கார்யம் பலிப்பது பற்றியே அனுமானித்துத் தெரிந்துகொள்ளவேண்டியதாயிருக்கின்றது. அது பலத்திற்கு முன்பே தெரியக் கூடியதாயின், அப்பொழுது அது ப்ரதிகூலமாகத் தோற்றும்பொழுது, அதற்கும் ப்ரதிகாரம் எதாயினும் முன்பாகச் செய்துகொள்ள நேருமேயன்றிப் பலத்திற்கு

முன்பு எவ்வளவுந் தெரிந்துகொள்ளக்கூடாததா யிருக்கிற அந்தத் தெய்வத்தோடு மாரடிகொடுத்து அதை மாற்றிக் கொள்வதற்கு எவன்தான் முயற்சி செய்யக்கூடும்? ஆகையால் பலத்தைக் கொண்டு அனுமானித்தே தெரிந்து கொள்ளவேண்டியதா யிருப்பதுபற்றி மிகவும் பலிஷ்டமாயிருக்கின்ற தெய்வத்தைப் புருஷப்ரயத்னத்தைக் கொண்டு தடுப்பது கஷ்டம். ஸுகமும் துக்கமும் பயமும் கோபமும் லாபமும் நஷ்டமும் ஜனனமும் மரணமும் ஆகிய இவை முதலிய காரணந் தோற்றப்பெருத கார்யங்களனைத்தும் தெய்வத்தின் செயல்களே. அதிக்ரூரமாகத் தவம் நடத்திக்கொண்டு தேவதைகளையும் கூடப் பொருள் செய்யாத விஶ்வாமித்ரர் முதலிய மஹர்ஷிகளும் தெய்வத்தினல் பீடிக்கப்பட்டவர்களாகித் தாம் செய்ய முயன்ற வ்ரதோபவாஸம் முதலிய தீவ்ரநியமங்களையுங் கைவிட்டுக் காமக்ரோதங்களுக்கு உட்பட்டு மஹர்ஷித்வத்தையும் இழக்கின்றனர். இவ்வுலகத்தில் ஆரம்பித்த கார்யம் தடைபட்டு அதற்கு முன்பு மனத்திலுங்கூட நினைவிடாத மற்றொரு கார்யம் திடீரென்று ஸம்பவிக்கின்றது. அது தெய்வ கார்யமே. நான் இப்பொழுது உபதேசித்த இப்புத்தி யதார்த்தமாயிருக்கவற்று. அப்படிப்பட்ட புத்தியைக் கொண்டு என் மனத்தை நானே அடக்கிக்கொண்டிருக்கின்றனன். ஆகையால் எனக்குப் பட்டாபிஷேகம் தடைபட்டபோதிலும் மனஸ்தாபம் உண்டாகாதிருக்கின்றது. தெய்வத்தின் சக்தி இப்படிப்பட்டதாகையால் நான் உபதேசித்த புத்தியோகத்தின் பலத்தைக் கொண்டு நீ உனது மனக்கலக்கத்தை மாற்றி எனது மதத்தை அனுஸரித்து அபிஷேகத்தின் பொருட்டுச் செய்யப்படும் அலங்காரத்தின் ஏற்பாடுகளை நிறுத்திவிடுவாயாக. லக்ஷ்மணு! இப்பொழுது

அபிஷேகத்தின் பொருட்டு ஸித்தப்படுத்தி வைத்திருக்கிற மங்கலகும்பங்களிலுள்ள இந்த ஜலங்களே நான் தாபஸர்களுக்குரிய வ்ரதத்தை ஸங்கல்பித்துக் கொள்ளும்பொழுது செய்யவேண்டிய ஸ்னானத்திற்கு உபயோகப்படுமாக. ஒருகால் இந்த ஜலத்தைக் கொண்டு ஸ்னானஞ்செய்வேனாயின், ராஜ்யத்திற்காகச் செய்தேனென்று கைகேயி ஸந்தேஹப்படக் கூடும் இது ராஜத்ரவ்யம்; மேலும், ராஜ்யத்திற்கு உபயுக்தங்களாகிய மங்கலத்ரவ்யங்கள் மிகவும் கலக்கப்பெற்றிருக்கின்றது; இப்படிப்பட்ட ஜலம் எனக்கு எதுக்காக? நானே என் கைகளாலெடுத்த ஜலங்களைக் கொண்டு ஸ்னானஞ்செய்து என் வ்ரதங்களை முடித்துக்கொள்கின்றனன். லக்ஷ்மணா! ஸம்பத்து தலைகீழாயிற்றே யென்று நீ மனவருத்தப்படாதிருப்பாயாக. ராஜ்யத்தை நன்றாகப் பரிபாலனஞ் செய்வதனால் மிகுந்த தர்மம் உண்டாகின்றது; வனவாஸத்தினால் தவம் ஸித்திக்கின்றது; ஆகையால் இரண்டும் ஸமானங்களே. ஆயினும் விசாரித்துப் பார்ப்போமாயின், ராஜ்யத்தில் ப்ரஜைகளுக்கு வேண்டிய கார்யாகார்யங்களின் சிந்தையும் கஷ்டமும் அதிகமாயிருக்கின்றன; வனவாஸத்தில் அந்தக்கஷ்டம் ஒன்றுமே இல்லை. மேலும், பித்ருவாக்ய பரிபாலனமென்னும் தர்ம மொன்று ஸித்திக்கின்றது. ஆகையால் வனவாஸத்திலேயே மிகுந்த பலன் உண்டாகின்றது. அதுவே மேலான மேன்மைக்கு ஸாதனமாயிருக்கின்றது. லக்ஷ்மணா! இப்பொழுது ஆரம்பித்த கார்யத்தைக் கெடுப்பதற்குச் சிறிய தாயார் காரணமென்று சங்கிக்கலாகாதல்லவா? அவ்வம்மை தெய்வத்தின் தூண்டுதலால் அப்ரியத்தைப் பேசுகிறாளேயன்றி வேறில்லை. அவளைத் தூண்டின தெய்வமோ அப்படிப்பட்ட

ப்ரபாவமுடையதென்று நான் உனக்குத் தெரிவித்தேனு கையால் உனக்குத் தெரிந்திருக்கின்றது. ஆகையால் தெய்வம் காரணமாயிருந்து நடத்தின இந்தக் காரியத்தில் அவளைத் தூறுவது யுக்தமன்றே' என்றனன். இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

லக்ஷ்மணன் தெய்வத்தைக்காட்டிலும் பௌருஷமே பலமுடையதென்று ராமனுக்கு மறுமொழி கூறுதல்.

ராமன் இங்ஙனம் பலவாறாகப் பேசிக்கொண்டிருக்கையில், லக்ஷ்மணன் தனக்கு அது ஸம்மதமல்லவாகையால் தலைவணக்கத்துடன் கேட்டு 'ராமன் தர்மத்தில் மிகுந்த நிலைமையுடையவன்' என்று மனக்களிப்பும், 'ராஜ்யத்தைக் கைவிடுகின்றானே' என்று மனவருத்தமும் மேலெழப்பெற்று இவ்விரண்டினிடையில் ஆழ்ந்தாற்போலிருந்தனன். அப்பொழுது புருஷஸ்ரேஷ்டனுகிய அந்த லக்ஷ்மணன் ஸந்தோஷத்தை யிழந்து மனவருத்தத்தினுல் கோபாவேசம் மிகப்பெற்றுப் புருவநெறிப்புடன் கூடிப் பெட்டியுள் அகப்பட்டு ரோஷத்தினுல் பெருமூச்செறிகின்ற பெரிய ஸர்ப்பம்போல் பெருமூச்செறிந்தனன். அப்பொழுது புருவநெறிப்பினுல் பயங்கரமாகி எதிர்கொண்டு காணமுடியாத அந்த லக்ஷ்மணனது முகம் சினந்த சிங்கத்தின் முகத்தை நிகர்த்து ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. யானை தன் துதிக்கையை அசக்குவதுபோல் அந்த லக்ஷ்மணன் தனது நுனிக்கையைக் கோபத்தினுல் உதறிக் கொண்டு, கழுத்தைக் குறுக்காகவும் கீழும்மேலும் தேஹத்தில்படத் திருப்பி வைத்து ப்ராதாவான ராமனைக் கடைக்கண்ணுல் குறுக்கே பார்த்துக் கொண்டே மேல்வருமாறு மொழிந்த

னன். 'நீ எல்லாந் தெரிந்தவன்; அப்படிப்பட்ட நீ பித்ரு வசன பரிபாலனமென்னும் தர்மத்திற்குக் கெடுதி நேரிடு மென்றும், நான் தர்மத்தை ஆசரியாமற் போவேனாயின், உலகத்திலுள்ளவர் 'நாமும் இதை ஆசரியாமல் விட்டு விடலாம்' என்று சங்கிப்பார்களென்றும் நினைத்துக் காட்டுக்குப் போக வேண்டுமென்று மேன்மேலும் இவ் வாறு பரபரப்புறுவது யுக்தமன்று. எப்படி யென்னில்-- நீ தெய்வத்தையுங்கூட நிராகரிக்கவல்ல மஹாசூரன்; மேலும், க்ஷத்ரியர்களெல்லோரிலும் மேலாயிருப்பவன். இப்படிப்பட்ட நீ துர்ப்பலமாகிய தெய்வத்தை ப்ரபலமாகச் சொல்வது கண்டால் உனக்கு ப்ரமம் பிடித்தாற் போலிருக்கின்றது. ப்ரமம் உண்டாகா திருக்குமாயின், உன்னைப் போன்றவன் இப்படிப்பட்ட விபரீதவாக்யங்களை எப்படி சொல்லக்கூடும்? ப்ரமம் பிடித்திராதாயின் இவ்வாறு நீ மொழிய நேராது. பலமற்றவர்களன்றோ தெய்வத்தைக் கைப்பற்றுவார்கள்? அது மற்றொருவரை ஆஸ்ரயித்தே தனது அபேக்ஷையைத் தீர்த்துக்கொள்கின்றது. ஆனதுபற்றியே அது மிகவும் தீனமாயிருக்கவற்று. தானாக ஒன்றைச் செய்யவாவது, பௌருஷத்தை நிராகரித்துக் கார்யத்தை நடத்தவாவது அது [1] சக்தியற்றது. அப்படிப்பட்ட

---

1 'அது கார்யஞ் செய்வதற்கே சக்தியற்றிருக்கும்பொழுது கார்யம் அதனால் பலிக்கின்றதென்பதே உண்டாகாது. ஆகையால் கார்யத்தின் பலத்தினால் தெய்வமொன்றிருப்பதாக அனுமானிப்பதும் தகாது. இப்படி அது உளதென்பதே ஸித்தியாதிருக்கும்பொழுது இல்லாதவற்றை ஆஸ்ரயிப்பது உனக்கு ப்ரமமே ஆகும்' என்று லக்ஷ்மணன் தெய்வத்தைத் தாண்டிப்போக முடியாதென்கிற முனிமதத்தைப் பரிஹரித்தனன். இனிப் பாபிஷ்டர்களாகிய கைகேயீ தசரதர்களின் வார்த்தையைக் கேட்கலாகாதென்ற மொழிந்து பித்ரு வசனபரிபாலனமென்னும் தர்மத்திற்குக் கெடுதி நேரிடுமென்னும் விஷயத்தைப் பரிஹரிக்கிறானென்று தெரியவருகின்றது.

தெய்வத்தை என்னவென்று நீ புகழ்கின்றனை? பாபஸ்வபாவர்களாகிய அந்தக் கைகேயீ தசரதர்கள் இருவரும் பாபிஷ்டர்களென்று உனக்கு ஏன் எண்ணம் உண்டாகவில்லையோ? அவ்விருவரும் பாபிஷ்டர்களாகையால் அப்படிப்பட்டவர்களது ஆஜ்ஞையைச் செய்யாதிருப்பதனால் உனக்கு தர்மஹானியென்பது சிறிதும் நேரிடாது. 'அவர்கள் தர்மஸ்வபாவர்களே; அவர்களைப் பாபிஷ்டர்களென்று எப்படி சங்கிக்கலாகும்' என்பாயோ? அது வேண்டாம். உலகத்தில் தர்மத்தை வ்யாஜமாகக் காட்டி அதனால் தமது துஷ்கார்யங்களை ஸாதித்துக் கொள்பவர்களும், தர்மத்தை அனுஷ்டிப்பதாக வேஷம் போகட்டுக்கொண்டு அதனால் தமது கொடிய நடவடிக்கைகளை மறைத்துக்கொள்பவர்களும் பலர் உண்டு. தர்மஸ்வபாவனே! உனக்கு இது தெரியாத விஷயமா என்ன? அப்படியே கைகேயியும் தசரதனும் உனக்குப் பட்டாபிஷேகம் செய்பவர்போல் மேலுக்குத் தர்மத்தை அபிநயித்துக் கொண்டிருக்கிறார்களேயன்றி, நிஜமாகப் பார்க்கில், ரஹஸ்யமாக உனக்கு அப்ரியத்தையே செய்பவராகையால் நமது இவ்வபிஷேக ப்ரயோஜனத்தை நிறுத்தவேண்டுமென்று விரும்பி நன்கு இந்தத் துராலோசனையைச் செய்தனர்; இது ஏன் உனக்குத் தெரியவில்லை? ரகுவம்சத்தில் பிறந்த மஹானுபாவனே! அவர்கள் இவ்வபிஷேகத்திற்கு முன்னமே இவ்வாறு [1] துராலோசனைசெய்வதற்கு ப்ரயத்னஞ்செய்திருப்பார்

---

1 தசரதன் கைகேயிக்கு வரம் கொடுத்து வெகு காலமாயிற்று ஆகையால் அதை இதற்கு முன்பு எப்பொழுதோ நிறைவேற்றியிருப்பான். அல்லது—தசரதன் தர்மங்களை யறிந்தவனாகையால் கைகேயி வேண்டாதிருந்த பொழுதிலும் தானே தீர்த்து விட்டாவதிருக்கக் கூடும். இப்படிப்பட்ட ஸமயத்தில் அதைக் கேட்பதும் கொடுப்பதும் நேரோ. ஆயினும் பட்டாபிஷேகஞ் செய்ய ஆரம்பித்ததையும், அனங்

கள். இல்லையாயின், வரங் கொடுப்பதாக வெகு காலத்திற்கு முன்னமே வார்த்தை நடந்த தாகையால், ராஜா அதை இதற்கு முன்பே எப்பொழுதோ கொடுத்திருக்கலாமன்றி இப்பொழுது கொடுக்கவேண்டி வருவது நேர்ந்திராது. வீரர்களிற் றலைவனே! பெரியவனு யிருக்கிற உன்னைவிட்டு உனக்குப் பின் பிறந்தவனுகியமற்றொருவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வது உலகத்திலுள்ளவர் யாவரும் த்வேஷிக்கத் தகுந்த கார்யமே. இதை அவ்விருவரும் செய்ய முயன்றனர். இதை நான் பொறுத்திருக்கமாட்டேன். அவ்விஷயத்தில் நீ என்னை மன்னிக்கவேண்டும். 'பித்ரு வசன பரிபாலனம் அவஶ்யமாகச் செய்ய வேண்டிய தர்மமாயிற்றே' யென்பாயோ?

மிகுந்த மதியுடையவன்; ஆயினும், எந்த தர்மத்தைப் பற்றி முன்பு ராஜ்யாபிஷேகஞ் செய்துகொள்ள வேண்டுமென்றிருந்த உன்புத்தி இப்பொழுது அரண்யத்திற்குப் போகவேண்டுமென்று வேருகப் பேதித்துவிட்டதோ, எந்த தர்மத்தைச் செய்ய நேரிடுகையில் செய்யாமற் போயின் பாபம் ஸம்பவிக்குமேயென்று மனமயக்கங் கொண்டிருக்கின்றனையோ, அப்படிப்பட்ட பித்ருவசன பரிபாலனமென்னும் தர்மத்தில் எனக்கு த்வேஷமேயன்றி ப்ரீதி என்பது சிறிதும் உண்டாக

---

தரம் வரத்தை ப்ரஸ்தாவஞ் செய்ததையும் ஆலோசித்துப் பார்க்கில் 'பரதனுக்கு ராஜ்யத்தில் பட்டங்கட்டவேண்டும். ராமன் மூத்தவனுகையால் அவனைத் தவிர்த்துப் பரதனுக்கு ராஜ்யங் கொடுப்பது பொருந்தாது. ஆகையால் ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதாக ப்ரயத்னஞ் செய்கின்றனன். அப்பொழுது நீ இரண்டு வரங்களை வேண்டுவாயாக. ஒன்றுக்கு ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிடுவோம். மற்றொன்றுக்குப் பரதனுக்கு ராஜ்யத்தில் பட்டங் கட்டிவிடுவோம்,' என்று தசரதன் இவ்வபிஷேகத்திற்கு முன்பே கைகேயியுடன் கலந்து துராலோசனை செய்துகொண்டு இதற்காக ப்ரயத்னங்கள் செய்திருக்க வேண்டுமென்று லக்ஷ்மணன் கருத்து.

வில்லை. 'மனமயக்கமென்' என்பாயோ? பௌருஷகர்மத்தினால் ப்ரதீகாரஞ் செய்ய வல்லமையுள்ள நீயும், தந்தை கைகேயியின் வலையில் அகப்பட்டு மிகவும் அதர்மமாகவும் அநிர்நிந்திதமாகவும் ஓர் ஆஜ்ஞையைச் செய்தானாயின், அதைத் திரஸ்கரிக்காமல் எப்படி செய்யப் பார்க்கின்றனை? மனமயக்கமில்லையாயின் இப்படிக்குச் செய்ய முயற்சி கொள்ளாயல்லவா? கபடமாக வரங்களென்னும் வ்யாஜங்கற்பித்து அவர்கள் இவ்வபிஷேகத்திற்கு இடையூறு செய்திருக்கின்றனர். அவர்கள் இவ்வாறு கபடஞ் செய்திருந்தும் உனக்கு அங்ஙனஞ் செய்தார்களென்று தோற்றாதிருக்கின்றதே. இதைப்பற்றியே எனக்கு மனவருத்தமாயிருக்கின்றது. இங்ஙனம் காமுகனாகிய தந்தையின் வார்த்தைப்படி நடந்துகொள்ள வேண்டுமென்கிற இத்தர்மமும் மிகுந்த லோக நிந்தைக்கிடமாயிருக்கையால் உபேக்ஷிக்கத் தக்கதேயன்றி அனுஷ்டிக்கத் தக்கதன்று. காமபரவசர்களாகி உனக்கு எப்பொழுதும் கெடுதியைச்செய்ய விரும்பித் தாய் தந்தையர்களென்று பெயர்வைத்துக் கொண்டிருக்கிற அந்த உன் பகைவர்கள், நெஞ்சிலும் நினைக்கக்கூடாததொன்றை விரும்பிக் கட்டளையிடுவார்களாயின், அதை நிறைவேற்ற வேண்டுமென்று மனத்திலுங்கூட நீ எப்படி நினைக்கலாகும்? 'அவ்விருவர்க்கும் எனது பட்டாபிஷேகத்தைக் கெடுக்கவேண்டுமென்னும் புத்தி பிறந்தமை தெய்வாதீனமேயன்றி அவர்கள் ஸ்வபாவத்தினாலுண்டானதன்று' என்று நீ நினைத்துக் கொண்டிருக்கின்றனை; ஆயினும் நீ அதை உபேக்ஷிக்கவேண்டுமேயன்றி இப்படிப்பட்ட அபிப்ராயங் கொள்ளலாகாது. எனக்கு எள்ளளவும் தெய்வம் ப்ரமாணமென்பது யுக்தமாகத் தோற்றவில்லை. எது செய்தால் எப்படி ஆகுமோ என்று பயந்தவனும் வீர்யமற்றவனுமாயிருப்பவன் தெய்வத்தை அனுஸரிப்பானேயன்றிப் பராக்ரமசாலிகளாகி மனந்திடமாயிருக்கப் பெற்ற தீரர்கள் அந்தத்தெய்வத்தைக் கைப்பற்றார்கள்;

தமக்குள்ளேயே தமது கார்யங்களை ஸாதித்துக் கொள்வார்கள். தனது புருஷ ப்ரயத்னத்தினால் தெய்வத்தை அடக்கித் தடுப்பதற்கு எவன் ஸமர்த்தனோ, அந்தப் புருஷன் தெய்வத்தை நம்பி அதனால் தன் ப்ரயோஜனத்தைப் பாழாக்கிக் கொண்டு மனக்களிப்பைத் துறந்திறக்கப் பொருன். ஜனங்கள் தெய்வஸாமர்த்யத்தையும் புருஷனது ஸாமர்த்யத்தையும் இப்பொழுதே ப்ரத்யக்ஷமாகப் பார்ப்பார்களாக. தெய்வம் ப்ரபலமோ, அல்லது புருஷகாரம் ப்ரபலமோ வென்று அவ்விரண்டுக்கும் உள்ள தாரதம்யத்தை இப்பொழுதே ஸ்பஷ்டமாகக் காட்டிவிடுகின்றனன். எந்த தெய்வம் இப்பொழுது உன் பட்டாபிஷேகத்தைக் கெடுத்ததாக நீ நினைத்திருக்கின்றனையோ, அந்த தெய்வம் எனது பௌருஷத்தினால் அடிபட்டிருப்பதை ஜனங்களெல்லோரும் பார்க்கப்போகின்றனர். மாவெட்டியைப் பொருள் செய்யாமல் கட்டுத் தறியைக் கடந்து மதப்பெருக்கினால் மிகுந்த கர்வங்கொண்டு அடங்காமல் ஓடித் திரிகின்ற யானையைக் கைதேர்ந்த யானைக்காரன் அடக்கித் திருப்புவது போல், தடுக்கமுடியாததென்று நீயே சொல்லிக்கொண்டிருக்கிற தெய்வத்தை எனது பௌருஷத்தினால் திருப்பிவிடுகின்றனன். ராமா! திக்பாலர்கள் அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து வருவார்களாயினும், மூன்று லோகங்களும் ஒன்றுகூடித் தடைசெய்யுமாயினும், இப்பொழுது நான் நடத்துவதற்கு முயன்றிருக்கிற உனது அபிஷேகத்தை நிறுத்த முடியாது; இனிக்கிழவனாகிய நம் தந்தை யொருவன் யாதுஞ்செய்யமுடியானென்று சொல்லவேண்டுமோ? ஆகையால் நீ மஹாராஜனாகவே ஆய்விட்டனை. யாவர் சிலர் ஏகாந்தமாக ஒருவரோடொருவர் கலந்து ஆலோசித்து உனக்கு வனவாஸத்தை ஏற்பாடு செய்தார்களோ, அந்தப்பாபிஷ்டர்களே உனக்

குச் சொன்ன பதினுன்கு ஸம்வத்ஸரங்களும் தாமே அரண்யஞ் சென்றிருக்கப் போகின்றனர். இங்ஙனம் தெய்வத்தைப் புருஷன் தடுத்து விடலாமாகையால், எவள் உனது பட்டாபிஷேகத்தைக் கெடுத்துத் தனது புதல்வனுக்கு ராஜ்யம் வரவேண்டுமென்று முயற்சி செய்கின்றுளோ, அவளுக்கும் தந்தைக்கும் உண்டாயிருக்கிற ஆசையாகிற கொடியை வேரோடு அறுத்து விடுகின்றனன். 'தந்தை தெய்வபல முடையவனுயின், உனது பௌருஷம் என்ன செய்ய முடியும்' என்கிருயோ? என் பௌருஷத்திற்கு முன்பு தெய்வம் நிற்கமுடியாது. ஆகையால் தந்தைக்காவது மற்றை இன்னும் எவனுக்காவது என்னுடன் விரோதம் செய்பவனுக்கு மிகவும் க்ரூரமாகிய என் பௌருஷத்தினல் துயரம் உண்டாகுமன்றி தெய்வத்தினல் ஸுகமென்பது சிறிதும் உண்டாக நேராது. எனது பௌருஷத்தில் அகப்பட்டுக் கொண்டவனைத் தெய்வத்தினல் விடுவிக்க முடியாது. மேலும், நீ ப்ரஜா பரிபாலனஞ் செய்து ராஜ்ய ஸுகங்களை அனுபவித்து ஆயிரமாண்டுகள் கடந்தபின்னர் நீ வானப்ரஸ்தாஶ்ரமத்தைக் கைப்பற்றி வனத்திற்குப் போகையில், உனது குமாரர்கள் ராஜ்யபரிபாலனஞ் செய்ய நேருமேயன்றிப் பரதனுக்கு எக்காலத்திலும் ராஜ்யஸம்பந்தமே உண்டாக நேராது. சக்தி உள்ள வரையிலும் ப்ரஜைகளைப் பரிபாலித்துப் பிறகு அந்த ப்ரஜைகளைத் தமது குழந்தைகளைப்போல் பரிபாலித்து வரும்படிக்குப் புதல்வர்களுக்குக் கட்டளையிட்டு ப்ரஜைகளை அவர்களிடம் ஒப்புவித்து அங்ஙனம் பூர்வ ராஜர்ஷிகள் ஆசரித்த ப்ரகாரம் வனவாஸஞ் செய்யப் போகவேண்டுமென்றன்றே சாஸ்த்ரம் விதிக்கின்றது. தர்மஸ்வபாவனே! 'இப்பொழுது மன்னவன் மனநிலைமையற்

ரிருக்கிறுனுகையால் நாம் ஸாஹஸஞ் செய்து ராஜ்யத்தை ஸ்வாதீனப்படுத்திக்கொண்டோமாயின், ராஜ்யத்திற்குப் பலவாறு சேறுதல் நேருமென்று சங்கித்து ராஜ்யத்தை அங்கீகரிக்கமாட்டாயாயினும் அதைச் சொல்வாயாக; நீயும் வீரனுயிருக்கின்றனே; நானும் உனக்கு ஸஹாயமாயிருந்து, ஸமுத்ரத்தைப் பொங்கி வாராதிருக்கும்படி அதன்கரை எப்படி காத்துக்கொண்டிருக்கின்றதோ, அப்படியே உனது ராஜ்யத்தைக் கலக்கமொன்றும் உண்டாகாதிருக்கும்படி பாதுகாத்து வருகின்றனன்; இங்ஙனம் செய்யாமற் போவேனுயின் வீரலோகங்களை இழந்து போகக் கடவேனென்று ப்ரதிஜ்ஞை செய்கின்றனன். நீ வஸிஷ்டாதிகளைக்கொண்டு மங்கலத்ரவ்யங்கள் அமைக்கப்பெற்ற ஜலங்களால் பட்டாபிஷேகஞ் செய்துகொள்வாயாக. இனி அபிஷேகத்திற்காகச் செய்யவேண்டிய கார்யங்களைப்பற்றி முயற்சி செய்வாயாக. எவராயினும் அரசர்கள் உன்மேல் எதிரிட்டு வருவார்களாயின், அவர்கள் அனைவரையும் பலத்தினுல் தடுத்துவிடுவதற்கு நானொருவனே போதுமானவன். இதோ புலப்படுகின்ற எனது பாஹுதண்டங்களிரண்டும் எனதுசரீரத்திற்கு அலங்காரத்தின்பொருட்டிருப்பனவன்று; நான் வில்லைத் தரித்துக்கொண்டிருப்பது எனது புஜங்களின் அழகுக்காகவன்று: இக்கத்தியும் வெறுமனே வீரபூஷணமாக இடையில் கட்டி வைத்திருப்பதற்கன்று; எனது பாணங்களும் வீணுக அம்பறாத்தூணியில் வைத்து வைப்பதற்கு ஏற்பட்டவைகளன்று. பின்னை எதுக்காக வென்னில்—இவ்வாயுதங்கள் நான்கும் மற்றவைகளும் பகைவரை அடக்கித் தொலைப்பதற்காக ஏற்பட்டவைகளே. எனக்கு யாவன் சத்ருவென்று நினைக்கப்படுவானே, அவனை உயிருடன்

விருத்திப் பார்க்கப்பொறேன். தேவேந்த்ரனுயிருப்பானுயினும் அவனைக் கூரிய நுனியுள்ளதும் மின்னல்போல் பளபளவென்று விளங்குங் காந்தியுள்ளதுமாகிய கத்தியைக்கொண்டு வெட்டாது விடமாட்டேன். இப்பொழுது பூமி என் கத்தியால் அடியுண்ட யானை குதிரை காலாட்கள் ஆகிய இவைகளது கைகளும் கால்களும் தலைகளும் தூள்தூளாகி எங்கும் நிரம்பப்பெற்றுச் செடிகள் நெருங்கிய கானகம்போல் இடை வெளியின்றி ஸஞ்சரிக்க முடியாதிருக்கப் போகின்றது. சத்ருக்களின் யானைகள் இதோ இப்பொழுதே என் கத்தியின் நுனியால் அடிக்கப்பட்டுத் தமது கடினமான எலும்புகளில் அக்கத்தி உறைவதனுல் நெருப்புப்பொறிகள் மேலெழப்பெற்றவைகளாகி எரிகின்ற மலைகள்போலவும் மின்னலோடுகூடின மேகங்கள்போலவும் புலப்பட்டுக்கொண்டு பூமியில் விழப்போகின்றன. நான் உடும்புத்தோலால் செய்த கவசத்தை விரல்களில் மாட்டிக்கொண்டு வில்லைக் கையிற் பிடித்து எதிரில் வந்து நிற்கையில், புருஷர்களுக்குள் தன்னைப் புருஷனென்று நினைத்து நிற்பவன் யாவன்? அனைவரும் பெண்பிள்ளைகளைப்போலவே பயந்தோடுவார்களன்றித் தீரத்துடன் நிற்பவன் யாவனும் நேரான். 'நீ ஒருவன் பலரோடு எங்ஙனம் போர் புரிவாய்' என்கிருயோ? நான் மிகுந்த பலமுள்ள ஒரு மஹாவீரனைப் பல பாணங்களால் அடித்தும், ஒரே பாணத்தினுல் பல ஜனங்களைத் தொலைத்தும், ஆக இப்படி மனிதர்கள் குதிரைகள் யானைகள் ஆகிய இவைகளின் மர்மஸ்தானங்களிற் படும்படி பாணங்களை ப்ரயோகிப்பேன். ப்ரபுவே! இப்பொழுது என்னுடைய அஸ்த்ர மஹிமையாலுண்டான ப்ரதாபமானது இதோ அரசனுகிய தசரதனு

டைய ப்ரபுத்வத்தைப் போக்குவதற்கும் உனக்கு ப்ரபுத்வத்தை உண்டுபண்ணுவதற்கும் வல்லதாகி விளங்கப் போகின்றது. ராமா! உயர்ந்த சந்தனத்திற்கும் தோள் வளைகள் பூண்டிருப்பதற்கும் தனங்களைத் தானஞ் செய்வதற்கும் சத்ருக்களிடத்தினின்று நண்பர்களைப் பாதுகாப்பதற்கும் உரியவைகளான இப்பாஹு தண்டங்கள் இப்பொழுது உனது அபிஷேகத்திற்கு விக்னஞ் செய்பவர் யாவரையும் துரத்துவதற்கு வேண்டும் வ்யாபாரத்தை நடத்தப்போகின்றன. உனக்குச் சத்ருவாயிருப்பவன் யாவன்? சொல்வாயாக; அவனை இப்பொழுதே ப்ராணன்களை இழக்கும்படிக்குச் செய்கின்றனன்; அவனது கீர்த்தியைத் தொலைத்துவிடுகின்றனன்; அவனது நண்பர்களெல்லோரையும் பாழாக்குகின்றனன். பூமி முழுவதும் உன்னதீனமாகச் செய்யும்படி எனக்குக் கட்டளை இடுவாயாக. உனக்கு நான் கிங்கரனல்லேனா? ஆகையால் உன்னிஷ்டப்படி செய்ய ஸித்தமாயிருக்கின்றேன்' என்றனன். ரகுகுலத்தைப் பெருகச் செய்யும் ஸ்வபாவனாகிய ராமன் இவ்வாறு லக்ஷ்மணன் சொன்னதையெல்லாங்கேட்டுத் தனக்கு ஸம்மதியில்லாமையால் மனவருத்தப்படுகின்ற அவன்கண்களினின்றும் பெருகிவருகின்ற கண்ணீரைத் துடைத்துப் பலவாறு இனிய உரைகளால் ஸமாதானப்படுத்திப் பிறகு அந்த லக்ஷ்மணனைப் பார்த்து [1] 'லக்ஷ்மணா! நீ எப்பொழுதும் மேது

---

1 இவ்வாறு விரிவாக லக்ஷ்மணன் செய்த பூர்வபக்ஷத்திற்கு ராமன் முன்பு விஸ்தரமாகச் சொன்ன ஸித்தாந்தத்தையே இப்பொழுது சுருக்கமாக இவ்வாக்யத்தினால் மொழிந்தானென்று தெரியவருகின்றது. மேலும் 'ஜீவதோர்வாக்யகரணாத் ப்ரத்யவீக்ஷம் ஹரி ஹோ

வான ஸ்வபாவமுடையவன்; அப்படி யிருக்க இப்படி ஏன் கோபித்துக்கொள்கின்றனே. நான் தந்தையினது வசனத்திலேயே நிலைநிற்பேனன்றி அதை எள்ளளவாயினும் தாண்டிப்போகமாட்டேனென்று தெரிந்துகொள்வாயாக. அப்பா! இந்தப் பித்ரு வசன பரிபாலனமே ஸன்மார்க்கமென்றுணர்வாயாக' என்றனன். இருபத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமனது வனவாஸ நிஸ்சயத்தைக் கௌஸல்யை அபிநந்தனஞ் செய்தல்.

கௌஸல்யை, அந்த ராமன் இவ்வாறு தந்தையின் ஆஜ்ஞையைப் பரிபாலனஞ் செய்வதிற்றனே மிக்க மனவூக்கங்கொண்டிருப்பதுகண்டு அழுவது அமங்கலமாகையால் கண்ணீர் வந்து கண்களில் நிரம்ப, அதை அடக்கிக்கொண்டு அதனல் தடைபட்ட கண்டத்துடன் தர்மம் மிகுந்திருக்கிற வசனத்தை மொழிந்தனள்:—'இதுவரையில் துக்கமென்பது சிறிதும் அறியாதவன்; ஆயினும் தர்மத்தைத் தவறுதிருப்பவன்; ஸமஸ்த ப்ராணிகளுக்கும் மனக்களிப்புண்டாகும்படி இனிதாகப் பேசுந்தன்மையன்; ஸார்வபௌமனுகிய தசரதமஹாராஜனுக்கு என்னிடத்தில் பிறந்தவன். இப்படிப்பட்ட ராமன் தெய்வவசத்தினல் பூமியில் இறைந்துகிடக்கிற தான்ய கணங்

---

ஜநாத்। ம்யாயாம் பிண்டதானாச்ச த்ரிபி: புத்ரஸ்ய புத்ரதா' (தாய் தந்தைகள் பிழைத்திருக்கும்பொழுது அவர்களது சொற்படி நடக்கையும், அவர்கள் லோகாந்தரஞ் சென்ற பின்பு ப்ரதிஸம்வத்ஸரம் பெருக்க போஜனதர்ப்பணஞ் செய்கையும், கயையில் பிண்டங் கொடுக்கையும் ஆகிய இம்மூன்றினல் புத்ரனுக்குப் புத்ரத்வம் ஸித்திக்கின்றது. (புத்ரத்வம்-புத்ரனயிருக்கை.) என்கிற ஸ்ம்ருதியைக்கொண்டு பித்ருவாக்யமே அவஸ்யம் செய்யவேண்டுமென்று ஸித்தாந்தஞ் செய்வதாகத் தெரியவருகின்றது.

களை ஒன்றொன்றாகப் பொறுக்கிக்கொண்டு அதனால் எப்படி ஜீவிக்கப் போகின்றனன். எவனது படர்களும் பரிசாரகர்களும் அறுசுவையமைந்த உயர்ந்த அன்னத்தைப் புசிக்கின்றனர்களோ, அப்படிப்பட்ட ப்ரபுவாகிய இந்த ராமன் காட்டுக்குச் சென்று வேர்களையும் காய்களையும் எவ்வாறு தின்று பிழைக்கப்போகின்றனன். அரசன், மிகுந்த குணங்கள் பொருந்தியவனும் மனத்திற்கு மிகவும் இனியனுமாகிய ராமனைக் காட்டுக்கு அனுப்புகின்றானென்னும் வார்த்தையைக் கேட்டு, இப்படிப்பட்ட பிள்ளையைக் காட்டுக்கு அனுப்புவது அஸம்பாவிதமாகையால் எவன்தான் நம்புவான்? எவனுக்குத்தான் பயம் உண்டாகாது? எவனும் நம்பமாட்டான். அப்படி நம்புவானாயின், ராமனைப் போன்றவனுக்கே இப்படிப்பட்ட விபத்து நேரிடும்பொழுது நமக்கும் இப்படியே மனவருத்தம் உண்டாகக் கூடுமென்று மன்னவனிடத்தில் மிகுந்த பயமுற்றிருப்பான். ராமா! ஸமஸ்த லோகங்களுடைய மனத்திற்கும் மிகவும் இனியனாயிருக்கிற நீயும் தெய்வவசத்தினால் ஆரண்யத்திற்குப் போகின்றனையாகையால் உலகத்தில் எப்படிப்பட்டவனுக்கும் ஸமஸ்த துக்கங்களையும் நேரிடச் செய்வது தெய்வமேயென்றும், ஆகையால் அது மிகுந்த பலமுடையதென்றும் ஸந்தேஹமின்றித் தெரியவருகின்றது. புதல்வனே! இனி நீ என்னை விட்டுப் பிரிவதனால் எனது சரீரத்தில் சோகாக்னியொன்று உண்டாகும்; நீ என் கண்களுக்குப் புலப்படாமையே அவ்வக்னியைப் படர்ந்து எரியச் செய்யுங் காற்று. கூக்குரலிட்டு அழும்படியான இந்தத் துக்கமே அதற்குக் கட்டைகள்; எனது அழுகைக் கண்ணீர்களே அதில் ஹோமஞ் செய்யும் ஆஹுதி; உன்னைக் காணாத சிந்தையினால் மனத்தில் வளர்ந்து வருகின்ற வெப்பமே அதற்குப் பெரும் புகை; பெருமூச் செறிகையே அது வளர்ந்துவருவதற்காகச் செய்யும் புருஷ

காரம். இங்ஙனம் ஒப்பின்றிய அப்பெரும் சோகாக்னி எனது சரீரத்தில் பிறந்து, சிசிரருதுவில் பனிஜலம்பட்டு நனைந்திருக்கிற புதரைக் காட்டுத்தீபடர்ந்து வந்து க்ரமமாக வாடச் செய்து பின் தஹிப்பதுபோல், நெருப்பைத் தணிக்கவல்ல ஜலம்போன்ற உன்னை விட்டுப் பிரிந்து இங்கு வருந்தி யிருக்கின்ற என்னை வாடி வதங்கச் செய்து தஹிக்கப் போகின்றது. பிள்ளாய்! பசு வெளியே போகின்ற தன் கன்றுக்குட்டியைப் பின்றொடர்ந்து செல்லாமல் எப்படியிருக்கும்? பின் சென்றே தீருமல்லவா? பிள்ளாய்! அப்படியே நானும் நீ எங்குப் போகின்றனையோ, அவ்விடத்திற்கு உன்னுடன்கூடவே வருகின்றேன்' என்றனள். புருஷசிகாமணியாகிய ராமன் அங்ஙனம் அன்னை மொழிந்த மொழிகளைக் கேட்டு மிகவும் மனவருத்த முற்றிருக்கின்ற அவ்வன்னையைக் குறித்து மொழிந்தனன்:— 'மன்னவர், முதலே கைகேயியால் வஞ்சிக்கப்பட்டிருக்கின்றனர்; நானும் காட்டுக்குப் போகின்றனன்; நீயும் என்னுடன் கூடவே அவரை விட்டு வருவாயாயின், அவர் கொஞ்சமாயினும் ஜீவித்திராரென்பது நிச்சயம். ஸ்த்ரீகளுக்குத் தமது பர்த்தாவை விட்டிருப்பது மிகவும் க்ரூரமாயிருப்பதல்லவா? ஆகையால் மேன்மையுடைய நீ அப்படிப்பட்ட நிந்தைக்கிடமான கார்யங்களைச் செய்யலாகாது; மனத்திலுங் கூட இதை நினைப்பது யுக்தமன்று. ககுத்ஸ்த்தவம்சத்திற் பிறந்தவரும் என் தந்தையுமாகிய மஹாராஜர் எதுவரையிலும் பிழைத்திருப்பாரோ, அதுவரையிலும் நீ அவருக்குப் பரிசர்யை செய்துகொண்டிருப்பாயாக. அதுவே ஸ்த்ரீகளுக்குச் சாஸ்வதமான தர்மம்' என்றனன். ராமன் அங்ஙனம் உரைக்கையில் அந்தக் கௌஸல்யை அழகிய மதியுடையவளாகையால் அவன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, அவை மிகவும் தர்

மங்கள் அமைந்திருக்கையால், மிகுந்த ஸந்தோஷம் அடைந்து, எந்தக் கார்யஞ் செய்யத்தொடங்கின போதிலும் அதைச் சிறிதும் பரிஸ்ரமமின்றி நடத்தி ஈடேற்ற வல்லனாகிய அந்த ராமனைப் பார்த்து 'நீ சொன்னபடியே செய்கிறேன்' என்றனள். தார்மிக சிரோமணியாகிய அந்த ராஜகுமாரனும் அன்னையாகிய கௌஸல்யை அங்ஙனஞ் சொல்லக்கேட்டு மீளவும்மிகுந்த மனவருத்தமுற்றிருக்கின்ற அவ்வன்னையைப் பார்த்து மொழிந்தனன்:—'நான் ஒருவனே அன்று; நீயும் நானும் இருவருங்கலந்து என் தந்தை சொல்லியபடி செய்யவேண்டும். அவர் நமக்கெல்லாம் அரசர்; மேலும் போஷணஞ் செய்பவர்; ஆசார்யர்; மேன்மையோடிருக்கப்பட்டவர்; எல்லோர்க்கும் நியாமகர்; ப்ரபு. ஆகையால் நாமெல்லோரும் அவரது ஆஜ்ஞையை உல்லங்கனஞ் செய்யக்கூடாது. [1] இவ்வைந்து ஒன்பது ஸம்வத்ஸரங்கள் மஹாரண்யத்தில் ஸுகமாக விளையாடி யிருந்துவிட்டுப் பிறகு பரம ஸந்தோஷத்துடன் உனது ஆஜ்ஞையிற்றானே நிலையின்றிருப்பேன்' என்றனன். ராமன் அவ்வாறு மொழிகையில், கௌஸல்யை அதைக் கேட்டுப் புதல்வனிடத்தில் மிகுந்த வாத்ஸல்யமுடையவளாகையால் கண்களிரண்டிலும் கண்ணீர் நிரம்பப் பெற்று மிக்க மனவருத்தத்துடன் தனது ப்ரிய குமாரனாகிய ராமனைப் பார்த்து 'ராமா! இந்தச் சக்களத்திகளிடையில் இருப்பது எனக்கு யுக்தமன்று; நீ உனது தந்தையின் இஷ்டப்படி காட்டுக்குப் போக நிச்சயித்தி

---

1 இதற்கு—'இமாநி து மஹாரண்யே விஹ்ருத்ய நவ பஞ்ச ச' என்று மூலம். 'இமாநி-நவ-பஞ்ச ச' (இவ்வைந்து ஒன்பது ஸம்வத்ஸரங்கள்) என்று ஸ்வல்பமாகத் தோற்றும் பொருட்டுச் சொன்ன வார்த்தை. 'விஹ்ருத்ய' (விளையாடியிருந்து) இதனால் வனவாஸத்தில் தனக்குக் கஷ்டமில்லையென்று தெரிவித்தானென்று தெரியவருகின்றது.

ருப்பாயாயின்,[1] காட்டில் பிறந்து வளர்ந்த பெண்மானைப்போல் என்னையும் காட்டுக்கு அழைத்துக்கொண்டுபோவாயாக' என்றனள். அங்ஙனஞ் சொல்லி அழுதுகொண்டிருக்கிற அன்னையைப் பார்த்து ராமன் தானும் அழுதுகொண்டே மொழிந்தனன்:—'பெண்ணாகப் பிறந்தவளுக்குத் தான் பிழைத்திருக்குங் காலம் முழுவதும் கணவனே தெய்வம்; அவனே ப்ரபு. ஆனதுபற்றி மன்னவர் எனக்கு மாத்ரமேயன்றி எனக்கும் உனக்கும் நியாமகராயிருப்பவர். மிகுந்த மதியுடைய மன்னவர் உலகத்திற்கெல்லாம் நாதனாயிருக்கையில், அவர் நமக்கு மாத்ரம் நாதனாகாமற் போவாரா? ஆகையால் அவர் இருக்கும்பொழுது நாம் அநாதர்கள் அல்லோம். அநாதர்களைப்போல் நமக்குப் பயம் உண்டாக ப்ரஸக்தி இல்லை. 'அரசன் நல்லவனாயினும் சக்களத்திகளால் நேரும் பயம் தீருமா' என்பாயாயின், ராஜாவாகப் போகிற பரதனும் மிகுந்த தார்மிகன்; ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ப்ரியத்தையே உரைப்பவன்; இனி மாதாவாகிய உனக்கு அப்ரியத்தைச் செய்வானா? செய்யமாட்டான். அங்ஙனம் பரதன் உன்னிடத்தில் அன்போடும் கௌரவத்தோடும் நடந்துகொள்கையில் அவனைப்பற்றிச் சக்களத்திகள் உனக்கு விரோதம் செய்யவல்லராக மாட்டார்கள். 'அவன் ஸ்வபாவமாக தார்மிகனாயினும் தாயின் வார்த்தையைக் கேட்டு ஏதாயினும் அபகாரஞ் செய்வான்' என்கிறாயோ? அவன் தர்மத்தில் மிகவும் மனவூக்கமுடையவனாகையால் எவர் சொன்ன பொழுதிலும் அதைச் செவி கொடுத்துக் கேளாமல் உன்னை அநுவர்த்தித்துப் பரிசர்யை செய்துகொண்டே இருப்பான். நான் வனத்திற்குப் போனபின்பு நீ கொஞ்சமும் பராக்கின்றி மன்னவருக்குப் புத்ர சோகத்தினால்

---

1 (காட்டில் பிறந்து வளர்ந்த பெண்மானைப்போல்) என்கையால்—காட்டிற் பிறந்த மான் அரண்யத்தில் ஸந்தோஷித்திருப்பதுபோல் உனக்கு வருத்தத்தை விளைக்காமல் ஸுகமாயிருப்பேனென்று தெரிவிக்கின்றனள்.

ஆயாஸம் உண்டாகாதிருக்கும்படி நடத்திக்கொண்டிருக்கவேண்டும். இந்தப் புத்ரசோகம் மிகவும் கொடியது; மன்னவரோ வயது சென்றவராயிருக்கின்றனர்; ஆகையால் அவரை இப்புத்ரசோகம் அழிக்காதிருக்கும்படி அவருக்கு நீ ஸர்வகாலமும் மனவூக்கத்துடன் ஹிதத்தை நடத்திக்கொண்டுவரவேண்டும். எப்பொழுதும் வ்ரதங்களை நடத்திக்கொண்டு மிகவும் மேன்மை பெற்றவளென்று புகழுடைய பெண்பிள்ளையும் கணவனை அனுஸரியாதிருப்பாளாயின், அவள் பாபத்தின் பலனையே பெறுவாள். பெரியோர்களுக்கு நமஸ்காரஞ் செய்யாமலும் தேவபூஜைகள் நடத்தாமலுமிருக்கிற மடந்தையும் பர்த்தாவுக்குச் சுஶ்ரூஷை செய்துகொண்டிருப்பாளாயின் உத்தமமான ஸ்வர்க்கலோகத்தைப் பெறுவாள். பெண்பிள்ளை எப்பொழுதும் பர்த்தாவுக்கு ப்ரியங்களும் ஹிதங்களுமாகிய கார்யங்களைச் செய்துகொண்டு சுஶ்ரூஷையை நடத்திக்கொண்டே இருக்கவேண்டும். இந்த தர்மம் பூர்வகாலமே பிடித்து உலகத்தில் மழுங்காமல் நடந்து வரும் சிஷ்டாசாரத்தினால் தெரியவருகின்றது; அப்படியே வேதத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது; அதை அனுஸரித்தே ஸ்ம்ருதிகளும் கோஷிக்கின்றன. தாயே! எனக்காக, (நான் க்ஷேமமாகத் திரும்பி வரும்பொருட்டுச்) சாந்திக பௌஷ்டிக ஹோமாதிரூபமான அக்னி கார்யங்களில் புஷ்பாதிகளாலும் சந்தன தாம்பூலாதிகளாலும் தேவதைகளையும் நன்கு வ்ரதானுஷ்டானங்களைச் செய்து கடைத்தேறின ப்ராஹ்மணர்களையும் ஸர்வ காலமும் பூஜிக்கவேண்டும். இங்ஙனம் செய்வாயாயின், நான் வரும் வரையிலும் உனக்கு ஸுகமாகப் பொழுதுபோய்விடும். நீ இவ்வாறு நான் மீளவும் ஸுகமாக அயோத்யைக்குத் திரும்பி வருவதை விரும்பிக்கொண்டு ஏனைய நியமங்களைக் கைப்பற்றி நிஷித்த பதார்த்தங்களைப் புசியாமல் ஸத்த்வக் தலையெடுக்குமாறு நியதமான ஆஹாரங்களை உட்கொண்டு நான் வருங்காலத்தை எதிர் பார்த்

தூக்கொண்டிருப்பாயாக. நான் வனத்தினின்று மீளவும் திரும்பி வந்தபின்பு தார்மிகோத்தமராகிய மன்னவர் ப்ராணன்களோடிருக்கும் பக்ஷத்தில் மேலான உனது விருப்பங்களை யெல்லாம் பெறுவாயாக' என்றனன். இப்படி ராமன் சொல்லக் கேட்ட கௌஸல்யை புத்ர சோகத்தினால்பீடிக்கப்பட்டுக்கண்ணீர்ததும்பிக்கண்கள் கலங்கப் பெற்று ராமனைப் பார்த்து, மொழிந்தனள்:— 'புதல்வனே! வீரோத்தமா! நீ அரண்யத்திற்குப் போக வேண்டுமென்று கெட்டியாகப் பிடிவாதங்கொண்டிருக்கின்றனை. அதைத் திருப்ப என்னால் முடியாதிருக்கின்றது. அப்பா! இதுகாலத்தின் மஹிமை. காலத்தை எவராலும் அதிக்ரமித்துப் போக முடியாதென்பது நிச்சயம். பிள்ளாய்! நீ புத்தியை நிலை நிறுத்திக்கொண்டு ஜாக்ரதையுடன் அரண்யத்திற்குப் போவாயாக. ப்ரபூ! உனக்கு எப்பொழுதும் மங்கலமே உண்டாகுமாக. நீ மீளவும் அரண்யத்தினின்று வந்தவுடன் எனது கஷ்டங்களெல்லாம் தீரப்பெற்று ஸுகமா யிருப்பேனாக. மஹா பாக்யசாலியாகிய நீ பித்ருவசன பரிபாலனமென்னும் வ்ரதத்தை ஆசரித்துக் கருத்தீடேறப் பெற்றவனாகித் தந்தையின் கடனைத் தீர்த்துவிட்டு அரண்யத்தினின்று மீளவும் திரும்பி வந்தவுடன் நானும் பரம ஸௌக்யத்தைப் பெறுவேனாக. பிள்ளாய்! ரகுகுலத்திற் பிறந்த மஹானுபாவனே! பூமியில் தெய்வத்தின் போக்கு இப்படிப்பட்டதென்று ஊஹிப்பதற்கு யாவராலும் தரமல்லா திருக்கின்றது. இப்படிப்பட்ட வல்லமையுள்ளதுபற்றியே தாயாகிய என் வார்த்தையுங் கூடத் தள்ளிவிட்டு அரண்யத்திற்குப் போகும்படி உன்னைத் தூண்டுகின்றது. பிள்ளாய்! நீ மஹாபாஹுவாயிருப்பவன். உன்னை யாவனும் எதிரிட வல்லனல்லன். ஆகையால் இப்பொழுது நீ புறப்பட்டுப் போவாயாக. மீளவும்

க்ஷேமமாக இவ்விடம் வந்து சேர்ந்து அழகிய நல்வார்த்தைகளைப் பேசி என்னை மனக்களிப்புறச் செய்வாய். குழந்தாய்! நீ பதினான்கு ஸம்வத்ஸரங்கள் தீர்ந்து நார்த்துணிகளையும் ஜடைகளையுந் தரித்து அரண்யத்தினின்றுதிரும்பி இவ்விடத்திற்குவருகையில், உன்னைப்பார்க்கும்படியான அக்காலம் இப்பொழுதே எனக்குநேருமா' என்றனள். கௌஸல்யை, ராமன் அங்ஙனம் பித்ருவசனத்தின்படி வனவாஸஞ் செய்ய நிச்சயமுற்றிருக்கிறானென்பதை அறிந்து மனத்தில் மிக்க ஆதரம்மேலெழப் பெற்றுச் சுபலக்ஷணங்கள் பொருந்திய அந்த ராமனைப் பார்த்து மங்கலங்கள் அமைந்த சொற்களைச்சொல்லி அவனுக்கு நன்மை உண்டாக விரும்பினள். இருபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## கௌஸல்யை ராமனுக்கு மங்கலாசீர் வசனங்களைக் கூறுதல்.

தாயாகிய கௌஸல்யாதேவி கம்பீரமான மனமுடையவள்; ஆகையால் அந்த ஸங்கடத்தை விட்டு அழுததனாலுண்டான அசுசித்தனத்தைப் போக்கிக் கொள்வதற்காக ஜலத்தைக்கொண்டு ஆசமனஞ் செய்து ராமனுக்கு மங்கலாசாஸனம் நடத்தினள். ரகுகுலத்திற் பிறந்த யாவரிலும்! மேலாயிருப்பவனே! உன்னை நிறுத்துவதற்கு என்னால் தரமல்லாதிருக்கின்றது. உன்னிஷ்டப்படி இப்பொழுது காட்டுக்குப் போவாயாக. ஆனால் அவ்விடத்திலேயே நின்றுவிடாமல் கெடுவு தீர்ந்தவுடன் திரும்பிவருவாயாக. அங்ஙனம் வந்து சேர்ந்து ஸத்புருஷர்களாகிய மன்னவர்கள் நடத்திக்கொள்ளும் க்ரமமாகிய

அபிஷேகத்தைச் செய்துகொள்வாயாக. ரகுகுலதிலக னே! ராமா! நீ ப்ரீதியோடு பரிபூர்ணமாக நியமத்துடன் யாதொரு தர்மத்தைச் சிறிதும் தவருமல் அனுஷ்டிக்கின்றுயோ, அந்தத் தர்மமே உன்னைச் சுற்றிலுஞ் சூழ்ந்து காத்துக்கொண்டிருக்குமாக. குழந்தாய்! நீ நாற்சந்தி வீதிகளிலும் தேவாலயங்களிலும் எந்தத் தேவதைகளுக்கு நமஸ்காரஞ் செய்கிருயோ, அந்தத் தேவதைகள் ஆரண்யத்தில் மஹர்ஷிகளோடு உன்னைக் காப்பாற்றுவார்களாக. சிறந்த மதியுடைய விஸ்வாமித்ர மஹர்ஷி உனக்குக் கொடுத்த அஸ்த்ரங்கள் அனைத்தும், ஸகல நற்குணங்களும் பொருந்திய உன்னை எப்பொழுதும் எல்லாவிடங்களிலும் காத்துக்கொண்டிருக்குமாக. நீண்ட புஜதண்டங்களை யுடையவனே! நீ செய்த பித்ருசுஸ்ருஷையும் மாத்ருசுஸ்ருஷையும் உனது ஸத்யவ்ரதமும் உன்னை ஸமஸ்த ஸங்கடங்களினின்றும் பாதுகாத்திருக்கப்பெற்று நீ வெகுகாலம் ஜீவித்திருப்பாயாக புருஷசிகாமணியே! அங்கு ஆஸ்ரமங்களில் ஸத்கார்யங்களுக்கு ஸாதனங்களாகிய ஸமித்துக்களும் தர்ப்பங்களும் தர்ப்பங்களைக்கொண்டு முடிந்த பவித்ரங்களும் ரிஷிகளிருக்கும் மேடைகளும் அக்னிவேதிகைகளும் தேவாலயங்களும் தேவபூஜை செய்யும் பற்பல இடங்களும் குன்றுகளும் மரங்களும் மொட்டைமரங்களும் மடுக்களும் பக்ஷிகளும் ஸர்ப்பங்களும் ஸிம்ஹங்களும் நீ அரண்யத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கையில், மனவூக்கமின்மையாலுண்டான தோஷங்களைப்போக்கி, உன்னைக் காத்துக்கொண்டிருக்குமாக. ஸாத்யர்களென்று ப்ரஸித்தர்களான தேவர்களும் விஸ்வதேவர்களும் ஸப்த மருத்துக்களும் மஹர்ஷிகளும் உனக்கு மங்கலத்தைக் கொடுப்பார்களாக. தாதா விதாதா என்னும் தேவர்

களும் ஆதாரபூதனுகிய விராட் புருஷனும் ஸ்ருஷ்டி கர்த்தாவாகிய ப்ரஹ்மதேவனும் உனக்கு மங்கலத்தைக் கொடுப்பார்களாக. மேலும், த்வாதசாதித்யர்களிற் சேர்ந்த பூஷாவும் பகனும் அர்யமனும் உனக்கு மங்கலத்தைக் கொடுப்பார்களாக. அப்படியே உலகத்தில் ப்ரஸித்தமாக வழங்கி வருகிற தேவேந்த்ரன் முதலிய திக்பாலகர்கள் அனைவரும் உனக்கு மங்கலத்தைக் கொடுப்பார்களாக. வஸந்தம் முதலிய ருதுக்களும் சுக்ல பக்ஷ கிருஷ்ணபக்ஷங்களும் சைத்ரம் முதலிய மாதங்களும் ப்ரபவாதி ஸம்வத்ஸரங்களும் ராத்ரிகளும் பகல்களும் முஹூர்த்தங்களும் உனக்கு எப்பொழுதும் மங்கலத்தைக் கொடுத்துக்கொண்டிருக்குமாக. பிள்ளாய்! த்யானமும் பரிபக்வமாகிய யோகமும் தர்மமும் உன்னை ஸகல விதத்திலும் காப்பாற்றுமாக. மஹானுபாவனுகிய ஸனத்குமாரனும் மேன்மைபெற்ற குமாரஸ்வாமியும் ஸோமதேவனும் தேவகுருவாகிய ப்ருஹஸ்பதியும் ஸப்தரிஷிகளும் நாரதமஹர்ஷியும் உன்னை எல்லாவிடங்களிலும் ரக்ஷித்துக் கொண்டிருப்பார்களாக. குழந்தாய்! எங்கும் ப்ரஸித்தங்களாகிய திசைகளும் திக்பாலகர்களும் நான் செய்யும் ஸ்தோத்ரத்திற்கு ப்ரஸன்னர்களாகி நீ போகிற அவ்வரண்யத்தில் உன்னை எப்பொழுதும் காப்பாற்றிக்கொண்டிருப்பார்களாக. குல பர்வதங்களும் ஸகல ஸமுத்ரங்களும் குபேரனும் வருணனும் த்யுலோகமும் ஆகாயமும் பூமியும் ஸமஸ்த நதிகளும் ஸர்வ நக்ஷத்ரங்களும் அங்காரகன் முதலிய க்ரஹங்களும் அவைகளின் அபிமானி தேவதைகளும் இரவும் பகலும் காலைமாலை ஸந்திகளும் அரண்யத்திலிருக்கிற உன்னைப்பாதுகாத்து வருவார்களாக. [1]பரிசுத்தங்களா

1 முன் சொன்ன ருது முதலியவற்றை மீளவும் சொல்வது புனருக்தியாகும்; ஆயினும் இங்கு ருதுமுதலியவற்றைச் சொல்வ

கிய ஆறு ருதுக்களும் மாஸங்களும் ஸம்வத்ஸரங்களும் [1]கலைகளும் காஷ்டைகளும் உனக்கு அரண்யத்தில் ஸுகத்தை விளைத்துக்கொண்டிருக்குமாக. மிகுந்த மதியுடையனுகித் தந்தையின் ஆஜ்ஞைப்படி முனிவேஷந் தரித்துப் பெருங் கானகத்தில் திரிந்துகொண்டிருக்கிற உனக்குத் தேவதைகளும் அஸுரர்களும் எக்காலத்திலும் ஸுகத்தைக்கொடுப்பார்களாக. குழந்தாய்! கோபம் மிகுந்திருக்கப்பெற்றவர்களும் கொடுந் தொழிலர்களுமாகிய ராக்ஷஸர்களாலும் பிசாசர்களாலும் மற்றுமுள்ள ஸமஸ்த க்ரூர ம்ருகங்களாலும் உனக்குப் பயம் உண்டாகாதிருக்குமாக. நுழையக்கூடாத கானகத்தில் வஸிக்கிற குரங்குகளும் தேள்களும் காட்டீக்களும் கொசுக்களும் மலைப்பாம்புகளும் பாம்புளும் மற்றைப் புழுக்களும் உனக்குக் கெடுதியை விளைப்பவைகளாகாதிருக்குமாக. பிள்ளாய்! மதம் பிடித்துத் திரிகிற, பெரிய யானைகளும் ஸிம்ஹங்களும் புலிகளும் கரடிகளும் கோரைப்பல்லுடைய ம்ருகங்களும் எருமைக்கடாக்களும் பயங்கரங்களாகிய கொம்புள்ள ம்ருகங்களும் உனக்குக் கெடுதியைச் செய்யாதிருக்குமாக. மேலும், மனுஷ்ய மாம்ஸங்களைத் தின்பவைகளும் பயங்கரங்களுமாகிய இதர க்ரூரஜந்துக்களும் இங்கு என்னால் பூஜிக்கப்பட்டவைகளாகி ஸந்தோஷம் அடைந்து உன்னைக் கானகத்தில் எவ்வளவும் ஹிம்ஸியாதிருக்குமாக. குழந்தாய்! ராமா! நீ போகும் வழியெல்லாம் உனக்கு வேண்

---

தனுல் அவற்றின் அதிதேவதைகளைக் கொள்வோமாயின், அந்தத் தோஷம் நேராது. அல்லது—கௌஸல்யை புத்ரரக்ஷணத்தில் தனக்குள்ள ப்ரீதிபாரவஶ்யத்தினுல் மறந்து சொன்னுளாகையால் தோஷமில்லையென்று சிலர் கருத்து.

1 (கலைகளும் காஷ்டைகளும்) இவ்விரண்டும் காலபேதங்கள். காஷ்டையாவது—பதினெட்டு நிமிஷங்கள். கலையாவது—முப்பது காஷ்டைகள்.

டிய காய் கிழங்கு முதலியவை நிரம்பப் பெற்றுச் சுப மாயிருக்குமாக. எல்லாவிடங்களிலும் உனது பராக்ர மச் செயல்களெல்லாம் மாறுபாடின்றி வெற்றிபெற்று விளங்கி வருமாக. குழந்தாய்! நீ எல்லா அபீஷ்டங் களும் ஸித்திக்குமாறு மங்கலங்கள் நிரம்பப் பெற்று வனத்திற்குப் போவாயாக. ஆகாயத்தில் திரிபவர்க ளாகிய தேவதைகளாலும் பூமியிலுள்ள தேவதைகளா லும் மற்றுமுள்ள இதர தேவதைகளாலும் அடிக்கடி உனக்கு மங்கலம் உண்டாகுமாக. உனது சத்ருக்களுங் கூட உனக்கு மங்கலத்தையே விளைவிப்பார்களாக. ராமா! ப்ருஹஸ்பதியும் சந்த்ரனும் ஸூர்யனும் குபே ரனும் யமனும் நான் செய்யும் பூஜையைப் பெற்று ஸந்தோஷித்து, தண்டகாரண்யத்தில் வஸித்திருக் கிற உன்னைக் காப்பாற்றி வருவார்களாக. ரகுநந்தன! நீ நதிகளில் இழிந்து ஸ்நானஞ் செய்யுங் காலத்தில் அக்னி தேவனும் வாயு தேவனும்[1] அக்னிஹோத்ர தூம மும் விஸ்வாமித்ரமஹர்ஷி உனக்கு உபதேசித்த மந்த்ரங் களும் உன்னை ரக்ஷித்துக் கொண்டிருக்குமாக. ஸமஸ்த லோகநாதனுகிய ப்ரஹ்மதேவனும் ஸமஸ்த ப்ராணி போஷகனுகிய ஸ்ரீ நாராயணனும் ரிஷிகளும் மற்றை தேவதைகளும் வனவாஸஞ் செய்கிற உன்னைக் காப் பாற்றுவார்களாக'. இப்படி, மிகுந்த புகழ்பெற்றவளும் நீண்ட கண்களை யுடையவளுமாகிய கௌஸல்யை ராம னுக்கு மங்கலாசாஸனஞ் செய்து புஷ்பமாலைகளாலும் அவரவர்களுக்குரிய ஸ்தோத்ரங்களாலும் தேவதைக ளைப் பூஜித்தனள். பின்பு ராமனுக்கு மங்கலம் உண்டா கும் பொருட்டு அக்னியைக் கொண்டுவந்து மஹானு பாவராகிய ப்ராஹ்மணரைக் கொண்டு சாஸ்த்ரங்களிற்

1 அக்னிஹோத்ரதூமம்—ரிஷிகள் அக்னிஹோத்ரஞ் செய்யும் பொழுது அக்னியினின்று உண்டாகும் புகை.

சொல்லியபடி ஹோமஞ்செய்வித்தனள். மடந்தையர் மணியாகிய அந்தக் கௌஸல்யை ஹோமத்தின் பொருட்டு நெய்யையும் வெளுத்த பூமாலிகைகளையும் ஸமித்துக்களையும், வெள்ளைக்கடுகுகளையும் வரவழைத்தனள். ருத்விக்காகிய அந்த ப்ராஹ்மணரும் ஸர்வோபத்ரவங்களும் தீரும்படிக்கும் ஆரோக்யம் உண்டாகும்படிக்கும் விதியிற் சொல்லியபடி ஹோமஞ்செய்துமுடித்து மிகுந்த ஹவிஸ்ஸைக்கொண்டு வெளியிற் செய்யவேண்டிய பலியை நடத்தினர். மேலும், அவர் தேனும் தயிரும் அக்ஷதைகளும் நெய்யும் ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்து அவர்களைக்கொண்டு புண்யாஹவாசனஞ் செய்வித்துப் பின்னும் வனத்தில் ராமனுக்கு மங்கலங்களை விளைவிக்கும்படியான மந்த்ரங்களை ஜபிக்கச்செய்தனர். பின்பு பெருங்கீர்த்தி அமைந்த ராமனது மாதாவானவள் ப்ராஹ்மணர்களிற் சிறந்தவராகிய அந்த உபாத்யாயருக்கு அவரது விருப்பத்துக்குரியபடி ஏராளமான தக்ஷிணை கொடுத்து ராமனைப்பார்த்துமொழிந்தனள்:—'ஸமஸ்த தேவதைகளும் நமஸ்கரிக்கப்பெற்ற தேவேந்த்ரனுக்கு வ்ருத்ராஸுரன் நசிக்கும்படிக்கு யாதொரு மங்கலம் உண்டாயிற்றோ, அம்மங்கலம் உனக்கு உண்டாகுமாக. முன்பு வினதை, தன் குமாரனாகிய கருடன் அம்ருதங்கொண்டுவர விரும்பிப் போகும்பொழுது அவனுக்கு யாதொருமங்கலத்தை விளைவித்தனளோ, அம்மங்கலம் உனக்கு உண்டாகுமாக. ஸமுத்ரத்தைக் கடைந்து அம்ருதத்தைப் பிறப்பிக்கும்பொழுது, அதிதி, தன் புதல்வனாகிய தேவேந்த்ரன் ராக்ஷஸர்களை முடிக்குமாறு எந்த மங்கலத்தைக் கொடுத்தனளோ, அந்த மங்கலம் உனக்கு இப்பொழுது உண்டாகுமாக. ராமா! விஷ்ணு தேவன் த்ரிவிக்ரமாவதாரத்தில் மூவடிகள் அளக்கும்பொழுது மிதமில்லாத ப்ரபாவம்பொருந்திய அந்தத்தேவ

னுக்கு யாது மங்கலம் உண்டாயிற்ரு, அம்மங்கலம் உனக்கு உண்டாகுமாக. மஹாபாஹுவே! இயற்கை யாகவே மங்கலத்தைக் கொடுக்குந் தன்மையுடையவற் றையும் மிக்க மங்கலகரங்களாகச் செய்யுந்தன்மையுள்ள வஸந்த ருது முதலிய ருதுக்களும் ஸமுத்ரங்களும் த்வீ பங்களும் வேதங்களும் ஸ்வர்க்காதிலோகங்களும் திசை களும் உனக்கு மங்கலங்களைக் கொடுத்துக்கொண்டிருக் குமாக' என்றனள். நீண்டழகிய கண்களையுடையவளும் மடந்தையர்மணியுமாகிய அந்தக்கௌஸல்யை அங்ங னம் புதல்வனை ஆசீர்வதித்து அவனது சிரஸ்ஸில் அக்ஷ தைகளையிட்டு மேனியிற் சந்தனங்களைப் பூசி, ஸமஸ்த கார்யங்களையும் நினைத்தபடி நிறைவேற்றவல்லதும் தனது ஸ்பர்சம் பட்டமாத்ரத்தில் உள்ளிருக்கிற சல்யங் களையும் வெளியிற் படுத்தவற்றுமாகிய விசல்யகரணி யென்னும் மூலிகையை ரக்ஷையின்பொருட்டு ராமனது கையிற் கட்டி அதை மந்த்ரங்களைச் சொல்லி மந்த்ரித்த னள். பெரும்புகழ்பொருந்திய அம்மாதரசி துக்கத்தி லாழ்ந்து மனந்தளரப் பெற்றவளாயினும் ப்ரயாணகா லத்தில் அமங்கலம் செய்யலாகாதாகையால் மனத்தில் இல்லாமற்போயினும் வாய்மாத்ரத்தில் மஹாஸந்தோ ஷம் பெற்றவள்போல் புலப்பட்டுக்கொண்டு வார்த்தை கள் தழுதழுத்துத் தடங்கலுறப்பெற்றுத் தலை வணங்கி உச்சிமோந்து ஆலிங்கனஞ்செய்துகொண்டு 'பிள்ளாய்! நீ உன்மனக் கருத்திடேறப்பெற்று ஸுகமாகப் போய் வருவாயாக. குழந்தாய்! நீ, ரோகங்களொன்றுமின்றி ஸமஸ்தகார்யங்களும் கைகூடப்பெற்று மீளவும் அயோத் யைக்குத் திரும்பிவந்து ராஜபத்தநியாகிய ராஜ்யபரி பாலனத்தில் நன்கு நிலைநின்று ஸுகமாயிருக்கப் பார்ப் பேனுக. நீ அரண்யத்தினின்று திரும்பி வருகை யில், நான் ' அரண்யத்தில் என்னுயிற்ரு? எப்படி

இருக்கின்றானே' என்று சிந்தித்துக் கொண்டிருக்கிற துக்கஸங்கல்பங்களெல்லாந் தொலையப் பெற்று ஸந்தோஷத்தினால் முகமும் மலர்ந்து விளங்கப் பெற்றுப் பூர்ண சந்த்ரன் உதித்தாற்போல் புலப்படுகின்ற உன்னைக்காண்பேனாக. ராமா! நீ தந்தையின் ஆஜ்ஞையைத் தீர்த்து அரண்யத்தினின்றும் இவ்விடம் வந்து ஸிம்ஹாஸனத்திலேறி வீற்றிருக்கையில், மீளவும் நான் பார்க்கப் பெறுவேனாக. அப்பா! நீ அரண்யத்தினின்றும் இவ்விடம் வந்து ராஜோசிதங்களாகிய ஆடையாபரணங்கள் முதலிய மங்கலாலங்காரங்களைத் தரித்து விளங்கிக் கொண்டிருந்து எனக்கும் எனது மருமகளாகிய ஸீதைக்கும் உள்ள மனவிருப்பங்களைப் பெருகச் செய்துகொண்டிருப்பாயாக. இப்பொழுது நீ உன்னிஷ்டப்படி கானகத்திற்குப் போவாயாக. ரகுகுலத்திற் பிறந்த ராமா! என்னால் இப்பொழுது பூஜைசெய்யப்பெற்ற சிவன் முதலிய தேவதாஸமூஹங்களும் மஹர்ஷிகளும் பூதங்களும் கொடுமையில் பெருமை பொருந்திய அஸுரர்களும் உரகர்களும் திசைகளும் எனது பூஜைக்குத் திருப்தி அடைந்து, வெகுகாலம் வனத்தில் வஸிக்கப் போகின்ற உனக்கு ஹிதங்களை விரும்பிகொண்டிருப்பார்களாக' என்றனள். இங்ஙனம் அந்தக் கௌஸல்யை கண்களிரண்டிலுங்கண்ணீர் ததும்பப் பெற்றவளாகிப் புதல்வனாகிய ராமனுக்கு விதிப்படி மங்கலாசீர்வசனங்களைச் செய்து முடித்து அவனுக்கு அனுகூலமான ரக்ஷையையுஞ் செய்து வாத்ஸல்யத்தினால் அடிக்கடிகெட்டியாகச் சேர்த்துக் கட்டிக் கொண்டனள். அவ்வாறு கௌஸல்யாதேவி ராமனுக்கு ரக்ஷை செய்தபின்பு பெருங்கீர்த்தி அமைந்தவனாகிய அந்த ராமனும் தாயாகிய கௌஸல்யையின் பாதங்களை அடிக்கடி பிடித்துக்கொண்டு நமஸ்காரஞ் செய்து

மிக்க மனவருத்தத்திலும் இயற்கையாகவே நிலைநின்ற காந்தியுடையவனுகையால் மழுங்காது விளங்குகிற தனது ஒளியுடன் ப்ரகாசித்துக்கொண்டு ஸீதாதேவியின் க்ருஹத்திற்குப் போயினன். இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராமன் அனுமதி பெற்றுக்கொள்வதற்காக ஸீதையினிடம் போதல்.

ராஜகுமாரனுகிய ராமன் இங்ஙனம் தாயாகிய கௌஸல்யையால் மங்கலாசீர்வசனங்கள் செய்யப்பெற்று அக் கௌஸல்யைக்கு நமஸ்காரஞ் செய்து, மிகுந்த தர்மம் பொருந்திய மார்க்கத்தைத் திடமாகப்பிடித்துக்கொண்டு வனத்திற்குப் போக முயன்று ஜனங்கள் நிறைந்த ராஜமார்க்கத்தைத் தன் சரீர காந்தியால் விளங்கச் செய்துகொண்டு ஸீதையின் க்ருஹத்திற்குப் போகும் பொழுது மிகுந்த குணமுடையவனுகையால் ஜனங்களின மனங்களைக் கடைந்தாற்போல் கலக்கினன். அங்குள்ள ஜனங்கள் ராமனைப் பார்க்கும்பொழுதே அவனது குணஸம்ருத்தியானது அந்த ஜனங்களது ஹ்ருதயங்களை ப்ரீதி மேலெழச்செய்து மிகவும் கலங்கச் செய்துவிட்டது. ஸீதை இப்படிப்பட்ட துக்கவ்ருத்தாந்தத்தைக் கேட்க உரியவளல்லளாகையால் மிகவும் மன இரக்கத்திற் கிடமானவள்; ராமாபிஷேகத்திற்காக நியமத்துடன் வ்ரதங்களை ஆசரித்துக் கொண்டிருக்கின்ற அந்த ஸீதாதேவிக்கு ராமனது அபிஷேகம் தடைபட்டது முதலிய வ்ருத்தாந்தங்களொன்றும் தெரியாது. அவள் தனது மனத்தில் ராமன் யௌவராஜ்யாபிஷேகம் பெறப்போகிருனென்றே நினைத்துக்கொண்டிருந்தனள். ஸீதை, பட்டாபிஷேகஞ் செய்யப்பெற்ற பர்த்தாவுக்குச் செய்யவேண்டிய [1] பாதார்ச்சனம் முதலிய ஆசாரங்கள் தெரிந்தவள்; அபிஷேகம்பெற்ற அரசர்களுக்குள்ள வெண்குடைசாமரம் முதலிய விசேஷ லக்ஷணங்களையும்

---

1 திருவடிகளைப் பூசித்தல்.

அறிந்திருப்பவள். அவள் தானே ராமனது அபிவ்ருத்தியின் பொருட்டுச் செய்யவேண்டிய தேவதாபூஜனம் முதலியவற்றை நடத்தி அபிஷேகஞ் செய்யப் பெற்று வரும் பர்த்தாவுக்குச் செய்யவேண்டிய பூஜாவிதானங்களை நடத்தப்போகிறவளாகி மிகுந்த மனக்களிப்புற்று அப்படிப்பட்ட ஸ்வேதச்சத்ரம் முதலிய லக்ஷணங்களோடு அந்த ராஜகுமாரன் வருவதை எதிர் பார்த்துக் கொண்டிருந்தனள். பிறகு ராமன் 'இந்த துக்க வ்ருத்தாந்தத்தை ஸீதைக்கு எப்படி சொல்வேன்' என்று லஜ்ஜையினால் தலை வணக்கமுற்று, நன்கு அலங்காரஞ் செய்யப்பெற்றதும் மஹா ஸந்தோஷத்தில் மிதந்துகொண்டிருக்கிற ஜனங்கள் நிறைந்திருப்பதுமாகிய தனது க்ருஹத்திற்குள் ப்ரவேசித்தனன். பிறகு ஸீதை திடீரென்று எழுந்திருந்து பயத்தினால் நடுக்கமுற்றவளாகி, பர்த்தாவாகிய அந்த ராமன் சோகத்தில் ஆழ்ந்து மிகவும்வருந்திச்சிந்தையினால் இந்த்ரியங்கள் கலங்கப் பெற்றிருக்கக் கண்டனள். தர்மஸ்வபாவனாகிய அந்த ராகவனும் ஸீதையைப் பார்க்கும்பொழுதே மனத்திலுள்ள துக்கத்தை எவ்வளவும் அடக்கமுடியாதவனாயினன். ஆகையால் அவனது மனவருத்தம் வெளியாயிற்று. முகவொளி மழுங்கப்பெற்று 'தன் கையில் வந்த ராஜ்யத்தைப் பிறர் பெறவும், தான் ராஜ்யத்தை இழந்து காட்டுக்குப் போகவும் நேர்ந்ததை இவளுக்கு எவ்வாறு கூறுவேன்' என்று சோகத்தினால்மேனி முழுவதும் புழுங்கப்பெற்று, மனவருத்தத்தைப் பொறுக்க முடியாமல் வருந்துகின்ற அந்த ராஜகுமாரனைப் பார்த்து ஸீதை மிகுந்த மனவருத்தங் கொண்டு 'நாதா! இப்பொழுது இதுவென்? ராகவா! எல்லாம் அறிந்த ப்ராஹ்மணர்கள், ப்ருஹஸ்பதியை தேவதையாக உடையதும் கார்யங்களைச்செய்ய முயன்றவர்களுக்கு ஸம்பத்தைக் கொடுப்பதும் இப்பொழுது உனது அபிஷேகத்திற்குத் தகுந்ததாக விதிக்கப் பட்டதுமாகிய புஷ்ய நக்ஷத்ரம் வந்திருக்கின்றதென்று

சொல்லுகின்றனர்; இப்படிப்பட்ட மங்கல ஸமயத்தில் நீ என் இப்படி மனவருத்த முற்றிருக்கின்றனே. இயற்கையாகவே அழகாயிருக்கவற்ருகிய உன் முகம், நூறு கம்பிகளிடப் பெற்றதும் நீர்மேல் மிதக்கும் நுரை போல் வெளித்திருப்பதுமாகிய குடை மேலேபிடிக்கப் பெருமல் அதனுல் உண்டாகும் சோபையுடன்ப்ரகாசியாதிருக்கின்றது. தாமரையிதழ் போன்று அழகிய கண்களையுடைய உனது முகத்தின்மேல் சந்த்ரன் போலவும் ஹம்ஸம் போலவும் வெளுத்து விளங்குகின்ற மேலான சாமரங்கள் வீசாதிருப்பது ஏனே? புருஷர்களிற்சிறந்த மஹானுபாவனே! மிகுத்த வாக்குடையவர்களாகிய ஸ்துதி பாடகர்களும், புராதன வ்ருத்தாந்தங்களைப் புகழ்ந்து சொல்லுந் தன்மையராகிய ஸூதர்களும், வம்சாவலி கீர்த்தனம் செய்பவராகிய மாகதர்களும் ஸந்தோஷத்துடன் இங்கு மங்கல வசனங்களால் உன்னைப் புகழ்ந்துகொண்டு புலப்பட வேண்டியிருக்க அங்ஙனம் புலப்படா திருப்பது ஏனே? வேதங்களின்கரை அறிந்த ப்ராஹ்மணர்கள் சிரஸ்ஸ்நானஞ் செய்து பரிசுத்தனுயிருக்கின்ற உனது சிரஸ்ஸில் தேனையும் தயிரையும் விதியின்படி தீர்த்த ஜலத்துடன் அபிஷேகஞ் செய்யாதிருக்கின்ருர்களேனே? மந்த்ரி முதலிய ஸகலமான ராஜாங்கத்தினர்களும் அந்தந்த வீதிகளில் வாஸஞ் செய்பவர்களில் தலைவரா யிருப்பவர்களும் பட்டணத்திலுள்ள ஜனங்களும் காட்டுப்புறத்து ஜனங்களும் நன்கு அலங்காரஞ் செய்துகொண்டு உன்னைப் பின்றொடர்ந்து வர விரும்பாதிருக்கின்றனர்; இதுவேனே? மிகுந்த வேகமுடையவைகளும் ஸுவர்ணத்தினுல் அலங்கரிக்கப்பட்டவைகளுமாகிய நான்கு குதிரைகள் கட்டப்பெற்றதும் உத்ஸவத்தின்பொருட்டு நன்கு ஏற்படுத்தப்பட்டதுமாகிய புஷ்யரதமென்னும் ரதம் உனது முன்புறத்தில் வாராதிருக்கின்றதேன்? வீரர்களில் தலைவனே! கறுத்த

மேகங்களோடு கூடிய மலைபோல் விளங்குவதும் சோபை அமைந்ததும் சுபலக்ஷணங்கள் பொருந்தியதாகையால் வெகுமதிக்கப்படுவதுமாகிய பட்டத்து யானை, நீ வரும் பொழுது உன் முன்னே புறப்பட்டு வாராதிருக்கின்றதே னோ? அழகிய காட்சியையுடையவனே! ராமா! ஸுவர் ணத்தினால் அற்புதமாக அலங்காரம் செய்யப்பெற்று விளங்குகின்ற ஸிம்ஹாஸனத்தை வீரர்கள் முன்னே எடுத்துக்கொண்டு போகையில் நீ வரவேண்டியிருக்க, அங்ஙனம் வரக் காணுதிருப்பதேனோ? இப்பொழுது எவ் வளவு ஸந்தோஷமாகப் பட்டாபிஷேகம் ஸித்தமாயிருக் கின்றதோ, அவ்வளவு துக்கத்துடன் இதுவரையில் எந் நாளும் இல்லாத ஒளி மழுக்கம் உனது முகத்தில் உண் டாயிருக்கின்றதே, ஸந்தோஷமென்பது சிறிதும் புலப் படவில்லையே; இதுவென்?' என்று வினவினள். இங்ங னம் அழுகின்ற அந்த ஸீதையைப் பார்த்து ரகுநந்தன ளுகிய ராமன் மொழிந்தனன்:—'ஸீதே! மேன்மைப்படுத் துகைக் குரியவராகிய என் தந்தையார் என்னைப் பட்ட ணத்தினின்றும் காட்டுக்குப் போக அனுப்புகின்றனர். ஜானகியே! நீ பெரிய வம்சத்திற் பிறந்தவள்; தர்மங் களை யெல்லாம் அறிந்திருப்பவள்; வெறுமனே அறிந் திருக்கை மாத்ரமேயன்றித் தர்மங்களை ஆசரித்துக் கொண்டிருப்பவள்; [1] மேலும் ஜனக மஹாராஜன் புதல்வி; ஆகையால் நான் செய்ய முயன்ற தர்மத்தை நீ உல்லங்கனஞ் செய்யமாட்டாய். எனக்கு இந்த வன வாஸம் எப்படி நேரிட்டதோ, அந்த க்ரமத்தைச்

---

1 தான் சொல்லப்போகிற பெரிய அப்ரிய வார்த்தையைக் கேட்டு ஸீதைக்கு மிகுந்த மனவருத்தம் உண்டாகுமென்று நினைத்து அவள் மனம் கலங்காமல் திடமாயிருப்பதற்காக அவளுக்குள்ள பல வகை குணங்களைச் சொல்லிப் புகழ்வதாகத் தெரியவருகின்றது.

சொல்லுகின்றேன், கேட்பாயாக. சொன்ன வார்த்தையைத் தவருதவரும் என் தந்தையுமாகிய தசரதமஹாராஜர் முன்பு என் தாயாகிய கைகேயிக்குப் பெரிய வரங்கள் இரண்டு கொடுத்திருந்தனர். இப்பொழுது மன்னவரின் முயற்சியால் எனது அபிஷேகம் நடக்க ஸித்தமாயிருக்கையில், அக்கைகேயி முன்பு நடந்த ஸங்கேதத்தின்படி அவ்விரண்டு வரங்களைக் கேட்டனள். மன்னவரும் உன்னிஷ்டப்படி செய்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்தமையாலும் சொன்ன வார்த்தையைத் தவருத தர்ம ஸ்வபாவராகையாலும் தர்மத்திற்குட்பட்டு அவ்வம்மைக்குத் தோற்றிருக்கின்றனர். அவ்விரண்டு வரங்களில் ஒன்றுக்காக—நான் தண்டகாரண்யத்தில் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் வாஸஞ் செய்யவேண்டும். இரண்டாவது வரத்திற்காக—எனது தகப்பனர், பரதனை யௌவராஜ்யத்தில் ஏற்பாடு செய்துவிட்டனர். இங்ஙனம் தந்தையினல் ஆஜ்ஞை செய்யப்பட்டவனாகையால், நான் இப்பொழுது ஜனஸஞ்சாரமற்றிருப்பதாகிய வனத்திற்குப் போக நிச்சயித்து உன்னைப் பார்த்துப் போவதற்காக இவ்விடம் வந்தனன். பரதனிடத்தில் என்னைப்பற்றி எப்பொழுதும் புகழ்ந்துரைக்க வேண்டாம். ஸம்பத்தின் பெருக்கோடு கூடிய புருஷர்கள் தம்மெதிரில் பிறரைப் புகழ்ந்துரைத்தால் பொறுத்திருக்க மாட்டார்களன்றே? ஆனதுபற்றிப் பரதனது முன்னிலையில் என் குணங்களைப்பற்றிச் சிறப்பித்துப் பேசவேண்டாம். பரதன் உன்னைப் பத்து பந்துக்களோடொப்பாகப் போஷிக்கவேண்டியவனேயன்றி விசேஷித்துப் போஷிக்கவேண்டிய பாரம் அவனுக்கில்லை. ஆகையால் உன்னைப்போன்ற மற்றை மருமக்களைக்காட்டிலும் மேலான போஷணத்தை நீ விரும்பலாகாது. நீ பரத

னுக்கு அனுகூலமாயிருந்தால்தான் நீ அவனிடம் இருக்கமுடியுமாகையால் நம் பர்த்தாவுக்கு நேர வேண்டிய ராஜ்யத்தை இவன் கைப்பற்றினனேயென்னும் பொறுமை கொண்டு ப்ரதிகூலமாயிருக்கலாகாது. 'அவனுக்கு அனுகூலமாகவே நடந்துகொள்ள வேண்டியது ஏன்' என்பாயோ? அரசன் வம்சபரம்பரையாக வந்த யௌவ ராஜ்யத்தை அந்தப் பரதனுக்கே கொடுத்திருக்கின்றனன்; ஆகையால், ஸீதே! நீ அவனுக்கும் விசேஷித்து மன்னவனுக்கும் மனத்தில் கலக்கம் உண்டாகாதிருக்கும்படி நடந்துகொள்ளவேண்டும். நானும் தந்தையின் ஆஜ்ஞையைப் பரிபாலனஞ்செய்ய இப்பொழுதே அரண்யத்திற்குப் போகின்றனன். நீ மனந் திடமாயிருக்கப் பெற்றவள்; ஆகையால் என் பிரிவைப்பற்றி வருத்தப் படாமல் மனநிலைமையுடனிருக்கவேண்டும். மங்கலஸ்வ பாவமுடையவளே! நான் ரிஷிகள் வஸித்திருக்கிற அரண்யத்திற்குப் போயினபின்பு நீ வ்ரதங்களையும் உப வாஸங்களையும் நடத்திக்கொண்டிருக்க வேண்டும். ப்ரதி தினமும் விடியற்காலத்தில் எழுந்திருந்து விதியின்படி தேவதைகளைப் பூஜித்து, மனிதர்கள் அனைவர்க்கும் ப்ரபுவாகிய என் தந்தை தசரதமஹாராஜருக்கு நமஸ்காரஞ் செய்யவேண்டும். மனவருத்தத்தினால் தளர்ந்து முதிர்ந்தவளாகிய எனது அன்னை கௌஸல்யையை நீ தர்மத்தையே திடமாக முன்னிட்டுக் கௌரவித்துக் கொண்டிருப்பாயாக. மற்றுமுள்ள எனது தாய்மார்கள் அனைவரும், என்னிடத்தில் ஸ்னேஹத்திலும் நன்மனத்தோடு ஹிதஞ்செய்வதிலும் பரிபாலித்துவருவதிலும் எனக்கு ஸமானர்களேயாகையால், அவர்களுக்குங்கூட நீ நமஸ்காரஞ் செய்யவேண்டும். எனக்கு ப்ராணன்களைக்காட்டிலும் மிகவும் அன்பர்களாகிய பரதசத்ருக்னர்களை உன்

உடன் பிறந்தவர்களைப் போலவும் உனக்குப் பிறந்த பிள்ளைகளைப் போலவும் விசேஷமாகப் பார்த்துக்கொள்ளவேண்டும். பரதன் தேசத்திற்கும் நமது குலத்திற்கும் அரசனும் ப்ரபுவுமாகையால் அவனுக்கு அப்ரியத்தை எப்பொழுதும் செய்யலாகாது. அரசர்கள் தமக்கு அனுகூலமாக ப்ரவர்த்தித்துச் சோம்பேறித்தனம் முதலியவையில்லாமல் நன்னடத்தையுடனும் மிக்க ப்ரயத்னங்களுடனும் தம்மை ஆராதித்து அனுவர்த்தித்திருந்தால் தான் மிகவும் ப்ரஸன்னர்களாயிருப்பார்கள்; அப்படியில்லையாயின், மிகுந்த கோபங்கொள்ளுவர். அரசர்கள் தமக்கு தர்மபத்னியினிடம் நேராகப் பிறந்த பிள்ளைகளாயினும் விரோதஞ் செய்வார்களாயின், அவர்களைக் கைவிடுவார்கள். பந்துக்களாகாமல் ஸாதாரண ஜனங்களாயினும் ஸமர்த்தர்களும் தமக்கு ஹிதஞ்செய்பவர்களுமாயிருப்பார்களாயின், அவர்களைக் கைப்பற்றுவார்கள். மங்கல ஸ்வபாவமுடையவளே! பரதன் ராஜாவாகையால், அவனுக்கு அனுகூலமாக நடவாது போவாயாயின், கஷ்டம் பெறுவாயாகையால், அவனை அனுஸரித்து நடப்பாயாக. தர்மத்தில் இடைவிடாமல் நிலைநின்று ப்ரயோஜனமுள்ள வ்ரதங்களைச் செய்துகொண்டு இங்குத்தானே இருப்பாயாக. ப்ரீதிக்கிடமாயிருப்பவளே! நான் மஹாரண்யத்திற்குப் போகின்றனன்; அப்படிப்பட்ட அரண்யத்திற்கு உன்னைப்போன்ற மடந்தையர் வரத்தரமன்று. ஆகையால் நீ இங்குத்தானே இருக்கவேண்டுமல்லவா? இங்கு எவர்க்கும் அப்ரியம் நேராதபடி அனுகூலமாக நடந்துகொண்டிருப்பாயாக. இதுவே நான்சொல்லும் வார்த்தை, இதை நீ மனத்தில் ஏற்றுக்கொண்டு ஏமாறுதிருக்க வேண்டும்' என்றனன்.

இருபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

### ராமன் தன்னேடு வரவேண்டாமென்கையில் ஸீதை கோபித்துக் கொள்ளுதல்.

ஸீதை ப்ரியத்திற்கே உரியவள்; அப்ரியத்தைக் கேட்க ஒருகாலும் தகாதவள்; அப்ரியங்களைச் சொல்லினும் ப்ரியமான உரைகளையே உரைக்குந்தன்மையள்; அப்படிப்பட்ட குணங்கள் பொருந்திய வைதேஹி இங்ஙனம் அப்ரியத்தைச் சொல்லக்கேட்டு ஸ்னேஹத்தின் மிகுதியால் மிகுந்த கோபம் உண்டாகப் பெற்றுத் தன் கணவனுகிய ராமனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தனள்:—'ராமா! நீ ராஜகுமாரனுயிருக்கின்றனே. உனக்கு 'இது ப்ரயோஜனப்படாது' என்று நிச்சயமாகத் தெரிந்திருந்தும் என்னைப்போன்ற பெண்பிள்ளையுங் கூடப் பரிஹாஸஞ்செய்யும்படியான இப்படிப்பட்ட வார்த்தையைச்சொல்லுகின்றனேயே; இதுவென்ன; ஆச்சர்யமாயிருக்கின்றதே! இதுவரையில் என்றைக்கும் இப்படிப்பட்ட வார்த்தையை உன் வாயாற்கேட்டதில்லை. (நீ சொன்ன வார்த்தை சஸ்த்ர அஸ்த்ரங்களில் திறமையமைந்த வீரர்களான ராஜகுமாரர்களுக்குத் தகாததும் அபகீர்த்தியை விளைக்க வற்றுமாகையால் செவி கொடுத்துக் கேட்கவுந்தகாது; இனி வாயாற்சொல்லத்தகுமா?) ஆர்யபுத்ரனே! தந்தையும் தாயும் உடன் பிறந்தவனும் பிள்ளையும் மருமகளும் ஆகிய இவர்களெல்லோரும் தந்தமது புண்யபாப பலன்களை அனுபவித்துக்கொண்டு தந்தமக்குப் பலத்தைக் கொடுக்கவற்ருகிய சுபாசுபகர்மங்களை ஆசரிக்கின்றனர். பர்த்தாவின் [1] அர்த்த சரீரமாகிய பார்யை ஒருத்தி மாத்ரமே பர்த்தாவுக்கு நேருகிற சுபாசுபபலன்களைத் தானும் அனுபவித்துக் கொண்டிருப்பவள். ஆனதுபற்றி உன்னைக் காட்டுக்குப் போயிருக்கும்படி ஆஜ்ஞாபித்த

1 பாதிசரீரம்.

மாத்ரத்திலேயே என்னையும் காட்டிலிருக்கும்படி ஆஜ்ஞாபித்ததாகவே ஆயிற்று. ஸ்த்ரீகளுக்குத் தந்தையாயினும் பிள்ளையாயினும் தாயாயினும் தோழிமார்களாயினும் கதியாகமாட்டார்கள். அவர்கள் எப்பொழுதும் பாரதந்த்ரர்களாகையால் தமக்குத் தாமே கதியாகவழியில்லை. பர்த்தா ஒருவன்மாத்ரமே அவர்களுக்கு இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் எப்பொழுதும் கதியாவான். ரகுகுலத்திற் பிறந்த மஹானுபாவனே! நீ இப்பொழுதே நுழையக்கூடாத கானகத்திற்கு ப்ரயாணமாய்ப் புறப்படுவாயாயின், நானும் உனக்கு முன்னமே கூரான தர்ப்பமுட்களை மிதித்துக்கொண்டு போகின்றனன். அங்ஙனம் நான் முன்பு நடந்து செல்வேனாயின் பின்னே வருகின்ற உனக்கு அவைகளின் மேல் அடியிடுவது வருத்தமாயிராது. நீ வீரனாகையால் என்னைப்போன்ற பெண்பிள்ளையை ஒண்டியாக அரண்யத்திற்குக் கொண்டு சென்று எப்படி காப்பாற்றுவோமென்று பயப்படலாகாது. 'நான் வரவேண்டாமென்றால் வந்துகொண்டிருக்கின்றாளே' என்று பொறாமைப் படுவதும், 'இங்கேயே ஸுகமாயிரு' என்று சொல்லியும் என் வார்த்தையை, உல்லங்கனஞ்செய்து அரண்யத்தில் காய்கிழங்குகளைத் தின்ன விரும்புகின்றாளே' என்று ரோஷமும் உனக்கு உண்டாகுமாயின், குடித்து மிகுந்த ஜலத்தை விடுவது போல் அவைகளை நன்றாக விட்டுத் தொலைத்து என்னிடத்தில் விஶ்வாஸம் வைத்து என்னையுங்கூடவே அழைத்துக்கொண்டு போவாயாக; பர்த்தாவை விட்டுப் பிழைக்கும்படியான பாபம் என்னிடத்தில் இல்லை. 'மாடமாளிகை முதலியவற்றையெல்லாம் விட்டுக் காட்டுக்கு ஏன் வருகின்றாய்' என்னவேண்டாம். மாடமாளிகைகளின் மேல் இருப்பது, விமானங்களின்மேல் ஏறி உலாவுவது, அணிமாதி ஸித்திகளைப்பெற்று ஆகாயத்தில் திரிவது

இவற்றைக்காட்டிலும் மற்றும் எல்லா இருப்புக்களைக் காட்டிலும் பர்த்தாவை அனுஸரித்துச் சுஶ்ரூஷை செய்து கொண்டு அவனது பாதங்களின் நிழலில் ஒதுங்கி யிருக்கையே மேலானது. பர்த்தாவிடத்தில் நடந்து கொள்ளவேண்டும் விஷயத்தைக் குறித்து எனக்குத் தாயும் தந்தையும் பலவாறு உபதேசித்திருக்கின்றனர். ஆகையால் எப்படி நடந்துகொள்ளவேண்டுமோ, அதை எனக்கு இப்பொழுது ஒருவரும் கற்பிக்கவேண்டிய அவஶ்யமில்லை. அரண்யம் ப்ரவேசிக்கக்கூடாததாயினும், ஜனஸஞ்சாரமின்றியதாயினும், பலவகை ம்ருகங்களால் சூழப்பெற்றதாயினும், விசேஷித்துப் பெரும்புலிகளும் செந்நாய்களும் நிரம்பப்பெற்றதாயினும், நான் தப்பாமல் உன்னுடன்கூடவே வருவேனன்றி வாராதிருக்கமாட்டேன். 'இப்படிப்பட்ட முயற்சியால் வருத்தம் ஸம்பவிக்கும்' என்பாயோ? [1] த்ரைலோக்யாதிபத்யம் நேருமாயினும் அதைக் கணிசியாமல் பர்த்தாவுக்குச் சுஶ்ரூஷை செய்யும் வ்ரதத்தைத் தவிர மற்றை எதையும் நினையாமல் என் தந்தை வீட்டிலிருப்பதுபோலவே உன்னுடு கூட அரண்யத்தில் ஸுகமாயிருப்பேன். வீரர்களிற்றலைவனே! நான் உனக்கு எப்பொழுதும் சுஶ்ரூஷை செய்து கொண்டும், இந்த்ரியங்களை அடக்கிக் காமபோகங்களைத் துறந்து ப்ரஹ்மசர்யத்தை ஆசரித்துக் கொண்டும், புஷ்பங்களினின்றும் பெருகிவருகின்ற தேன்களின் மணங் கமழப் பெற்ற அழகான வனங்களில் உன்னுடன் கூடி க்ரீடித்துக்கொண்டுமிருப்பேன். பிறருடைய அஹங்காரத்தைப் போக்குந் தன்மையனே! எனக்குப் பெருமையை விளக்கும் பரமோபகாரனே! ராமா! நீ அரண்யத்தில் என்னையும், உன்னைச் சரணமடைந்த மற்றை ஜனங்களையுங்கூடக் காப்பாற்றுகைக்கு வல்லவனாயிருக்கையில் என்னைக் காப்பாற்றுவதற்குச் சொல்ல வேண்டுமோ?

---

1 மூவுலகங்களுக்கும் ப்ரபுவாகை.

நான் இப்பொழுது உன்னுடன் கூடவே அரண்யத்திற்கு வரப்போகின்றனன்; இதற்குக் கொஞ்சமாயினும் ஸந்தேஹம் வேண்டாம். மிகுந்த பாக்யமுடையவனே! வனத்திற்கு வரமுயன்றிருக்கிற என்னைத் தடுத்து நிறுத்த முடியாது. தினந்தோறும் காய்கிழங்குகளையே சாப்பிட்டுக்கொண்டு ஸுகமாயிருப்பேன். இவ்விஷயத்தில் ஸந்தேஹம் வேண்டாம். உன்னோடுகூட வஸித்திருப்பேனாயின், நான் அன்னபானாதிகளை விரும்பமாட்டேன். ஆகையால் 'அதைப் பானஞ்செய்யவேண்டும், இதைத் தின்னவேண்டும்' என்று உனக்கு வருத்தத்தை விளைக்காமல் உன்னோடுகூட ஸுகமாயிருப்பேன். நீ மிகுந்த புத்தியமைந்தவன்; மேலும் எனக்கு நாதனாயிருப்பவன்; இப்படிப்பட்ட உன்னோடு கூட இருக்கையில், நான் எவ்வளவும் பயமின்றி அரண்யத்திலுள்ள நதிகளையும், பர்வதங்களையும், குட்டைகளையும், வனங்களையும் பார்க்க விரும்புகின்றனன். நான் வீரர்களிற் றலைவனாகிய உன்னுடன் கூடி யாதொரு பயமுமின்றி மிக்க மனமகிழ்ச்சியுடன் ஹம்ஸங்களும் நீர்க்காகங்களும் நிறைந்து அழகாய்ப் புஷ்பித்து விளங்குகிற தாமரை ஓடைகளைப்பார்க்க ஆசைப்படுகின்றனன். நான் வ்ரதங்களில் மிக்க மனவூக்கங்கொண்டவளாகி அவைகளுக்கு வேண்டிய நியமங்களுடன் நின்று அவ்வப்பொழுது அந்தத்தாமரைக்குளங்களில் ஸ்நானஞ்செய்வேனன்றி, ஸ்னானத்திற்காக வெந்நீரை வேண்டேன். நீண்டழகிய கண்களையுடையவனே! அந்தத் தாமரைக்குளங்களில் உன்னுடன்கூடி மிகுந்த ஸந்தோஷத்துடன் விளையாடிக்கொண்டிருப்பேன். இங்ஙனம் அரண்யத்திலும் உன்னுடன்கூடி ஸந்தோஷித்திருப்பேனாகையால் நூறுஆயிரம் ஸம்வத்ஸரங்கள்கடந்து சென்றாலும் எனக்குத் தெரியாது. இனிப் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் எவ்வளவு? உன்னைவிட்டுப் பிரியிலோ, ஸ்வர்க்கமாயினும் எனக்கு ஸம்மதமன்று. புருஷர்களிற்

றலைவனே! எனக்கு ஸ்வர்க்கத்தில் வாஸம் நேரிடுமாயி னும் உன்னைப் பிரிந்திருப்பேனாயின், நான் அதையுங்கூட எள்ளளவும் விரும்பமாட்டேன். [1]ஆரண்யம் மிகவும்

1 இதற்கு—'அஹங் கமிஷ்யாமி வநம் ஸுதுர்கமம் ம்ருகாயு தம் வாநர வாரணைர்யுதம் | வநே நிவத்ஸ்யாமி யதா பிதுர்க்ருஹே தவைவ பாதாவுபக்ருஹ்ய ஸம்யதா|| அநந்யபாவாமநுரக்தசேதஸம் த்வயா வியுக்தாம் மரணாய நிஶ்சிதாம் | நயஸ்வ மாம் ஸாது குரு ஷ்வ யாசநாம் நதே மயாதோ குருதா பவிஷ்யதி' என்பது மூலம். இதற்குத் தோற்றும் உட்கருத்து—(ஸுதுர்கமம் வநம்) மிகவும் கஷ்டப்பட்டு ப்ரவேசிக்கக் கூடியதாகிய அரண்யத்திற்கு. (கமிஷ்யாமி) போகப் போகிறேன். உன்னுடன் வரப்போகிறே னென்றபடி. அந்த அரண்யம், (ம்ருகாயுதம்) ம்ருகத்தோடுகூடி யது. அதாவது—மாரீசன் ம்ருகவேஷந் தரித்து அங்கு வருவா னென்றபடி. அங்கு மாரீசன் மான் வேடம் பூண்டு வருவானாயின், அதைப் பார்த்து நீ விரும்ப அதற்காக நமக்குப் பிரிவு நேரிடும். அப்பொழுது மீளவும் நம்மைக் கூட்டுவிப்பவன் யாவன்? நீ என்னை விட்டுப் பிரிந்து எப்படி நிலைபெற்றிருப்பாயென்று ராமன் சிந்தித்துக் கொண்டிருக்கையில், ஸீதை, (ம்ருகாயுதம்) மாரீசம்ருகம் வருமாயி னும், (வாநரவாரணைர்யுதம்) வானரஶ்ரேஷ்டர்களோடுகூடியது. வானரஶ்ரேஷ்டர்களாகிய ஸுக்ரீவாதிகளோடு கூடினதாகையால் மீளவும் நம்சேர்த்திக்கு ஹானி உண்டாகாதென்கிறாளென்று கருத்து. (வநே) வனத்தில். முதலடியில் (வநம்) என்றமையே போதுமா யிருக்க, மீளவும் (வநே) என்றதனால் அசோகவனமென்று விசே ஷங் கொள்ளவேண்டும். (யதா பிதுர்க்ருஹே) தந்தையின் மாளி கையில் இருப்பதுபோலவே, (வத்ஸ்யாமி) வஸித்திருப்பேன். அப் படி அசோகவனத்தில் இருந்தாலும், (தவைவ பாதாவுபக்ருஹ்ய ஸம்யதா) உனது பாதங்களையே மனத்திற் சிந்தித்துக்கொண்டு நியமந் தவறாமல் இருப்பேனென்று கருத்து. (அநந்யபாவாம்) ராவணன் கொண்டு போவானாயினும், உன்னிடத்திலேயே என் மனம் பற்றியிருக்கும், பர்த்தாவானதுபற்றிக் கௌரவத்தினால் அம் மனம் இருப்பதில்லை; (அநுரக்தசேதஸம்) அநுராகத்தினாலும்,

நுழையக்கூடாததாயினும், அங்குக் குரங்குகளும் யானைகளும் மற்றும் மிருகங்களும் நிரம்பியிருப்பினும், நான் பயப்படாமல் கூடவே வருவேன். நான் உனது பாதங்களில் சுஶ்ரூஷை செய்துகொண்டு தந்தையின் வீட்டிலிருப்பதுபோலவே ஸுகமாயிருப்பேன். உன் பாதங்களைப் பற்றினவர்க்குப் பயம் யாது? யான் உன்னைத் தவிர மற்றை ஒருவரிடத்திலும் மனம்பற்றப் பெறுதவள்; உன்னிடத்திலேயே மிகுந்த அனுராகமுடையவள்; நீ விட்டுப்போவாயாயின், மரணம் அடைவதாக நிச்சயித்திருப்பவள்; ஆகையால் என்னை அரண்யத்திற்கு அழைத்துக்கொண்டுபோவதனுல் உனக்குச் சிறிதும் பாரம் உண்டாகாது' என்றனள். புருஷதிலகனுகிய ராமன் தர்மத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனுயினும், அவள் சொன்னது தர்மயுக்தமாயினும் தனது அன்புகாயகியாகிய அம் மடந்தையர்மணி அங்ஙனம் மனவருத்தப்படுவதைப் பொறுதவனுயினும், அங்ஙனஞ் சொல்லி வேண்டிக் கொண்டபோதிலும், அவளைக் கூடவே அரண்யத்திற்கு அழைத்துக்கொண்டு போக விருப்பங்கொள்ளவில்லை. அவளை அரண்யத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் மெலிவிப்பது தர்மமன்றுகையாலும் தர்மத்தில் மிகுந்த மனவிருப்ப முடையவனுகையாலும் பத்னியினிடத்தில்

---

என் மனம் உன்னிடத்தில் பற்றியிருக்கு மென்றபடி. (த்வயா வியுக்தாம்) உன்னை விட்டுப் பிரிந்தபொழுது, (மரணய விஶ்சிதாம்) தலைப் பின்னலை உச்சுளுக்காகப் போகட்டுக்கொண்டு சாக நிச்சயித்திருக்கின்ற, (மாம்) என்னை, (நயஸ்வ) ஹனுமானை யனுப்புவது முதலியவற்றின் மூலமாக அழைப்பித்துக் கொள்வாயாக. (யாசநாம் குருஷ்வ) ப்ரார்த்தனையை நிறைவேற்றுவாயாக. தேவதைகள் ப்ரார்த்தித்த ராவண வதத்தைச் செய்வாயாக. (அத:) ஆனதுபற்றி, (மயா) என்னுல் (தே) உனக்கு, (ஸுருதா) பாரம், க்லேசம், அதாவது-ஶ்ரமம். (பவிஷ்யதி) உண்டாகாது. என்று ரஹஸ்யார்த்தம்.

ப்ரீதி மிகுந்திருக்கப் பெற்றவனுகையாலும் அவளைக் கூடவே அழைத்துக்கொண்டு போவதாக நெஞ்சிலும் நினைக்கவில்லை. மேலும் அவளைக் கூட வராமல் நிறுத்துவதற்காக வனவாஸத்தில் உண்டாகுந் துக்கங்களைக் குறித்து வெகுவாக மேல்வருமாறு கூறவுந்தொடங்கினன். இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் வனவாஸம் மிகவும் துக்கத்துக்கிடமென்று ஸீதைக்குச் சொல்லுதல்.

ஸீதை இங்ஙனஞ் சொல்லிக்கொண்டிருப்பினும், ராமன் தர்மங்களை உணர்ந்து அவைகளில் மிகுந்த ப்ரீதியுமுடையவனுகையால் வனத்தில் உண்டாகுந் துக்கங்களைச் சிந்தித்து அவளைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு போக ஸம்மதிக்கவில்லை. அந்த தர்மஸ்வபாவன் கண்களிரண்டிலுங் கண்ணீர் தளும்பப்பெற்றுக் கலக்கமுற்றிருக்கின்ற அம்மடந்தையை ஸமாதானப்படுத்தி அங்கேயே நிறுத்திவிடுவதாக உத்தேசித்து இங்ஙனம் மொழிந்தனன்:—'ஸீதே! நீ பெரிய வம்சத்திற் பிறந்தவள்; மேலும் எப்பொழுதும் தர்மத்தில் ஆஸக்தியுடையவள்; நீ இங்கேயே இருந்து தர்மங்களையே ஆசரித்துக்கொண்டிருப்பாயாக. உன் மனத்திற்கு ஸுகம் உண்டாவதை மாத்ரமே பார்க்கவேண்டாம். துர்ப்பலமான மேனியுடையவளே! என் வார்த்தையைக் கேட்பது உனக்கு தர்மமாகையால், நான் சொல்லுகிறபடி நீ செய்யவேண்டுமேயன்றி, உனக்கு ஸ்வாதந்த்ர்யம் யுக்தமன்று. அரண்யத்தில் பலகஷ்டங்கள் இருக்கின்றன. அவைகளைச் சொல்லுகின்றேன், கேள். ஸீதே! அரண்யத்தில் வாஸஞ் செய்யவேண்டுமென்கிற இவ்வெண்

ணத்தை விட்டுத் தொலைப்பாயாக. ப்ரவேசிப்பதற்குச் சக்யமல்லாத மஹாரண்யத்தில் பல கஷ்டங்கள் நேரிடுமென்று ஜனங்கள் சொல்லுகின்றார்களன்றோ? உனது மேன்மையை விரும்பியே நான் இவ்வார்த்தையைச் சொல்லுகின்றேனன்றி, உன்னைக் காப்பாற்றக் கஷ்டமாயிருப்பதுபற்றியன்று. அரண்யத்தில் எப்பொழுதும் ஸுகமே நேரிடாது. எப்பொழுதும் துக்கமே ஸம்பவிக்குமென்பது எனக்குத் தெரியும். மலைமகளினின்றும் அருவிகள் விழுதலாலுண்டாகுங் கோஷங்களும், அம்மலையின் குஹையில் வஸிக்கிற ஸிம்ஹங்களின் கர்ஜனசப்தங்களும் கேட்க மிகவும் துக்கமாயிருக்கும். ஆகையால் அரண்யத்தில் வஸிப்பது மிகவும் கஷ்டம். ஸீதே! ஜனஸஞ்சாரமின்றிய ப்ரதேசங்களில் சங்கையின்றி மனம் போனபடி க்ரீடித்துக்கொண்டு மதித்திருக்கின்ற ஸிம்ஹம் புலி முதலிய மஹா ம்ருகங்கள், நம்மைப் பார்த்த பொழுதே வியப்பாயிருக்கின்றமையால் பரபரப்புற்று அடிப்பதற்காக எதிர்த்தோடி வரும்; ஆகையால் அரண்யத்தில் வஸிப்பது கஷ்டம். அங்குள்ள நதிகள் எப்பொழுதும் முதலைகளோடுகூடி மிகவும் சேறு நிரம்பி மதித்த யானைகளுக்கும் தாண்டக்கூடாதிருக்கும்; இனி நம்மைப்போன்றவர்களுக்கு அவைகளைத் தாண்டி அக்கரை போய்ச் சேரமுடியாதென்பதைப்பற்றிச் சொல்ல வேண்டுமா? ஆகையால் அரண்யத்தில் வஸிப்பது மிகவும் கஷ்டமாயிருக்கும். அங்குள்ள வழிகள் அனைத்திலும், காலைப்பிடித்துச் சுற்றிக்கொண்டிழுக்கும்படியான கொடிகளும் சுருக்கென்று குத்தும்படியான முட்களும் நிறைந்திருக்கும்; காட்டுக்கோழிகள் பயங்கரமாய்ச் சப்தித்துக் கொண்டிருக்கும்; நாம் அவ்வொலியை எப்பொழுதும் கேட்டிலோமாகையால் நமக்கு மிக்க பயங்கரமாயிருக்கும்; அவ்வழிகளில் ஜலமென்

பது சிறிதும் அகப்படாது; நடந்து போவது நிரம்பவும் கஷ்டமாயிருக்கும். ஆகையால் அரண்யத்தில் வஸிப்பது கஷ்டம். பகலெல்லாம் காய்கிழங்குகளுக்காகத் திரிந்து கஷ்டப்பட்டு ராத்ரியெல்லாம் வெறுந் தரையில் தாமே பறித்துப் பரப்பின இலைகளில் படுத்துக்கொண்டு நித்ரை செய்யவேண்டும்; ஆகையால் அரண்யத்தில் வஸிப்பது மஹாகஷ்டம். ஸீதே! இரவும் பகலும் நியமத்துடனிருந்து தாமே செடிகளினின்றும் பறித்த பழங்களைத் தின்று அவ்வளவோடு த்ருப்தி அடைந்திருக்கவேண்டும்; மற்றை எதுவும் அகப்படாதாகையால் அரண்யத்தில் இருப்பது கஷ்டம். மைதிலியே! அரண்யத்தில் சக்திக்குப் பொருந்தியபடி உபவாஸமிருக்கவேண்டும்; மரவுரிகளையே வஸ்த்ரமாக உடுத்து ஜடைகளைத் தரித்திருக்க வேண்டும்; ப்ரதிதினம் தேவதைகளுக்கும், பித்ருக்களுக்கும், அவ்வப்போது வருகிற அதிதிகளுக்கும் விதியின்படி பூஜைகளைச் செய்துகொண்டிருக்க வேண்டும்; எப்பொழுதும் நியமத்தில் முயன்று அதைத் தவறுதிருக்கவேண்டும்; மேலும், தினந்தோறும் அந்தந்த காலங்களில் மூன்று தரம் ஸ்நானஞ் செய்யவேண்டும். ஆகையால் அரண்யம் போயிருப்பது மஹாகஷ்டம். இளம் பருவமுடையவளே! வானப்ரஸ்தர்களாகிய ரிஷிகள் செய்யும் விதத்தின்படி தானே புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு வந்து ப்ரதிதினமும் அக்னி வேதிகையில்[1] பலி கொடுத்துக் கொண்டிருக்கவேண்டும். மைதிலியே! வனத்தில் வஸிப்பவர் நியமத்தோடுகூடிய ஆஹாரங்களையே உட்கொண்டிருக்கவேண்டியவர்கள்; ஆகையால் தினந்தோறும் காய் கிழங்கு முதலியவை எவ்வளவு அகப்படுமோ, அவ்வளவு மாத்ரத்தோடு திருப்தி அடைந்திருக்கவேண்டும்; ஆகையால் அரண்

1 பலியாவது—உபஹாரம். அதாவது தேவதைகளுக்குச் செய்யும் பூஜை.

யத்தில் வஸித்திருப்பது கஷ்டம். அங்குக்காற்று எப்பொழுதும் அதிகமாக வீசிக்கொண்டிருக்கும்; ராத்ரியில் இருட்டு அதிகமாயிருக்கும்; இதில் எப்பொழுதும் பசி அதிகோரமாயிருக்கும்; இப்படிப்பட்ட பெரும் பயங்கள் அங்குண்டு; ஆனதுபற்றி அரண்யத்தில் வாஸஞ் செய்வது மிகவும் கஷ்டமாயிருக்கும். கோபமுடையவளே! மிகவும் பெருத்த உருவங்களையுடைய மலைப்பாம்புகள் பலவும் மதித்துப் பூமியில் புரண்டுகொண்டிருக்கும்; அவைகளைப் பார்க்கும்பொழுதே உன்னைப் போன்றவளுக்குத் திகில் உண்டாகாதிருக்குமா? ஆகையால் அரண்யத்தில் இருப்பது மஹாகஷ்டம். நதிகளில் இருப்பவைகளும் நதிகளைப்போலவே குடிலமாகப் போகின்றவைகளுமாகிய ஸர்ப்பங்கள் வழிகளில் குறுக்காகப் படுத்துக் கொண்டிருக்கும்; ஆகையால் அரண்யவாஸம் மிகவுங் கஷ்டமாயிருக்கும். துர்ப்பலமான சரீரமுடையவளே! அரண்யத்தில் விட்டில் பூச்சிகளும், தேள்களும், புழுக்களும், கொசுக்களும், காட்டீக்களும் எப்பொழுதும் பீடித்துக்கொண்டிருக்கும்; ஆகையால் அரண்யத்தில் வஸிப்பது முழுவதும் மஹாகஷ்டம். ரோஷமுடையவளே! அரண்யத்தில் முள்ளுள்ள வ்ருக்ஷங்களும் தர்ப்பம் நாணல் முதலிய புற்களும் கிளைகளும் நுனிகள் ஒடிந்து ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு நுழையக்கூடாதிருக்கும்; நடந்து செல்லக் கொஞ்சமாயினும் இடைவெளியில்லாதிருக்கும்; ஆகையால் அரண்யத்தில் இருப்பது மஹாகஷ்டம். மேலும் காட்டுப் புறங்களில் வஸிப்பவர்களுக்குச் சரீர கஷ்டங்கள் பலவும் உண்டாகும்; பலவித பயங்களும் நேரும்; ஆகையால் அரண்யத்திலிருப்பது கஷ்டமாயிருக்கும். அங்கு எப்பொழுதும் கோபத்தையும் லோபத்தையும் விட்டிருக்க வேண்

டும்; தவத்திலேயே புத்தியை நிலைநிறுத்தவேண்டும்; பயத்தை விளைக்க வல்ல ஸிம்ஹாதிகள் புலப்படினும் பயப்படாதிருக்கவேண்டும்; ஆகையால் அரண்யத்தில் வஸிப்பது கஷ்டமாயிருக்கும். இங்ஙனம் இருப்பது பற்றி நீ வனத்திற்குப் போவது போதும். உன்னைப் போன்றவளுக்கு அரண்யவாஸம் தகுந்ததன்று. இதை நன்கு ஆலோசித்துப் பார்க்கையில் வனத்தில் வஸிப்பது மிகவுங் கஷ்டமென்றே எனக்குத் தோற்றுகின்றது' என்றனன். மஹானுபாவனாகிய ராமன், தன்னை வனத்திற்கு அழைத்துக்கொண்டு போக மனம் இல்லாதிருக்கக் கண்டு ஸீதை அவனது வார்த்தையைப் பாராட்டாமல் மிகவும் மனவருத்தமுற்று அவனைப் பார்த்து இங்ஙனஞ் மொழிந்தனள். இருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ ஸீதை, தான் காட்டுக்கு வாராதிருக்க முடியாதென்று ராமனுக்குச் சொல்லுதல். }

ராமன் இவ்வாறு சொன்ன வார்த்தையைக் கேட்டு ஸீதை மிகுந்த மனவருத்தமுற்றுக் கண்களிரண்டிலுங் கண்ணீர் ததும்பி முகம் மழுங்கப் பெற்றவளாகி அந்த ராமனைப் பார்த்து மெதுவாக இங்ஙனம் மொழிந்தனள்:—'நீ வனவாஸஞ் செய்யும் விஷயத்தில் எந்த எந்த தோஷங்கள் மொழிந்தனையோ, அவையெல்லாம் உனது நேசத்தை முன்னிட்டுக்கொண்டு உன்னுடன் கூடியிருக்கிற எனக்குத் தோஷங்களல்ல; குணங்களே ஆகுமென்று தெரிந்துகொள்வாயாக. ராமா! மான்களும் ஸிம்ஹங்களும், யானைகளும், பெரும்புலிகளும், சரப மிருகங்களும், பெரியசமர ம்ருகங்களும், பக்ஷிகளும், [1]கவயங்களும், அரண்யத்தில் ஸஞ்சரிக்கின்ற மற்றுமுள்ள

1. கவயமென்பது பசுவைப்போன்ற ஓர்வகை மிருகம்.

மிருகங்களும் உனது உருவம்போன்ற உருவத்தை முன் னெப்பொழுதும் பார்த்திராதவையாகையால் உன்னைப் பார்த்தமாத்ரத்திலேயே பயப்பட்டு அப்புறம் சென்று போகக்கடவனவேயன்றி நமக்கு முன்னே வந்து அடிக்கு மென்பது நேராது. 'அவை உன்னைப் பார்த்து என் பயப்படும்?' என்னில், பயம் உண்டாகும்பொழுது அனை வரும் பயப்படுவார்களேயன்றோ? ஆகையால் அவை களைப் பற்றி எனக்குப் பயமே நேரிடாது. மேலும், உன் னைப் போவென்று சொன்ன ஆஜ்ஞையே எனக்கும் போவதற்கு ஆஜ்ஞை ஆகின்றது. ஆகையால் உன் தந்தையினது ஆஜ்ஞைபின்படிக்கு நானும் உன்னுடன் கூடவே போகவேண்டியவளாய்விட்டனன். ராமா! நீ என்னைவிட்டுப் போவாயாயின் உன்னைப் பிரிந்ததனால் நான் ப்ராணன்களை விட வேண்டியதாயிருக்குமே; பொ ழிய வைத்துக்கொண்டிருக்கமுடியாது. ரகுகுலத்திற் பிறந்தவனே! நான் உனது பார்ஶ்வத்தில் இருப்பேனாயின, தேவர்களுக்குத் தலைவனாகிய மஹேந்த்ரனாயினும் தனக் குள்ள சக்தியளவு ப்ரயத்னஞ் செய்யினும் என்னைத் திரஸ்கரித்துக் கொண்டுபோக வல்லனல்லன். பர்த்தா வைப் பிரிந்த மடந்தை எவ்வளவும் பிழைத்திருக்கமுடி யாள்; இவ்விஷயத்தில் நீ எனக்கு மிகவும் உபதேசஞ் செய்திருக்கின்றனை. எல்லாமறிந்தவர்களிற் றலைவனே! இதுவேயன்றி முன்பு நான் என் தந்தையின் அகத் தில் இருக்கும்பொழுது எனக்குக் காட்டில் வஸித்தி ருக்கவேண்டிவருமென்று ஜ்யோதிஶ்ஶாஸ்த்ரமுணர்ந்த ப்ராஹ்மணர்கள் சொல்லக் கேட்டிருக்கின்றனன்; அது நிஜம். மஹாபலனே! நான், முன்பு ஸாமுத்ரிகலக்ஷணங் கள் தெரிந்த ப்ராஹ்மணர்கள் எனக்கு வனவாஸம் நேரு மென்று சொல்லக் கேட்டு அதுமுதலாக ப்ரதிதினமும் எப்பொழுது வனத்திற்குப் போவேனென்று உத்ஸாஹப் பட்டுகொண்டிருக்கின்றனன். லக்ஷணங்களை யறிந்த

அந்த ப்ராஹ்மணர்கள் சொல்லியபடி நான் வனத்தில் கொஞ்சகாலம் வஸித்திருக்க வேண்டுமேயன்ளே? காட்டுக்குப் போக நேருமென்பதாகப் பெரியோர்களால் நிர்த்தேசிக்கப்பட்டிருக்கிற எனக்கு உன்னுடன்கூட வனத்திற்குப் போகவேண்டுமேயன்றி வேறுவிதமாக அதைச் செலுத்திக்கொள்ள வழியில்லை. பெரியோர்களின் ஆதேசத்தைப் பற்றி வருகின்றேனன்றி எனது இச்சையைப்பற்றியன்று. நான் அந்த ப்ராஹ்மணர்களது வார்த்தையை ஸத்யஞ்செய்வதற்காக உன்னுடன்கூட அரண்யத்திற்கு வருகின்றனன். அதற்குத் தகுந்தபடி வனவாஸத்தை ஏற்படுத்துங் காலமும் நேரிட்டது. ஆகையால் தப்பாமல் உன்னோடு வருகின்றனன். அந்த ப்ராஹ்மணர்களது வார்த்தை ஸத்யமாகட்டும். வனவாஸத்தில் பலவிதகஷ்டங்கள் நேரிடுமென்று எனக்குத் தெரியும்; ஆயினும் வீரனுகிய உனக்கு அவை நேரா. மனத்திடமில்லாத புருஷர்களுக்கே அவை ஸம்பவிக்குமென்று உறுதியாகச் சொல்வேன். நான் எனது தந்தையினகத்தில் கன்னிகையாயிருக்கும்பொழுது ஒரு நாள் என்தாயாருடைய அருகில் இருக்கையில், ஸதாசாரஸம்பன்னையாகிய ஒரு தாபஸஸத்ரீயானவள் என்னைப் பார்த்துக் கொஞ்சம் வனவாஸம் நேரிடுமென்று சொல்லக்கேட்டிருக்கின்றனன். நான் இங்கு வந்தபின்பு உன்னுடன்கூடக் கங்கையின் கரையிலுள்ள தபோவனம் முதலியவற்றில் சிறிது காலம் வாஸஞ்செய்யவேண்டுமென்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்தேனல்லவா! நாதா! முன்பு உன்னையும் எனது அபிப்ராயம் நிறைவேறும்படி பலவாருகவேண்டி, நீயும் அப்படியே ஆகட்டுமென்று அருள் புரியப் பெற்றேயிருக்கின்றனன். ரகுவம்சத்தில் பிறந்த மஹாவீரனே! எனக்கு வனவாஸம் போவது மஹோத்ஸவமாயிருக்கின்றது. ஆனதுபற்றி நான் வனம் போவ

தற்கு வ்யாபாரங்களை யெல்லாம் ஒழித்துக்கொண்டு ஸித்தமாயிருக்கின்றனன். உனக்கு க்ஷேமம் உண்டாக வேணும். சூரனாகிய நீ வனத்தில் வாஸஞ் செய்துகொண் டிருக்கும்பொழுது, உனக்குச் சுஶ்ரூஷை செய்யவேண்டு மென்று யான் விரும்புகின்றனன். அதுவன்றோ எனக்கு நிரம்பவும் ப்ரியமாயிருக்கின்றது. பொறாமை முதலிய தோஷங்கள் எவையுமின்றிப் பரிசுத்தமான மனமுடை யவனே! நான் ப்ரேமத்துடன் பர்த்தாவாகிய உன்னைப் பின்றொடர்ந்து உன்மனக்கருத்தை அநுஸரித்து என் பாபங்களைப் போக்கடித்துக் கொள்கின்றனன். 'இங் கேயே இருந்து குலதேவதையை ஆராதித்துப் பாபங் களைப் போக்கடித்துக் கொள்ளலாமே' என்பாயோ? அப்படியன்று; எனக்குப் பர்த்தாவே தெய்வம்; அவ னைக் காட்டிலும் மேலான தெய்வம் எனக்கு இல்லை. இவ்வளவேயன்று; பரலோகத்திலும் உன்னோடுகூட இடை வீடில்லாமல் சேர்ந்திருப்பதே எனக்கு மங்கலகர மாயிருக்கும். மஹாமதியே! 'இவ்வுலகத்தில் தந்தை முதலியவர்களால் எந்த ஸ்த்ரீ எந்தப் புருஷனுக்குத் தத்தமது வர்ணாஶ்ரமாதி தர்மங்களுக்குரியபடி தாரை வார்த்துக் கொடுக்கப்படுவாளோ, அந்த ஸ்த்ரீக்குப் பரலோகத்திலும் அந்தப் புருஷனே பர்த்தாவாக நேரி டுவான்' என்னும் பரிசுத்தமாகிய இவ்வேதவாக்யத் தை மஹாயஶஸ்விகளாகிய ப்ராஹ்மணர்கள் சொல்லக் கேள்வியுண்டல்லவா? இப்படி வேதமாகிற ப்ரபல ப்ர மாணம் முறையிட ஸதாசாரஸம்பன்னையும் பதிவ்ர தையும் உதகபூர்வகமாகப் பரிக்ரஹிக்கப் பட்டவளுமான பார்யையாகிய என்னை நீ இப்பட்டணத்தினின்று வனத் திற்குக் கூடவே அழைத்துக்கொண்டுபோக அபிப்ரா யப்படாதிருப்பதற்குக் காரணம் யாதோ? காகுத்தனே! நான் உன்னிடத்தில் பக்தியோடிருக்கின்றனன்; உனது வ்ரதங்களையே கைப்பற்றி ஆசரிக்குந் தன்மையளா

யிருக்கின்றனன்; நீ எங்குக் கைவிடுவாயோவென்று மன வருத்த முற்றிருக்கின்றனன்; மனக்களிப்பு நேரிடினும் மனவருத்தம் நேரிடினும் உன்னிடத்தில் ஒரே மனக் கருத்தோடு நடந்துகொள்பவளா யிருக்கின்றனன்; உன் னோடொத்த ஸுகதுக்கங்களையுடையவளுமாயிருக்கின் றனன்; இப்படிப்பட்ட என்னை விட்டுப் போகலாகாது; கூடவே அழைத்துக்கொண்டுபோவதே உனக்குத் தகும். இப்படி மனவருத்தப்படுகின்ற என்னை வனத் திற்கு உன்னுடன்கூட அழைத்துக்கொண்டுபோக அபி ப்ராயப்படாது போவாயாயின், நான் விஷத்தைத் தின் றோ, நெருப்பில் குதித்தோ, நீரில் விழுந்தோ ப்ராணன் களை விட்டுவிடுவேன்' என்றனள். அந்தப் பெண்பிள்ளை இங்ஙனம் பலவிதமாக அரண்யத்திற்கு அழைத்துக் கொண்டு போகவேண்டுமென்று ராமனை வேண்டிக் கொண்டபோதிலும், அந்த மஹாபாஹுவானவன் 'ஜன ஸஞ்சாரமில்லாத அரண்யத்தில் ஸுகுமாரையாகிய என்னன்பு நாயகி நடந்து செல்வது அரிது' என்று நினைத்து அவளை அழைத்துக்கொண்டுபோக ஸம்மதிக் கவில்லை. அந்த ஸீதையும், ராமன் இவ்வாறு அழைத் துக்கொண்டுபோக முடியாதென்றுரைத்த வார்த்தை யைக் கேட்டுக் கண்களிரண்டினின்றும் பெருகி வருகின்ற அத்யுஷ்ணமான கண்ணீர்களால் பூமி முழுவதும் நனைத்து விடுபவள்போல் மிக்க மனவருத்த முற்றனள். இங்ஙனம் மனவருத்தப்பட்டுக்கொண்டு கோபசோகங் கள் மேலெழப்பெற்று மேன்மேலும் சிவந்து வருகின்ற திருவதரத்துடன் கூடிய அந்த ஸீதாதேவியைப் பார்த்து மிகுந்த மதியுடையோனாகிய காகுத்தன் தன் னோடு வராமல் நிற்கும்படிக்குப் பலவாறு நல்வார்த்தை கள் சொல்லினன். இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸீதை ராமன் காட்டுக்கு அழைத்துக் கொண்டுபோக முடியாதென்பதற்கு ஆக்ஷேபஞ் செய்தல்.

ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதாதேவி அங்ஙனம் ராமன் நல்வார்த்தை சொல்லிக் கொண்டிருக்கையில், எப்படியாவது ராமனுடன் சென்று வனத்தில் வஸிக்க வேண்டுமென்று முயன்று இங்ஙனம் மொழிந்தனள். மனவருத்தமாகிற மஹாஸமுத்ரத்தில் அழுந்தி நடுக்க முற்றிருக்கிற அம்மடந்தையர்மணி அகன்ற மார்பை யுடையவனும் மிகுந்த சூரத்தன்மை பொருந்தியவனும் ரகுகுலாலங்காரனுமாகிய தன் பர்த்தாவைப் பார்த்து ஸ்நேஹத்தினுலும் ஸ்வாதீனனென்கிற எண்ணத்தின் மிகுதியாலும் பலவாறாகத் திரஸ்கரித்துச் சொல்ல ஆரம் பித்தனள். [1] 'ராமா உன்னிடத்தில் ஸௌந்தர்யம்மாத்

---

1 இதற்கு மூலம்:—'கிந்த்வாமந்யத வைதேஹ: பிதாமே மிதி லாயிப:।ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்' (ராம) மனக்களிப்புறச் செய்பவனே! மேலுக்குப் புலப்படுகின்ற உருவத்தின் ஸௌஷ்டவத்தை மாத்ரம் பார்த்து வஸிஷ்டர் (ராமன்) என்று பேர் வைத்து உனக்கு உள்ளே ஸாரமில்லையென்று தெரிந்து கொண்டு, அப்படிப்பட்ட ஸாரமுளதென்று தெரிவிக்கும்படியான (சத்ருக்னன்) என்னும் பெயரைக் கடைசிதம்பிக்கு இட்டனர். ஆனதுபற்றியே'ராம இத்யபி ராமேண வபுஷா தஸ்ய சோபித:। நாமதேயம் குருச்சக்ரே ஜகத்ப்ரியமமங்கலம்' என்று சரீரத்தில் ஸௌஷ்டவத்தைப் பற்றியே அந்தப்பெயரை இட்டனரென்று மஹாகவி மொழிந்தனன். அதுஜகத் திற்கு மங்கலகரமாகும்பொழுது அந்த ஜகத்தில் அடங்கிய எனக்கு என் இப்படியாயிற்று. (ராம) 'ஸஹஸ்ரநாமதஸ்துல்யம்' என்கிறபடி யே ராமநாமமொன்றே விஷ்ணுஸஹஸ்ரநாமங்களோடொத்ததாகி அவையனைத்துக்கு முள்ள சக்தி யமைந்திருக்கும். அப்படிப்பட்ட நாமத்தையுடைய உன்னுடன் ஸம்பந்தம் பெற்றிருந்தும் எனக்கு இவ்வவஸ்தை ஏனோ? (வைதேஹ:) விதேஹ வம்சத்திற் பிறந்த வன், 'கர்மணைவஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:' (கர்மத்தின லேயே ஜனகாதிகள் ஸித்தியைப் பெற்றனர்) என்கிறபடியே கர்ம

ரமே யிருக்கின்றது. அதைப்பார்த்து எல்லோரும்

யோகத்தினுல் மோக்ஷவித்திக்கு ப்ரயத்னம் செய்பவராகையாலும், அக்கர்மயோகத்தை ஸஹதர்மசாரிணியாகிய பத்னியோடு கூடவே ஆசரிக்க வேண்டியவராகையாலும் பத்னீவியோகத்தில் பழக்கப் படாதவரென்றபடி. (வைதேஹுஃ) பிறந்தது முதலாகத் துக்க மென்பது அறியாமலிருந்து இப்பொழுது என்னைப் பெற்றதற்கு எல்லாத் துக்கங்களையும் அனுபவிக்க வேண்டியதாக நேரப் பெற்ற வர். (மிதிலாதிபஃ) மிதிலைக்கு ப்ரபு-ஸ்ரீ என்னைக் கைவிட்டுப் போன தற்கு அந்த ப்ரபு மனவருத்தப் படுவாராயின், அவரது மிதிலை முழு வதும் மனவருத்தமுறுமென்று கருத்து. (மிதிலாதிபஃ) ஒரு தேச த்தை முழுவதும் தன் புஜபலத்தினுல் பரிபாலித்து வரும்படியான வருக்கு, ஒருவன் ஒரு ஸ்த்ரீயைத் தன் புஜபலத்தினுல் பரிபாலிக்க முடியாமற் போனுனென்று தெரியுமாயின் மனம் புண்பட்டிருக்கு மல்லவா? இப்படிப்பட்டவராகிய (மே பிதா) என் தந்தை. ஜனக மஹாராஜரென்க. பிள்ளைகள் ஸமர்த்தர்களாயிருப்பார்களாயின், காட்டுக்கு அனுப்பத் துணிந்த தந்தைகளும் உண்டு. என் தந்தை யோ நான் ஸாமர்த்யமுடையவளாயினும், காட்டுக்குப் போவதைக் கேட்பாராயின், மனவருத்தப்படுவார். தனியாயிருந்து பொறுத்திரு ப்பதற்குங்கூடச் சக்தியற்றிருக்கும் புதல்வியாகையால், கைப்பற்றின வனிடத்தில் இருக்கும்பொழுதே பிழைத்திருப்பவளும் அதில்லாமற் போகுமாயின், முதலே நசித்துப் போகும்படியானவளுமாகிய என் னைப்போன்ற பெண்பிள்ளையைப் பெற்றுக் கெட்டுப்போனுரென்ற படி. இப்படிப்பட்ட ஜனகர் (ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்) மேலு க்குப் புருஷாகாரம் நேரப்பெற்று வாஸ்தவத்தில் பெண்பிள்ளையாக வே யிருப்பவனென்றபடி. கிரீடமும் பீதாம்பரமுமே பேதத்தைக் காட்டுகின்றன; அவையில்லாமற் போகுமாயின், ஸ்த்ரீயென்பதற்கு எள்ளளவும் ஸந்தேஹமில்லை யென்றபடி. அந்தக் கிரீட பீதாம்ப ரங்களுமில்லை. அவை யிருக்குமாயினும் புருஷசிஹ்னங்களாகையால் அவைகளைப் பற்றியாவது உன்னைப் புருஷனென்று நினைத்து அரண் யத்தில் யாவரும் கெடுதிசெய்யாதிருப்பார். அப்படி அவை ரக்ஷ கங்களா யிருக்குமென்றபடி. (புருஷவிக்ரஹம்) மேலுக்குப் புருஷ னது ஆகாரம் பெற்றிருக்கின்றனை. ஆனதுபற்றியே இப்படிப்பட்ட

தப் படுகிறார்களே யன்றி மற்றைப் பௌருஷம் உனக்

அனர்த்தம் நேரிட்டது. (புருஷவிக்ரஹம்) புருஷனைப்போன்ற ஆகாரமேயன்றி அது சத்ருக்களை வெல்ல வல்லமையுள்ளதல்ல. பயிர்க் கழனியினிடையில் நாட்டப்பட்ட மருள்போன்றவனென்றபடி. இப்படிப்பட்டவனாகிய (ஜாமாதரம்) மணவாளப் பிள்ளையை. நீ உன் தந்தைக்குப் பெரிய புதல்வனாயிருப்பதுபோல் என் தந்தைக்குப் பெரிய மணவாளனாயினை. (ஜாமாதரம்) 'ஜாமாதா தஸமோ க்ரஹ:' (மணவாளப்பிள்ளை பத்தாவது க்ரஹம். உலகத்தில் நவக்ரஹங்களே உள்ளவை. மணவாளப்பிள்ளையும் ஸூர்யாதி நவக்ரஹங்களைப்போன்றவனாகையால் இவனையும் அவர்களில் ஒருவனாகக் கூட்டிக்கொள்ளவேண்டுமாகையால் ஒன்பது க்ரஹங்களுக்கு மேற்பட்டிருப்பதுபற்றிப்பத்தாவது க்ரஹம்) என்கிறபடியே பெண்பிள்ளையைப் பெற்றுக்கொடுத்தவனுக்கு மணவாளனோடு சேர்ந்து பத்து க்ரஹங்கள் உண்டு. பிடித்துப் பீடிக்கும்படியான மணவாளனாக. (ப்ராப்ய) அடைந்து. தானே பார்த்து உனக்குக் கொடுத்தாரென்றபடி. ஆகையால் மற்றொருவன் செய்தானென்று பிறர்மேல் கெடுதி சொல்வதற்கு எவ்வளவும் அவகாசமில்லையென்றபடி. (த்வ) உன்னை. ஸாரமில்லாத வில்லை முறித்து உலகத்தையெல்லாம் ப்ரமிக்கச் செய்கின்ற உன்னை. (த்வா) வஸிஷ்டரை அனுவர்த்திப்பவனாகையால் நானே ஸூக்ஷ்மதர்மங்களை அறிவேனென்று வீணபிமானம் பிடித்துத் திரிகிற உன்னை. (த்வா) வெறும் ஸௌந்தர்யமொன்று மாத்ரமே உண்டாகப்பெற்று மற்றை எவ்வித ஸாரமுமில்லாத உன்னை. (கிம் அமந்யத) (கிம்வக்ஷ்யதி) என்றும் பாடமுண்டு. என்ன நினைப்பார்? அல்லது- என்ன சொல்வார்? ராஜாவன்றென்னலாகாது; ராஜதர்மங்கள் அறியாதவனென்னலாகாது; குருகுலவாஸஞ்செய்து உணர்ந்தவனன்றென்னலாகாது; குலபரம்பராப்ராப்தமான ஆசாரங்களை அறியானென்னலாகாது; குலஸ்த்ரீகளுக்குப் பர்த்தாவோடிருப்பது ஆவஸ்யகமென்பது தெரியாதென்னலாகாது; குலஸ்த்ரீயை உபேக்ஷியாமலிருப்பதை முக்ய ஸாதனமாயுள்ள ஏகபத்னீவ்ரதம் உனக்கில்லையென்றும் சொல்ல நேராது. ஆயிரஞ்சொல்லியென்? எல்லா அனுஷ்டானங்களுமிருந்தும் நீ இங்ஙனம் இவ்விஷயத்தில் ஏமாறிப்போனாயென்றே நினைக்கவேண்டியதாயிருக்கின்றது. (கிம் த்வாமந்யத)

குக் கிடையாது. மிதிலாபுரத்திற்கு ப்ரபுவும் விதேஹவம்

என்னை மாமனாராகிய தசரதன் கையிலாவது மாமியாராகிய கௌஸல்யையின் கையிலாவது என் தந்தை ஒப்புவிக்கவில்லை. 'இயம் ஸீதா' என்று உன்கையிற்றானே ஒப்புவித்தனர். உத்தம ஸ்த்ரீகள் பர்த்தாவை விட்டுப் பிரிவார்களாயின், ப்ராணன்களோடு ஏற்க மாட்டார்களென்று சொல்லிக் கொடுத்தனர். (இயம்) இவள் மிகுந்த அபிமானமுடையவள். அதாவது—'ஆர்த்தார்த்தே முதிதே ஹ்ருஷ்டா' (புருஷன் துக்கித்திருப்பானாயின் தானும் துக்கித்திருப்பவளும், ஸந்தோஷித்திருப்பானாயின் ஸந்தோஷித்திருப்பவளும்) என்று பதிவ்ரதாலக்ஷணம் சொல்லப்பட்டிருக்கின்றது. தேஹத்தையும் ப்ராணன்களையும் பர்த்தாவுக்கு வேறாகவும் தமக்கு வேறாகவும் இருப்பனவாக நினைத்திருப்பவர்களுக்கன்றோ இந்த லக்ஷணம். இப்பெண்பிள்ளைக்கோ தேஹமும் ப்ராணனும் நீயேயாகையால் தான் இப்படி விலக்ஷணையாயிருக்கு மபிமானத்தையுடையவளென்று சொல்லிக் கொடுத்தனர். 'ஸீதா' ஸ்த்ரீகளுக்குத் தாய்மார்களின் குணம் மிகுந்திருக்குமாகையால் பூமியைப்போல் இவள் வெறுங்கந்தமேயுடையவள். ஆகையால் எடுத்து உபயோகப் படுத்திக்கொள்ளவேண்டியதே யுள்ளது. 'மமஸுதா' இவளைப்பற்றி வேண்டாமற்போனபோதிலும் என்னைப்பற்றி இவளைக் கைப்பற்றவேண்டுமென்றனர். 'ஸஹதர்மசரீ' நீ செய்யத்தொடங்கின தர்மங்களில் இவளுங்கூட முயற்சிசெய்பவளென்றனர். 'தவ' தர்மானுஷ்டானஞ் செய்கிற உனக்குச் சேஷப்பட்டிருப்பாளென்றனர். 'ப்ரதீச்ச' உனக்குத் தகுந்தபடி பரிக்ரஹிக்கலாமென்றனர், 'ச' உரியவளே யென்று தெரிந்துகொள்கைமாத்ரமேயன்றி அனுரூபமான போகங்களையும் நீ கொடுக்கத் தகுந்தவளென்றனர். 'ஏநாம்' இங்ஙனம் நோற்றுப் பெற்றவளை. 'ஷத்ரந்தே' நான் நோற்றுப் பெற்றமாத்ரமேயன்றிப் பலன் உன்னுடையதே. போக்யதை மேற்பட்டிருப்பது போக்தாவினது புருஷார்த்தமே யன்றோ வென்றனர். 'பாணிம் க்ருஹ்ணீஷ்வ' கையென்றும் வில்லென்றும் அறியாள் இவள்; நீயே பிடித்துக் கொள்ளென்றனர். 'பாணிநா' கையைக்கையினால் பிடித்துக்கொள்ளவேண்டுமென்பது தெரிந்திருப்பினும் இங்குக் கையினாலென்று சொல்லவேண்டுமோவென்னில் - உலகமெல்லாம் சரணம் புகினும் நிலைநின்று பாதுகாக்கும்படியான வீர்யம் பொருந்திய உன் கையிற்

சத்திற் பிறந்தவரும் எனக்குத் தந்தையுமாகிய ஜனக

கண்வைத்து இப்படிப்பட்ட கையினால் பிடித்துக்கொள்ளென்று விசேஷித்துச் சொல்லினர். 'பாணிநா' என்று விசேஷித்துச் சொல்லினர். இதனால் உன் கை இப்படிப்பட்ட வீர்யமுடையதாகையால் இப்படிப்பட்ட அவஸ்தையில் வெறுமனே அழைத்துக்கொண்டு போவதுமாத்ரம் போதாது; எடுத்துக்கொண்டு போகவேண்டுமென்று மொழிந்தனர். இவ்வளவையும் நீ உன் மனத்திற் படுத்திக்கொள்ளாமற் போயினை. அன்றியே வேறாகத் தெரிந்துகொண்டனை; 'இயம்' என்று என் ஸௌந்தர்யத்தைச் சொன்னாரென்றும், 'ஸீதா' என்று என் மாத்ருகுல சுத்தியைச் சொன்னாரென்றும், 'மம ஸுதா' என்று பித்ருகுல சுத்தியைச் சொன்னாரென்றும், 'ஸஹ யர்மசரீ' என்று எனது ஸௌசீல்யத்தைச் சொன்னாரென்றும், 'தவ' என்று உன்னைப் புகழ்ந்தாரென்றும், 'ப்ரதீச்ச' என்று 'வரில் பொகடேன், கெடில் தேடேன்' என்றிருக்காமல் கைப்பற்ற வேண்டுமென்றாரென்றும், 'ச' என்கையால் கண்ணுக்கு இனிப்பா யிருக்கிறாளாவென்று வினவினாரென்றும். 'ஏகாம்' என்று எனக்குத் தந்தையாகையால் மிகுந்த ஸௌந்தர்யாதி குணங்களையுடையவளாக என்னைப் பாவித்து வாத்ஸல்யத்தினால் சொன்னாரென்றும், 'ஹஜீரங்தே' என்னிடத்தில் ப்ரீதியைக் காட்டிலும் நூறுமடங்கு உன்னிடத்தில் ப்ரீதி உண்டாகி த்ருஷ்டி தோஷம் வருமோவென்று உனக்கு ரக்ஷை செய்தாரென்றும், 'பாணிங் க்ருஹ்ணீஷ்வ பாணிநா' என்று க்ரியாகலாபத்திற்குச் செய்ய வேண்டிய விதியைச் சொன்னாரென்றும் தெரிந்துகொண்டனை. ஸர்வஜ்ஞராகிய என் தந்தை சொன்னவற்றைச் சரியாகத் தெரிந்துகொள்ளாமல், இப்படி விபரீதமாக க்ரஹித்து இன்றையதினம் என்னைக் கைவிட்டுப் போவாயாயின், (ஹிம த்வாமங்யத) உன்னை என் தந்தை என்னவென்று நினைத்துக்கொள்வர்—தனிச்லோகி, 'ஸ ஏவ வாஸுதேவோ ஽யம் ஸாக்ஷாத் புருஷ உச்யதே। ஸ்த்ரீப்ராய மிதரத் ஸர்வஞ் ஜகத் ப்ரஹ்மபுரஸ்ஸரம்' (அப்படிப்பட்ட இந்த விஷ்ணு ஒருத்தனே ஸாக்ஷாத் புருஷனென்று சொல்லப்படுவான். ஆகையால் ப்ரஹ்மா முதலிய மற்றை ஜகத்து முழுவதும் ஸ்த்ரீயைப் போன்றதே' என்ற விஷ்ணுபுராணத்தின்படிக்கு (ராம) ராமனே! (த்வாம்) உன்னை (ஜாமாதரம்) மணவாளனாக (ப்ராப்ய)

மஹாராஜர், என் ளெருத்திலைக் காக்க முடியாமல்

அடைந்து (புழுஷவிக்ரஹம்) புருஷனைப்போன்ற ஆகாரமுடைய மற்றை ஜகத்து முழுவதையும் (ஸ்த்ரியம்) ஸ்த்ரீப்ராயமாக (கிம்) ஏன் (அமந்யத) நினைத்தனர். விஷ்ணுதேவாவதாரமாகிய உன்னை மணவாளனாகப் பெற்று உன்னை ஒருத்தனையே புருஷனாகவும் மற்றவரையெல்லாம் ஸ்த்ரீகளாகவும் என் தந்தை நினைத்தது எதுக்காகவோ? அவருக்கு உன் ஸங்கதி தெரியாமையால் ப்ரமித்துப் போயினர். இல்லையாயின் இப்படி நினைக்கமாட்டாரென்று கருத்து. அல்லது—(ராமஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்) என்கிற இதை (ராமஜ - அமாதரம் - ப்ராப்ய - ஸ்த்ரியம் - புருஷ-விக்ரஹம்) என்று பதச்சேதம் பண்ணினோமாயின், (ராமஜ) மனக்களிப்புறச் செய்வதற்காகப் பிறந்தவனே! அவதரித்தவனே யென்றபடி. (ஹே புருஷ) க்ரீடார்த்தமாக இங்ஙனம் அவதரித்த பரம புருஷனே! அமாதரம் ஸ்த்ரியம்) உனக்குத் தாயாகாத ஸ்த்ரீயை, தாயாகாமல் சக்களத்தித் தாயாகிய கைகேயியை (ப்ராப்ய) உத்தேசித்து, என் தந்தை (விக்ரஹம்) கலஹத்தை (அமந்யத) நினைத்தாரா? நினைக்கவேயில்லை யென்றபடி. நீ உலகங்களை மனக்களிப்புறச் செய்வதற்காக லீலையாகவே இங்ஙனம் அவதாரஞ் செய்த பரம புருஷனாகின்றனை. என்னை உனக்குக் கொடுத்தபொழுது உன் சக்களத்தித் தாயாகிய கைகேயியோடு இப்படிப்பட்ட கலஹம் ஸம்பவிக்குமென்று என் தந்தைக்குத் தெரியாதென்று பொருள். ஆயினும் நீ என்னை விட்டுக் காட்டுக்குப் போகக்கூடாதென்று கருத்து. அன்றியே—(புருஷ விக்ரஹம்) பக்தர்களாகிய புருஷர்களை விசேஷமாகப்பரிக்ரஹிப்பவனும் (ராமஜாமாதரம்) இது ஒரே பதம். மனக்களிப்புறச் செய்யவல்ல மணவாளனுமாகிய, 'ரமந்தே யோகிநோऽநந்தே' என்று ஶ்ருதி. ஆநந்த பூர்ணனான மணவாளனுமாகிய (த்வாம் ப்ராப்ய) உன்னை அடைந்து, என் தந்தை, (ஸ்த்ரியம்) ஸ்த்ரீயை, இது மற்றையவற்றுக்கும் உபலக்ஷணமாகையால் தனது புத்ர மித்ரகலத்ராதியான ஐஹிகபுருஷார்த்தத்தை யென்றபடி, (அமந்யத கிம்) ஸத்யமாக நினைத்தாரா? நினைக்கவில்லை யென்றபடி. ஆநந்த ரூபனாகிப் பக்தர்களை மிகவும் வசப்படுத்திக் கொள்கிற உன்னை மணவாளனாகப் பெற்று என் தந்தை மற்றைப் புத்ர மித்ராதியான ஐஹி

கைவிட்டு நீ காட்டுக்குப் போனுயென்று கேட்டறிந்து, இப்படிப்பட்ட உன்னை, 'அப்பொழுது என் மணவாளன் வாஸ்தவத்தில் பெண்பிள்ளையாகவேயிருந்து மேலுக்குப் புருஷவேஷங் போகட்டுக்கொண்டு வந்து என் புதல்வியை மணம் புரிந்தனன்' என்று நினைத்துக் கொள்வாரன்றே? [1] இவ்வுலகத்தவர் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற

கங்களை யெல்லாந் துச்சமாக நினைத்துப் பரமாநந்தம் பெற்றனர். இப்படி ஸர்வர்க்கும் ஆநந்தகரனுகிய நீ எனக்கு என் துக்கத்தை விளைக்கின்றனையென்று கருத்து.

1 இதற்கு—'அந்ருதம் வத லோகோ஽ய மஜ்ஞாநாத் யதிவ க்ஷ்யதி। தேஜோ நாஸ்தி பரம் ராமே தபதீவ திவாகரே' என்றுமூலம். (அயம் லோகঃ) இந்த லோகம், (யத்) எதை-ராமனிடத்தில் மிகவும் தேஜஸ்ஸிருக்கிறதென்பதை, (வக்ஷ்யதி) சொல்லுமோ, அது, (அஜ்ஞாநாத்) அவரது அஜ்ஞானத்தினுல். (அந்ருதம்வத) அபத்தமேயன்றே? (தபதி திவாகரே இவ) ஜ்வலிக்கிற ஸூர்யனிடத்திற் போல். (ராமே) ராமனிடத்தில், (பரந்தேஜঃ நாஸ்தி) மிகுந்த தேஜஸ்ஸில்லை. என்று ஸீதை ராமனுக்குத் தேஜஸ்ஸு இருக்கிறதென்கிற வார்த்தையைத் தானே நிராகரித்து இல்லையென்று நிர்ணயஞ் செய்தனள். அன்றியே-(அஜ்ஞாநாத்) ராமனது ஸ்வரூபந் தெரியாமையால் (அயம் லோகঃ) இவ்வுலகம், (தபதி திவாகர இவ ராமே தேஜோ நாஸ்தி (ஜ்வலித்துக்கொண்டிருக்கிற ஸூர்யனிடத்திற்போல் ராமனிடத்தில் மிகுந்த தேஜஸ்ஸு இல்லையென்று, (யத்) எதை, (வக்ஷ்யதி) சொல்லுமோ அது, (அந்ருதம்) அபத்தம். ஜனங்கள் ராமனுக்கு ஸூர்யனை விகர்த்த தேஜஸ்ஸு இல்லையென்பது அபத்தம்: அது அவனுக்கு உண்டென்றபடி. இப்படி ஸீதை, உலகத்தார் ராமனுக்குத் தேஜஸ்ஸு இல்லை யென்பதை நிராகரித்துத் தான் உண்டென்று நிர்ணயஞ் செய்தாளென்று மற்றொரு பொருள் கூறுவர். அன்றியே—ராமனுக்குத் தேஜஸ்ஸு இல்லை யென்று முதலில் ஆக்ஷேபித்துப் பின்பு இப்படி சொன்னேமேயென்று பயத்தினுல் உலகமே அங்ஙனஞ் சொல்லுமன்றித் தானன்றென்று தனது அபராதத்தைப் பரிஹரித்துக் சொல்வதாகவும் பொருள் கூறலாம், எப்படி யென்னில்—(அயம்

ஸூர்யனிடத்திற்போல் ராமனிடத்தில் மிகுந்த தேஜஸ்ஸிருக்கிறதென்று அஜ்ஞானத்தினால் சொல்லுகின்றனர்; அது அபத்தமேயன்றி ஸத்யமன்று. இருக்குமாயின், அது ஸூர்யனிடத்திற் புலப்படுவதுபோல், உன்னிடத்தில் ஏன் புலப்படக்கூடாது? புலப்படாமையால் ராமனுக்குத் தேஜஸ்ஸில்லையென்பதே உண்மை. ஆயிரந் தப்புக் கார்யங்களைச் செய்தாயினும் பார்வையைப் பரிக்க வேண்டுமென்று பெரியோர்கள் சொல்வார்களல்லவா? இங்ஙனமிருக்க, என்னை அழைத்துக்கொண்டு போகும் விஷயத்தில் எந்த அகார்யஞ் செய்யவேண்டுமென்று நீ வ்யஸனப்படுகின்றனை? ப்ரளயகாலாக்னிக் கொப்பான கோபத்தையுடைய உனக்குப் பயம் எங்கிருந்து உண்டாகப் போகின்றது? மற்றொருவரை மனத்திலுங் கூட நினையாமல் உன்னிடத்திலேயே மிகுந்த ஆஸக்தியோடிருக்கின்ற என்னை விட உத்தேசிப்பதற்குக் காரணம் யாதோ? தெரியவில்லை. மனத்தில் எதை நினைத்துக்கொண்டு இங்ஙனம் மனவருத்தப் படுகின்றாயோ? இங்ஙனம் பயப்படுகின்றாயோ? தெரியவில்லை; எந்த வருத்தத்தினாலும் பயத்தினாலும் இப்படிப்பட்ட என்னை விட்டுப் போக விரும்புகின்றனையோ; தெரியவில்லை. வீரனே! த்யுமத்ஸேனனது குமாரனாகிய ஸத்யவந்தனை அநுஸரித்திருப்பதையே வ்ரதமாகக் கொண்ட ஸாவித்ரியைப் போலிருக்கின்ற என்னை, உனதிஷ்டப்படி உன்னை யநுஸரித்தே யிருப்பவளாகத் தெரிந்து

---

லோகः) இவ்வுலகம், (தபதி திவாகர இவ ராமே தேஜோ நாஸ்தி) ஜ்வலிக்கிற ஸூர்யனிடத்திற் போல் ராமனிடத்தில் மிகுந்த தேஜஸ்ஸில்லை, என்று (அஜ்ஞாநாத்) ஞானமில்லாமல், ஆலோசியாமல், (அந்ருதம் யதிவக்ஷ்யதி தத்) அபத்தம் யாது மொழியுமோ, அது, அவ்வுலகம் இப்படி ராமனுக்குத் தேஜஸ்ஸில்லையென்று அபத்தஞ் சொல்வது (வத) ஐயோ! நான் பொறேனென்று கருத்து.

கொள்வாயாக. தோஷமற்றிருக்கும் மஹானுபாவனே! இப்படியிருக்க, குலத்தைக் கெடுக்கும்படியான மற்றொரு துஷ்டையைப் போல் நான் ஒருபொழுதும் மனத்தினுலுங்கூட உன்னைத் தவிர மற்றொரு புருஷனைப் பார்ப்பவளல்லேன். ஆகையால் உன்னோடுகூட வனத்திற்கு வருவேனன்றி நிற்கமாட்டேன். [1]ராமா! [2]கௌமாராவஸ்தையிற்றனே உன்னை மணம் புரிந்தனன்; வெகு காலம் உன்னோடுகூடி விளையாடிக் கொண்டு வஸித்திருந்தனன்; பதிவ்ரதையாயிருக்கின்றனன்; உனக்குப் பார்யையுமாயிருக்கின்றனன்; இப்படிப்பட்ட என்னை, பார்யையைப் பிறர்க்குக் கூட்டிக் கொடுத்துப் பிழைக்குந்தன்மையனான [3] சைலூஷன்போல் நீயாகவே பிறர்க்குக் கொடுக்க விரும்புகின்றனே. எவர்க்கு ஹிதஞ் செய்துகொண்டிருக்கச் சொல்லுகிறாயோ, எவர்க்குச் சுஶ்ரூஷை செய்யும்பொருட்டு என்னை இங்கேயே நிறுத்தி வைக்கின்றாயோ, அந்தத் தாய்மார்களுக்கு நீயே அனுகூலனயிருந்து எப்பொழுதும் சொன்ன

1 இதற்கு—'ஸ்வயந்து ஹார்யாங் கௌமாரீ0 சிரமத்யுஷிதா0 ஸதீம் | ஶைலூஷ இவ மா0 ராம பரேப்யோ தாதுமிச்ஸஸி' என்று மூலம்.—தனது கடமையான பாதிவ்ரத்யத்தை அறிவித்தும் காட்டுக்குத் தான் வருவதை ஸம்மதிக்காமையை அறிந்து மீளவுங் கோபித்துச் சொல்லுகின்றாள். அல்லது பரதனுக்கு ராமன் ராஜ்யங் கொடுக்கப் பொறுமல் ஸீதை இவ்வண்ணம் மொழிந்தனள். எப்படியென்னில்- ராமா! (ஹார்யாம்) பரிக்கத் தகுந்த, ஏனென்னில்—(ஸதீம்) அநஸீவரமாகிய, ஏனென்னில்—(சிரமத்யுஷிதாம்) வெகுகாலமாக உன் பித்ரு பிதாமஹர்களே பிடித்து அவிச்சின்னமாக வந்துகொண்டிருப்பதும், (கௌமாரீம்) குமாரவயதுடையோனாகிய நீ பெறத்தக்கதும், அதாவது—யௌவராஜ்ய ரூபமாகிய வென்றபடி. (மாம்) ராஜ்யலக்ஷ்மியை, (ஶைலூஷஇவ) வேஷதாரியைப் போல், (பரேப்ய:) பரதாதிகளுக்கு, (தாதுமிச்ஸஸி) கொடுக்க விரும்புகின்றனே. இங்ஙனம் கொடுப்பது உனக்குத் தகாதென்று கருத்து.

2. கௌமாராவஸ்தை—குழந்தைப்பருவம்.
3. சைலூஷன்—கூத்தாடி.

கார்யத்தைச் செய்துகொண்டிருப்பாயாக; நானே உன்னுடன் கூடவே வந்துவிடுவேனன்றி, இங்கிருக்கப் போறேன். யாருக்கு இத்தனை பொழுதாக ஹிதம் போதித்துக் கொண்டிருந்தாயோ, யாரைப் பற்றி நீ மனவருத்தப்படுகின்றாயோ, அப்படிப்பட்ட எனக்கு நீ வசப்பட்டு எப்பொழுதும் சொன்னபடி செய்பவனு மாகி என்னை உன்னுடன் அரண்யத்திற்கு அழைத்துக்கொண்டு போவாயாக. எவனிடத்தில் ஹிதமாக நடந்துகொள்ளும்படி எனக்குப் புத்தி சொல்லினையோ, எவனது அபிஷேக ப்ரயோஜனத்தைப் பற்றித் தந்தையினால் நிக்ரஹஞ் செய்யப்பட்டனையோ, அப்படிப்பட்ட பரதனது இஷ்டத்தின்படி நீ அனுவர்த்தனஞ் செய்து அவனது ஆஜ்ஞையைப் பரிபாலித்துக்கொண்டிருப்பாயாக; என்னை மாத்ரம் அவ்விதஞ் செய்து கொண்டிருக்கும்படிக்குச் சொல்லவேண்டாம். நானே உன்னையே பின்சென்று வருவேன். ஸமஸ்தமும் தெரிந்த நீ என்னை இவ்விடத்தில் விட்டுக் காட்டுக்குப் போகலாகாது. தவஞ் செய்வதோ, அரண்யத்தில் வஸிப்பதோ, அல்லது ஸ்வர்க்கத்திற்குப் போவதோ, இவையெல்லாம் உன்னோடுகூடவே எனக்கு நேருமாக. நீ இல்லாமல் எனக்கு எதுவும் வேண்டாம். உன்னைப் பின்சென்று நான் வந்துகொண்டிருக்கையில், எனக்கு எப்படிப்பட்ட மார்க்கத்திலும் யாது கஷ்டமும் நேராது; மேலும், உத்யான வனத்தில் விளையாடுவது போலவும், பூம்படுக்கையிற் படுத்துக்கொண்டிருப்பது போலவும் ஸுகமாகவே இருக்கும். வழியில் முளைத்திருக்கும் தர்ப்பங்களும், நாணற்களும், முட் புதர்களும், மற்றுமுள்ள முட்செடிகளும், உன்னுடன் கூடப் போகும்பொழுது, எனக்குப் பஞ்சு போலவும் கதளி மூதலிய மான்தோல் போலவும் மிதிப்பதற்கு ஸுகமாகவே யிருக்கும். மனக்களிப்புறச் செய்யும் மஹாபாஹுவே! அரண் . , .

காற்றடிக்கையில் மேற்கிளம்பி என்மேல் வந்து விழுந்து தொந்தரவு செய்யும் புழுதியை வாஸனைகலந்த மேலான சந்தனப்பூச்சாகவே நினைப்பேன். நீ அரண்யத்திலிருக்கும்பொழுது அங்கு நடுவில் இளம்புல்லுள்ள இடங்களில் படுத்துக்கொள்வதைக்காட்டிலும், இங்குச் சித்ரகம்பலங்களும் துப்பட்டிகளும் பரப்பின மஞ்சங்களின்மீது படுத்துக்கொள்வது மிகுந்த ஸுகமாகுமோ? ஆகாது. அரண்யத்தில் நீ இலைகளையாயினும், கிழங்குகளையாயினும், காய்களையாயினும், கொஞ்சமாயினும், அதிகமாயினும், எதை உன் கையால் பறித்துக் கொண்டுவந்து கொடுப்பாயோ, அது எனக்கு அம்ருதத்தை நிகர்த்த ரஸமுடையதாயிருக்கும். அங்கு அந்தந்த ருதுக்களில் பூக்கின்ற அந்தந்த புஷ்பங்களைச் சூட்டிக்கொண்டும் அந்தந்த பழங்களைச் சாப்பிட்டுக் கொண்டும் ஸுகமாயிருப்பேனுகையால், அங்கு என்தாயாரையாவது தந்தையையாவது வீட்டையாவது எவ்வளவும் நினைக்கமாட்டேன். நீ என்னை அழைத்துக் கொண்டு அரண்யத்திற்குப் போனபின்பு, உனக்கு அவ்விடத்தில் என்னைப்பற்றி ஏதாயினும் அனிஷ்டமாவது மனவருத்தமாவது ஸம்பவிக்காது; ஆகையால் என்னை அங்குக் காப்பது உனக்குக் கஷ்டமாயிராது. ஆயிரம் படச் சொல்லியென்? ஒரு வார்த்தை சொல்லுகிறேன்; கேட்பாயாக. ராமா! உன்னோடு கூடியிருப்பதே எனக்கு ஸ்வர்க்கம்; உன்னைப் பிரிந்திருப்பதே எனக்கு நரகம். எனக்கு உன்னிடத்திலுள்ள ப்ரீதி உன்னை விட்டுப் பிரிந்திருக்கமுடியாதபடி மிகுந்திருக்குமென்பதை இதுவரையில் பலவிதமாக அனுபவித்திருப்பவனுகையால் என்னை அழைத்துக்கொண்டே நீ அரண்யத்திற்குப் போகவேண்டும். இப்படி அரண்யத்திற்கு வருவதாகப்

பயமின்றி நிச்சயித்துக்கொண்டிருக்கிற என்னை அரண்யத்திற்கு அழைத்துக்கொண்டு போகமாட்டாயா? அப்படியாயின் இப்பொழுது நீ இங்கிருக்கும்பொழுதே விஷத்தைப் பானஞ்செய்து ப்ராணன்களை விடுவேனன்றிப் பகைவரது வசத்தில் கொஞ்சமாயினும் இருக்கப்போறேன். ராமா! நான் இப்பொழுது ஒருகால் சாகாமலிருப்பேனாயினும், நீ போனபின்பாவது துக்கத்தினால் என் ப்ராணன்கள் தப்பாமற்போய்விடும்; பிறகு துக்கத்தினால் சாவதைக்காட்டிலும் இப்பொழுது நீ இருக்கும்பொழுதே நீ கைவிட்டுப் போகும்பொழுதே ப்ராணன்களை விட்டுவிடுவது நலம். பிறகு துக்கத்தினாற் சாவது அழகன்று. உன்னைவிட்டுப்பிரிந்து இந்த துக்கத்தை முஹூர்த்தகாலங்கூடப் பொறுத்திருக்க வல்லவளல்லேன்; இங்ஙனமிருக்கையில், முதலில் ஸம்வத்ஸரங்கள் பத்து; இடையில் மூன்று ஸம்வத்ஸரங்கள்; கடைசியில் ஒன்று; இப்படி பதினான்கு ஸம்வத்ஸரங்கள் வரையில் இந்த துக்கத்தைப் பொறுக்கமுடியாதென்று சொல்லவேண்டுமோ!' என்றனள். இங்ஙனம் அம்மடந்தை சோகத்தினாற் பரிதபிக்கப்பட்டுக் கேட்போர்களுக்கு மனஇரக்கமுண்டாகும்படிமிக்கமனவருத்தத்துடன் பலவாறாகக் கதறி ஆயாஸம் அடைந்து சரீரம் ஸ்வாதீனமில்லாமல் பரவசமாகப் பெற்றுப் பிறகு தன் பர்த்தாவாகிய ராமனை அழுந்தக் கட்டியணைத்துப் பெருங்குரலுடன் அழுதனள். அம்மடந்தை, ராமன் பலவிதமாகச் சொன்னவார்த்தைகள் மனத்தில் அழுந்தப்பெற்று விஷம்பூசின பாணங்களால் அடியுண்ட யானைப்பேடை போல் மிகவும் வருந்தி, அரணிக்கட்டையைக் கடைகையில், அது வெகுகாலமாக உள்ளே அடங்கியிருந்த அக்னியைக் கக்குவதுபோல், வார்த்தையின் பாக்கினால் வெகுநேரமாக உள்ளேயடங்கியிருந்த கண்ணீர்களைப் பெருக்கினள். அப்பொழுது துக்கத்தினால்

வருந்தி இடைவிடாமல் அழுதுகொண்டிருக்கிற அவளது கண்களினின்று மையெல்லாம் அழிந்துபோகையில் ஸ்படிகம்போல் நிர்மலமாகிய கண்ணீரானது, தாமரைப் பூவினின்று தேன் பெருகுவதுபோல் பெருகிக்கொண்டிருந்தது. நிர்மலமாகிய சந்த்ரபிம்பம்போல் வெளுத்த ஒளியுடன் ப்ரகாசிப்பதும் நீண்டழகிய கண்களையுடையதுமாகிய அம்மடந்தையின் முகம் மனவருத்தத்தினால் வெப்பம் நிரம்பப்பெற்று, ஜலத்தினின்று வெளியில் எடுக்கப்பட்ட தாமரைப்பூ வெயில்பட்டு வாடுவதுபோல் ஒளி மழுங்கி வாடிப்போயிற்று. அப்பொழுது ராமன், மிகவுந் துக்கித்து மூர்ச்சித்தாற்போலிருக்கின்ற அந்த ஸீதையைக் கைகளால் வாரியணைத்துக்கொண்டு மிகுந்த நம்பிக்கையை விளைக்கும்படியான நல்வார்த்தைகளைச் சொல்லி ஆஶ்வாஸப் படுத்திக்கொண்டே 'தேவீ! உனக்கு மனவருத்தமா யிருப்பின், எனக்கு ஸ்வர்க்கம் நேரிடுமாயினும் விரும்பமாட்டேன். ஸமஸ்த ஜந்துக்களையும் படைத்துக்காத்து அழிக்குந்தன்மையனாகிய ஸ்ரீமந்நாராயணனுக்கு எப்படி எதிலும் பயமில்லையோ; அப்படியே எனக்கும் எதனாலும் பயம் நேரிடாது. அழகிய முகமுடையவளே! உன்னைவிட்டுப் பிரிந்திருக்கப் பொறுதவனாயினும் எங்கும் எக்காலத்திலும் பயமென்பது சிறிதுமில்லா திருப்பவனாயினும், உன்னை அரண்யத்திற் கொண்டுபோய், காப்பாற்ற வல்லனாயினும், உன்மனத்தி லுள்ள அபிப்ராயம் முழுதும் எனக்குத் தெரியா திருந்தமையால், நீ என்னுடன் அரண்யத்தில் வாஸஞ் செய்ய ஸம்மதிக்காமலிருந்தனன். மிதிலாதிபதியின் புதல்வியே! என்னோடுகூடி வனவாஸஞ் செய்வதற்காக நீ படைக்கப்பட்டனை; ஆகையால் எப்படிப்பட்ட கஷ்டம் நேரிடுமாயினும் கலக்கம் பெறாமல், திடமான மன

ழுடையவன் கீர்த்தியைக் கைவிடப் பொருதிருப்பது போல், உன்னை நான் விட்டிருக்கப்போறேன். யானையின் துதிக்கைபோன்ற துடைகளுடையவளே! வானப்ரஸ்த தர்மத்தை முன்பு ராஜர்ஷிகள் பத்னிகளோடுகூடியே ஆசரித்தனர். ஆகையால் ஸுவர்ச்சலை ஸூர்யனை அனுஸரிப்பதுபோல், நானும் பூர்வர்களது தர்மத்தையே அனுஸரித்து உன்னை வனத்திற்கு அழைத்துக் கொண்டுபோகின்றனன். ஸுவர்ச்சலை ஸூர்யனைப் பின் செல்வதுபோல், நீயும் என்னைப் பின்றொடர்ந்து வருவாயாக. ஜனகமஹாராஜன் புதல்வியே! தந்தை அரண்யத்திற்குப் போவென்று சொன்ன ஒருவார்த்தையே அன்று; அப்படியே செய்கிறேனென்று ஸத்யமுஞ் செய்தேனாகையால், அந்தத் தந்தையின் வார்த்தை மேலும் பலிஷ்டமாயிற்று. நான் செய்த ஸத்யத்துடன் கூடிய அந்தத் தந்தையின் வார்த்தையே என்னை அரண்யத்திற்குப் போகும்படி தூரத்துகின்றது. ஆகையால் நான் போகாமலிருக்க நேரவே நேராது. அழகிய நிதம்பத்தையுடையவளே! தந்தைக்கும் தாய்க்கும் சொன்ன சொற்படி அடங்கி நடக்கையே தர்மம். இதைக்காட்டிலும் மற்றொரு தர்மம் இல்லை. ஆகையால் பித்ருவாக்ய பரிபாலனஞ் செய்ய முயன்றிருக்கின்ற நான் அந்த தர்மத்தை உல்லங்கனஞ்செய்து பிழைத்திருக்கப் போறேன். 'பித்ரு வசனபரிபாலனஞ் செய்வதென்? தெய்வத்தை ஆராதித்துக்கொண்டு இங்கேயே இருக்கலாகாதா' என்று வினவுகின்றாயோ? ப்ரத்யக்ஷமாக நமக்கு ஆஜ்ஞை செய்து நாம் செய்யும் ஆராதனத்திற்கு வஶ்யர்களாயிருக்கின்ற தாய் தந்தை குரு என்கிற இந்த ப்ரத்யக்ஷ தெய்வங்களை விட்டு, ப்ரத்யக்ஷமாக நமக்கு ஆஜ்ஞை செய்யாமல், நமது ஆராதனத்திற்கும் வசப்படாமல் ஸ்வதந்த்ரமாயிருக்கிற தெய்வத்தை அவ்வோ விதங்களால எப்படி ஆராதிக்கலாகும்? அழகிய

கடைக்கண்களையுடையவளே! தாய் தந்தை குரு என்கிற இம்மூவரே மூன்று லோகங்கள். இவர்களை ஆராதித்தோமாயின், மூன்று லோகங்களையும் ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளலாம். இவர்களுக்குச் சுஶ்ரூஷை செய்தோமாயின், மூன்று லோகங்களிலுள்ள தேவதைகளையெல்லாம் ஆராதித்தவளவு பயன் உண்டாகும். இவர்களைப்போல் பரிசுத்தமாயிருப்பது மற்றென்றும் இல்லை. ஆனதுபற்றி நான் இவர்களையே ஆராதித்துக் கொண்டிருக்கின்றனன். ஸீதே! பித்ருசுஶ்ரூஷை எப்படி பரலோகத்திலுள்ள க்ஷேமங்களை உண்டாகச்செய்து மேன்மையைக் கொடுக்குமோ; அப்படி ஸத்யமாவது தானமாவது பெரியோர்களைப் பூஜிக்கையாவது உரிய தக்ஷிணைகளுடன் கூடிய யாகங்களாவது பரலோகக்ஷேமங்களைக் கொடுப்பவையல்ல. ஸ்வர்க்கமாயினும், தனமாயினும், தான்யமாயினும், வித்யைகளாயினும், புத்ரர்களாயினும், ஸுகமாயினும், இன்னும் மற்றையெதாயினும், குருசுஶ்ரூஷை நடத்திக்கொண்டிருந்தால் எதுவும் கிடைக்க அரிதாயிராது; அனைத்தும் ஸித்திக்கும். அத்தால் ஸித்திக்காதது ஒன்றுமே இல்லை. தாய் தந்தைகளுக்கு இடைவிடாமல் ஆஸக்தியுடன் சுஶ்ரூஷைகள்செய்து கொண்டிருக்கும் மனவுறுதியுடையவர்கள், தேவலோகத்திலும் கந்தர்வ லோகத்திலும், கோலோகத்திலும், மற்றுமுள்ள புண்ய லோகங்களிலும் போய்ச் சென்று ஸுகானுபவம் பெற்றுக கடைசியில் ப்ரஹ்ம லோகம் பெறுவார்கள். அப்படி ஸ்வதந்த்ரராகிய தந்தை, ஸத்யத்தையும் தர்மத்தையும் திடமாகக் கைப்பற்றி என்னை எப்படி ஆஜ்ஞாபித்தாரோ அப்படியே நடந்து கொள்ள விரும்புகின்றனன்; தந்தையின் ஆஜ்ஞையை அனுவர்த்திப்பது ஸநாதன தர்மமன்றோ? ஸீதே! இதுவரையில் உன் மனக்கருத்து எனக்குத் தெரியாதிருந்ததனால், உன்னைத் தண்டகாரண்யத்

திற்கு அழைத்துக்கொண்டுபோக எனக்குப் புத்தியிற் படாதிருந்தது. அப்படிப்பட்ட நீ அரண்யத்தில் இருப்பேனென்று சொல்லி என்னைப் பின்றொடர்ந்து வரும்படிக்குக் கெட்டியாக நிச்சயித்துக் கொண்டிருக்கின்றனை. இப்பொழுது உன் மனக்கருத்து எனக்கு வெளியாயிற்று. ஆகையால் உன்னை அழைத்துக்கொண்டு போகின்றேன். தோஷங்களொன்றுமின்றி அழகாய் விளங்குகிற அவயவங்களுடையவளே! மனமயங்கச் செய்கின்ற மனோஹரமான கண்களுடையவளே! பயப்படுந் தன்மையளே! ஜானகி! அரண்யத்தில் என்னோடுகூட வஸிக்கும்படிக்குத் தெய்வமே உன்னைப் படைத்திருக்கின்றதல்லவா? ஆகையால் என்னுடன் புறப்பட்டு வருவாயாக. உனக்கு யாதொரு பயமும் ஸம்பவிக்காது. அங்கு என்னுடன் தர்மங்களை ஆசரித்துக் கொண்டிருப்பாயாக. ஆசைக்கிடமாகிய நாயகியே! ஸீதே! பர்த்தாவை அநுஸரித்துப் போகவேண்டுமென்னும் நிச்சயம் உனக்கு நன்கு உண்டாயிருக்கின்றது. இது உன் குலத்திற்கும் என் குலத்திற்கும் தகுந்திருக்கின்றது; மிகவும் சுபமாயிருக்கின்றது. அழகிய பின்புறமுடையவளே! இனி நீ வனவாஸத்திற்கு உரியனவாகிய கார்யங்களைச் செய்யத் தொடங்குவாயாக. இனி நீ இல்லையாயின் எனக்கு ஸ்வர்க்கமாயினும் ஸம்மதிக்காது. ப்ராஹ்மணர்களுக்குப் பலவித ரத்னங்களையும், பிச்சைக்காரர்களுக்கு இஷ்டப்படி போஜனங்களையும் கொடுப்பாயாக. மேலும், எவர் எதை ஆசைப்படுகிறார்களோ, அதை அவர்களுக்குத் தப்பாமல் கொடுப்பாயாக. பொழுது போக்கவேண்டாம். த்வரையுடன் கார்யங்களைச் செய்வாயாக. ப்ராஹ்மணர்களுக்குத் தானஞ் செய்த பின்பு, மிகுந்த விலையுள்ள ஆபரணங்களையும், மேலான வஸ்த்

ரங்களையும் விளையாடுவதற்கு உபயோகப்படும்படியான அழகிய பொம்மை முதலிய உபகரணங்களையும், படுக்கைகளையும், பல்லக்கு முதலிய வாஹனங்களையும், எனதாயினும் உனதாயினும் யாவையாவை இருக்கின்றனவோ அவையெல்லாவற்றையும் நமது வேலைக்காரர்களுக்குக் கொடுத்து விடுவாயாக' என்றனன். அந்த மடந்தையர்மணியான ஸீதாதேவியும், தான் கூடவே அரண்யத்திற்கு வருவது பர்த்தாவுக்கு ஸம்மதமாயிருக்கிறதென்று தெரிகையில், மிகுந்த ஸந்தோஷம் அடைந்து, சீக்ரமாக அவன் சொன்னபடியே தானங்களைச் செய்ய ஆரம்பித்தனள். அதன் பிறகு மிகுந்த புகழ் பொருந்திய அந்த ஸீதாதேவி, பர்த்தா சொன்ன வார்த்தைகளை ஆலோசித்து மிக்க மனக்களிப்புற்று மனத்தில் மற்றொரு சிந்தையின்றித் திடப்படுத்திக் கொண்டு தார்மிகர்களாயிருப்பவர்களுக்குத் தனங்களையும் ரத்னங்களையும் யதேஷ்டமாகத் தானஞ் செய்யத் தொடங்கினள். முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராமன் லக்ஷ்மணனை அரண்யத்திற்குத் தன்னுடன் வரவேண்டாமென்று சொல்லித் தடுத்தல்.

லக்ஷ்மணன் கௌஸல்யையின் க்ருஹத்திலிருந்து ராமனோடுகூட முன்பே வந்திருந்தனன்; ஆகையால் அவன் ராமனுக்கும் ஸீதைக்கும் நடந்த ஸம்வாதத்தைக் கேட்டுத் தனக்குள் 'தனக்கு அர்த்த சரீரமாகிய ஸீதாதேவியை அழைத்துக்கொண்டு போவதற்கே எவ்வளவோ கஷ்டப்பட்டு ஸம்மதித்தனன். இனி என் கதி யாதோ' என்று சிந்தித்து மனவருத்தத்தினால் கண்களிரண்டிலும் கண்ணீர் ததும்பப் பெற்று, துக்கத்தைப் பொறுக்க

முடியாமல், [1]அம்மஹாயசஸ்வியாகிய லக்ஷ்மணன் தமை

1 இதற்கு மூலம்—'ஸ ப்ராதுஶ் சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந:। ஸீதா முவாசாதியஶா ராகவஞ்ச மஹாவ்ரதம்.' இதில் லக்ஷ்மணன் தனக்கு ராமனைப் பின்தொடர்ந்து செல்லும் ப்ரயோஜனம் ஸித்திப்பதற்காக ஸீதாதேவியின் புருஷகாரத்தைக் கொண்டு ராமனைச் சரணம் புகுகிறான்—(ஸ:) ராமனை அனுவர்த்திப்பதற்கு ராமனே யன்றி மற்றொரு உபாயமில்லை யென்னும்படி யிருப்பவனென்றபடி. அநந்யோபாயனென்றபடி. (ப்ராது:) உடன் பிறந்தவனுடைய: இதில் தடுக்கமுடியாத ஸம்பந்தஞ் சொல்வதனால் சரண்யனென்பது சொல்லப்பட்டது. சரண்யன் ரக்ஷிக்கவல்லவன், (சரணௌ நிபீட்ய) ஸ்ரீ பாதங்களைப் பிடித்துக் கொண்டு. இதனால். சரணாகதி சொல்லப்பட்டது. (காடம்) கெட்டியாகப் பாதங்களைப்பிடித்துக் கொண்டானென்றபடி. இதனால்—மிகுந்த விஶ்வாஸமுடையவனாயிருக்கை சொல்லப்பட்டது. இங்ஙனஞ் செய்து, முதலில் (ஸீதாம்) புருஷகாரத்திற்காக ஸீதாதேவியை ஆஶ்ரயித்து, (உவாச) மொழிந்தனன். பின்பு ஸீதையின் புருஷகாரத்தினால் (மஹாவ்ரதம்) 'நத்யஜேயங் கதஞ்சந' 'ஏதத் வ்ரதம் மம' என்று ஆஶ்ரிதரக்ஷண மென்னும் மஹாவ்ரதத்தை யுடையவனாகிய, (ராகவம்) ரகுகுலத்திற் பிறந்த மஹானுபாவனை. ரகுகுலத்திற்கு சரணாகத ரக்ஷணஞ் செய்கையே தர்மமென்று ரகுராக்ஷஸ ஸம்வாதம் முதலிய விடங்களில் ப்ரஸித்தமாகையால் அப்படிப்பட்ட வம்சத்திற் பிறந்த ராமனைப் பார்த்து, (உவாச) மொழிந்தனன். சரணாகதியால் ஸமஸ்த பலன்களும் ஸித்திக்கின்றனவாகையால் சரணம் அடைந்து தனது அபிமத பலத்தைத் தெரிவித்தானென்றபடி. 'ஸ ப்ராதுஶ் சரணௌ காடம் நிபீட்ய' என்கையால் த்வய வாக்யத்தில் பூர்வகண்டத்திற் சொன்ன சரணாகதியும், 'ராகவமுவாச' என்கையால் உத்தர கண்டத்திற் சொன்ன பலப்ரார்த்தனையும், 'ஸீதாமுவாச' என்கையால் இரண்டு கண்டத்திலுமாகச் சொன்ன புருஷகாரபரிக்ரஹமும், இங்கு அனுவதிக்கப்பட்டதென்று தெரியவருகின்றது. இப்படிக்குக் கோவிந்தராஜர் கூறுவர்.

(ஸ:) பரமபதத்தில் மாத்ரமேயன்றி அவதரித்த இவ்வுலகத்திலுங் கூடக் கைங்கர்யஞ் செய்ய வேண்டுமென்று கூடவே அவதரித்தவ

யனது பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு

---

னென்றபடி. (ரவு ஈங்்டீநஃ) பெரியோர்களை அனுவர்த்திக்கும் ரகு குலத்தவர்களை யெல்லாம் ததீயானுவர்த்தனத்தினால் ஆநந்திக்கச் செய்பவன். (அதியஶாஃ) தான் ராஜகுமாரனுயிருந்தும் 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' என்று ஜ்யேஷ்டனை அனுவர்த்திப்பதனால் உண்டான மஹா கீர்த்தியுடையவன். இப்படிப்பட்டவனாகிய லக்ஷ்மணன், (ஸ்ரீ ராதுஃ) லக்ஷ்மணனது அனுவர்த்தனத்தை அங்கீகரித்து அதன் மூலமாக அவனைப் பரிக்கின்ற ஸ்ரீராமபிரானுடைய. லக்ஷ்மணனுக்குத் தன் கைங்கர்யத்தை ராமன் அங்கீகரிப்பதே தன்னை அவன் பரிப்பதாகுமென்று கருத்து. (சரணௌ) ஸ்ரீபாதங்களிரண்டையும். இங்கு த்விவசனத்தினால் (இருமையினால்) 'சர-கதிஹிம்ஸநயோஃ' என்று கதியைச்சொல்லுகிற சரதாதுவினின்றும் இப்பதம் உண்டானதாகை யால் ப்ராப்யமும் ப்ராபகமும் இரண்டுமாயிருப்பவையென்று தோற்று விக்கப்பட்டது. (சரணௌ) கையைப் பிடித்தோமாயின், ஒருகால் நிராகரிக்கவுங்கூடும்; பாதங்களைப் பிடித்தபோது அவஶ்யம் அங்கீகரித்தே தீரவேண்டு மென்றபடி.( கா்ஹம்பீட்ய) கெட்டியாகப் பிடித்துக் கொண்டு. தன்னை விட்டுப் போவானாயின், நிற்கப் பொருத தன் அபிநிவேசமெல்லாந் தோற்றும்படி யென்றபடி. இதனால்-ஸ்வீகாரந் தெரியவருகின்றது. (ஸீதா முவாச) ஸீதையைப் பார்த்துச் சொல் லினன். பாதங்களைப் பிடித்துக்கொண்டு செவியிற் படவன்றோ விண்ணப்பஞ் செய்யவேண்டும். சேதனர்செய்யும் விண்ணப்பங்களைப் பிராட்டி மூலமாகவே திருச்செவிசார்த்தியருள்பவனாகையால் தானும் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு பிராட்டியின் திருவவதாரமாகிய ஸீதாதேவி மூலமாகத் திருச் செவியிற் பட விண்ணப்பஞ் செய்தானென்று பொருள்.

அன்றியே—'ஆநுகூல்யஸ்ய ஸங்கல்பஃ, ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்। ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸோ, கோப்த்ருத்வவரணந்ததா' என்கிற சரணாகதியின் அங்கங்களை இதிற் சொல்லுகின்றார்.

(சரணௌ) என்று த்விவசனத்தினால்—உபாயோபேயத்வமும், (காஹம்) என்கையால்—சங்கையில்லாமையும், அதாவது—விஶ்வாஸமும், (சரணௌ பீட்ய) என்கையால்—சரணாகதியும், (ரகுநந்தநஃ) என்கையால்—வம்சபாவனத்வமும், (ஸீதா முவாச) என்கையால்—புருஷகார வரணமும், (அதியஶாஃ) என்கையால்—கைங்கர்ய ஸாம்

முதலில் புருஷகாரத்திற்காக ஸீதையைப் பார்த்து மொழிந்து பின்பு ஆஶ்ரித ஸம்ரக்ஷண மென்னும் மஹாவ்ரதத்தைக் கைவிடாமற் பரிபாலித்து வருகின்ற ஸ்ரீராமபிரானைப் பார்த்து மொழிந்தனன்:—'நீ அரண்யத்திற்குப் போவது எனக்கு ஸம்மதமாயில்லை. [1] போக வேண்டுமென்று உனக்குப் புத்தி உண்டாகுமாயின், அங்கு ம்ருகங்களும் யானைகளும் எங்கும் நிரம்பியிருக்குமாகையால், நான் வில்லைத் தரித்து உன்னை முன்னும் பின்னும் பாதுகாத்துக்கொண்டு வருகின்றனன். [2] நீ என்னுடன் கூடிப் பக்ஷிகளும் ம்ருகஸமூஹங்களும் கர்ஜித்துக் கொண்டிருக்கப்பெற்று மிகவும் பயங்கரமாகிய அரண்யங்கள் பலவும் ஸஞ்சரிக்கலாம். [3] நீ இல்லையாயின், எனக்குத் தேவலோக ப்ராப்தி நேருமாயினும், கை

---

ராஜ்ய லாபத்தினுல் உண்டான ப்ரஸித்தியும், (ராவவம்) என்கையால்—ரக்ஷகனுகைக்குரிய குணௌஷ்டகமும், (மஹாவ்ரதம்) என்கையால்—சரணுகத பரித்யாகஞ் செய்யில் தன் வ்ரதத்திற்கே ஹானி உண்டாகையும் தோற்றுவிக்கப்படுகின்றன.

1 இந்த வாக்யத்தினுல் கைங்கர்ய ப்ரார்த்தனை செய்யப்பட்டது. இதில் (யநுঃ-வில்லை) என்பது கைங்கர்யத்திற்கு ஸாதனம்.

2 இதில் (பலவும்-வஹூநி) என்கையால் ஸர்வதேச ஸர்வ கால ஸர்வாவஸ்தைகளிலுந் தகுந்த ஸகலவித கைங்கர்யங்களையும் ப்ரார்த்தித்தானென்று தெரியவருகின்றது.

3 முன்பு அநந்யோபாயத்வஞ் சொன்னுற்போல் இப்பொழுது அநந்யப்ரயோஜனத்வஞ் சொல்லுகிருர் - இதற்கு - 'நதேவலோகாக்ரமணம்நாமரத்வமஹம் வ்ருணே। ஐஶ்வர்யம்வாபி லோகாநாம் காமயே ந த்வயாவிநா' என்று மூலம். இங்கு நீ தவிர மற்றை யெதுவும் எனக்கு ப்ரயோஜன மன்றென்பதுவே-அநந்யப்ரயோஜனத்வமென்று தெரிகின்றது. (தேவலோகாக்ரமணம்) 'தேவாநாம்பூரயோத்யா' என்கிறபடியே தேவலோகமென்றுல் இங்குப் பரமபதத்தைச் சொல்லுகிறது. நீ இல்லையாயின் எனக்குப் பரமபதப்ராப்தியும் வேண்டாம். உன் கைங்கர்யத்தை விட்டு மோக்ஷத்தையுங்கூட விரும்பேனென்று கருத்து. (அமரத்வம்) 'ஜராமரணமோக்ஷாய' என்கிறபடியே ஜராமர

வல்ய மன்கிற அமரத்வம் கைபுகுமாயினும், அவைகளை விரும்பமாட்டேன். த்ரிலோகைஶ்வர்யம் (மூன்று லோகங்களுக்கும் ப்ரபுவாயிருக்கை) நேருமாயினும், அதை நான் ஆசைப்படேன்' என்றனன். லக்ஷ்மணன் ராமனோடுகூட வனத்திற்குப்போகவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டு இங்ஙனஞ் சொல்லுகையில், ராமன் இனிய உரைகளைச்சொல்லி நீ வரவேண்டாமென்று தடுக்கையில், மீளவும் லக்ஷ்மணன் அவனைப்பார்த்து [1] நீ முன்னமே நான் வனத்திற்கு வரும்படி அனுமதி

---

ணங்களினின்றும் விடுபட்டிருந்து ஆத்மானுபவஞ்செய்கையாகிற கைவல்யத்தை இங்கு அமரத்வமென்கிறது. கைவல்யமென்கிற மோக்ஷத்தையும் விரும்பேனென்றபடி. (லோகாநாமைஶ்வர்யம்) த்ரிலோகாதிபதித்வம்; அல்லது ப்ரஹ்மத்வம். இதையுங்கூட, (நகாமயே) விரும்பமாட்டேன். ஐஶ்வர்யகைவல்யபகவல்லாபங்களென்கிற இம்மூன்று புருஷார்த்தங்களில் பகவல்லாபத்தையே விரும்பாதொழியில், மற்றைக் கைவல்யத்தையும் ஐஶ்வர்யத்தையும் அபேக்ஷிக்கமாட்டானென்று சொல்லவேண்டுமோவென்று ராமகைங்கர்யத்தைத் தவிர மற்றை மூன்று புருஷார்த்தங்களையும் விரும்பாமை இங்குச் சொல்லப்பட்டது.

1 ஓரிடத்தில்—'உபக்லுப்தஞ்ச யத்கிஞ்சிதபிஷேகார்த்த மத்ய மே। ஸர்வம்விஸர்ஜய க்ஷிப்ரம்குருகார்யம் நிரத்யயம்' (இப்பொழுது எனது அபிஷேகத்தின் பொருட்டு ஏற்படுத்தப்பட்ட கார்யம் எதெதுண்டோ அதையெல்லாம் விட்டுத் தொலைப்பாயாக. கெடுதியில்லாத கார்யத்தை நடத்துவாயாக) என்று ஸம்மதியைக் காட்டினன். மற்றோரிடத்தில்—' தஸ்மாதபரிதாபஸ்ஸ ஸ்த்வமப்யநுவியாய மாம்। ப்ரதிஸம்ஹாரய க்ஷிப்ரமாபிஷேசநிகீ: க்ரியா:' (ஆகையால் நீ பரிதாபத்தை விட்டு எனது அபிப்ராயத்தை அனுஸரித்திருப்பாயாக. எனது அபிஷேகத்தைப்பற்றிய கார்யங்களைச் சீக்ரத்தில் நிறுத்திவிடுவாயாக) என்று அனுமதியைத் தெரிவித்தனன். இன்னுமோரிடத்தில்—'நீ ராதரு புத்ரஸமௌசாபி த்ரஷ்டவ்யௌச விஶேஷத: । த்வயா பரதஶத்ருக்னௌ ப்ராணை: ப்ரியதரௌ மம' (எனக்கு ப்ராணன்களைக்காட்டிலும் மிகவும் ப்ரியர்களாகிய பரதசத்ருக்னர்களை

கொடுத்திருக்கின்றனே. அங்ஙனமிருக்க, மறுபடியும் என்னை வரவேண்டாமென்று தடுக்கின்றனேயே! இது வென்? நிர்த்தோஷஸ்வபாவனே! நான் உன்னோடு வனத்திற்கு வர விரும்புகையில் வேண்டாமென்று தடுப்பதற்குக் காரணம் யாது? இதைத்தெரிந்துகொள்ள விரும்புகின்றனன். நான் இப்பொழுது யாது அபராதஞ் செய்தேனோவென்று எனக்கு ஸம்சயம் உண்டாயிருக்கின்றதாகையால் அதை எனக்குத் தெரியச்சொல்லவேண்டும்' என்றனன். பின்பு மஹாதேஜஸ்வியாகிய ராமன், தன் முன்னிலையில் கையைக் கூப்பிக்கொண்டு தனக்கு முன்னாகவே அரண்யத்திற்குப் போக முயன்று, அங்ஙனம் போவதற்குரிய வீரனாயிருந்தும் 'என்னையுங் கூடவே அழைத்துக் கொண்டு போகவேண்டும்' என்னும் வேண்டுகோளுடன் நின்றுகொண்டிருக்கிற லக்ஷ்மணனைப் பார்த்து மொழிந்தனன்.— 'நீ என்னிடத்தில் மிகுந்த ஸ்நேஹமுடையவன்; தர்மத்தில் மனஞ் செல்லப் பெற்றவன்; வீரத்தன்மை யமைந்தவன்; எப்பொழுதும் ஸன்மார்க்கத்திலேயே நடக்குந் தன்மையுடையவன்; எனக்கு ப்ரீதிக்கிடமாயிருப்பவன்; பின்னும் ப்ராணனைப் போன்றவன்; நான் சொன்னபடியே நடந்து எனக்கு ஸ்வாதீனமாயிருப்பவன்; எனக்கு உடன் பிறந்தவன்; என்னோடு ஸுகதுக்கங்களிரண்டுமொத்திருக்கப் பெற்றவன், ஆகையால் நீ என்னோடு கூட வருவாயா

நீ உடன் பிறந்தவர்களைப் போலவும், புதல்வர்களைப்போலவும் விசேஷித்துப் பார்க்கவேண்டும்) என்று பரதசத்ருக்னர்களையே அனுஸரிக்கும்படி ஸீதைக்கு மொழிந்தனன்; லக்ஷ்மணனை அனுஸரித்திருக்கும்படிக்குச் சொல்லாமையால் லக்ஷ்மணன் அயோத்யையில் நில்லாமல் தன்னோடுகூடவே அரண்யத்திற்கு வருவானென்று தெரிவித்தனன். ஆனதுபற்றியே லக்ஷ்மணன் (முன்பு அனுமதி செய்து இப்பொழுது வேண்டாமென்பானேன்?) என்று வினவினனென்று தெரியவருகின்றது.

யின், நான் சொன்ன கார்யங்களைச்செய்ய வல்லவனாகை யால் எனக்கு ஸௌக்யமே. லக்ஷ்மணா! என்னோடுகூட நீ இப்பொழுது அரண்யத்திற்கு வருவாயாயின், பிறகு கௌஸல்யையையாவது பெரும் புகழ்பொருந்திய ஸு மித்ரையையாவது இங்குப் பரிப்பவர் யாவர்? அதற்காக வே உன்னை வரவேண்டாமென்றனன். முன்பு அனுமதி செய்தது அப்பொழுதைக்குப் பரிஹாரமாகச் சொன் னதேயொழிய வேறில்லை. 'அரசனே அவர்களைப் பரிக்க வேண்டியவன்' என்கிறாயோ? பூமியின்மீது மேகம் மழையைப் பெய்வது போல், தன்னைப் பற்றி யிருப்ப வரது விருப்பங்களை யெல்லாம் ஈடேறச் செய்யும் மஹா தேஜஸ்வியாகிய அரசன் காமபாசத்தினாற் கட்டுண்டு தடைபட்டிருக்கப் போகின்றனன். அவன் எப்படி பரிக் கப் போகின்றனன். அஶ்வபதியின் குமாரத்தியாகிய கைகேயி இந்த ராஜ்யம் முழுவதுங் கைப்பற்றின பின்பு மனவருத்தமுற்றிருக்கின்ற தன் சக்களத்திகளுக்கு எள்ளளவாயினும் நன்மையைச் செய்ய மாட்டாள். 'போஷிப்பதற்குப் பரதன் இல்லையோ' என்பாயாயின், அவனும் ராஜ்யத்தைப் பெற்ற பின்பு கைகேயியின் வார்த்தையையே அனுவர்த்திப்பானாகையால் மிக்க மனத்துயரமுற்றிருக்கிற கௌஸல்யையையாயினும் ஸு மித்ரையையாயினும் நினைக்கவும் மாட்டான். 'என க்கு மாத்ரம் அவர்களைப் பரிக்க எப்படி முடியும்' என் பாயாயின்' நீ இங்குத் தானே இருந்து ராஜாவினிடத் தில் அனுக்ரஹத்தை ஸம்பாதித்துக்கொண்டு மேன் மைப்படுத்த வேண்டியவர்களாகிய கௌஸல்யையையும் ஸுமித்ரையையும் போஷித்துக் கொண்டிருப்பாயாக. அரசன் உன்னிடத்தில் அனுக்ரஹஞ் செய்யானாயின், நீயே யாயினும் உனக்குட்பட்டவர்களைப் போஷித்துக் கொண்டிருப்பாயாக. நான் சொல்லுகிற இவ்விஷயத்

தை நடத்துவாயாக; மறுக்கவேண்டாம்; சொன்னபடி செய்வாயாக. 'உன் கைங்கர்யத்தையே விரும்புகிற எனக்கு இந்த வினைல்லாம் எதுக்கு' என்பாயாயின், நீ எல்லாத் தர்மங்களும் உணர்ந்தவன்; நான் சொல்லுகிற இந்த ப்ரகாரஞ் செய்வாயாயின், இது உனக்கு என்னிடத்திலுள்ள பக்தியை நன்கு வெளிப்படுத்தினதாகும். மேலும், மாத்ருசுஶ்ரூஷையால் ஒப்பில்லாத தர்மமும் அளவின்றி உண்டாகும். லக்ஷ்மணா நீ இப்படி செய்வாயாயின், நமது ரகுகுலத்தவர் யாவரும் ஆனந்திப்பார்கள். ஆகையால் எனக்காக நீ இங்ஙனஞ் செய்வாயாக. நாம் இல்லாமற் போவோமாயின், நமது தாய்மார்களுக்கு ஸுகமென்பது சிறிதும் உண்டாகாது' என்றனன். ராமன் பேசுவதில் மிகுந்த வல்லமையுள்ளவன்; லக்ஷ்மணனும் அப்படிப்பட்ட ஸாமர்த்யத்துடன் பேசும்படியான வல்லவன். ஆகையால் ராமன் இங்ஙனம் மனத்திற் படும்படிக்குச் சொன்ன வார்த்தையைக் கேட்டு அவன் அப்பொழுது அந்த ராமனைப் பார்த்து 'ராமா! நீ மிகுந்த வீரத்தன்மை யமைந்தவன். உன் ப்ரதாபத்திற்கே பயந்து பரதன் கௌஸல்யையையும் ஸுமித்ரையையும் ஆதரத்துடன் நன்கு பூஜித்துக் கொண்டு வருவான். இதற்கு ஸந்தேஹம் இல்லை. மேலும் கௌஸல்யையை ஒருவர் போஷிக்கவேண்டுமா? அவளை அனுஸரித்துப் பிழைப்பவர்களும் அவளது அனுக்ரஹத்தினால் விலை யுயர்ந்த பல க்ராமங்களைப் பெற்றிருக்கின்றனர்; அப்படிப்பட்ட அவள் என்னைப் போன்றவர் ஆயிரம் பேர்களையாயினும் போஷிக்க வல்லவள். அப்படி யிருப்பதனால் மஹா கீர்த்தியும் மஹா மதியுமமைந்த கௌஸல்யாதேவி, தன்னையும் எனது தாயாகிய ஸுமித்ரையையும், இன்னும் என்னைப் போன்றவர் எத்தனை பேர்களையாயினும் போஷித்துக்

கொள்ள வல்லமையுள்ளவளே. [1] உனக்குப்பரதந்த்ரனு

1 இதற்கு—'குருஷ்வ மாமநுசரம் வைதர்ம்யம் நேஹ வித்யதே । க்ருதார்த்தோऽஹம்பவிஷ்யாமி தவசார்த்தஃ ப்ரகல்பதே' என்று மூலம். (மாம்) உனக்குச் சேஷபூதனுகிய என்னை, (அநுசரம்) அந்த சேஷத்வத்திற்கு அனுகுணமான கைங்கர்யமுடையவனுக. (குருஷ்வ) செய்துகொள். உனக்கு அநர்ஹமாயிருக்கும் ஸொத்து இது; அப்படிப்பட்ட ஸொத்து ஸ்வாமியை விட்டுப் பிரியுமாயின், ப்ராணன்களே நசித்துப்போகுமென்று கருத்து. (குருஷ்வ) என்னை அங்ஙனஞ்செய்வது உன் ப்ரயோஜனமேயென்றபடி. ஸொத்தைக் கைவிடில் ஸ்வாமிக்கன்றே குறையென்று கருத்து. (இஹ) இதில், என்னை அனுசரனுகச் செய்துகொள்ளும் விஷயத்தில், (வைதர்ம்யம்) நம்மிருவர்க்கும் உள்ள ஸேவ்யஸேவகதர்மத்தின் கெடுதி, (ந) ஸம்பவிக்காது. நீ ஸ்வாமியாகையால் ஸேவ்யதர்மம் பரிபூர்ணமாயிருக்கின்றது; நான் ஸ்வாபாவிகமாகவே சேஷமாயிருப்பவனுகையால் எனக்கு ஸேவகதர்மமும் பரிபூர்ணமா யிருக்கின்றது. ஆகையால் என்னை அனுசரனுகச் செய்துகொண்ட பின்பு 'ஸேவகனுகக்கூடாத இவனை ஸேவகனுகச் செய்துகொண்டோமே, ஸேவ்யனுகக்கூடாத நாம் ஸேவ்யனுனேமே, தர்மம் தப்பிற்றே' என்று சிந்திக்கவேண்டியதில்லை யென்றபடி. அல்லது—(வைதர்ம்யம்) வைபரீத்ய ஸாதகம். விபரீதம் உண்டாகைக்கு வழியில்லை யென்றபடி. நீ, தாயைக் காப்பாற்றுகை முதலிய சில கார்யங்களைச் சொல்லி, நான் அரண்யத்திற்கு வருவேனுயின், அவையெல்லாங் கெட்டுப் போய்விடுமென்றனை; அதற்கு நான் ஸமாதானம் சொல்லிவிட்டேனுகையால், நான் உனக்கு அனுசரனுகி உன்னுடன் கூட வருவேனுபின், விபரீதங்கள் ஒன்றும் இங்கு நடவாவென்று கருத்து. தன்னை அனுசரனுகச் செய்துகொள்வதனுலுண்டாகும் பயனைச் சொல்லுகின்றனன்—(தவார்த்தஃச ப்ரகல்பதே) உனக்கும் ஆயாஸமின்றிப் பல மூலாதிகள் கிடக்கையாகிற ப்ரயோஜனம் ஸித்திக்கின்றது. (அஹஞ்ச க்ருதார்த்தஃ) உனக்குக் கைங்கர்யஞ் செய்யப் பெற்றதனுல் நானும் என் ப்ரயோஜன மீடேறப் பெறுகின்றேன். அன்றியே—(மாம்) இயற்கையாகவே சேஷபூதனுகிய என்னை, (அனுசரம்) ஸ்வரூபானுரூபமாகிய சேஷவ்ருத்தி

கிய என்னை உனக்கு வேலைக்காரனாகச் செய்துகொள்வாயாக. அப்படிக்குச் செய்யும் விஷயத்தில் தர்மம் கொஞ்சமும் விபரீதமாகாது. அதனால் நானும் என் மனக் கருத்து ஈடேறப் பெறுகின்றனன். நான் பழம் முதலியவற்றைக் கொண்டு வந்து கொடுப்பதனால் உனக்

---

யுடையனாகச் செய்வாயென்றபடி. சேஷத்வம் ஸ்வபாவ ஸித்தமாயினும், அதைத் தெரிந்துகொண்டு அதில் நிலை பெற்றிராமையால் நீ என்னை அந்த சேஷத்வத்தில் நிலைநிற்கும்படிக்குச் செய்வாயாகவென்றபடி. சேஷத்வம் வெறுமனே உண்டாயிருப்பின் ப்ரயோஜனமில்லை. அதைத் தெரிந்துகொண்டு அதில் நிலை பெற்றிருக்கையே ப்ரயோஜனமென்று கருத்து. (இஹ) இதில், இந்த ஜனத்தினிடத்தில், இந்த என்னிடத்திலென்க. (வையர்ம்யம்) சேஷத்வவிபர்யாஸம், சேஷத்வந் தவறிப்போதல். (ந) நேராது. இதனால்—சேஷத்வம் ஸ்வபாவமாகவே ஸித்தமாயிருக்கிறதென்றும், அப்படி அதிருக்கிறதென்று தெரிந்துகொண்டவனுக்கு (சேஷத்வஜ்ஞான முள்ளவனுக்கு) சேஷிகைங்கர்யமே பலமென்றும் ஆகிய இவ்விரண்டும் (மாம்) (அனுசரம்) என்கிற இவ்விரண்டு பதங்களால் தெரிவிக்கப்பட்டன. (க்ருதார்யோஉஹம் ஹவிஷ்யாமி) எதுவுஞ் செய்யாதிருந்தால் சேஷத்வஞ் செல்லாது; கைங்கர்யஞ் செய்யாதிருந்தால் சேஷத்வத்திற்கு ஹானி பிறக்குமாகையால், நீ கைங்கர்யத்தைக் கொடுப்பாயாயின், அப்படிப்பட்ட ஹானி இல்லாமல் க்ருதார்த்தனாவேனென்றபடி. (தவச) இங்குச் சகாரம் அவதாரணத்தைச் சொல்லுகிறது; (தவைவார்யுக) என்பதனால்—உன் ப்ரயோஜனமே ஸித்திக்கின்றது, என்னதன்று. உனக்காகவே நான் கைங்கர்யஞ் செய்கிறேனன்றி எனக்காகவன்றென்றபடி. பரார்த்த கைங்கர்யமே புருஷார்த்தமாகையால் இங்ஙனஞ்சொன்னானென்று தெரியவருகின்றது. ஆகையால் இங்குச் சேஷத்வாத்யவஸாயம், அதாவது—தான் சேஷபூதனென்று திடமாக நினைத்திருப்பது—உபாயம்; ஸ்வார்த்தயாகாத சேஷிகைங்கர்யம்-அதாவது—தன் ப்ரயோஜனத்தின் பொருட்டுச் செய்யப்படாத சேஷிகைங்கர்யம் செய்கை உபேயம்; அதாவது—பலம். ஆகையால் உபாயோபேயங்கள் இப்படிபபட்டவையென்று இதில் நிஷ்கர்ஷிக்கப்பட்டனவென்று ரஹஸ்யம்.

கும் ப்ரயோஜனம் கைகூடும். நான் வில்லையும் பாணத்தையுந் தரித்து [1] மண்வெட்டி, புட்டிற்கூடை முதலிய கருவிகளையும் எடுத்துக்கொண்டு உனக்கு முன்னே வழிகாட்டிக்கொண்டு போகின்றனன். ப்ரதிதினமும் நான் உனக்குக் காய்கிழங்குகளையும் மற்றும் தபஸ்விகள் விரும்பி உட்கொள்ளுகிற ஆஹாரங்களையும் கொண்டு வந்து கொடுத்துக் கொண்டிருப்பேன். [2] நீ ஸீதையோடுகூடி மலைச் சாரல்களில் க்ரீடித்துக் கொண்டிருப்

---

1 துஷ்ட ஜந்துக்களைத் தடுப்பதற்காக தனுஸ்ஸும், கிழங்கு முதலியவற்றை வெட்டுவதற்காக மண்வெட்டியும், பழம் வேர் முதலியவற்றைக் கொண்டு வருவதற்காகப் புட்டிற் கூடையுமென்று கண்டுகொள்வது.

2 இதற்கு மூலம்—'ஹவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே । அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ்ஸ்வபதஸ்ச தே' ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் செய்யவேண்டிய கைங்கர்யங்களை முன்பு சொல்லி, இப்பொழுது விசிஷ்ட விஷயத்திற்கே, அதாவது—லக்ஷ்மீ விசிஷ்டனாகிய பரம புருஷனுக்கே செய்யும் கைங்கர்யமே போக்யமாகையால் (ஸஹவைதேஹ்யா என்ற) மிதுனத்திற்கே கைங்கர்யஞ் செய்யவேண்டும்படியை இதில் சொல்லுகிறார். இங்கு (ஜாக்ரதஃ ஸ்வபதஃ) (விழித்துக்கொண்டிருக்கும் பொழுதும் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுதும்) என்கையால் ஸர்வகால ஸர்வாவஸ்தைகளுக்கும் உசிதமான கைங்கர்யம் சொல்லப்பட்டது. (ஸர்வம் கரிஷ்யாமி) என்கையால்—ஸர்வவித கைங்கர்யமும் சொல்லப்பட்டது. அதாவது—தேவீ விசிஷ்டனாகிய சேஷிக்குச் சேஷபூதனாயிருப்பவன் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வவித கைங்கர்யங்களும் செய்யவேண்டுமென்பது பலிதார்த்தம். அன்றியே—(ஹவாம்ஸ்து) உனக்குக் கைங்கர்யஞ் செய்கையையே முக்ய ப்ரயோஜனமாகப் பெற்று நான் பிறந்திருக்கின்றவன்; நீ என் கைங்கர்யத்தைச் சிறிதும் அபேக்ஷிக்கவேண்டிய அவசியமில்லாதவனாயினும் என்னை அனுக்ரஹிப்பதற்காக என் கைங்கர்யத்தை அங்கீகரிப்பாயாக. (ஸஹ வைதேஹ்யா) உனக்கும் ஸீதைக்கும் இருவர்க்கும் கைங்கர்யஞ் செய்கின்றனன். (கிரிஸாநுஷு ரம்ஸ

பாய். நான், நீ விழித்துக் கொண்டிருக்கும்பொழுதும் தூங்கிக்கொண்டிருக்கும் பொழுதும் காத்துக்கொண்டிருந்து ஸமஸ்த கார்யங்களையும் செய்துகொண்டிருப்பேன்' என்றனன். லக்ஷ்மணன் இவ்வாறு மொழிந்த அவ்வார்த்தைகளைக் கேட்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்து அவனைப் பார்த்து 'லக்ஷ்மண! அப்படியாயின் நீ இப்பொழுது சென்று உனது நண்பர்கள் அனைவர்க்கும் சொல்லிச் செலவு பெற்றுக்கொண்டு வருவாயாக. லக்ஷ்மண! ஜனகராஜனது மஹாயஜ்ஞத்தில் மஹானுபாவனாகிய வருணன் தானே, பயங்கரமாகப் புலப்படுகிற [1] இரண்டு திவ்ய தனுஸ்ஸுக்களையும்,

---

யதே) பர்ணசாலையில் மாத்ரமேயன்று, ஜலக்ரீடை முதலிய ஸமஸ்த க்ரீடாஸ்தானங்களிலும் கைங்கர்யஞ் செய்கின்றனன். (அஹம்) அந்தந்த அவஸ்தைகளுக்கு உசிதங்களாகிய அந்தந்த கைங்கர்யங்களை யெல்லாம் செய்கையே ஸ்வரூபநிரூபக தர்மமாயிருக்கப்பெற்ற நான். (ஸர்வங் கரிஷ்யாமி) ஸர்வவித கைங்கர்யங்களையுஞ் செய்கின்றனன். (ஜாக்ரத:) விழித்துக்கொண்டிருக்கும்பொழுது, தந்தகாஷ்டம் முதலாகப் படுக்கை பரப்பும் வரையிலும் நீ விழித்துக்கொண்டிருக்கும்பொழுது செய்யவேண்டிய கார்யங்களை யெல்லாஞ் செய்கிறேனென்றபடி. (ஸ்வபத:) தூங்கும்பொழுது ராத்ரியில் துஷ்டம்ருகங்களாலும் ராக்ஷஸர்களாலும் கெடுதி வாராதிருக்கும்படி காத்துப் பொழுது விடியும் வரையிலும் வேண்டிய கார்யங்களைச் செய்துகொண்டிருப்பேனென்று கருத்து.

1 இங்கு வில்லு முதலியவற்றை இரண்டிரண்டாகச் சொல்வதனால் அண்ணன் தம்பிகளிருவருக்கும் ஒவ்வொன்றுயிருக்கும்படி கொடுக்கப்பட்டனவென்று தெரியவருகின்றது. ஜனகனது யாகத்தில் வருணன் வில்லு முதலியவற்றைக் கொடுத்ததாகப் பாலகாண்டத்தில் சொல்லக்காணோம். ஆயினும் முன்பு சொன்னாற்போல் இங்கு ப்ரஸ்தாவஞ் செய்வதற்குக் காரணம் என்னென்னில்—இது வால்மீகி மஹர்ஷியின் சைலி [நடை]. அப்பொழுது ப்ரஸக்தங்களாகிய விஷயங்களை ப்ரதிபாதிப்பதில் மனவூக்கங் கொண்டு

பேதிக்க முடியாத இரண்டு திவ்ய கவசங்களையும், அழியாத பாணங்களமைந்த இரண்டு அம்பறாத்தூணிகளையும், பொற்பூணிடப் பெற்று ஸூர்யன்போல் விளங்குகிற இரண்டு கத்திகளையும் கொடுத்தனன். இவையெல்லாவற்றையும் நான் பூஜித்து ஆசார்யராகிய வஸிஷ்டரது மாளிகையில் வைத்திருக்கின்றனன். நீ ஸ்நேஹிதர்களிடம் அநுமதிபெற்று ஆயுதங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு சீக்ரத்தில் வருவாயாக' என்று மொழிந்தனன். லக்ஷ்மணன் வனவாஸத்தின்பொருட்டுக் கெட்டியாக முயன்று ஸ்நேஹிதர்களிடம் அநுமதி பெற்றுக்கொண்டு இக்ஷ்வாகுகுலகுருவாகிய வஸிஷ்டரிடஞ்சென்று அவரது க்ருஹத்திலிருக்கிற உத்தமங்களாகிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு வந்தனன்; லக்ஷ்மணன், திவ்யங்களும், ராஜஸிம்ஹனுகிய ராமனுல் பூஜிக்கப்பட்டவைகளும், புஷ்பமாலைகளால் அலங்கரிக்கப்பட்டவைகளுமாகி விளங்குகின்ற அவ்வாயுதங்களையெல்லாம் ராமனுக்குக் காண்பித்தனன். தீரனுகிய ராமனும் அவ்வாயுதங்களை வாங்கிக்கொண்டு தகுந்த ஸமயத்தில் வந்த லக்ஷ்மணனைப் பார்த்து ஸந்தோஷித்து, 'நல்ல ஸ்வபாவமுடையவனே! நான் உன்னை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனன்; நான் விரும்பின ஸமயத்தில் நீயும் வந்துசேர்ந்தனை. பகைவரைத் தபிக்கச்

---

எதை எங்குச சொல்லவேண்டுமோ, அதை அங்குச் சொல்லாமல், அங்ஙனஞ் சொல்லாதவற்றை மேலில் மற்றோரிடத்தில் எதோ ஒரு வ்யாஜத்தினுல் முன் சொல்லியதை மறுபடியும் சொல்வதுபோல் சொல்லுகின்றனர். பாலகாண்டத்தில் சொல்லாத மணிபந்தனத்தை உதாஹரணமாக 'மணிர்வஸ்யமிதிந்ஷித்தம் வைதேஹ்யா: ஶிவஶாரேண மே' என்று ஸுந்தரகாண்டத்தில் சொல்லினர். அயோத்யா காண்டத்தில சொல்லாத காகாஸுர வ்ருத்தாந்தத்தை 'ஸபித்ராசபரித்யக்த:' என்று ஸுந்தரகாண்டத்திற் சொல்லினர்.

செய்யும் பராக்ரமசாலியே ! நான் உன்னுடன் கூடி எனது தனங்களையெல்லாம் தபஸ்விகளாகிய ப்ராஹ்மணர்களுக்குக் கொடுக்க விரும்புகின்றனன். இங்குப் பெரியோர்களிடத்தில் த்ருடபக்தியுள்ள ப்ராஹ்மணோத்தமர்களும் மற்றும் என்னை அடுத்து ஜீவிப்பவர்களும் யாவர் இருக்கின்றனர்களோ, அவர்கள் அனைவர்க்கும் இதுவரையில் கொடுத்ததைவிட அதிகமாகக் கொடுக்க விரும்புகின்றனன். நீ நேரில் சென்று ப்ராஹ்மணர்களில் சிறப்புற்றவரும் மேன்மை பெற்றவரும் வஸிஷ்டமஹர்ஷியின் புதல்வருமாகிய ஸுயஜ்ஞரைமாத்ரம் சீக்ரத்தில் அழைத்துக்கொண்டு வருவாயாக; நான் அந்த ஸுயஜ்ஞரையும் மற்றுமுள்ள சிஷ்டர்களான ப்ராஹ்மணர்கள் எல்லோரையும் பூஜித்துப் பின்பு அரண்யத்திற்குப் போகின்றேன்' என்றனன். முப்பத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ராமன் அரண்யத்திற்குப் போகும்பொருட்டுத் தானங்களைச் செய்தல்.}

பிறகு ப்ராஹ்மணர்களின் உபகாரத்தைப் பற்றிய தாகையால் மங்கலகரமானதும், தனது வனவாஸத்தை அங்கீகரித் திருப்பதால் ப்ரியமுமாகிய ராமாஜ்ஞையை அந்த லக்ஷ்மணன் சிரஸில் வஹித்துச் சீக்ரமாக ஸுயஜ்ஞரது மாளிகைக்குச் சென்று அங்கு அக்னிஹோத்ரக்ருஹத்தில் இருக்கின்ற அந்த ஸுயஜ்ஞரைப் பார்த்துப் பூஜித்து நமஸ்கரித்து 'நண்பனே! ராமன் காட்டுக்குப் போகின்றனன் ; நீ இப்பொழுது அவனது க்ருஹத்திற்கு வந்து மற்றை எவராலும் செய்ய முடியாத காரியங்களைச் செய்யுந்தன்மையனான அவனது கார்யத்தைப் பார்ப்பாயாக' என்றனன். பிறகு அந்த ஸுயஜ்ஞரும் வேகமாக ஸந்த்யாவந்தனத்தை முடித்து லக்ஷ்மண

ளுேடு கூடச் சென்று, லக்ஷ்மீவிலாஸம் பொருந்தி அழகி யதான ராமனது மாளிகையுட்ப்ரவேசித்தனன். ஹோ மஞ்செய்யப்பெற்ற அக்னியைப்போல் மிக்க ஒளியுடன் விளங்கிக்கொண்டு வந்திருக்கின்ற வேதவித்தாகிய ஸுயஜ்ஞருக்கு ராமன் ஸீதையோடுகூட அஞ்சலி செய்து ப்ரதக்ஷிணஞ் செய்தனன். பிறகு ககுத்ஸ்தகுலதிலகனு கிய அந்த ராமன் முழங்கைக்குமேல் தரிக்கிற மேலான பொன்வளைகளையும் அழகிய குண்டலங்களையும் பொற் சரடுகளில் கோக்கப்பட்ட ரத்னஹாரங்களையும் ஸு வர்ணமயமான மேலான தோள்வளைகளையும் உயர்ந்த கைவளைகளையும், மற்றும் மேலான ஆபரணங்களையும் பல வாகக்கொடுத்து ஸுயஜ்ஞரைப் பூஜித்தனன். அப் பொழுது ஸீதையின் தூண்டுதலால் ஸுயஜ்ஞரைப் பார்த்து, ராமன் 'நல்ல ஸ்வபாவமுடையவனே! எனக்கு நண்பனே! ஸீதை இப்பொழுது உன் பார்யைக்கு ஹார த்தையும் பொற்சரட்டையும் அரைநாண் மாலையையும் கொடுக்க விரும்புகின்றனள். அவைகளை வாங்கிக் கொண்டு சென்று உன்பார்யைக்குக் கொடுப்பாயாக. ஸ்நேஹிதனே! ஸீதை இப்பொழுது வனத்திற்குப் போகிறுளாகையால் உன் பார்யைக்குக் கொடுக்கும்படி உன்கையில் பலவித ரத்னங்களும் இழைக்கப்பெற்றுப் பலவர்ணங்களும் பொருந்தி விளங்குகின்ற தோள்வளை களையும் கேயூரங்களையும் கொடுக்கின்றனள். மேலான துப்பட்டி பரப்பப்பெற்றுப் பலவகை ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட அந்த மஞ்சத்தையுங்கூட உனக்குக் கொடுக்க விரும்புகின்றனள். எனக்கு[1] என்மாமன் கொடுத்த சத்ருஞ்ஜயமென்ற ஒரு யானையுண்டு; அதைப் பின்னும் ஆயிரம் யானைகளோடு உனக்குக் கொடுக்கின் றேன்' என்றனன். ராமன் அங்ஙனஞ் சொல்லுகையில் அந்த ஸுயஜ்ஞர் அவைகளைப் பெற்றுக்கொண்டு ராம லக்ஷ்மணர்களுக்கும் ஸீதைக்கும் மங்கலாசீர்வாதங்

1 இங்கு - மாமன் - தாயோடுகூடப் பிறந்தவன்.

களைச் செய்தனர். அனந்தரம் ப்ரியவாதியாகிய ராமன், தன் கார்யங்களில் மிக்க மனவூக்கங்கொண்டு தனக்கு மிகவும் ப்ரியனும் தம்பியுமாகிய லக்ஷ்மணனைப் பார்த்து, ப்ராஹ்மதேவன் தேவேந்த்ரனுக்கு ஆஜ்ஞையிடுவது போல் 'லக்ஷ்மணா! நீ சென்று அகஸ்த்ய புத்ரன் விஸ்வாமித்ரகுமாரன் ஆகிய இவ்விரண்டு ப்ராஹ்மணோத்தமர்களையும் அழைத்துக்கொண்டுவந்து, பயிரை ஜலங்களையிட்டுப் பூஜிப்பதுபோல், அவர்களுக்கு மேலான வஸ்துக்களைக் கொடுத்துப் பூஜிப்பாயாக. நீ பெரியோர்களுக்கு வெகுமதிசெய்யுந் தன்மையனல்லவோ? ஆகையால் உனக்கு நான் சொல்ல வேண்டியதில்லை. மேலும், அவர்களுக்கு ஆயிரமாயிரமாகப் பசுக்களையும் பொன்களையும் வெள்ளிகளையுங் கொடுத்து த்ருப்தி செய்விப்பாயாக. தைத்திரீயசாகையை ஓதுபவர்களுக்கு ஆசார்யரும் பாண்டித்யமுள்ளவரும் வேதங்களை உணர்ந்தவருமாகிய ஒரு ப்ராஹ்மணர் கௌஸல்யையிடம் மிகுந்த ஆதரவுடன அவளை ஆசீர்வாதஞ் செய்துகொண்டிருக்கின்றனர். அந்த ப்ராஹ்மணருக்கு த்ருப்தி பிறக்கும் வரையிலும் வாஹனங்களையும் தாஸிகளையும் பட்டு வஸ்த்ரங்களையும் கொடுப்பாயாக. சித்ரரதனென்னும் ஸாரதி நமது தந்தைக்கு மிகவும் நண்பனுயிருப்பவன்; வெகுகாலமாக நம் வீட்டிலிருக்கின்றனன்; நீ இவனுக்கு மிகுந்த விலையுள்ள மணிகளையும் வஸ்த்ரங்களையும் தனங்களையும் ஆடுமுதலிய சிறியபசுக்களெல்லாவற்றையும் உயர்ந்த பசுக்கள் ஆயிரத்தையும் கொடுத்து ஸந்தோஷப்படுத்துவாயாக. மேலும், இதோ கடசாகையோதுபவர்களும் கலாபசாகை யோதுபவர்களும் பலர் இருக்கின்றனர்; பலாசதண்டங்களைத் தரித்த ப்ரஹ்மசாரிகள் பலரும் இதோ இருக்கின்றனர்; இவர்களெல்லோரும் எப்பொழுதும் வேதாத்

யயனம் செய்துகொண்டேயிருப்பவர்; ஆகையால் மற்றை எக்கார்யத்தையுஞ் செய்ய அவகாசமில்லாதிருப்பவர்; அத்யயனஞ் செய்யும் ஸமயத்தில் உட்கார்ந்தே இருந்து பொழுதுபோக்கி வழக்கப்பட்டவராகையால் ஒழிந்த பொழுதிலும் ஒன்று செய்யவேண்டுமென்றால் சோம்பல் பிடித்துத் திரியுந் தன்மையர்; ஆயினும் அவர்கள் எப்பொழுதும் ருசியுள்ள ஆஹாரத்தையே விரும்புவார்கள்! இப்படியிருப்பினும் வேதாத்யயனஞ் செய்பவராகையால் பெரியோர்களும் அவர்களை ஸம்மானித்துக்கொண்டிருப்பார்கள்; அவர்களுக்கு எண்பது வண்டிகள் நிரம்ப ரத்னங்களையும் சம்பாநெல்லு மூட்டைகள் மேலிடப்பெற்ற ஆயிரம் எருதுகளையும் இருநூறு பொதிமாடுகளையும் கொடுப்பாயாக. லக்ஷ்மணா! அவர்கள் ருசியுள்ள ஆஹாரத்தை விரும்புந் தன்மையராகையால் பால் தயிர் நெய் முதலிய வ்யஞ்ஜனத்திற்காக ஆயிரம் பசுக்களையும் கொடுப்பாயாக. மேலும், ப்ரஹ்மசாரிகள் பலர் கௌஸல்யையை அடுத்திருக்கின்றனர்; ஆகையால் அவர்களில் ஒவ்வொருத்தருக்கும் ஆயிரம் பசுக்கள் கொடுப்பாயாக. லக்ஷ்மணா! தானத்தில் சிறப்புற்ற என் தாயாகிய கௌஸல்யை நான் கொடுத்த தக்ஷிணையைக்கண்டு ஸந்தோஷிக்கும்படி நீ எல்லாவிதத்திலும் அந்த ப்ராஹ்மணர்கள் அனைவரையும் பூஜிக்கவேண்டும்' என்று மொழிந்தனன். பிறகு புருஷர்களிற் சிறந்தவனாகிய லக்ஷ்மணன், ராமன் சொல்லியபடி அந்தத் தனங்களெல்லாவற்றையும் தானே குபேரனைப்போல் ப்ராஹ்மணோத்தமர்களுக்குத் தந்தனன். பின்பு ராமன் கண்ணுங்கண்ணீருமாக நிற்கின்ற தனது வேலைக்காரர்களைப் பார்த்து அவர்களது ஜீவனத்திற்காக ஒவ்வொருவனுக்கும் தனத்தை ஏராளமாகக் கொடுத்து 'நீங்கள் நான் திரும்பி

வரும் வரையிலும் என் க்ருஹத்தையும் லக்ஷ்மணனது க்ருஹத்தையும் எவரும் காப்பவரின்றிச் சூன்யமாயிருக்கும்படிக்குச் செய்யாமல் எப்பொழுதுங் காத்துக்கொண்டிருக்கவேண்டும்' என்று மனவருத்தமுற்றிருக்கின்ற அந்த வேலைக்காரர்களுக்குச்சொல்லிப் பிறகு தனாதிகாரியைப்பார்த்து 'தனத்தை எடுத்துக் கொண்டுவா' என்று ஆஜ்ஞாபித்தனன். அனந்தரம் ராமனது வேலைக்காரர்கள் அவனது தனம் முழுவதையும் எடுத்துக்கொண்டு வந்தனர். மிகவும் பெரிதாயிருக்கிற அப்பணக்குவியல் வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டேயிருக்கும்படி மிகவும் அற்புதமாயிருந்தது. பிறகு அந்தப் புருஷஸிம்ஹனாகிய ராமன் லக்ஷ்மணனோடு கூடி அந்த தனங்களை யெல்லாம் பாலர்களும் வ்ருத்தர்களுமான ஏழை ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்துவிட்டனன். அப்பொழுது அத்தேசத்தில் ப்ரஹ்மதேஜஸ்ஸினால் ஸ்வர்ணம் போல் பளபளவென்று ப்ரகாசிப்பவரும் கர்க்க குலத்தில் பிறந்தவருமாகிய த்ரிஜடரென்னும் ஒரு ப்ராஹ்மணர் இருந்தனர்; அவர் அரண்யத்தில் சென்று எப்பொழுதும் கோடாலி மண்வெட்டி துறட்டுக் கொம்பு இவைகளைக் கையிற் பிடித்துக் கிழங்கு வேர் முதலியவற்றைக் கொத்தியெடுத்தும் காய் பழம் முதலியவற்றைப் பறித்தும் சிந்திய தான்யங்களைப் பொறுக்கியும் பிழைத்து வந்தனர்; அவரது பார்யை இளம்பருவமுடையவள்; அவள் தாரித்ரியத்தினால் மிக்க வருத்தமுற்றுப் பாலர்களாகிய பிள்ளைகளை அழைத்துக்கொண்டு வ்ருத்தராகிய அந்த ப்ராஹ்மணரிடம் வந்து 'இந்தக் கோடாலியையும் மண்வெட்டியையும் அப்புறம் போகட்டு விட்டு நான் சொல்லுகிறபடி செய்வீராக. ராமன் தர்மங்களை யெல்லாம் உணர்ந்தவன்; அவன் வனத்திற்குப் போ

கின்றமையால் தன்தனங்களையெல்லாம் ப்ராஹ்மணர்களுக்குக் கொடுக்கின்றனன்; அவனிடஞ்சென்று நமது ஏழ்மையைத் தெரியப்படுத்துவீராக; அங்ஙனஞ் செய்வீராயின், நமது தரித்ரமெல்லாந் தொலையுமாறு ஏதேனும் பெறுவீர்' என்றனள். அந்த ப்ராஹ்மணரும் பார்யையின் வார்த்தையைக் கேட்டு முழுதும் கந்தலாகையால் கஷ்டப்பட்டு உடுத்தவேண்டியதாயிருக்கிற தன் வஸ்த்ரத்தை உடுத்துக்கொண்டு ராமனது க்ருஹத்திற்குப்போகும் வழியாகப் புறப்பட்டுச் சென்றனர். அந்த த்ரிஜடர் ஜன ஸமூஹத்தின் மத்தியில் ப்ருகுவைப் போலவும் அங்கிரஸ்ஸைப் போலவும் ப்ரஹ்மதேஜஸ்ஸினால் ப்ரகாசித்துக் கொண்டு ராமக்ருஹத்திற்குப் போகையில், ஐந்தாவது கட்டுவரையிலும் அவரை எவரும் தடுக்கமுடியாதிருந்தனர். அவர் ராஜகுமாரனாகிய ராமனைச் சேர்ந்து 'ஓ ராஜகுமாரனே! நீ எல்லாக்குணங்களிலும் மிகுந்த புகழ் அமைந்தவன்; நானோ மிகவும் தரித்ரனாயிருக்கின்றனன்; பின்னும் பல புதல்வர்களைப் பெற்றுப் பெருங் குடும்பியாயிருப்பவன்; நித்யம் அரண்யத்தில் சிந்தின தான்யங்களைப் பொறுக்கிப் பிழைப்பவன்; என்னைக் கடாக்ஷிப்பாயாக' என்றனன். அனந்தரம் அந்த ராஜகுமாரனாகிய ராமன் வேடிக்கையாகச் சிரித்துக்கொண்டு அவரைப் பார்த்துப் 'பசுக்கள் பல ஆயிரங்கள் இருக்கின்றன; அவைகளில் நான் ஓராயிரம் பசுக்களையாவது கொடுக்கவில்லை; ஆகையால் இந்தப் பசுமந்தையில் நீர் தடியை வீசிப் போகடுவீராயின், அந்தத் தடி எவ்வளவு தூரம் போகுமோ; அவ்வளவு தூரத்தில் அடங்கிய பசுக்களை முழுவதும் நீர் பெறுவீர்' என்றனன். உடனே அந்த ப்ராஹ்மணர் ஸந்தோஷத்தினால் பரபரப்புற்று த்வரையுடன் வஸ்த்

ரத்தை இடையில் சுற்றிக்கொண்டு தடியை வேகத்துடன் கிருகிருவென்று சுழற்றித் தனக்குள்ள பலம் முழுவதுங்கொண்டு வீசியெறிந்தனர். அவர் அங்ஙனம் கையிலிருந்து வீசியெறிகையில், அந்தத் தடி புறப்பட்டு ஸரயூநதியின் அக்கரையைத் தாண்டிப் பலவாயிரம் பசுக்களுள்ள பசுமந்தையைக் கடந்து ஓர் எருதின் அருகில் போய் விழுந்தது. தர்மஸ்வபாவனுகிய ராமனும் ஸந்தோஷமடைந்து அந்த த்ரிஜடரென்னும் ப்ராஹ்மணரைக் கட்டியணைத்துக்கொண்டு ஸரயூநதியின் கரையில் அவர் வீசியெறிந்த தடி விழுந்த இடத்திற்கு இப்புறத்திலுள்ள பசுக்களை யெல்லாம் இடையர்களைக்கொண்டு அந்த த்ரிஜடரது ஆஸ்ரமத்திற்குச் சேர்ப்பித்தனன். பிறகு அந்த கார்ஃயரைப் பார்த்து ராமன் நல்வார்த்தை சொல்லிக்கொண்டு 'த்ரிஜடரே! நீர் கோபஞ் செய்யவேண்டாம்; நான் வேடிக்கையால் இங்ஙனஞ் செய்தேனன்றி மற்றென்றும் இல்லை. உம்முடைய தேஜஸ்ஸு இவ்வாறு சிறந்திருப்பதைக் கண்டு அதை எளிதில் தெரிந்துகொள்ள விரும்பித் தடியைச் சுழற்றி வீசி யெறியும்படிக்குச் சொல்லினன். மற்றேதும் இல்லை. இன்னும் உமக்கு எதாயினும் வேண்டுமென்று அபிலாஷம் இருக்குமாயின், அதைக் கேட்பீராக; கொடுக்கின்றனன். நான் முன்போல் பரிஹாஸஞ் செய்கிறேனென்று நினைக்கவேண்டாம். ஸத்யமாகச் சொல்லுகின்றனன். உமக்கு யாதொரு தடையும் இல்லை. எனனுடைய தனம் எது உண்டோ, அதெல்லாம் ப்ராஹ்மணர்களுக்காகவே ஸம்பாதிக்கப்பட்டிருக்கின்றது. உம்மைப் போன்றவர்களுக்கு உபயோகப்படுமாயிற்ருன, நான் ஸம்பாதித்தது ஸபலமாகி எனக்கு ஸந்தோஷத்தையும் கீர்த்தியையும் விளைக்கக்கூடியதாயிருக்கும்' என்றனன். அனுக்

தரம் மஹாமுனியாகிய அந்த த்ரிஜடரும் அவரது பார்வையும் அந்தப் பசுக்கூட்டத்தைப் பெற்றுக்கொண்டு அவ்வளவோடு த்ருப்தி அடைந்து ஸந்தோஷித்து மற்றெதையும் விரும்பாமல் மஹானுபாவனுகிய ராமனுக்குக் கீர்த்தியும் பலமும் ஸந்தோஷமும் ஸுகமும் வளர்ந்து வரும்படி ஆசிர்வாதங்களைச் செய்தனர். ராமனும் தனது நண்பர்களைப் பார்த்து, அவரவர்க்குரியபடி நல்வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு அவர்களாலும் தந்தமக்குரியபடி நல் வாக்யங்களால் ஸம்மானிக்கப்பட்டு தர்மந் தவருமல் பராக்ரமத்தினுல் ஸம்பாதித்த தனங்களை யெல்லாம், தான் ஒன்றிலுங் குறைவாளனல்லாமையால் மிகுந்த மனப்பூர்த்தியுடன் அவர்களுக்குக் கொடுக்கும்படி ஆஜ்ஞாபித்தனன். அப்பொழுது, அங்குள்ள ப்ராஹ்மணனுவது, ப்ராஹ்மணனுகாமற்போயினும் ராமனேடுஸ்னேஹமுள்ளவனுவது, ஸ்னேஹமில்லாதிருப்பினும் வேலைக்காரனுவது, கடைசியில் ஏழ்மையினுல் பிச்சை யெடுப்பவனுவது, மற்றை எவனுவது ராமனிடத்தில் அவரவர்க்குரியபடி ஸம்மானங்களையும் கோதானுதி தானங்களையும் பெற்று த்ருப்தி யடையாதவன் ஒருவனும் இல்லை. அந்த ஸம்மானங்களும் தானங்களும் ப்ரயாணத்தில் உண்டான மனப் பாரிப்பினுல் அவஸரப்பட்டுச் செய்யினும், அவை குறைமின்றி எல்லோர்க்கும் த்ருப்திகரமாகவே யிருந்தன. முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸீதா லக்ஷ்மணர்களை அழைத்துக் கொண்டு போக அனுமதி கேட்பதற்காகத் தசரதனிடம் போதல்.

ராமலக்ஷ்மணர்கள் ஸீதையோடுகூட அந்தனம் ப்ராஹ்மணர்களுக்கு தனங்களையெல்லாம் கொடுத்துவிட்டு

ஸீதையை அழைத்துக்கொண்டு தந்தையைப் பார்க்கச்சென்றனர். பிறகு அவ்விருவரும், புஷ்ப ஸரங்களைச் சுற்றிச் சந்தனாதிகளைக் கொண்டு ஸீதையால் அலங்காரஞ் செய்யப் பெற்ற கத்தி முதலிய ஆயுதங்களைத் தரிக்கையில், அவ்விருவரது ஆயுதங்களும் கண்ணெடுத்துக்காண முடியாதவைகளாகி விளங்கின. முன்பு ஸந்தோஷத்தினால் முகம் மலரப்பெற்று அழகாயிருந்த ஜனங்கள் எல்லோரும் உப்பரிகைகளின்மீதும் மச்சுக்களின்மீதும் விமானசிகரங்களின்மீதும் ஏறிக்கொண்டு மனக்களிப்பின்றி முகம் வாடப் பெறறு உத்ஸாஹஞ் சிறிது மின்றியே ராமனைப் பார்த்துக்கொண்டிருந்தனர். வீதிகளெல்லாம் எங்கும் ஜனங்கள் அடர்ந்து போக முடியாதிருந்தமையால் உப்பரிகைகளின்மீதேறி மனவருத்தத்துடன் முகத்தில் ஒளி மாறப்பெற்று ராமனைப் பார்த்துக்கொண்டிருந்தனர். அப்பொழுது ராமன் குடையுங்கூட இல்லாமல் வெறுங் கால் நடையாகவே நடந்து போவதைக் கண்டு ஜனங்களெல்லோரும் சோகத்தினால் மனங் கொதிக்கப்பெற்று 'எவன் போய்க்கொண்டிருக்கும்பொழுது பெரிய சதுரங்க ஸைன்யம் பின்றொடர்ந்துகொண்டிருந்ததோ, அப்படிப்பட்ட ராமன் தானொருவனாகவே போய்க்கொண்டிருக்க, ஸீதையும் லக்ஷ்மணனும் பின்றொடர்ந்து செல்கின்றனர். ராமன் ப்ரபுத்வ ரஸத்தை நன்றாக அனுபவிப்பவன்; மேலும் விரும்புகிறவர்களுக்கு விரும்பியவற்றையெல்லாம் கொடுக்குந் தன்மையன்; ஆயினும் பித்ரு சுஶ்ரூஷை முதலிய தர்மங்களில் கௌரவ புத்தி யுடையவனாகையால் தந்தை செய்த ப்ரதிஜ்ஞையைப் பொய் செய்யப் பொறாமல் [1] அதில் சிறிதும் விருப்பமில்லாதிருக்கின்றனன். முன்பு எவனை ஆகாயத்தில் திரிகிற பூதங்களுங் கூடப் பார்க்க முடியாதோ; அப்படிப்பட்ட

1. அதில்-அந்த ப்ரபுத்வரஸத்தில்.

ஸீதையை இப்பொழுது ராஜவீதியிலுள்ள ஜனங்களெல்லோரும் பார்க்கின்றனர். ஸீதையின் மேனி மிகவும் ஸுகுமாரமாயிருப்பது; அவள் பச்சைக்கற்பூரம் குங்குமப்பூ முதலிய வாஸனைகள் கலந்த கலவைச் சாந்திற்கே உரியவள்; அவள் என்றும் செஞ் சந்தனத்தையே பூசும் ஸ்வபாவமுடையவள்; இப்பட்டிப்பட்ட ஸீதையை இனிச் சீக்ரத்திலேயே மழையும் வெயிலும் குளிரும் வர்ணம் மாறி அழகு குலையும்படிக்குச் செய்யப் போகின்றன. இப்பொழுது தசரதனுக்கு ஏதோ பிசாசாவேசம் உண்டாயிருக்கின்றது; ஆனதுபற்றியே அவன் இங்ஙனஞ் சொல்லுகின்றனன் ; இதுவே நிஜம். இல்லையாயின், அந்த மன்னவன் தனக்கு அன்பு குமாரனாகிய ராமனைக் காட்டுக்கு அனுப்ப மனந்துணியமாட்டானல்லவா? குணமில்லாத பிள்ளையாயினும், அவனை மனந்துணிந்து காட்டுக்கு அனுப்புவது எப்படி? மேலும் தானமானுதி குணங்கள் அப்படியிருக்க, நடவடிக்கை யொன்று மாத்ரத்தினாலேயே இவ்வுலகம் முழுவதையும் வென்று வசப்படுத்திக்கொண்ட ராமனைப் போன்ற புத்ர ரத்னத்தை அரண்யத்திற்கு அனுப்புவதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? அஹிம்ஸையும் தயையும் வித்யையும் சீலமும் தமமும் சமமுமாகிய இவ்வாறு குணங்களும் புருஷர்களிற் சிறந்தவனாகிய ராமனை விளங்கச் செய்கின்றன. ஆகையால் அப்படிப்பட்ட ராமனுக்குத் துன்பம் நேருவதைக்கண்டு ப்ரஜைகளெல்லோரும், வெயிற் காலத்தில் நீர் வற்றப் பெற்று வாடி வதங்குகின்ற ஜலஜந்துக்களைப்போல், மிகவும் பீடிக்கப்பட்டிருக்கின்றனர். ராமன் உலகம் முழுவதுக்கும் அதிநாதனாயிருப்பவன் ; அப்படிப்பட்ட ராமனுக்கு வனவாஸ பீடை உண்டாகையில், வேர் அறுந்துபோகப் பெறுவதனால் புஷ்பங்களும் காய்களும் நிறைந்த மரம் வாடிவதங்கி நாசம்

அடைவதுபோல், அவனை ஆதாரமாகப் பெற்ற இந்த உலகமெல்லாம் மனவருத்த முற்றிருக்கின்றது. அவன் தர்மமே ஸாரமாயிருக்கப் பெற்றவன்; பின்னும், மிகுந்த காந்தியுடையவன்; ஆகையால் இப்படிப்பட்ட இவன் மனுஷ்யர் முதலிய ஸமஸ்த ப்ராணிகளுக்கும் வேரா யிருக்கின்றனன். மற்றை ஜனங்களெல்லோரும் இவனுக் குப் புஷ்பங்களும் காய்களும் இலைகளும் கிளைகளுமா யிருக்கின்றனர். வேர் அறுந்து போகும்பொழுது புஷ்பங்களும் கிளைகளும் வாடிப்போ மல்லவா? அங்ங னம் அவனைச் சார்ந்தவர்களாகிய நாம் பத்னிகளோடும் பந்துக்களோடுங் கூடி லக்ஷ்மணனைப்போலவே, வனத் திற்குப் போகின்ற ராமனைப் பின்தொடர்ந்து அவன் போகிற வழியே புறப்பட்டுப் போவோம். நாம், உத் யான வனங்களையும் பூமிகளையும் க்ருஹங்களையும் கை விட்டு ராமனுடொத்த ஸுகதுக்கங்களையுடையவர் களாகி தர்மாத்மாவாகிய அவனைப் பின்றொடர்ந்து போய்விடுவோம். நாம் க்ருஹங்களைவிட்டுப் போன பின்பு அங்குள்ள புதையல்களை யாராவது எடுத்துக் கொண்டு போய்விடுவார்கள். அங்கணங்களெல்லாம் முறிபட்டுப் போய்விடும். ஸம்பாதித்துவைத்திருக் கிற தனதான்யங்களெல்லாம் கொள்ளையிடப் பெற்று அழிந்து போய்விடும். மேலும் சயனாஸனம் முதலிய உயர்ந்த வஸ்துக்கள் அனைத்தையும் அப்புறம் கொண்டு போய்விடுவார்கள். இங்ஙனம் பாழாகிப் புழுதிபடிந்து க்ருஹதேவதைகளும் கைவிடப் பெற்றிருக்கையில், அங்குப் பாழிகளைத் தோண்டி எலிகள் இங்குமங்குமாக நடமாடிக்கொண்டிருக்கப் போகின்றன. தண்ணீர் தெளிப்பது பெருக்குவது அகிற்புகை முதலிய வாஸனை யிடுவது ஆகிய இந்த ஸம்ஸ்காரங்களெல்லாம் நேராமற் போய்விடும். சமையலில்லாமையால் புகையென்பது

என்றும் புலப்படாது. பலிகர்மங்களும் யாகமந்த்ரத் வனிகளும் அக்னிஹோமங்களும் ஜபங்களும் நடவாது போய்விடும். இங்ஙனம் க்ஷாமகாலங்களில் பாழடைந் திருப்பவைபோல் புலப்பட்டுக்கொண்டு பாத்ரங்களெல் லாம் உடைந்துபோகப் பெற்ற நமது க்ருஹங்களைக் கைகேயி கைப்பற்றி ஸுகித்து வாழ்ந்திருப்பாளாக. ராமன் எந்த அரண்யத்திற்குப் போகிறானோ, அதுவே பட்டணமாயிருக்கட்டும்; ராமனும் நாமும் விட்டுப் போனபின்பு இந்தப் பட்டணமே அரண்யம்போல் பா ழாயிருக்குமாக. நாம் ராமன் போன அரண்யத்திற் குப் போய்ச் சேர்ந்த பின்பு நம்மிடம் பயப்பட்டு அங் குள்ள ஸர்ப்பங்களெல்லாம் பாழிகளைவிட்டுப் போகட் டும். ம்ருகங்களும் பக்ஷிகளும் தாழ்வரைகளைத் துறந் தோடட்டும். யானைகளும் ஸிம்ஹங்களும் அரண்யங் களை இழந்து கண்மறையப் போயிருக்கட்டும். அந்த ஸர்ப்பம் முதலிய துஷ்டஜந்துக்களெல்லாம் நாம் போ யிருக்கப் பெற்ற நமது வாஸப்ரதேசங்களை விட்டு, நாம் விட்டுப்போன இந்தப் பட்டணத்தைச் சேர்ந்து வஸித் திருக்குமாக. நாம் புறப்பட்டுப் போனபின்பு புற்களை யும் மாம்ஸங்களையும் காய்களையும் தின்று ஜீவிக்கிற மான் புலி காக்கை முதலிய ஜந்துக்களுக்கும் மற்று முள்ள க்ரூர ம்ருக பக்ஷிக்கூட்டங்களுக்கும் இருப்பிட மாகிய இந்தத் தேசத்தைக் கைகேயியும் அவளது புதல்வனும் பந்துக்களும் பெற்று வாழ்ந்திருப்பார்க ளாக. நாம் எல்லோரும் ராகவனோடு கூட அரண்யத் திற்குச் சென்று மிகவும் ஸுகமாக வாஸஞ்செய்து கொண்டிருப்போம்' என்று ஒருவர்க்கொருவர் இங்ஙனம் பலவிதமாக மொழிந்துகொண்டிருந்தனர். ராமன் இவ் வண்ணம் ஆங்காங்கு ஜனங்கள் பலவாறு சொல்லிக் கொண்டிருக்கிற வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே



729. ராமன் ஸீதாலக்ஷ்மணர்களை அழைத்துக்கொண்டு போவதற்காகத் தசரதனிடம் அனுமதி பெறப்போதலும், த்வாரத்தில் ஸுமந்த்ரனைக் காணுதலும்.

சென்றனன். அம்மனம் அவ்வுரைகளைக்கேட்டும் அவனது மனத்தில் சிறிதும் கலக்கம் உண்டாகவில்லை. தர்மாத்மாவாகிய அந்த ராஜகுமாரன், மதங்கொண்ட யானைபோல் கம்பீரமாக நடந்துசென்று தூரத்திலேயே கைலாஸசிகரம்போல் வெளுத்து உயர்ந்து விளங்குகின்ற தன் தந்தையினது மாளிகையைப் பார்த்து அருகிற் சென்றனன். அங்கு வீரபுருஷர்கள் மிக்க வணக்கத்துடன் காத்துக் கொண்டிருந்தனர். ராமன் அந்த ராஜக்ருஹத்தில் ப்ரவேசித்துக் கொஞ்சதூரத்தில் முகவொளி மழுங்கி மனவருத்தமுற்று ஒன்றுந்தோன்றாமல் நின்றுகொண்டிருக்கிற ஸுமந்த்ரனைக் கண்டனன். அவன் தந்தையினது ஆஜ்ஞையை உள்ளபடியே நடத்த முயன்று அந்தத் தந்தையைப் பார்க்க விரும்பி வழியில் ஜனங்கள் தன்னைப் பார்த்து வருத்தமுற்றிருப்பினும் தான் சிறிதும் மனக்கலக்கமின்றிச் சிரித்தமுகத்துடனே புலப்பட்டுக்கொண்டு போயினன். மஹாத்மாவும் மஹாதீரனுமாகிய அந்தத் தசரதகுமாரன் வனத்திற்குப் போகத் திடப்பட்டு, அங்கு அரசன் தன்னை அரண்யத்திற்குப் போகச் சொன்னது முதலான துக்கத்தினால் மனக்களிப்பின்றி வருந்துகின்ற ஸுமந்த்ரனைப் பார்த்துத் தந்தைக்குத் தான் வந்திருப்பதை அறிவிக்கும் பொருட்டுச் சிறிதுநேரம் அவனை எதிர்பார்த்துக் கொண்டு நின்றிருந்தனன். ராமன் தார்மிகனாகையால் தந்தையின் ஆஜ்ஞையின்படி அரண்யம் போவதை நிச்சயித்துக்கொண்டு ஸுமந்த்ரனைப் பார்த்து 'என் வரவை அரசனுக்குச் சொல்வாய்' என்றனன். முப்பத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் தசரதனிடம் மீளவும் சென்று அநுமதி பெற்றுக்கொள்ளல்.

அனந்தரம் தாமரையிதழ் போன்ற கண்களும் கறுத்த நிறமும் சிறுத்த இடையும் பொருந்தி விளங்கும் பூஜ்யனாகிய ராமன் ஸூதனைப் பார்த்து 'நான் வந்திருப்பதை என் தந்தைக்குச் சொல்வாயாக' என்றனன். மனவருத்தத்தினால் இந்த்ரியங்களெல்லாங் கலங்கப்பெற்றவனாகிய அந்த ஸாரதி ஸுமந்த்ரனும் ராமனால் ஏவப்பட்டு வேகமாக உள்ளே நுழைந்து, பெருமூச்செறிந்து கொண்டிருக்கிற மன்னவனைக் கண்டனன். அப்பொழுது அவ்வரசன் ராஹுக்ரஸ்தனாகிய ஸூர்யன்போலவும், நீறுபூத்த நெருப்புப்போலவும், நீரின்றிய தாமரையோடைபோலவும், இயற்கை மாறிப் பாழடைந்தாற் போல் புலப்பட்டனன். மிகவும் மனவருத்தமுற்று 'ராமா' என்று ராமனைப்பற்றியே சோகித்துக்கொண்டிருக்கின்ற மன்னவனைப் பார்த்து, மிகவும் அறிவாளனாகிய ஸுமந்த்ரன் அஞ்ஜலிசெய்து அருகில் வந்து முதலில் ஜயமுண்டாகும்படி ஆசீர்வாதஞ்செய்து பயத்தினால் தழுதழுத்த ம்ருதுவரன வாக்குடன் இனிதாயிருக்கும்படி மொழிந்தனன்:—'மஹா ராஜனே! புருஷர்களிற் சிறந்தவனாகிய உன் புதல்வன் தனங்களை யெல்லாம் ப்ராஹ்மணர்களுக்கும் பரிஜனங்களுக்கும் கொடுத்துவிட்டு உன்னைப் பார்க்க விரும்பி வாசலில் காத்துகொண்டிருக்கின்றனன். ஸத்யபராக்ரமனாகிய அந்த ராமன் உன்னைப் பார்ப்பானாக. உனக்கு மங்களம் உண்டாகுக. அவன் தனது நண்பர்களெல்லோரிடத்திலும் அநுமதி பெற்றுக் கொண்டு உன்னிடத்தில் உத்தரவுபெறுதற்காக இப்பொழுது உன்னைப்பார்க்க விரும்புகின்றனன். மஹீபாலனே! அவன் இனி அரண்யம் போகச் சித்தமாயிருக்கின்றனன். ஆகையால் ஸூர்யன் கிரணங்களோடு

கூடியிருப்பதுபோல், ஸகல ராஜகுணங்களோடுங் கூடி விளங்குகின்ற அந்தப் புதல்வனைப் பார்ப்பாயாக' என்றனன். ஸத்யத்தையே மொழிபவனும் தர்மத்திலேயே மனந்திடமாயிருக்கப் பெற்றவனும் ஸமுத்ரம்போல் கம்பீரனும் ஆகாயம்போல் நிர்மலனுமாகிய அம்மன்னவன் அந்த ஸுமந்த்ரனைப் பார்த்து 'ஸுமந்த்ரனே! இப்பொழுது அந்தப்புரத்திலுள்ள எனது பார்யைகள் எல்லோரையும் இங்கு அழைத்துக்கொண்டு வருவாயாக. பார்யைகள் அனைவரோடுங் கூடித் தார்மிகனாகிய அம்மஹானுபாவனைப் பார்க்க விரும்புகின்றேன்' என்றனன். அந்த ஸுமந்த்ரனும் அதிவேகமாக அந்தப்புரத்திற்குச் சென்று ராஜபத்னிகளைப் பார்த்து 'தேவிமார்களே! மன்னவர் உங்களை அழைத்துக்கொண்டு வரச் சொல்லினர். சீக்ரமாக அவ்விடம் போகவேண்டும். காலதாமதஞ் செய்யவேண்டாம்' என்றனன். ஸுமந்த்ரன் இவ்வாறு மன்னவராஜ்ஞையின்படி சொன்ன வார்த்தையைக் கேட்டு அப்பெண்பிள்ளைகள் பர்த்தாவின் ஆஜ்ஞையைச் சிரஸில் வஹித்து அவரிருக்கும் மாளிகைக்குப் போயினர். ராமன் காட்டுக்குப் போகிற வருத்தத்தினால் கண்ணீர் பெருக்குவதைப்பற்றிக் கண்கள் சிவக்கப்பெற்றவரும் விரத அனுஷ்டானத்தில் நிலைநின்றவருமாகிய அப்பெண்மணிகள் முந்நூற்றைம்பதின்மரும் கௌஸல்யையைச் சுற்றிலும் சூழ்ந்து சென்றனர். மன்னவனும் பார்யைகளெல்லோரும் வந்திருப்பதைக்கண்டு ஸாரதியை அழைத்து 'ஸுமந்த்ரா! என் புதல்வனை அழைத்துக்கொண்டு வருவாயாக' என்றனன். அந்த ஸுமந்த்ரனும், அப்பொழுது, ராமனையும் லக்ஷ்மணனையும் ஸீதையையும் அழைத்துக்கொண்டு சீக்ரமாகத் தான் வந்த வழியேதிரும்பி மஹாராஜனிடம் போய்ச்சேர்ந்தனன். அவ்வரசன் தூரத்திலிருந்தே கைகளைக் கூப்பிக்கொண்டு வருகின்ற குமாரனைப் பார்த்து மனவருத்தமுற்றவனாகிப் பார்யைகள் அனைவருஞ் சுற்றிலுஞ்சூழப் பெற்றுத் திடீரென்று ஆஸனத்தினின்

றும் எழுந்திருந்தனன். அவ்வாறு மன்னவன் எழுந் திருந்து ராமனைப் பார்த்து வேகமாக எதிர்கொண்டு போயினன். ஆயினும் அவன் துக்கத்தினால் பீடிக்கப் பட்டிருப்பதுபற்றி ராமனைச் சென்று கிட்டமுடியாமல் நடுவில்தானே மூர்ச்சித்து நிலத்தில் விழுந்தனன். அந் நனம் மனவருத்தமுற்று துக்க வசத்தினால் ப்ரஜ்ஞை யின்றித் தரையில் விழ்ந்திருக்கிற மன்னவனைப் பார்த்து, அப்பொழுது ராமனும் மஹாரதனாகிய லக்ஷ்மணனும் அம்மன்னவனை எடுப்பதற்காக ஸமீபத்திற்கு ஓடிவந்த னர். அப்பொழுது ராஜக்ருஹத்திலுள்ள ஸ்த்ரீகளெல் லோரும் குவியல்குவியலாக ஓடிச்சென்று சரீரங் குலுங் குவதால் ஆபரணங்களெல்லாம் அசைந்து ஒலிக்கப் பெற்றுமனம்பொறுக்கமாட்டாமல்ஹாஹாகாரத்துடன் 'ராமா' என்று கதறி அழுகையில், ஆபரணத்வனியும் அழுகுரலுமாகக் கலந்து பெருங்கோஷம் ஒன்றுண்டா யிற்று. ராம லக்ஷ்மணர்களும் ஸீதையும் அம்மன்னவ னைக் கைகளால் எடுத்துக்கொண்டு வந்து கண்ணீர் பெருகப்பெற்றுப் படுக்கையில் உட்காரவைத்தனர். பிறகு ராமன் சிறிது நேரங்கழித்து மூர்ச்சை தெளிந்து துக்கஸாகரத்தில மூழ்கிக்கிடக்கிற தந்தையைப் பார்த் துக் கைகளைக் கூப்பிக்கொண்டு 'மஹாராஜரே! நீர் எங்கள் அனைவர்க்கும் ப்ரபுவாயிருக்கின்றீர். ஆகை யால் உமது அனுமதியின்றி நாங்கள் போகலாகாது. ஆனதுபற்றிஎங்களுக்கு அனுமதி கொடுக்கும்படிவேண் டுகின்றனம். தண்டகாரண்யத்திற்கு ப்ரயாணமாயிருக் கின்ற என்னைக் கண்ணிற் கலக்கமின்றிக் குசலமான பார்வையுடன் பார்க்கவேண்டும். மேலும், லக்ஷ்மணனு க்கும் செலவு கொடுக்கவேண்டும். ஸீதையும் என்னுடன் கூடவே அரண்யத்திற்கு வருகின்றனள். அவளுக்கும் அ னுஜ்ஞை கொடுக்கவேண்டும். நிஜமான காரணங்கள் பல வுஞ் சொல்லி வேண்டாமென்று எவ்வளவு தடுத்தபோ

திலும் இவ்விருவரும் இங்கே இருக்கமுடியாதென்கிறார்கள். நீர் உலகத்திலுள்ளவர் அனைவர்க்கும் ஸம்மானஞ் செய்பவராகையால் சோகத்தை விட்டு லக்ஷ்மணனுக்கும் எனக்கும் ஸீதைக்கும் ஸந்தோஷத்துடன் அனுமதி கொடுப்பீராக. ப்ரஹ்மதேவன் ப்ரஜைகளிடம் அருள்புரிவதுபோல் எங்களிடம் அருள்புரிந்து அனுமதி கொடுத்தனுப்புவீராக' என்றனன். வனவாஸத்திற்காக விலம்பஞ்செய்யாமல் தனது அனுமதியை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிற ஸ்ரீராமபிரானைப் பார்த்து மன்னவன், 'ராமா! நான் கைகேயிக்கு வரங் கொடுத்திருந்ததனால் மோசம்போயினன். இப்பொழுது என்னை நிக்ரஹித்து நீயே அயோத்யைக்கு மன்னவனாயிருப்பாயாக' என்றனன். ராமன் தார்மிக சிரோமணி; மேலும், பேசுவதில் மிகுந்த வல்லமை அமைந்தவன்; ஆகையால் தந்தை சொன்னதைக் கேட்டுக் கைகூப்பிக்கொண்டு 'மஹாராஜரே! நீர் அனேகமாயிரமாண்டுகளாகப் பூமிக்குப் பதியாகிப் பரிபாலித்துவந்தீர். அப்படிப்பட்ட நீர் எனக்காகப் பொய் பேசலாகாது. நானும் உம்மை ஸத்யந்தவறும்படிக்குச் செய்வது யுக்தமன்று. ஆகையால் நான் அரண்யத்தில் ஸுகமாக வாஸஞ்செய்வேன். மன்னவரே! நான் ஒரைந்து வர்ஷங்களும் பின்னை ஒரொன்பது வர்ஷங்களும் அரண்யத்தில் ஸுகமாகத் திரிந்து வஸித்திருந்து ப்ரதிஜ்ஞையைத் தீர்த்த பின்பு மீளவும் இவ்விடம் வந்து உமது பாதங்களைப் பிடித்துக்கொண்டு வந்தனஞ் செய்கிறேன்' என்றனன். மன்னவன் ஸத்யமென்னும் கயிற்றால் கட்டுண்டு விடுத்துக்கொள்ள நேராமல் கண்ணீர் பெருக்கி அழுதுகொண்டு முகவொளி மழுங்கப் பெற்றிருக்கிற அச்சமயத்திலும், கைகேயி அருகில் வந்து ஏகாந்தமாக மன்னவன் செவியில் 'இப்பொழுதே அனுப்பிவிடவேண்

டும்' என்று தூண்டுகையில், ஒன்றும் செய்யத்தோன் ருமல் தன் ப்ரிய குமாரனுகிய ராமனைப்பார்த்து 'அப்பா! புறப்பட்டுப்போவாயாக. அதனுல் பரலோக பலத்தை யும் இஹலோகத்தில் அபிவ்ருத்தியையும் மீளவும் இங் குத் திரும்பி வருதலையும் பெறுவாயாக. மங்கலகரமாகி ஒரு ஜந்துவினுலும் பயம் நேரிடாத நல்ல வழியைப் பிடித்துக்கொண்டு மனவூக்கத்துடன் செல்வாயாக. குழந்தாய்! நீ நற்குணங்களால் ரகுகுலத்தில் பிறந்தவர் அனைவர்க்கும் ஆநந்தத்தை விளைவிப்பவன்; ஸத்யஸ்வ பாவன்; உன் மனம் தர்மத்திலேயே குடிகொண்டிருக்க வற்று. இப்படிப்பட்ட நீ அரண்யத்திற்குப் போக வேண்டுமென்று நிச்சயித்த புத்தியை மாற்றமுடியவில் லை. பிள்ளாய்! இன்றைக்கு மாத்ரம் நீ எவ்விதத்திலா யினும் போகலாது. இதோ ராத்ரியும் ஸமீபித்துவிட்ட து; இன்றிரவெல்லாம் இங்கேயே இருப்பாயாக. இப் படி இருப்பாயாயின், ஒரு தினமாயினும் உன்னைக் கண் ணாரக்கண்டு ஸுகமாயிருப்பேன். உன் தாயாரையும் என்னையும் பார்த்துக்கொண்டு இன்றிரவு முழுவதும் இங்கே இருப்பாயாக. உனது விருப்பங்களெல்லாக் திரும்படி த்ருப்தி செய்விக்கப்பெற்று நாளையதினம் காலையில் போகலாம். குழந்தாய்! எனக்குப் பரலோகத் தில் நன்மை நேரிடும்படியான ப்ரியத்தைச் செய்ய விரும்பி உனக்கு ப்ரியர்களாயிருப்பவரெல்லோரையும் துறந்துவிட்டு ஜனஸஞ்சாரமில்லாத வனத்திற்குப் போ கின்றனை. இது எவ்விதத்திலும் எப்படிப்பட்டவர்களுக் கும் செய்யமுடியாதகார்யம். இப்படிப்பட்ட கார்யத்தை நீ செய்கின்றனை. ராமா! உன்னைக் காட்டுக்கு அனுப்பு வது எனக்கு எள்ளளவும் இஷ்டமன்று; ஸத்யத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்லுகின்றனன். ஆயினும் நீறு பூத்தநெருப்புப்போல், தன் மனத்திலுள்ள கொடுந்தன்

மையை வெளிக்குத் தெரியவொட்டாமல் மறைத்துக் கொண்டிருந்த இந்தப் பெண்பிள்ளை, என்னை எனக்கு ஸ்வாதீனமாயிருக்கவொட்டாமல் சலிக்கப்பண்ணி மோசஞ் செய்துவிட்டனள். ஸாமான்யமாக நான் கொடுத்த வரங்களை, அவள் இங்ஙனம் விபரீதமாகக் கேட்டு என்னை ஏமாறச்செய்தனள். நீ, குலாசாரத்தைத் துறந்த இந்தக் கைகேயியால் தூண்டப்பட்டு அவள் சொல்லிய அப்படிப்பட்ட மோசவார்த்தையையுங்கூட நிறைவேற்றித் தீர்த்துவிடவேண்டுமென்று விரும்புகின்றனை. உன் குணத்தை என்னவென்று மொழியலாகும்! குமாரனே! எனக்கு ஜ்யேஷ்ட புத்ரனாகிய நீ தந்தையாகிய என்னை அஸத்யஞ்சொல்லாதவனாகச் செய்ய விரும்புவது அவ்வளவு ஆச்சர்யமன்று' என்று மொழிந்தனன். பிறகு ராமன், தந்தை மனவருத்தத்துடன் மொழிந்த வார்த்தையைக் கேட்டுத் தானும் மனவருத்தமுற்று, அது கண்டு லக்ஷ்மணனும் வருத்தமுற்றிருக்க, மீளவும் மன்னவனைப் பார்த்து, ராமன், 'தந்தையே! எல்லாக் குறைகளையுந்தீர்த்து த்ருப்தி செய்விக்கிறேனென்றீர். குணங்கள் பொருந்திய சிறந்த வஸ்துக்களை நீங்கள் இன்றைய தினம் கொடுக்கப்பெற்று அநுபவிப்பேனாயினும், நாளையதினம் அவைகளை எனக்குக் கொடுப்பவன் யாவன்? ஆகையால் இது வீணே. ஆகையால் எல்லாமனோரதங்களுக்கும் பதிலாக இவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் போவதையே நான் வேண்டுகின்றனன். நானாதேசங்களோடு கூடி ஜனங்களும் தன தான்யங்களும் நிரம்பியிருக்கிற இப்பூமி முழுவதையும் நான் விட்டுத் துறந்து போகின்றனன். இதைப் பரதனுக்குக் கொடுத்துவிடுவீராக. வனவாஸஞ் செய்யவேண்டுமென்கிற என் கருத்து இப்பொழுது சிறிதும் சலிக்காது. நீரோ கேட்ட வரங்களைக் கொடுக்குந் தன்மையர்; ஆகையால் முன்பு

நீர் ஸந்தோஷித்துக் கைகேயிக்கு எந்த வரங்களைக் கொடுத்தீரோ, அவை யெல்லாவற்றையும் அவளுக்குக் கொடுத்து ஸத்யஸந்தராயிருப்பீராக. நான் உமது ஆஜ்ஞையை நீர் சொன்னபடி தவறாமல் பரிபாலித்துக்கொண்டு வனத்திற்குச் சென்று அங்குள்ள ரிஷிகளுடன் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் அங்கேயே வஸித்திருக்கின்றனன். உம்மை நிக்ரஹித்து என்னை ராஜாவாகச் சொல்லினீர். இப்படிப்பட்ட விசாரம் எதுவும் வேண்டாம். பரதனுக்கு ராஜ்யத்தைக் கொடுத்துவிடுவீராக. நீர் ரகுகுலத்திற்கு ஸந்தோஷத்தை விளைவிக்குந் தன்மையுள்ள மஹானுபாவரன்றோ? நான் என் மனத்திற்கு ஸுகத்தையும் ப்ரியத்தையும் உத்தேசித்து ராஜ்யத்தை விரும்புவேனென்று நினைக்க வேண்டாம். எனக்கு ராஜ்யத்தில் சிறிதாயினும் விருப்பம் இல்லை; உமது ஆஜ்ஞையைச் சரியாக நடத்துவதிற்றான் எனக்கு மனவிருப்பம் உள்ளது. இந்த மனவருத்தத்தைத் துறந்து விடுவீராக. நீர் வருத்தமுற்றுக் கண்ணீர் பெருக்கிக் கொண்டிருக்க வேண்டாம். நதீபதியாகி ஒருவராலும் உல்லங்கனஞ் செய்யக்கூடாத மிடுக்குள்ள ஸமுத்ரம் எக்காலத்திலும் கலக்கமுறாதிருக்குமல்லவா? அப்படியே நீரும் கலக்கமுறாதிருக்க வேண்டும். எனக்கு ராஜ்யத்திலாவது, ஸுகத்திலானது, ஸீதையிடத்திலாவது, மற்றுமுள்ள ஸமஸ்தமான இந்தக் [1] காம்யவஸ்துக்களிலாவது, ஸ்வர்க்கத்திலாவது, கடைசியாக ப்ராணன்களிலாவது எள்ளளவும் விருப்பம் இல்லை; புருஷர்களிற் சிறந்த மஹானுபாவரே! நீர் ஸத்யஸந்தராயிருப்பதுவே எனக்கு வேண்டியது. நீர் அஸத்யவக்தராயிருப்பதை நான் பொறுக்கமாட்டேன். இவ்வாறாக ப்ரத்யக்ஷ தெய்வமாகிய உம்மெதிரில் எனது ஸத்யத்தின் மேலும் எனது

---

1 ஆசைப்படத்தக்க வஸ்துக்கள்.

ஸுக்ருதத்தின் மேலும் ஆணையிட்டுச் சொல்லுகின்றனன். ப்ரபுவே! இங்கு க்ஷணகாலமாயினும் நின்றிருக்க எனக்குத் தரமல்ல. ஆகையால் நான் இன்றையதினம் நிற்கவில்லையென்ற இச்சோகத்தை நீர் பாராட்டவேண்டாம். நான் செய்ய முயன்ற ஸங்கல்பத்திற்கு மாறுபாடு நேராது. ரகுகுலாலங்காரனே! கைகேயி என்னை வனத்திற்குப் போகும்படி வேண்டிக்கொண்டனள். நானும் இதோ போகிறேனென்று மொழிந்துவிட்டனன். ஆகையால் உமது ஆஜ்ஞையைச் செய்வது மாத்ரமேயன்றி நான் சொன்ன வார்த்தையையும் காப்பாற்றிக்கொள்ள வேண்டியதாயிருக்கின்றது. ஆகையால் நான் காட்டுக்குப்போவது தப்பாது. தேவா! நீர் இதையே சிந்தித்துக் கொண்டிருந்து ஸங்கடப்படலாகாது. இதற்காக நீர் சிறிதுஞ் சிந்திக்கவேண்டாம். நாங்கள், க்ரூரங்களாகாமல் சாந்தஸ்வபாவங்களாகிய மான்கள் நிறைந்து நானுவகைப் பறவைகளுங்கலகலவென்றொலிக்கப்பெற்று மிகவும் அழகாயிருக்கின்ற கானகத்திற் சென்று ஸுகமாக விளையாடிக்கொண்டிருப்போம். தந்தையே! தேவதைகளுக்குங் கூடத் தந்தையே தெய்வமென்றன்றோ சொல்லப்பட்டிருக்கின்றது. இனி மனுஷ்யர்களுக்கு அந்த ந்யாயம் சொல்லவேண்டுமோ? ஆனதுபற்றித் தந்தையே தெய்வமென்று நினைத்தே நான் தந்தையின் ஆஜ்ஞையைச் செய்கின்றனன். மானிடவரிற்றலைவரே! பதினன்கு ஸம்வத்ஸரங்கள் கடந்து போகையில், நான் மீளவும் திரும்பி இவ்விடம் வர நீர் காண்பீர். ஆகையால் இந்த மனவருத்தத்தை விட்டு விடுவீராக. ஆண்சிங்கமே! கண்களிரண்டிலும் கண்ணீர் நிரம்பப் பெற்றிருக்கிற இந்த ஜனங்களெல்லோரையும் கண்ணீர் துடைத்துத் தேறச் செய்யவேண்

டிய பாரம் உம்முடையது; அப்படியிருக்க நீரே இவ் வனம் துக்கத்தினால் தடுமாறுகின்றீரே; இதுவென்? நான் விட்டுத் துறந்த பட்டணத்தையும் ராஜ்யத்தையும் மற்றுமுள்ள பூமி முழுவதையும் பரதனுக்குக் கொடுத்துவிடுவீராக. நான் உமது ஆஜ்ஞையைப் பரிபாலித்துக்கொண்டு நெடுங்காலம் வஸிப்பதற்காக அரண்யத்திற்குப் போகின்றனன். மஹாராஜரே! பர்வத ஸமூஹங்களும் பட்டணங்களும் அரண்யங்களும் நிரம்பப்பெற்று நன்கு ஏற்படுத்திய எல்லைகளுடன் கூடி மங்கலகரமாயிருக்கின்ற இந்தப் பூமி முழுவதையும் நான் துறந்து காட்டுக்குப் போகையில், பரதனே எல்லாவற்றையும் பரிபாலித்து வருவானாக. இது என்னிஷ்டப்படி ஏற்படுத்தப்பட்டதல்ல. நீர்யாதுசொன்னீரோ, அது அப்படியே நடந்தேறவேண்டும். நிர்த்தோஷமாயிருப்பவரே! பெரியோர்களால் ஸம்மதிக்கப்பட்ட உமது ஆஜ்ஞையைச் செய்வதில் என் மனம் எப்படி திடமாயிருக்கின்றதோ, அப்படி உயர்ந்த காமபோகங்களிலாவது மற்றும் எனக்கு ப்ரியமாயுள்ளவற்றிலாவது என் மனம் திடமாயிருக்கப் பெறாது. ஆனதுபற்றி அரண்யத்திற்குப் போவது எனக்குக் கஷ்டமாகத் தோற்றுமென்று எனக்காக நீர் எள்ளளவும் மனவருத்தப் படவேண்டியதில்லை. ஆகையால் உமக்கு அஸத்யத்தினாலுண்டாகும் தோஷத்தை விளைத்து அதனால் எனக்கு ஸமஸ்த காமபோகங்களும் ஸுகங்களும் உண்டாகுமாயினும், அவைகளை நான் விரும்பமாட்டேன். மற்றை அழிவில்லாத இந்த ராஜ்யத்தையும் ஸீதையையும் ப்ராணன்களையுங் கூட நான் ஆசைப்படமாட்டேன். உமது ஸத்ய வ்ரதத்திற்கு ஹானி வாராதிருக்கும்படி நடந்துகொள்வேனாயின், அதுவே எனக்கு அவையெல்லா மாகும். நீர்

கைகேயிக்குச் செய்த ப்ரதிஜ்ஞை அப்படியே ஸத்ய மாய் நடக்கவேண்டும். ஸத்யந்தவறமாட்டேனென்கிற உமது வ்ரதம் அப்படியே நடந்திடேறுமாக. அப்படி நடத்தி ஈடேற்றுவேனாயின், எனக்கு எல்லாம் நிறை வேறினதே யாகும். வனத்தில் வருத்தம் நேருமே யென்று நீர் வ்யஸனப்படவேண்டாம். நான் பலவிதங் களாகிய வ்ருக்ஷங்கள் அமைந்த வனத்திற்குத் தப் பாமற் சென்று, அங்குக் காய் கிழங்கு வேர்களைப் பக்ஷித்துக் கொண்டும் பர்வதங்களையும் நதிகளையும் குளங்களையும் பார்த்துக்கொண்டும் ஸுகமா யிருப் பேனன்றிச் சிறிதும் வருத்தமுறமாட்டேன். ஆகை யால் நீர் துக்கத்தை விட்டு ஸுகமா யிருப்பீராக' என் றனன். ராமன் இங்ஙனம் மொழிகையில்; அம்மன்ன வன் இவ்விதமான சோகத்திலாழ்ந்து மனவருத்தத்தி னால் சரீரம் முழுவதும் பரிதபிக்கப் பெற்று மனமயங்கிப் புதல்வனை ஆலிங்கனஞ் செய்துகொண்டு, தெளிவு தப்பி, மூர்ச்சித்துக் கைகாலசைத்தல் முதலிய செயலொன்று மின்றி யிருந்தனன். அனந்தரம் ராஜபத்னியாகிய கைகேயி ஒருத்தி தவிர மற்றை ராஜபத்னிகளெல்லோ ரும் ஒன்றாகக் கூடி மிகவுங் கதறி யழுதனர். அப் பொழுது ஸுமந்த்ரன் அழுதுகொண்டே மூர்ச்சித்து விட்டனன். அங்குள்ள ஜனங்களெல்லோரும் வருந்தி மனந்தாளப் பெறாமல் ஹாஹாகாரஞ் செய்தனர். முப் பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுமந்த்ரன் கைகேயியைத் தூறுதல்.

பின்பு ஸுமந்த்ரன் திடீரென்று கோபாவேசங் கொண்டு தலையை அசைத்து அடிக்கடி பெருமூச்

செறிந்து பலதடவை கையினால் கையைப் பிசைந்து கொண்டு பற்களைக் கடகடவென்று கடித்துக் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்றுத் தேஹம் முழுவதும் முன்புள்ள வர்ணம் மாறிக் கோபத்தின் மிகுதியால் தீவ்ரமான மனஸ்தாபம் பெற்றுப் பரிதபித்துத் தசரதனுக்குக் கைகேயியினிடத்தில் விருப்பம் நீங்கியிருப்பதையுங் கண்டு கூரான பாணங்கள் போன்ற வாக்யங்களால் அந்தக் கைகேயியின் ஹ்ருதயத்தை நடுங்கச் செய்பவன் போலவும், வஜ்ராயுதம் போன்றவைகளும் அதிக்ரூரங்களுமாகிய வாக்யங்களால் அவளது மர்மஸ்தானங்களையெல்லாம் பிளந்து விடுபவன் போலவும் அவளது ரஹஸ்யங்களையெல்லாம் வெளிப்படுத்திக்கொண்டு மொழிந்தனன்:—'பாபிஷ்டே! தசரதன் மஹாராஜன்; மேலும் ஸ்தாவரஜங்கமங்கள் எல்லாமடங்கிய ஜகத்துக்கெல்லாம் அவன் ப்ரபுவாயிருக்கின்றனன். இப்படி மஹா ப்ரபுவாயிருக்கிற பர்த்தாவை மனம் வந்து கைவிட்டனையே! இப்படிப்பட்ட கொடுந் தன்மையுள்ள உனக்கு இவ்வுலகம் முழுதிலும் செய்யத் தகாத கார்யம் எதுவுமே இல்லை. உன்னை நான் பர்த்தாவைக் கொல்பவளென்றும் கடைசியாய்க் குலநாசஞ் செய்பவளென்றும் நினைக்கின்றனன். மஹாராஜன் இந்த்ரனைப்போல் வெல்ல முடியாதவன்; பர்வதம்போல் அசைக்கக் கூடாதவன்; ஸமுத்ரம்போல் கலக்கக் கூடாதவன்; இப்படிப்பட்ட அம்மன்னவனுங்கூட உனது கொடிய செயல்களால் பரிதபித்து ஒன்றுஞ் செய்யத் தோற்றிருக்கின்றனன். ஆகையால் நீ பர்த்தாவைக் கொலை செய்யத் துணிந்திருக்கின்றனை. பர்த்தாவை மாத்ரமேயன்று; கடைசியில் இக்குலம் முழுமையுமே நாசஞ் செய்பவளாகத் தோன்றுகின்றனை. தசரதன் அனைவர்க்கும் போஷகனாயிருப்பவன்; வேண்டியவற்றையெல்லாங் கொடுக்குந்

தன்மையன்; மேலும் உனக்குப் பர்த்தா. இப்படிப்பட்ட அம்மன்னவனை நீ அவமானஞ் செய்யலாகாது. ஸ்த்ரீகளுக்குப் புத்ரனையாயினும் விட்டுப் பர்த்தாவினது மனத்தை அநுஸரிப்பதே மேன்மையாகும். கோடி பிள்ளைகளைப் பெற்றபோதிலும் பர்த்தாவினது மனக்கருத்தை ஈடேற்றுவதே ஸ்த்ரீகளுக்குச் சிறந்ததர்மம். ராஜன் மரணம் அடைந்து லோகாந்தரஞ் சென்ற பின்பு, அவனது புதல்வர்களின் வயதைப் பற்றிப் பார்க்கையில் மூத்தவன் எவனே அவனேயன்றே முதலில் ராஜ்யம் பெறுவது உலக வழக்கம். ஆகையால் ராஜாவுக்கு மூத்த குமாரனாகிய ராமனுக்கு ராஜ்யம் நேருவது தர்மமேயன்றே? அப்படியிருக்க, இக்ஷ்வாகு வம்சத்திற்கு நாதனாகிய இந்தத் தசாத மன்னவன் பிழைத்திருக்கும்பொழுதே வம்சபரம்பரையாக வழங்கி வருகின்ற இப்படிப்பட்ட தர்மத்தை நீ பாழாக்கக் கருதுகின்றனை. அடி பாபிஷ்டே! அப்படியே உன்னிஷ்டப்படி பரதன் அரசனாகட்டும். அவனே பூமி முழுவதையும் பரிபாலித்து வருவானாக. ராமன் எவ்விடம் போகின்றானோ, அவ்விடத்திற்கே நாங்களும் போகின்றனம். உனது தேசத்தில் இனி ஒரு ப்ராஹ்மணனாயினும் குடியிருக்க நேராதல்லவா? எப்படி யிருப்பார்கள்? நீ மர்யாதை தப்பி அவர்கள் தாமே புறப்பட்டுப் போகவேண்டும்படியான துஷ்கார்யங்களை இன்று செய்ய முயன்றிருக்கின்றனை. நீ இப்படி மர்யாதை தப்பின துராசாரத்தை நடத்துவது கண்டு உடனே பூமி இரண்டு பிளவாக வெடித்துப் போக வேண்டியதாயிருந்தும் அது அங்ஙனஞ் செய்யாதிருக்கின்றதே! இது எனக்கு மிகவும் ஆச்சர்யமாகப் புலப்படுகின்றது. வஸிஷ்டர் முதலிய மஹானுபாவர்களான ப்ராஹ்மர்ஷிகள் இந்த அமர்யாதையைக் கண்டு கோபித்து 'சீ! பாழாய் விடுவாயாக' என்று வாக்

தண்டங்களை ப்ரயோகித்திருப்பார்களல்லவா? பார்க்கப் பயங்கரங்களாகி ஜ்வலித்துக் கொண்டிருக்கும் தன்மையுள்ள அந்த வாக்தண்டங்ளுங் கூட, ராமனைக் காட்டுக்குத் துரத்திவிட வேண்டுமென்னுங் கொடிய கருத்துக்கொண்டிருக்கிற இந்தப்பாபிஷ்டையை ஏனோ ஹிம்ஸிக்கவில்லையே! ஐயோ! இவளுக்கு நல்வார்த்தை சொல்லி என்ன பயன்?[1] எவனேனு மொருவன் மதுரங்களான பழங்கள் பழுக்குந் தன்மையுள்ள மாமரத்தைக் கோடாலியால் வெட்டி வேப்பஞ் செடிக்குப் பாத்தியைக் கட்டி எருவைப் போகட்டுப் பாலைக் கொட்டி வளர்த்து வருவானாயின், அவ்வேம்பு அம்மனிதனுக்கு மதுரமாயிருக்குமா? இது எங்காயினுங் கண்டதுண்டோ? பெரியவம்சத்திற் பிறந்தும் உன் தாயின் ஸ்வபாவமெப்படிப்பட்டதோ, அப்படிப்பட்டதே உன் ஸ்வபாவமுமென்று எனக்குத் தெரியும். வேப்பஞ் செடியினின்றும் தேன் பெருகாதென்னும் வார்த்தை உலகத்தில் எங்கும் வெளிச்சமேயன்றோ? அப்படியே துஷ்டஸ்வபாவமுடையவளாகிய ஒருத்திக்கு நற்குணமுடைய புதல்வி எப்படிப்பிறப்பாள்? முற்காலத்தில் நடந்த உன் தாயினது கொடும் பிடிவாதம் இங்கெல்லோர்க்கும் தெரிந்தேயிருக்கின்றது. நாங்கள் நேரில் பார்க்காமற் போனபோதிலும் சொல்லக்கேட்டுக்கேட்டபடியே அறிந்திருக்கின்றனம். எங்களது கேள்வி ஸத்யமேயன்றிப் பொய்யன்று. முன்பு வரங்கொடுக்கும் வல்லமையுள்ள ஒருயோகி உன் தந்தைக்கு மேலான ஒருவரங்கொடுத்

1 இதனால் 'ராமனைக் காட்டுக்கு அனுப்பிக் கைகேயியின் அபிமதத்தை நிறைவேற்றுவதால் தசரதனுக்குக் கஷ்டமேயன்றி அந்தக் கைகேயியால் என்னளவும் ஸுகம் நேராதென்று தசரதனை ஸுமந்த்ரன் மறைத்து நிந்திக்கை தோற்றுகின்றது.

தனன். அந்த வரத்தின் மஹிமையால் ஸமஸ்த ப்ரா ணிகளும் சொல்லிக்கொள்கிற பேச்செல்லாம் அம்மன்ன வனுக்குத் தெரிந்திருந்தன. ஈ எறும்பு முதலியவற்றின் சப்தங்களையும் அதன் பொருள்களையும் அவன் உணர்ந் திருந்தனன். பிறகு ஒரு காலத்தில் மிகவும் தேஜஸ்வி யாகிய உன் தந்தை, தான்படுத்துக்கொண்டிருக்கிற மஞ்சத்தின் கிழ் அருகில் போய்க்கொண்டிருக்கிற ஓர் எறும்பு சொன்ன சொல்லைக்கேட்டு அதன் கருத்தையும் அறிந்து வியப்புற்றுப் பலவாறு சிரித்தனன். அங்ஙனம் அம்மன்னவன் சிரிப்பது கண்டு, உனது அன்னை, அவன் தன்னைப்பார்த்தே பரிஹாஸஞ் செய்ததாக நினைத்து மரணத்தையும் விரும்பும்படியான கோபங்கொண்டு பர் த்தாவைப் பார்த்து 'மன்னவரே! நீர் இனியராயிருப்ப வர். நீர் இங்ஙனம் சிரிப்பதற்குக் காரணம் யாதோ அதை நான் அறிய விரும்புகின்றேன்' என்றனள். அர சனும் அவளைப் பார்த்து, 'தேவீ! நான் சிரித்ததற்குக் காரணத்தைச் சொன்னேனாயின், உடனே எனக்கு மர ணம் ஸம்பவிக்கும். இதற்கு ஸந்தேஹமேயில்லை' என்ற னன். உன்தாய் உன்தந்தையாகிய கேகயராஜனைப்பார் த்து 'நீர் பிழைத்திருந்தாலும் ஸரி, செத்துப்போனா லும் ஸரி; அது எனக்கு அவஶ்யமில்லை. நீர் சிரித்ததற் குக் காரணஞ் சொல்லவேண்டும். அப்பொழுதுதான் நீர் என்னைப் பரிஹாஸஞ் செய்யவில்லையென்று எனக்குத் தெரியும்' என்றனள். அந்தக் கேகயராஜன், தன் மனைவி அங்ஙனஞ் சொல்லக்கேட்டு இப்படிப்பட்ட ஸங்கடத்தை ஆலோசித்து அவ்விஷயத்தையெல்லாம் முன்பு தனக்கு வரங்கொடுத்த அந்த மஹாயோகிக்கு நடந்தபடி தெரி யச் சொல்லினன். பிறகு ஸமர்த்தராகிய அந்த வரங் கொடுத்த யோகியும் மன்னவனைப் பார்த்து 'அரசனே!

அவள் செத்துப்போனாலும் போகட்டும்; ஓடிப்போனாலும் போகட்டும்; என்ன செய்தபோதிலும் நீ எள்ளளவும் சொல்லவேண்டாம்' என்றனர். அரசன் நிர்மல ஸ்வபாவனாகிய அந்த மஹாயோகியின் வார்த்தையைக் கேட்டு உடனே உன் தாயைத் துரத்திவிட்டுக் குபேரன் போல் ஸுகமாக க்ரீடித்துக் கொண்டிருந்தனன். அப்படியே நீயும் பாபத்திலேயே கண் வைத்தவளாகையால் துர்ஜனங்கள் ஆசரிக்கும் பத்ததியில் சென்று உன் தாயைப்போலவே மதிகெட்டு இம்மன்னவனைத் துர்விஷயத்தில் நடத்திக் கெடுக்கின்றனை. 'குணங்களில் பிள்ளைகள் தந்தையைப்போலவும், பெண்கள் தாயைப்போலவும் பிறப்பார்கள்' என்று உலகத்திலுள்ள ஜனங்கள் சொல்லிக்கொள்ளுகிற இவ்வார்த்தை இப்பொழுதே எனக்கு ஸத்யமாகத் தோற்றுகின்றது. கைகேயி! நீ இங்ஙனம் கொடிய பிடிவாதத்துடனிருக்கவேண்டாம். இந்த முயற்சியைத் துறந்துவிடுவாயாக. பர்த்தாவுக்கு வசப்பட்டிருந்து, அவர்சொல்லும் புத்தியைப் பாராட்டி அங்கீகரிப்பாயாக. நீ பர்த்தாவின் இஷ்டப்படி ராமாபிஷேகத்திற்கு அனுமதி செய்வாயாக. இப்பொழுது ராமனது வனவாஸத்தைக் குறித்து மிகவுந் துக்கித்திருக்கிற பட்டணத்திலுள்ள ஜனங்களையும் நாடுகளினின்றும் வந்திருப்பவர்களையுங் காப்பாற்றுவாயாக. நீ பாபிஷ்டர்களால் உத்ஸாஹப்படுத்தப்பட்டு அவர்களதுவசனத்தின்படி நடக்க முயன்று தேவேந்த்ரன்போல் விளங்குகின்ற லோகநாதனாகிய உன் பர்த்தாவை, சிறியவனுக்குப் பட்டங்கட்டிப் பெரியவனைக் காட்டுக்கு அனுப்பும்படியான இந்த அதர்மத்திற்கு உட்படுத்தாதிருப்பாயாக.[1] தேவீ!

1 இதற்கு 'நச மித்யா ப்ரதிஜ்ஞாதம் கரிஷ்யதி தவாநகஃ। ஸ்ரீமாந் தசரதோ ராஜா தேவி ராஜீவலோசநஃ' என்று மூலம்.

தாமரையிதழ்போன்ற கண்களையுடையவனும் பாபத்திற் சிறிதும் மனஞ்செல்லப்பெறாதவனும் மிகுந்த ஐச்வர்யம் அமைந்தவனுமாகிய இந்தத் தசரதமன்னவன் உனக்குச் செய்த ப்ரதிஜ்ஞையைப் பொய் செய்யமாட்டான்; இவ்விதம் நடவாமற் போயினும் மற்றை வேறுவிதமாயாவது நிறைவேற்றிவிடுவான்; ராஜ்யத்தைக் காட்டிலும் மிகுந்தவிலையுள்ள ரத்னாபரணம் முதலியவற்றைக் கொடுத்து உனக்குச் சொன்ன வரத்தைத் தீர்ப்பானன்றிப் பொய் செய்யான். ராமன் மூத்தகுமாரன்; பின்னும், மிகுந்த ஔதார்யகுணமுள்ளவன்; ஸதாசாரத்தில் மிகுந்த ஆவலுடையவன்; துஷ்டநிக்ரஹஞ்செய்வது சிஷ்டபரிபாலனஞ் செய்வது முதலிய தனது க்ஷத்ரிய தர்மத்தைத்தவறாமல் நடத்துபவன்; ஜீவலோகத்தை யெல்லாம் பாதுகாப்பவன; யாவராலும் வெல்லமுடியாத பலமுடையவன்; இங்ஙனம் பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய குணங்கள் பொருந்திய ஸ்ரீராமபிரானுக்குப் பட்டாபிஷேகம் நடத்துவாயாக. தேவி! ராமன், ராஜாவாயிருக்கிற தந்தையை விட்டுத் தான் அரண்யத்திற்குப் போவானாயின், உனக்கு உலகத்திலெங்கும் பெரிய அபவாதம் உண்டாகும். நற்குணங்கள் பலவும் பொருந்திய அந்த ராமனே ராஜ்யத்தைப் பரிபாலித்து வருவானாக. நீயும் இம்மனக்கொதிப்பைத் துறந்திருப்பாயாக. ராமன் அரண்யத்திற்குப் போய்விடுவானாயின், இவ்வயோத்யையில் அவனைக்காட்டிலும் யோக்யனாயிருப்பவன் எவனும் கிடையான். ஆகையால் அவனே ராஜ்யபரிபாலனத்திற்குரியவன். மூத்தவனாகிய ராமனிருக்கையில் மற்றொருவன் (சிறிய

---

இதற்கு 'தேவீ! உனக்குத் தசரதன் வேடிக்கையில் வெறுமனே ப்ரதிஜ்ஞை செய்தானாகையால் அதை இப்பொழுது நிறைவேற்றப் போகிறதில்லை' என்று மஹேஶ்வர தீர்த்தவ்யாக்யானத்தில் பொருள் கூறப்பட்டிருக்கின்றது.

வணுகிய பரதன்) பட்டாபிஷேகம் பெறுதற்கு உரியவனல்லன். ராமன் யௌவராஜ்யபட்டாபிஷேகம் பெற்ற பின்பு, பெருவில்லாளியாகிய தசரதமஹாராஜன், முன்பு இக்ஷ்வாகுவம்சத்தரசர்கள் நடத்தின ஆசாரத்தின்படி அரண்யத்திற்குப் போய்விடுவான். இதுவே தர்மம்' என்று ஸுமந்த்ரன் மொழிந்து முடித்தனன். இவ்வாறு ஸுமந்த்ரன் ராஜஸபையில் நல்வார்த்தைகளாலும் கடோரமான உரைகளாலும் கைகேயியைக் கலக்கிவிட்டுப் பின்பு எப்பொழுதும்போலவே கைகளைக் குவித்துக்கொண்டு நின்றனன். அப்பொழுது அந்தக் கைகேயியோவென்றால், இவ்வளவு க்ரூரமான மொழிகளாலும் சிறிதுங் கலக்கமுறாமலே இருந்தனள்; எவ்வளவு நல்வார்த்தை சொல்லி வேண்டிக்கொண்டபோதிலும், அவளுக்குச் சிறிதும் மன இரக்கமுண்டாகவில்லை. அதிக்ரூரமாயிருக்கிற அவளது முகவர்ணமும் மாறுபாடில்லாமலே இருந்தது. முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தசரதன் ராமனைச் சதுரங்கபலாதி ஸஹிதமாக அனுப்பப்பார்க்கையில், கைகேயி அங்ஙனங்கூடாதென்று தடுத்தலும், ஸித்தார்த்தன் கைகேயிக்குப் புத்தி கூறுதலும்.

கைகேயி அங்ஙனம் ஸம்மதிக்காமை தெரிந்தபின்பு, தசரதன் வரங்கொடுப்பதாகத் தான் செய்த பிரதிஜ்ஞையைத் தவிர்க்கமுடியாமல் அதில் அகப்பட்டுக்கொண்டு மனவருத்தமுற்றுக் கண்ணுங் கண்ணீருமாய்ப் பலதடவையாகப் பெருமூச்செறிந்து ஸுமந்த்ரனைப் பார்த்து 'ஸாரதியே! பலவகை ரத்னங்களையும் மற்றும் சிறந்த வஸ்துக்களையும் ஏராளமாக எடுத்துக்கொண்டு ஒன்றுமொன்றுங்குறையின்றியானைகுதிரை தேர்காலாட்

களென்கிற நான்குவிதபலங்களோடு கூடியபெரும் ஸை ன்யமொன்று ராமனைப்பின்றொடர்ந்து போகும்படிக்குச் சீக்ரத்தில் ஸித்தப்படுத்துவாயாக. இனிய உரைகளை உரைத்துப் பிறரது மனங்களை வசப்படுத்த வல்லமை யமைந்த வாரஸ்த்ரீகளும் ஆங்காங்கு ஸேனை இறியு மிடங்களில் சரக்குகளைக் கொண்டு பரப்பும் பெருஞ் செல்வமுற்ற வர்த்தகர்களும் பின்றொடர்ந்து குமார னது ஸைன்யத்தை அலங்கரிப்பார்களாக. யாவர் நமது ராமனை அடுத்துப் பிழைக்கின்றனர்களோ, யாவரோடு ராமன் வீர்யபரீக்ஷார்த்தமாக விளையாடிக் கொண் டிருப்பானோ, அவர்கள் அனைவர்க்கும் பொன் வெள்ளி வஸ்த்ரம் முதலிய பற்பல த்ரவ்யங்களைக் கொடுத்து அவர்களையும் இந்த ஸைன்யத்துடன் கூடவே போகும் படி அனுப்புவாயாக. உயர்ந்த ஆயுதங்களைத் தரித்த வீரர்களும் பட்டணத்திலுள்ள வர்த்தகர்களும், நெய் எண்ணெய் முதலிய வஸ்துக்கள் நிறைந்த வண்டிகளும் ராமனைப் பின்றொடர்ந்து போகட்டும். வனத்தில் திரிப வர்களாகிய வேடர்களும் அரண்யத்தில் வழி காட்டும் பொருட்டு ராமனுடன்செல்வார்களாக.ராமன் இங்ஙனம் ஸைன்யங்களோடுகூடி யரண்யத்தில்மான்களையும்யானை களையும் அடித்து விளையாடிக் கொண்டும், அங்குண் டான தேன்களைப் பானஞ்செய்துகொண்டும், அங்குப் பெருகுகிற பலவகை நதிகளைப் பார்த்துக் கொண்டும் ராஜ்யத்தைப் பற்றிய நினைவு மின்றி ஸுகமாயிருப் பான். ராமன் ஜனஸஞ்சாரமில்லாத அரண்யத்தில் வாஸஞ் செய்யப் போகும்பொழுது அவன் பின்னோடு எனக்குள்ள தான்ய கோசத்தையும் தனகோசத்தை யும் முழுவதும் அனுப்புவாயாக. அவன் அவைகளைப் பெற்றுப் புண்யக்ஷேத்ரங்களில் யாகங்களைச் செய்து

சாஸ்த்ரப்படி ஸம்ருத்தமாகத் தக்ஷிணை கொடுத்து ரிஷிகளுடன் கூடி வனத்தில் ஸுகமாக வாஸஞ் செய்திருப்பானாக. மஹாபுஜனாகிய பாதன் அயோத்யையைப் பரிபாலித்து வருவானாக. ஸமஸ்த பாக்யங்களும் பொருந்திய ஸ்ரீராமபிரானை எல்லாப் போகங்களோடுங் கூட அரண்யத்திற்கு ப்ரயாணப்படுத்தி அனுப்புவாயாக' என்று மொழிந்தனன். இங்ஙனம் தசாதமன்னவன் மொழிகையில் கைகேயிக்கு மிகுந்த பயம் உண்டாயிற்று. அவளது முகங்கூட நன்கு வாடிப்போயிற்று; குரலும் அடங்கிவிட்டது. அந்தக் கைகேயி மனவருத்த முற்று, கடுகடுங்கி, வாடின முகத்துடன் அரசனுக்கு எதிர் முகமாகத் திரும்பி 'நீ ஸத்புருஷனாயிருப்பாயாயின் இங்ஙனஞ் செய்யலாகுமா? இதனால் உனது ஸத்புருஷத்தனம் வெளியாகின்றது. மேலுள்ள ஸாரம் எல்லாங் குடிக்கப்பட்டபின் அடியில் நின்ற மத்யம்போல், ஜனங்கள் போய்ப்பாழாகி, அனுபவிக்கவேண்டிய மேலான பதார்த்தங்களெல்லாந் தொலையப்பெற்றுச் சிறிதும் அனுபவிக்க வேண்டாதிருக்கின்ற இந்த ராஜ்யத்தைப் பாதன் பெற்றுக்கொள்ளமாட்டான்' என்றனள். இவ்வாறு கைகேயி சிறிதும் லஜ்ஜையின்றி மிக்க தாருணமாக மொழியக் கேட்ட மன்னவன் நீண்டழகிய கண்களையுடைய அந்த மடந்தையைப் பார்த்து 'எனக்குச் சத்ருவாயிருப்பவளே! சுமக்கக்கூடாத பளுவை என் மேல் ஏற்றினது மாத்ரமேயன்றி அதைச் சுமந்து கொண்டிருக்கக் கண்டு மேன்மேலும் ஏன் பீடிக்கின்றனை? துஷ்டஸ்வபாவ முடையவளே! நான் ராமனோடுகூட ஸைன்யாதிகளை அனுப்பமுயன்ற பின்பு வேண்டாமென்கின்றனை. இதை முன்னமே, நீ வரங் கேட்கும் பொழுதே கூடாதென்று ஏன் தடுக்காமற் போயினை? ஆகையால் கேளாதவற்றைக் கொடுக்க

மாட்டேன்' என்றனன். இப்படி அம்மன்னவன் கடுங் கோபத்துடன் மொழிந்த வார்த்தையைக் கேட்டு அழகிய அங்கங்கள் பொருந்திய அந்தக் கைகேயி மற்றொரு விதமாக எனது அபீஷ்டத்தைக் கெடுக்க முயன்றுனிவனென்று இருமடங்காகச் சினந்து மன்னவனைப் பார்த்து, 'உன் வம்சத்திலேயே ஸகரனென்பவன் தனது மூத்த குமாரனுகிய அஸமஞ்ஜனென்னும் புதல்வனை அரண்யம் போகத் துரத்திவிட்டனன். அவனை அரண்யத்திற்கு ஸைன்யாதிகளுடன் கூட்டி அனுப்பவில்லை. ஆகையால் அரண்யத்திற்கு அனுப்புவதென்றால்—தனம் முதலியவை ஒன்று மில்லாமல் துரத்துகையே யென்று ஸித்தமாயிருக்கையில், இதை வேருகக் கேட்க வேண்டுமோ? அந்த அஸமஞ்ஜனென்பவன் நிர்த்தனனுகவே போயினன். அப்படியே இவனும் போகவேண்டும்' என்றனள். தசரதன் அந்த வார்த்தையைக் கேட்டு 'சீ' என்று நிந்தித்து வாயை மூடிக்கொண்டிருந்தனன். அது கேட்டு அங்குள்ள ஜனங்களெல்லோரும் மிகவும் வெட்கமுற்றனர். கைகேயியோ, அதைக் கொஞ்சமும் பாராட்டாதிருந்தனள். அங்கு அரசனுல் நன்கு ஸம்மானிக்கப்பட்டவனுகிய ஸித்தார்த்தனென்னும் மந்த்ரி ஒருவன் இருந்தனன். அவன் வ்ருத்தன்; பரிசுத்த ஸ்வபாவன்; அப்படிப்பட்ட அம்மந்த்ரி கைகேயியைப் பார்த்து 'அஸமஞ்ஜன் துர்ப்புத்தியுடையவனுகி வழியில் விளையாடிக் கொண்டிருக்கிற பிள்ளைகளை எடுத்துக்கொண்டு வந்து ஸரயூநதியின் ஜலப்ரவாஹத்தில் விழப் போகட்டு, அவர்கள் ஜலத்தில் மூழ்கிக் கிளம்பிப் படபடவென்று கையையுங் காலையும் அடித்துக்கொண்டு அவஸ்தைப் படுவதைப் பார்த்து நகைத்து விளையாடிக் கொண்டிருந்தனன். பின்பு பட்டணத்து ஜனங்கள், அவன் அவ்வாறு கொடுஞ் செயல்

செய்வதைக்கண்டு கோபித்து ஸகர சக்ரவர்த்தியினிடம் வந்து 'மன்னவனே! நீ ராஜ்யத்தை நன்கு பரிபாலித்து வ்ருத்தி செய்யுந் தன்மையன்; ஆகையால் நீ அஸமஞ்ஜனொருவனை வைத்துக்கொண்டு எங்களையாவது துறக்கவேண்டும்; அல்லது எங்களை வைத்துக் கொண்டு அவனையாவது துறக்கவேண்டும்' என்றனர். அரசன் அது கேட்டு அவர்களை நோக்கி 'உங்களுக்கு இந்த பயம் உண்டாவதற்குக் காரணம் என்?' என்று வினவினன். இப்படி அரசன் வினவுகையில், அந்த ப்ரஜைகளெல்லோரும் அம்மன்னவனைப் பார்த்து 'மஹாராஜனே! இந்த அஸமஞ்ஜன் மதிமயக்கங் கொண்டு, விளையாடிக் கொண்டிருக்கின்ற எமது இளங் குழந்தைகளை எடுத்துக்கொண்டு சென்று ஸரயூநதியின்ப்ரவாஹத்தில் விழப் போகட்டு, அவர்கள் அங்குப் படும் அவஸ்தையைக் கண்டு மூர்க்கனாகையால் மிகவும் ஸந்தோஷிக்கின்றனன்' என்று மொழிந்தனர். அவ்வரசனும் ப்ரஜைகள் மொழிந்த வார்த்தையைக்கேட்டு அவர்களுக்கு ப்ரியஞ் செய்ய விரும்பி ப்ரியபுத்ரனாகிய அஸமஞ்ஜனைக் கைவிட்டனன். தந்தையாகிய அம்மன்னவன் அந்தப் புதல்வனை அவனது பார்யையோடும் அவனுக்குள்ள பரிஜனம் முதலிய பரிவாரங்களோடும் வாஹனத்திலேற்றி [1] யாவஜ்ஜீவமும் பட்டணத்திற்கு வாராதிருக்கும்படி அரண்யத்திலே இருக்கச்செய்ய வேண்டுமென்று தன்கீழுள்ள அதிகாரிகளுக்கு ஆஜ்ஞாபித்தனன். அவனும் மண்வெட்டி புட்டிற்கூடை ஆகிய இவைகளைக் கொண்டு பாபிஷ்டன்போல் எல்லாத்திசைகளிலும் திரிந்து மலைகளிலும் அரண்யங்களிலும் காய்களைப் பறித்தும் கிழங்கு முதலியவற்றை வெட்டியும் பிழைத்துக் கொண்டிருந்தனன். இங்ஙனம் தன் பிள்ளையாகிய அஸமஞ்ஜன் மஹாபராதஞ் செய்தமையால் ஸகரசக்ரவர்த்தி

1. பிழைத்திருக்கும் வரையில்.

பரமதார்மிகனுகையால் அவனைத் துரத்திவிட்டனன். அவனைப்போலவே அரண்யத்திற்கு அனுப்பவேண்டும் படியான யாது பாபம் ராமன் செய்தனன்? ராமனிடத்தில் எந்த துர்க்குணத்தையாயினும் நாம் கண்டதில்லை; சந்த்ரனிடத்தில் அழுக்கில்லாதிருப்பதுபோல், ராமனிடத்தில் எள்ளளவும் தோஷம் புலப்படாது. தேவி! அப்படியில்லாமல் உனக்கு ராமனிடத்தில் தோஷம் ஏதாயினும் புலப்படுமாயின், அதை இப்பொழுதே நிரூபித்துச் சொல்வாயாக. அப்பொழுது ராமனை அரண்யத்திற்கு அனுப்பிவிடலாகும். துஷ்டனுகாமல் ஸன்மார்க்கத்திலேயேவிருப்பமுற்றிருப்பவனைத் துரத்திவிடுவதுதர்மத்திற்கு விரோதமாகையால், அப்படிப்பட்ட துஷ்கார்யஞ் செய்வானுயின் தேவேந்த்ரனுக்குங்கூட ஒளி குன்றிப் போய்விடும். ஆகையால், அழகியமுகமுடையவளே! ராமனது ராஜ்யபட்டாபிஷேகத்திற்கு இதுவரையில் செய்த விரோதம் போதும். அதர்மத்தினுல் உண்டாகும் தோஷம் அப்படியிருக்க, உலகத்தில் விளையும் நிந்தையாயினும் வாராதிருக்கும்படி பார்த்துக்கொள்ளவேண்டாமா?' என்று இவ்வாறு கூறினன். ஸித்தார்த்தன் மொழிந்த வார்த்தைகளைக் கேட்டுத் தசரதமன்னவன் துக்கத்தினுல் மிகவும் வருந்திய ஹீனஸ்வரத்துடன் சோகத்தினுல் வார்த்தைகள் தடைபடப்பெற்றுக் கைகேயியைப் பார்த்து 'அடி பரபாசாரமுடையவளே! இந்த ஸித்தார்த்தன் மொழிந்தவார்த்தையை விரும்பமாட்டாயா? உனது ஹிதத்தையும், எனது ஹிதத்தையும் அறியாதிருக்கின்றனையே. மேலும் குத்ஸிதமார்க்கத்தில் நுழைந்து இவ்வனங் குசேஷ்டைகளைச் செய்துகொண்டிருக்கின்றனை. ஆமாம், உனது சேஷ்டை குத்ஸிதமே. அதுஸன்மார்க்கத்திற்கு ஸம்பந்தப்பட்டதல்லவே. நான்

இப்பொழுது ராஜ்யத்தையும் ஸுகத்தையும் தனத்தையும் பரித்யாகஞ் செய்து ராமனைப் பின்றொடர்ந்து போகின்றனன். நீ ராஜாவாகிய பரதனோடு கூட ஸுகமாக வெகுகாலம் ராஜ்யத்தை அனுபவித்துக் கொண்டிருப்பாயாக' என்றனன். முப்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் கைகேயி கொடுத்த மரவுரியை உடுத்தலும், வஸிஷ்டர் கைகேயியைத் தூறுதலும்.

ஸித்தார்த்தன் சொன்ன வார்த்தையைச் செவியுற்று, ராமன், பெரியோர்களிடத்தில் நடத்தவேண்டிய விநயத்தை நன்கு அறிந்தவனாகையால் மிக்க விநயத்துடன் அப்பொழுது தசரத மன்னவனைப் பார்த்து 'மன்னவரே! நான் போகங்களையெல்லாந் துறந்து வனத்தில் காய் கிழங்கு முதலியவற்றைத்தின்று ஜீவிக்கப்போகின்றனன். போகங்களைக் கைவிடினும் சிலர்க்கு அவைகளில் மனவிருப்பந் தொலையாது. நானோ [1] ஸமஸ்த ஸங்கங்களையுங் கூடத் துறந்திருப்பவன். இப்படிப்பட்ட எனக்கு இந்த ஸேனை முதலியவை பின்றொடர்ந்து வருவதனால் என்ன உபயோகம்? எவனொருவன் சிறந்ததொரு யானையைக்கொடுத்து விட்டு அதனிடையில் கட்டுங்கயிற்றில் மனவிருப்பங் கொள்கின்றானோ, அவனுக்கு அந்தச் சிறந்த யானையைக் கொடுத்த பின்பு அதைக் கட்டுங்கயிற்றில் ஆசை வைப்பதனால் ப்ரயோஜனம் என்? மஹீபால! நீர் ஸத்புருஷர்களில் சிறந்திருப்பவர். ஆகையால் நான் சொல்லும் ஸத்விஷயத்தை அங்கீகரிக்கவேண்டும். மதித்த யானையைத் துறந்தவனுக்கு அதைக் கட்டுங்கயிற்றால் ப்ரயோஜனமில்லாமைபோல, ராஜ்யம் முதலியவற்றையெல்லாந் துறந்த எனக்கு ஸேனையினால் ப்ரயோஜ

---

1 எல்லா மனவிருப்பங்களையும். ஸங்கம் - மனப்பற்று.



53. ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் கைகேயி கொடுத்த மரவுரியை உடுத்தல்.

னம் என்ன? ஆகையால் எனக்குக் கொடுக்க நினைத்த அவையெல்லாவற்றையும் நான் பரதனுக்குக் கொடுக்கின்றனன். எனக்குக் கார்யங்களெல்லாம் நன்றாகத் தெரியும். ஆகையால் நான் சொன்னபடி நடத்துவீராக. இப்பொழுது எனக்கு மரவுரி மாத்ரம் வரவழைப்பீராக. நான் இனிப் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் வனத்தில் வாஸஞ் செய்யப் போகிறேனாகையால் அதுவரையில் காய் கிழங்கு முதலியவற்றை வெட்டிக் கொண்டுவருவதற்காக மண்வெட்டி புட்டிற்கூடை ஆகிய இவ்விரண்டையுங் கொண்டு வாருங்கள். சீக்ரம் கொண்டுவரச் செய்வீர்களாக' என்றனன். பின்பு கைகேயி அங்கு ஜனங்கள் திரள்திரளாயிருந்தும், அவர்களெதிரில் சிறிதும் வெட்கமின்றித் தானே மரவுரிகளை வரவழைத்து ராமனைப் பார்த்து 'உடுத்துக்கொள்' என்றனள். அந்தப் புருஷ ஸிம்ஹனும் கைகேயியினிடமிருந்து இரண்டு மரவுரிகளை வாங்கி முன்பு உடுத்திருந்த மெல்லிய வஸ்த்ரங்களை அவிழ்த்துப் போகட்டு, ரிஷிகள் தரிக்கத்தக்க அம்மரவுரிகளை உடுத்துக்கொண்டனன். ஐயோ! அவ்விடத்திலேயே லக்ஷ்மணனும் தந்தையின் கண்முன்னிலையிற்றானே தான் முன்பு உடுத்திருந்த அழகிய வஸ்த்ரங்களை விட்டு ரிஷிகள் உடுத்துகிற மரிவுரிகள் இரண்டையும் உடுத்துக்கொண்டு நின்றனன். அப்பொழுது பட்டுப்புடவை உடுத்திருக்கிற ஸீதை, அவ்விருவரும் இவ்வாறு மரவுரியை உடுத்துக்கொண்டபின், தானும் உடுத்துவதற்காக வரவழைத்திருக்கிற மரவுரிகளைப் பார்த்து, வலையைப்பார்த்த மான்பேடுபோல் நடுக்கமுற்றனள். பிறகு சுபலக்ஷணங்கள் பொருந்திய அந்த ஜானகி மிகுந்த மனவருத்தங்கொண்டவளாயினும் பதிவ்ரதைகள் நடக்கவேண்டிய தர்மங்களையெல்லாம் அறிந்த

வளாகையால் தான் தர்மங்களை அனுஷ்டித்து அதனால் மற்றைப் பெண்பிள்ளைகளுக்கும் பதிவ்ரதா தர்மத்தைத் தெரிவித்துக்கொண்டு கைகேயி கொடுத்த மரவுரிகளை மிகுந்த வெட்கமுற்றவளாக வாங்கிக்கொண்டு கையினால் பரிசித்துப் பார்த்துக் கண்களிரண்டிலும் கண்ணீர் பெருகப்பெற்றுக் கந்தர்வராஜனைப்போல் விளங்குகின்ற தன் பர்த்தாவைப் பார்த்து 'வனவாஸிகளாகிய முனிவர்கள் இம் மரவுரிகளை எவ்விதம் உடுத்துகிறார்களோ?' என்றனள். இப்படி அந்த ஸீதை மரவுரியை உடுத்துக் கொள்ளத் தெரியாமையால் அடிக்கடி ஒன்றுந் தோன்றப் பெறாமல் திகைத்து நின்றனள். பின்பு ஸீதை அம் மரவுரிகளிரண்டில் ஒன்றைக் கழுத்தில் போகட்டு மற்றொன்றைக் கையிற் பிடித்துக்கொண்டு உடுத்தத்தெரியாமல் வெட்கமுற்றிருந்தனள். தார்மிகோத்தமனாகிய ராமன் அது கண்டு ஸீதையினிடம் சீக்ரமாக வந்து அந்தப் பெண்பிள்ளை உடுத்திருந்த பட்டுவஸ்த்ரத்தின் மேல் அந்த மரவுரியைத் தானே உடுத்தினன். இவ்வாறு மஹானுபாவனாகிய ராமன் ஸீதைக்கு மரவுரி உடுத்துவதைக் கண்டு அந்தப்புரத்திலுள்ள ஸ்த்ரீகளெல்லோரும் கண்ணீர் பெருகப்பெற்று மிகுந்த ஸங்கடம் அடைந்து பேரொளியுடன் ப்ரகாசிக்கின்ற ராமனைப் பார்த்து 'அப்பா! ஆழ்ந்தழகிய மனமுடைய இப்பெண்பிள்ளையும் இப்படி உன்னைப்போல் வனவாஸஞ் செய்யும்படி ஆஜ்ஞை இல்லையன்றோ? உன்னொருவனுக்கு மாத்ரமேயன்றோ அது. எம்மை ஆளும் ஸ்வாமியே! நீ தந்தையின் வாக்யத்தின்படி ஜனஸஞ்சாரமில்லாத வனத்திற்குப் போகையில், நீ திரும்பிவருமளவும் உன்னைப் பார்ப்பதுபோலவே இந்த ஸீதையைப் பார்த்துக்கொண்டிருந்து எமது கண்களைப் பயன்பெறச் செய்துகொள்

கின்றனம். இப்படி எங்கள் கண்களுக்குப் பயனை விளை விப்பாயாக. குழந்தாய்! நீ லக்ஷ்மணனை ஸஹாயமாக அழைத்துக்கொண்டு அரண்யஞ் செல்வாயாக. இவள் அதிமங்கல ஸ்வபாவையாகையால் ரிஷிகளைப்போல் அரண்யத்தில் வஸிக்கத்தகுந்தவளல்லள். ஆகையால் பிள்ளாய்! நாங்கள் இதுவொன்று வேண்டிக்கொள்கின்ற னம். இந்த வேண்டுகோளை நிறைவேற்றுவாயாக. அது மற்றொன்றும் அன்று; உன் பத்னியாகிய ஸீதை இங்கே யே இருப்பாளாக. உன்னையுங்கூட இருக்கவேண்டு கிறோமன்றி நீ தர்மத்திலேயே எப்பொழுதும் நடப்பவ னாகையால் நாங்கள் எவ்வளவுவேண்டிக் கொண்டபோ திலும் இங்கிருக்க விருப்பமுறாதிருக்கின்றனை. ஆகை யால் ஸீதையையாவது நிறுத்திவிட்டுப்போவாயாக' என் றனர். அந்தத் தசரதகுமாரன், அவர்கள் இங்ஙனம் பலவாறாகச் சொல்லிக் கொண்டிருப்பினும் கைகேயி அனுமதிக்காமையால் வாயைத் திறவாமல் கேட்டுக் கொண்டே தன்னைப்போன்ற சீலம்பொருந்திய ஸீதைக்கு மரவுரியை உடுத்தினன். ஸீதை இங்ஙனம் மரவுரி உடுத்துக்கொள்ளும்பொழுதே ராஜகுருவாகிய வஸிஷ் டர் அது கண்டு அவளை உடுத்துக்கொள்ள வேண்டா மென்று தடுத்துக் கைகேயிக்காக முகத்தைத் திருப் பிக்கொண்டு 'கைகேயி! நீ அதிக்ரமித்து நடப்பவளா யிருக்கின்றனை; மேலும் கெட்டமதி யுடையவளாயிருக் கின்றனை; இக்குலத்தின் பெருமையைக் கெடுக்குந் தன் மையளாயிருக்கின்றனை; நீ அரசனை மோசஞ்செய்தது மாத்ரமேயன்றி அத்துடன் போகாமல் மேன்மேலும் மர்யாதை தவறிக் கொடுஞ்செயலுக்கு முயலுகின்றனை. சீலத்தைக் கைவிட்ட பாபிஷ்டையே! ஸீதாதேவி இப் பொழுது எவ்விதத்திலும் அரண்யத்திற்குப் போக வழியில்லை. ராமனுக்கு ப்ரக்ருதத்தில் ஸித்தமாயிருக்

கிற ஸிம்ஹாஸனத்தில் ஸீதை வீற்றிருக்கலாகும். அங்ஙனம் வீற்றிருந்து ராஜ்யத்தையும் பரிபாலனஞ் செய்யக்கூடும். 'பெண்பிள்ளை ராஜ்யபரிபாலனஞ் செய்வது எப்படி' என்பாயோ? இல்லறவாழ்க்கையிலிருப்பவரனைவர்க்கும் பார்யையே ஆத்மாவென்று சொல்லப்பட்டிருக்கின்றதன்றோ? அப்படியே ஸீதையும் ராமனது ஆத்மாவாகையால் அவன் பரிபாலனஞ் செய்யவேண்டிய பூமியை அவள் பரிபாலித்து வருவது யுக்தமேயாகும். அப்படியில்லாமல் ஸீதாதேவி ராமனோடுகூடவே அரண்யத்திற்குப் போவாளாயின், நாங்களும் கூடவே போய்விடுவோம். இப்பட்டணத்திலுள்ளவர் யாவரும் இங்கு நிற்காமல் அவர்களுடன் கூடவே போவார்கள். அப்படியே தண்டுநாயகர்களும் (ஸேனாபதிகளும்) ராமன் பார்யையோடுகூடிப் போகிற இடத்திற்குப் புறப்பட்டுப் போய்விடுவார்கள். மேலும், அரசனும் அவனை அடுத்துப் பிழைக்கின்ற இத்தேசத்திலுள்ளவர்களும் இப்பட்டணத்திலுள்ளவர்களுமாகிய அனைவர்களும் அசையும் பொருள் அசையாப்பொருளாகிய ஸமஸ்த ஸொத்துக்களோடும் தாஸீதாஸாதி ஸகல பரிவாரங்களோடுங் கூடி ராமனைப் பின்றொடர்ந்தே போவார்கள். பரதனும் சத்ருக்னனும் மரவுரிகளை உடுத்துக்கொண்டு ராமனோடு கூட அரண்யத்திற்றானே வாஸஞ்செய்யக்கருதி அரண்யஞ்சென்றிருக்கிற தமது ஐயனாகிய ராமனைப் பின்சென்று வர்த்திப்பார்கள். அதன்பிறகு துராசாரையும் ப்ரஜைகளுக்கு அஹிதஞ்செய்பவளுமாகிய நீ ஜனங்களெல்லாந்தொலைந்து பாழடைந்திருக்கிற இப்பூமியை வ்ருக்ஷங்களோடு கூட ஒருத்தியாகவே பரிபாலித்துக்கொண்டிருப்பாயாக. ராமன் எவ்விடத்தில் ராஜாவாயிரானோ, அது சிறிதும் ராஜ்யமாயிருக்க நேராது. எங்கு ராமன் வாஸஞ் செய்வானோ, அது அரண்யமாயினும் ராஜ்யமேயாகும். பரதன் நமது மஹாராஜனுக்குப் பிறந்

திருப்பானுயின், தனக்குத் தந்தை மனப்பூர்வமாகக் கொடாத இப்பூமண்டலத்தைக் கைப்பற்றி ஆள உரியனல்லன்; அப்படிப்பட்ட தந்தையை இவ்வளவுதூரம் மனவருத்தமுறச்செய்த உன்னிடத்திலும், புதல்வனைப் போல் நடக்கவும் உரியவனல்லன். நீ பூமியை விட்டு ஆகாயத்திற்கு எழும்புவாயாயினும், தனது தந்தையின் வம்சத்து மன்னவர்களது சரித்ரத்தையும், மூத்தவன் இருக்க இளையவன் ராஜ்யபட்டாபிஷேகங் கொள்ளலாகாதென்கிற மர்யாதையையும் தெரிந்துகொண்டிருக்கிற பரதன் எள்ளளவாயினும் அவ்வழி தவறி, நீ விரும்பியப்படி மற்றொரு விதமாக நடக்கமாட்டான். உலகத்தில் ராமனை அநுஸரித்துச் செல்லாதவன் எவனும் அகப்படான்; இனிப் பின் பிறந்தவனாகிய பரதன் அவனை எவ்வளவு அநுவர்த்திப்பானோ, அது சொல்லவேண்டுமா? ஆகையால் நீ புதல்வனிடத்தில் மிகுந்த ப்ரீதியுடன் ராமனை இவ்வளவு பாடுபடுத்தி ராஜ்யத்தைப் பெற்றுக்கொண்டபோதிலும், ராமனையே அநுஸரித்திருக்குந் தன்மையனாகிய பரதனுக்கு அது சிறிதும் சரிப்படாதாகையால் கடைசியாக நீ அவனுக்கு அப்ரியமே செய்தவளாகின்றனை. கைகேயீ! இப்பொழுதே பசுக்களும் யானைகளும் ம்ருகங்களும் பக்ஷிகளும் ராமனைப் பின்சென்று போகக் காண்பாய். வ்ருக்ஷங்களும் அவன் போகுந் திசையில் சாய்ந்து பின் செல்வதுபோல் புலப்படுவதையும் காண்பாய். தேவீ! நீ இனி உன் மருமகளுக்கு மரவுரி கொடுப்பதை நிறுத்திச் சிறந்த ஆடையாபரணங்களைக் கொடுப்பாயாக. இவளுக்கு மரவுரி கொடுக்கும்படி ஏற்பாடும் இல்லை; கொடுப்பதுந் தகாது' என்று மொழிந்து ஸீதையை மரவுரி உடுத்த வேண்டாமென்று வஸிஷ்டமாமுனிவர் தடுத்துவிட்டனர். அம்மாமுனிவர் மீளவுங் கைகேயியைப் பார்த்து, 'கைகேயீ! ராமன்

ஒருவன் அரண்யவாஸஞ் செய்யும்படி யன்ரே நீ வேண்டிக்கொண்டது? இந்த ஸீதையும் அரண்யஞ் செல்ல வேண்டுமென்று நீ வரங் கேட்கவில்லை. ஆகையால் ப்ரதிதினமும் ஆடையாபரணங்களால் அலங்காரஞ் செய்துகொண்டிருக்க வேண்டியவளாகிய இப்பெண்பிள்ளை பட்டாடை உடுத்து, மேலான ஆபரணங்களைத் தரித்தே ராமனேடு அரண்யத்தில் வாஸஞ் செய்வாளாக. இந்த ராஜகுமாரத்தி உத்தமங்களாகிய வாஹனங்களோடும் பரிஜனங்களோடும் பலவகை வஸ்த்ரங்களோடும் பொற்கிண்ணி முதலிய ஸமஸ்த கருவிகளோடுங்கூடியே போக அனுமதி கொடுப்பாயாக. நீ வரங் கேட்கும்பொழுது ஸீதையுங்கூட அரண்யத்திற்குப் போகவேண்டுமென்று வேண்டிக் கொள்ளவில்லையன்ரு?' என்றனர். அரசனுக்குக் குலகுருவும் நிகரில்லாத ப்ரபாவம் பொருந்தியவருமாகிய அந்த ப்ராஹ்மணேத்தமர் இவ்வாறு மொழிந்துகொண்டிருக்கும் பொழுதும், ப்ரியனுகிய தனது பர்த்தாவின் வேஷாதிகளையே அனுஸரித்து அவனேடு வனவாஸஞ் செய்ய விருப்பமுற்றவளாகையால் அப்பெண்மணியாகிய ஸீதாதேவிக்கு மரவுரியை உடுத்துக்கொள்ள வேண்டுமென்கிற அபிப்ராயம் எள்ளளவும் மாறவில்லை. முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தசரதன், ஸீதை மரவுரி உடுத்துக் கொள்வாளாயினும் கொடுக்கக்கூடாதென்று கைகேயியை வேண்டிக்கொள்ளலும், ராமன் கௌஸல்யையைப் பார்க்கப் போக வேண்டுமென்று தந்தையினிடம் ப்ரார்த்தித்தலும்.

அந்த ஸீதாதேவி, லோகநாதனுகிய ராமனே தனக்கு நாதனுயிருந்தும் அநாதைபோல் மரவுரியை உடுத்துக்கொண்டிருக்கையில், அங்குள்ள ஜனங்களெல்லோ

ரும் தசரதனைப் பார்த்து 'சீ! தசரதனே! உன் பிழைப்பும் ஒரு பிழைப்பா' என்று பெருங்கூச்சலிட்டனர். ஜனங்கள் அங்ஙனம் இடுங் கூச்சலைக் கேட்டு அம்மன்னவன் மனவருத்தம் மிகப் பெற்றுத் தன் ப்ராணங்களிலும் தர்மத்திலும் கிர்த்தியிலும் தனக்குள்ள பேராசையை அறுத்து விட்டனன். இக்ஷ்வாகுகுல நாதனுகிய அவ்வேந்தன் மனவருத்தத்தினல் வெப்பமாகப்பெருமூச்செறிந்துகொண்டு பார்யையாகிய அந்தக் கைகேயியைப் பார்த்து 'அடி கைகேயி! ஸீதை மரவுரி உடுத்துப் போவதுயுக்தமன்று. இவள் ஸுகுமாரமாயிருக்கப்பட்டவள்; மேலும் மிக்க இளமைப்பருவத்தி லிருப்பவள்; எப்பொழுதும் ஸுகமாகவே இருக்கத் தக்கவள். இப்படிப்பட்டவள் அரண்யத்தில் இருக்கலாகாதென்று என்குருவாகிய வஸிஷ்டமாமுனிவர் மொழிந்தது ஸத்யமே. இந்த ஸீதை மரவுரி உடுத்துக்கொண்டு ஜனங்களினிடையில் ப்ரஜ்ஞையில்லாத ஒரு தாபஸப்பெண்போல் நிற்கின்ருளே! பாதிவ்ரத்ய நியமத்தைக் கைப்பற்றி மன்னவர் தலைவனுகிய ஜனகனது குமாரத்தியாகி நிகரற்றிருக்கிற இப்பெண்மணி இப்படியாவதற்கு யாருக்கு என்ன அபகாரஞ் செய்கின்றனள்? ஜனகராஜன்புதல்வியாகிய ஸீதை மரவுரியைத் துறந்திருப்பாளாக. ஸீதையும் இங்ஙனம் மரவுரி உடுத்துக்கொண்டு அரண்யத்திற்குப் போகவேண்டுமென்று நான் முன்பு உனக்கு ப்ரதிஜ்ஞை செய்யவில்லை. ஆகையால் ராஜபுத்ரி வஸ்த்ராலங்காரங்களைப் பூர்ணமாகக் கைப்பற்றிமேலான பதார்த்தங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு ஸுகமாக அரண்யத்திற்குப் போவாளாக. நான் இனிப் பிழைத்திருக்க உரியவனல்லனுகையால் மரணகாலம் ஸமீபிக்கப்பெற்றுவிரும்பியவற்றைத் தப்பாமல் நிறைவேற்றுகிறேனென்று ஆணை

யிட்டு முதலில் தானே க்ரூரமாக ப்ரதிஜ்ஞை செய்து வைத்தனன்; நீயும் அறிவில்லாமையால் அந்த ப்ரதிஜ்ஞைக்கு ராமனை அரண்யத்திற்கு அனுப்பி உன் புதல்வனுக்குப் பாட்டாபிஷேகஞ் செய்கையே விஷயமென்று நிச்சயித்தனை. என்ன செய்வேன்! மூங்கிலை அதன் புஷ்பமே தஹிப்பதுபோல் இப்பொழுது என்னை என் ப்ரதிஜ்ஞையே தஹிக்கின்றது. பாபஸ்வபாவமுடையவளே! அடி அதமையே! ராமன் ஒருகால் உனக்கு ஏதாவது அபராதஞ் செய்திருப்பானாயினும், ஸீதையை இப்படி அரண்யத்திற்கு அனுப்பும்படி அவள் செய்த அபகாரம் உனக்கு யாது புலப்படுகின்றது? இந்த ஜனகராஜன் புதல்வி மான்பேடுபோல் அகன்றழகிய கண்களையுடையவள்; மெதுவான ஸ்வபாவ முடையவள்; ஆகையால் அபராதஞ் செய்யப் பொருள்; பாதிவ்ரத்யம் மிகுந்திருக்கப் பெற்றவள்; இப்படிப்பட்ட இம்மடந்தை உனக்கு யாது அபகாரம் இங்குச் செய்தனள்? பாபிஷ்டையே! உனக்கு ராமனைக் காட்டுக்கு அனுப்பினது போதாதா? இதுவொன்றே உன்னாத்மா இருக்குமளவும் நரகத்தை அனுபவிக்கப் போதுமே. மிகவும் துக்கங்களை விளைவிக்க வல்ல பாதகங்களை மேன்மேலும் செய்துகொண்டிருப்பதனால் உனக்கு ப்ரயோஜனம் என்ன? இதனால் நீ இன்னும் எந்த நரகத்திற்குப் போவாயோ, தெரியவில்லை. கைகேயி! ராமன் இங்கு அபிஷேகத்திற்காக வருகையில், அவனைப் பார்த்து 'மரவுரிகளை உடுத்துக்கொண்டு அரண்யத்தில் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் இருக்கவேண்டும்' என்று மொழிந்தனை; நான், அப்பொழுது நீ சொன்ன அவ்வளவு மாத்ரத்திற்கு (ராமனை அரண்யத்திற்கு அனுப்புவது மாத்ரத்திற்கு)த் தடை சொல்லாதிருந்தேனாகையால் அதைச் செய்வதாக ஒப்

புக் கொண்டவனுவேனன்றி, ஸீதையை அரண்யத்திற்கு அனுப்பும்படி நீயும் கேட்கவில்லை; நானும் செய்கிறேனென்று ஒப்புக்கொள்ளவில்லை. ஸுகுமாரியாகிய ஸீதையுங் கூட மரவுரி உடுத்துக்கொண்டிருக்கையில், நீ கண்ணாரக் காண்கிருயல்லவா? நீ எப்படிப்பட்டவளோ! அப்பொழுது நான் எவ்வளவு ப்ரதிஜ்ஞை செய்தேனே அவ்வளவு மாத்ரத்திற்கு (ராமனை அரண்யத்திற்கு அனுப்புவதுமாத்ரத்திற்கு) நீ உட்படாமல், தர்மந் தவறி அதையுங்கூட அதிக்ரமித்து மேலும் ஸீதையை இப்பாடு படுத்திப் பாதகஞ் செய்வதில் எனக்கு நிகரில்லையென்று கொடிகட்டி நரகம் போக விரும்புகின்றனையே' என்றனன். மஹாதர்ம ஸ்வபாவனுகிய அம்மஹீபாலன் இங்ஙனம் அழுதுகொண்டு கைகேயியின் மனந் தளராதிருப்பதுபற்றிச் சிறிதாயினும் துக்கத்தின் கரையைக் காணப்பெருதிருந்தனன். மேலும், அந்தப் புத்ரசோகம் மேலெழுகையில் அதில் மூழ்கி மிகவும் தடுமாற்றமுற்றுத் தரையில் விழ்ந்தனன். இங்ஙனம் கைகேயியைப்பார்த்து மொழிந்து தலைவணங்கப்பெற்று உட்கார்ந்திருக்கிற தந்தையைப் பார்த்து ராமன் வனத்திற்குப்போக ப்ரயாணப்பப்பட்டு 'தேவா! நீர் தார்மிகரா யிருப்பவர்; என் தாயாகிய கௌஸல்யையும் மிகுந்த புகழ் பெற்றவள்; மேலும் முதிர்ந்திருப்பவள்; மேலான சீலமுடையவள்; ஆனதுபற்றியே தனது அன்பு குமாரனை நீர் அரண்யம் போக அனுப்பின போதிலும், உம்மைச் சிறிதும் நிந்தியாதிருக்கின்றனள். நீர், விரும்பியவற்றை யெல்லாங் கொடுக்குந் தன்மையர். ஆகையால் எனக்குள்ள இவ்விருப்பத்தை ஈடேற்றவேண்டும். என் தாய் மூத்த பத்னியாகையால் அவளுக்கு நீர் ஸம்மானிப்பதில் குறை நேரிடாது. ஆயினும் இப்பொழுது நான் போன பின்பு என்னை விட்டுப் பிரிந்து பொறுக்கமுடியாமல் துக்கஸாகரத்தில் மூழ்கி

ஒன்றுந் தோன்றாதிருப்பாள். அவள் இதுவரையிலும் இப்படிப்பட்ட மனவருத்தத்தை அனுபவித்தறிந்தவ ளல்லள். ஆனதுபற்றி இப்பொழுது முன்னைவிட மேலாக அவளை, நான் வேண்டிக்கொள்வது பற்றி நீர் ஸம்மானிக்கவேண்டும். பூஜ்யராகிய நீர், மிகவும் மேன்மைப்படுத்த வேண்டியவளாகிய அக்கௌஸல்யையை, புத்ரசோகம் மேலெழப் பெறாதிருக்கும்படி மிகுந்த ஆதரவுடன் பார்த்துக்கொண்டு வருவீராயின், அக்கௌஸல்யையும் என்னை எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருந்து வருத்தமுறுவாளாயினும், உம்மைப்பற் றிப் பிழைத்திருப்பாள். தேவேந்த்ரனுக்கொப்பான மிடுக்குடையவரே! புத்ரனிடத்தில் பேராசையுடைய என் தாயாகிய கௌஸல்யையை, நான ஆரண்யஞ் சென்றபின்பு துக்கத்தினால் இளைத்து ப்ராணன்களைத் துறந்து யமலோகத்திற்குப் போகாதிருக்கும்படி நீர் அவளிடத்தில் நான் வேண்டிக்கொண்டபடி நடக்க வேண்டும்' என்று மொழிந்தனன். முப்பத்தெட்டா வது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ தசரதன் ஸுமந்த்ரனோடு ராமனுக்கு ரதங் கொண்டுவர நியமித்தலும், கௌஸல்யை ஸீதைக்கு நீதி உபதேசித்தலும், ராமன் கௌஸல்யை முதலிய தாய்மார்களுக்கு நல்வார்த்தை சொல்லுதலும் }

ராமன் இவ்வாறு மொழிந்த வார்த்தையைக் கேட் டுத் தசரதன் தானும் தன்பார்யைகளுமாக, அவன் முனிவேஷந் தரித்திருப்பதைக் கண்டு துக்காவேசங் கொண்டு மூர்ச்சையடைந்தனன். துக்கத்தினால் மிகவும் பரிதபித்துக்கொண்டிருக்கிற மன்னவன் ராமனைப் பார்க் கப் பொறாதிருந்தனன்; பார்த்தும் மனங் கொதிக்கப்

பெற்று ஒன்றும் பேசமுடியாதிருந்தனன். இப்படி மஹாபாஹுவாகிய அம்மஹீபதி மிக்க மனவருத்த முற்று ஒரு முஹூர்த்தகாலம் மூர்ச்சை யடைந்தாற் போலிருந்து ராமனையே நினைத்துக்கொண்டு இங்ஙனம் புலம்பினன்:—'ஐயோ! நான் முன்பு அனேகங் குழந்தைகளைக் கொன்று பலர்க்குப் புத்ரசோகத்தை விளைத்திருப்பேன்; அல்லது பல ப்ராணிகளை ஹிம்ஸித்திருப்பேன்; ஆனதுபற்றியே எனக்கு இந்தப் புத்ரசோகம் நேரிட்டதென்று எனக்குத் தோற்றுகின்றது. தேஹம், தன்னைக் கற்பித்த கர்மம் நசித்தாலொழியத் தான் நசியாது. அந்தக் காலம் நேராதபொழுது எப்படிப்பட்டவனுக்காயினும் தேஹத்தினின்றும் ப்ராணன் போக நேராது. ஆனதுபற்றியே, கைகேயி என்னை இவ்வளவு பீடிக்கினும் எனக்கு மரணம் நேராதிருக்கின்றது. மேலும், அக்னியைப்போல் ப்ரகாசிக்கின்ற எனது அன்புகுமாரன் அழகான மெல்லிய வஸ்த்ரங்களைத் துறந்து முனிவர்கள் உடுத்துகிற மரவுரிகளை உடுத்து முன்னே நிற்கப் பார்த்துக்கொண்டிருந்தும் எனக்கு மரணம் நேராதிருக்கின்றது. இப்படிப்பட்ட வஞ்சனை செய்து தன் கார்யத்தை மாத்ரமே நடத்திக் கொள்ள ப்ரயத்னஞ் செய்கின்ற இந்தக் கைகேயி ஒருத்திக்காக இந்த ஜனங்களெல்லோரும் வருத்தப்படுகின்றார்களல்லவா? என்ன செய்வேன்' என்று புலம்பினன். அவ்வரசன் இங்ஙனம் புலம்பிக் கண்களில் நீர் ததும்பப் பெற்று 'ராமா!' என்று ஒரேதரம் சொல்லி அதற்கு மேல் ஒன்றும் மொழிய முடியாதிருந்தனன். பிறகு மன்னவன் சிறிது நேரங் கழித்துத் தெளிவு பெற்றுக் கண்களிரண்டிலுங் நீர் ததும்ப ஸுமந்த்ரனைப் பார்த்து 'ஸுமந்த்ரனே! நீ போய் விலாஸார்த்தமாக ஏற்படுத்தப்பட்டிருக்கிற தேரொன்றில் மேலான குதிரை

களைப் பூட்டி இவ்விடங் கொண்டு வந்து இம்மஹாபா கனை ஏற்றிக்கொண்டு போய் இந்தத் தேசத்திற்கு அப்புறத்தில் விட்டு வருவாயாக. தந்தையும் தாயுமாகச் சேர்ந்து ஸத்புருஷனும் வீரனுமாகிய புதல்வனை அரண்யத்திற்குத் துரத்துகின்றார்களே! அவன் ஸத் புருஷனாயிருக்குங் குணத்திற்கு இப்படிப்பட்ட பலன் தகுமா? தகாதே. ஆனதுபற்றிக் குணங்கள் அமை யப்பெற்றிருப்பவர்களின் குணத்திற்கு இப்படிப்பட்டதே பலமாய் விடியுமென்று எனக்குத் தோற்றுகின்றது. ஆகையால் குணங்களே வேண்டாம்' என்றனன். பிறகு ஸுமந்த்ரன் ராஜாஜ்ஞையைச் சிரஸில் வஹித்துச் சீக்ரமாக நடந்து சென்று தேரை அலங்கரித்துக் குதி ரைகள் பூட்டி ஓட்டிக்கொண்டு வந்தனன். பொன்களை இழைத்துச் சிங்காரஞ்செய்து மேலான குதிரைகள் பூட்டப்பெற்றிருக்கிற அழகிய ரதம் ஒன்று ஸித்தப் படுத்திக் கொண்டுவந்திருக்கிறேனென்று ஸுமந்த்ரன் கைகளைக் கூப்பிக்கொண்டு ராஜகுமாரனாகிய ராமனுக் குச் சொல்லினன். அப்பொழுது மன்னவனும் கோச க்ருஹத்தில் முக்யாதிகாரியாகிய [1] தனாத்யக்ஷனை வரவ ழைத்தனன். அந்த தனாத்யக்ஷனும் தேசகாலங்களை நன்கறிந்தவன்; உள்ளும் புறமும் ஒத்துப் பரிசுத்தமா யிருப்பவன்; அந்தந்த வஸ்துக்கள் இவ்வளவிவ்வளவு இருக்கின்றனவென்று நிச்சயித்துச் சொல்ல வல்லவன்; மன்னவன் அந்த தனாத்யக்ஷனைப் பார்த்து 'அப்பா! ஸீதை அரண்யத்தில் இருக்கவேண்டிய ஸம்வத்ஸரங் களைக் கணக்கிட்டுப் பார்த்து அந்தப் பதினான்கு ஸம்வத்ஸரங்களுக்கும் போதுமானபடி விலை உயர்ந்த வஸ்த்ரங்களையும் மேலான ஆபரணங்களையும் சீக்ர மாகக் கொண்டு வந்து இவளுக்குக் கொடுப்பாயாக' என்றனன். மன்னவன் அங்ஙனம் மொழிகையில், அவன் [2] தனாகாரத்திற் சென்று பதினான்கு ஸம்வத்

1. தனாத்யக்ஷன்-பொக்கிஷதாரன். 2 தனாகாரம்-பொக்கிஷக்ருஹம்

ஸரங்களுக்கும் போதும்படி ஆடையாபரணங்களைக் கொண்டுவந்து ஸீதைக்குக் கொடுத்தனன். ஸாமுத்ரிக லக்ஷணங்களுடன் கூடி அழகாகப் பிறந்திருக்கின்ற அந்த ஸீதையும் அரண்யத்திற்குப் போகப்புறப் பட்டு மிக்க அழகுபொருந்தி விளங்குகின்ற தனது அவ யவங்களைப் பலவகையான அந்த ஆபரணங்களால் அலங்கரித்தனள். விடியற்காலத்தில் உதயமாகின்ற ஸூர்யன் பளபளவென்று விளங்குகின்ற தன் கிரணங்க ளால் ஆகாயத்தை ப்ரகாசிக்கச் செய்வதுபோல், ஸீ தை பூஷணங்களால் நன்கு அலங்காரஞ்செய்துகொண் டு ஆபரணகாந்தியினுல் அம்மாளிகை முழுவதும் ப்ரகா சிக்கச் செய்தனள். அப்பொழுது மாமியாராகிய கௌ ஸல்யையானவள் இழிவான கார்யத்தை நெஞ்சிலும் நி னைக்கப்பொருதவளாகிய அந்த ஸீதையை இரண்டு கைகளாலும் கட்டியணைத்து உச்சி மோந்து மொழிந் தனள்:— 'ஸீதே! இவ்வுலகம் அனைத்திலும், அஸத் துக்களாகிய பெண்பிள்ளைகள், தமது கணவர்கள் எப் பொழுதும் வேண்டியவற்றை யெல்லாம் கொடுத்துக் கௌரவப்படுத்திக் கொண்டிருந்தபோதிலும், தைவிக மாகக் கஷ்டம் நேர்ந்து அவர்களது பதவி தாழ்வுற்றி ருக்குமாயின், அவர்களைச் சிறிதும் பொருள் செய்யா திருப்பார்கள். முதலில் மிகுந்தஸுகத்தை அனுபவிப் பின், கணவர்களுக்கு அக்காலத்தில் நல்லவர்களாயிரு ந்து பிறகு அவர்களுக்கு ஏழ்மை முதலிய விபத்துக் கள் சிறிது ஸம்பவிக்குமாயின், அப்பொழுது அப்பெண் பிள்ளைகள் துஷ்டைகளாகி அந்தக் கணவர்களைக் கை விடுவார்கள். இது ஸ்த்ரீகளின் ஸ்வபாவம். ஸ்த்ரீகளு க்குப் பொய்யுரைப்பதே இயற்கையாயிருக்கும்; க்ஷணந் தோறும் மனம் மாறிக்கொண்டேயிருக்கும்; அவர்களது மனம் இப்படிப்பட்டதென்று தெரிந்துகொள்ள முடி

யாது. அவர்கள் பாபகார்யங்களையே நினைத்துக்கொ ண்டிருப்பார்கள். அவர்களுடைய ப்ரீதி ஒருநொடிப் பொழுதில் மாறிப்போய்விடும்; ஒருக்ஷணங்கூட நிலை நின்றிராது. [1] பெரிய குலத்தில் பிறந்தமையாயினும், பிறர் செய்த உபகாரமாயினும், வித்யையாயினும், தமக் குப் பிறர் தானஞ்செய்ததாயினும், அக்னிஸாக்ஷிகமா கச் செய்துகொண்ட [2] பாணிக்ரஹணமாயினும், லோக மர்யாதையாயினும் ஸ்த்ரீகளின் மனத்தில் ஒருவிஷய மாகத் தோற்றாது. தனம் ஒன்றே அவர்களின் மனத் தில் பெரிதாகத் தோற்றும். அவர்களது மனம் மிக வும் சஞ்சலமாயிருக்கும். குலத்திற்குத் தகுந்தநடவடிக் கையோடுகூடி ஸத்யந்தவறாமல் பெரியோர்களது உப தேசத்தைப் பெரும்பேறாகக்கொண்டு சாந்தி உண்டா கப்பெற்று வர்த்திக்கும்படியான பதிவ்ரதைகளுக்குப் பரமபாவனமான வஸ்து பர்த்தா ஒருவனே. அவர்களுக் குப் பர்த்தா ஒருத்தனே எல்லோரிலும் மேலாயிருப் பவன்; மற்றை எவனும் அன்று. ஆகையால் என்புதல் வனை, அரண்யத்திற்குத் துரத்தப்பட்டானென்று நினை த்து அவமதிக்கவேண்டாம். அவன் தரித்ரனாயினும் தனவந்தனாயினும் அவனையே நீதெய்வமாகப் பார்த்துக் கொள்ளவேண்டும்' என்றனள். ஸீதையும் அக்கௌஸல் யை சொன்னவார்த்தையெல்லாம் தர்மத்தையே ப்ர யோஜனமாகக் கொண்டதென்று தெரிந்துகொண்டு தன்னெதிரில் இருக்கின்ற அந்த மாமியாருக்குக் கை களைக்குவித்து நமஸ்காரஞ்செய்து 'மாமியே! நீர் ஆஜ்

---

1. கௌஸல்யை இந்த வ்யாஜத்தினால் கைகேயியை நிந்தித்தா ளென்று தெரிகின்றது. இங்ஙனம் ஸ்த்ரீகளின் ஸ்வபாவங்களைச் சொல்லிப் பாதிவ்ரத்யத்தைத் திடப்படுத்துவதற்காகப் பதிவ்ரதைக ளின் குணங்களை ஸீதைக்கு உபதேசிக்கின்றனள். 2. விவாஹம்.

பித்தபடி எல்லாம் செய்கின்றேன். பர்த்தாவினிடத்
ல எப்படி நடக்கவேண்டுமோ, அவையெல்லாம் எனக்
த்தெரியும்; மேலும் நான் அவைகளைப்பெரியோர்களி
த்தில் கேள்வியுற்றுமிருக்கின்றேன். என்னை துஷ்ட
ஸ்த்ரீகளோடு ஒப்பிட்டுச் சொல்லவேண்டாம். காந்தி
சந்த்ரனை விட்டுப் பிரியாததுபோல் நான் தர்மத்தினி
றும் எள்ளளவும் சலிக்கமாட்டேன். தந்தியில்லாத
ணை ஒலிக்காதாப்போலவும், சக்ரமில்லாத ரதம் நடக்
காதாப்போலவும, நூறு பிள்ளைகளைப் பெற்றவர்களா
யினும் கணவர்களைத் துறந்த பெண்டிர்கள் என்றும்
ஸுகப்படமாட்டார்கள். ஸ்த்ரீகளுக்குத் தந்தை மித
மாகவே (ஐஹிகங்களை மாத்ரமே) கொடுப்பான்; தாயும்
மிதமாகவே கொடுப்பாள்; பர்த்தா கொடுப்பதற்கு மாத்
ரம் அளவில்லை. அவன் ஐஹிகாமுஷ்மிக பலங்களை
யெல்லாங் கொடுக்கவல்லவன். அப்படிப்பட்ட பர்த்தா
வை எவள்தான் பூஜியாதிருப்பாள்? இப்படிப்பட்ட
பாதிவ்ரத்யதர்மத்தை அவலம்பித்து நடக்குந் தன்மை
யளும், பின்னும் மஹாபதிவ்ரதைகளாயிருப்பவர்களிடத்
தில் ஸாமான்ய தர்மங்களையும் விசேஷ தர்மங்களையும்
கேட்டிருப்பவளுமாயிருக்கின்றேன். இப்படிப்பட்ட நான்
எப்படி பர்த்தாவை அவமதிப்பேன்? ஸ்த்ரீகளுக்குப்
பர்த்தாவேயன்றோ தெய்வம்?" என்றனள். ஸத்த்வகுண
பரிபூர்ணையாகிய கௌஸல்யை தன் மனத்திற்கினிதாக
ஸீதை மொழிந்த வார்த்தையைக் கேட்டு, உடனே
ராமன் காட்டிக்குப் போகிறானேயென்கிற துக்கத்தினா
லும், ஸீதையின் பாதிவ்ரத்யமஹிமை அற்புதமாயிருக்
கின்றதே யென்கிற ஸந்தோஷத்தினாலும் கண்ணீர்
பெருக்கினள். பின்பு ராமன் மிகவுந் தார்மிகனாகையால்
மற்றைத் தாய்மார்களெல்லோரையும் பூஜித்துவிட்டுத்

தன் தாயாகிய கௌஸல்யையை வலஞ்செய்து கைகூப்பி அக்கௌஸல்யையைப் பார்த்து 'தாயே! நீமனவருத்தப் படாதிருப்பாயாக. என் தந்தையைப் பாதுகாத்து வருவாயாக. வனவாஸகாலம் சீக்ரத்திலேயே தீர்ந்துவிடும். நீ கண்ணை மூடிக்கொண்டு நித்ரை போகும்பொழுதே இந்தப் பதினான்கு ஸம்வத்ஸரங்களுங் கடந்து போய்விடும். இவையெல்லாம் உனக்கு ஒருராத்ரி நித்ரைபோலவே தீர்ந்து செல்லும். பிறகு இவ்விடம் வந்துஸ்னேஹிதர்களெல்லோரும் சூழ்ந்திருக்கையில் மனக்கருத்து முழுவதும் ஈடேறப் பெற்றிருக்கிற என்னைப் பார்க்கலாம்' என்றனன். ராமன் இவ்வாறு விஷயங்களையெல்லாம் [1]க்ரோடீகரித்து இவ்வளவில் அடக்கி நிஷ்கர்ஷித்துச் சொல்லிவிட்டுப் பிறகு முந்நூற்றைம்பது தாய்மார்களையும் தனித்தனியே குறிப்பிட்டுப் பார்த்து விசாரித்தனன். தசாதகுமாரனாகிய அந்த ஸ்ரீராமன் தனது தாயாகிய கௌஸல்யையைப்போலவே மனவருத்தமுற்றிருக்கிற அந்தத் தாய்மார்களெல்லோரையும் பார்த்து அஞ்சலிசெய்து தர்மம் அமைந்திருக்குமாறு 'அன்னையர்களே! ஓரிடத்திலேயே கூடி ஆடிக்கொண்டிருந்த சில காலபரிசயத்தினாலாவது அஜ்ஞானத்தினாலாவது நான் எதாயினும் அபராதஞ் செய்திருப்பேனாயின், அதைப்பொறுத்தோமென்று அனுமதிசெய்ய வேண்டும். உங்களிடம் போய்வருவதாக நான் செலவுகேட்டுக்கொள்ளுகிறேன்' என்றனன். ராமன் அவ்வாறு தர்மம் அமைந்திருக்கும்படி மனவூக்கத்துடன் நல்விஷயமாகச் சொன்னவார்த்தையைக் கேட்டு ராஜபத்னிகளெல்லோரும் மனம் நோகப்பெற்றிருந்தனர். ராகவன் இவ்வாறு மொழிந்து நிற்கையில்மனம்பொறுக்கமாட்டாத மன்னவரது மடந்தையர்களெல்லோரும் பெண் க்ரௌஞ்சப் பறவை

1. சுருக்கி.

கள்போல் பெருவருத்தமுற்றுக் கூக்குரலிட்டுக்கதறினர். முன்பு ப்ரதிதினமும் மேகத்வனிபோன்ற ம்ருதங்கம் த வில் மேகவாத்யம் முதலிய வாத்யகோஷங்கள்முழங்கப் பெற்றிருந்த அந்தத் தசரதமன்னவனுடைய மாளிகை யானது, அப்பொழுது அங்குள்ள ஜனங்கள் மிகுந்த மனவருத்தத்தில் ஆழ்ந்து ராமகுணங்களைப் புகழ்ந்தும் கைகேயியை இகழ்ந்தும் பலவகை வாக்யங்களைச் சொல் லிக் கூக்குரலிட்டுக் கதறுந்த்வனிகளால் எங்கும் நிரம்பி யிருந்தது. முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ ராமன் வனத்திற்கு ப்ரயாணமாய்ப் போ தலும், ப்ரஜைகள் அது கண்டு கதறுதலும். }

பிறகு ராமனும் ஸீதையும் லக்ஷ்மணனும் கைகளைக் குவித்து மன்னவனது பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்காரஞ் செய்து வயது முதிர்ந்த தாய்தந்தையர் களின் பணிவிடை நமக்குக் கிடைக்கவில்லையே யென்ற மனவருத்தத்துடன் ப்ரதக்ஷிணஞ் செய்தனர். ராமன் ஸமஸ்த தர்மங்களையும் அறிந்தவனாகையால் தந்தையின் அனுமதியில்லாமல் ஸீதையையும் லக்ஷ்மணனையும் அழைத்துக்கொண்டு போகலாகாதென்று தெரிந்து அவர்களுக்கும் அவ்வரசனிடம் அனுமதி கொடுப்பித் துத் தாயை விட்டுப் போகவேண்டுமே என்று மனம் மயங்கப்பெற்றுத் தாயாகிய கௌஸல்யைக்கு நமஸ்கா ரஞ் செய்தனன். ப்ராதாவாகிய ராமன் நமஸ்காரஞ் செய்த பின்பு லக்ஷ்மணனும் அக்கௌஸல்யைக்கு நமஸ் காரஞ்செய்தனன். இங்ஙனம் கௌஸல்யைக்கு நமஸ் காரஞ் செய்த பின்பு, அந்த லக்ஷ்மணன் தனது தாயா கிய ஸுமித்ரையின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்கரித்தனன். அந்தத் தாயாகிய ஸுமித்ரையும் நமஸ்காரஞ் செய்கின்ற லக்ஷ்மணனைப் பார்த்துக்

கண்ணீர் பெருக்கிக்கொண்டே அம்மஹாபாஹுவை அணைத்து உச்சிமோந்து அவனுக்கு ஹிதம் உண்டாகக்கருதி மேல்வருமாறு மொழிந்தனள்:—[1] 'பிள்ளாய்! கௌஸல்யை எப்படி லோகரக்ஷணத்தின் பொருட்டு

---

1 இதற்கு—'ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய ஸ்வநுரக்தஸ் ஸுஹ்ருஜ்ஜநே। ராமே ப்ரமாதம் மா கார்ஷீ: புத்ர ப்ராதரி கச்சதி' என்று மூலம். (ஸுஹ்ருஜ்ஜநே ராமே) ஸ்னேஹிதனாகிய ராமனிடத்தில், (ஸு அநுரக்த:) மிகவும் ப்ரீதி அமையப் பெற்றிருக்கிற (த்வம்) நீ, (வநவாஸாய) வனத்தில் வாஸஞ் செய்வதற்காக, (ஸ்ருஷ்ட:) ஸ்ருஷ்டிக்கப்பட்டனை; என்னிடத்தில் உன்னைத் தெய்வம் பிறப்பித்தது. ஆகையால்—(ப்ராதரி) உன்னுடன் பிறந்தவனாகிய ராமன். (கச்சதி ஸதி) போகும்பொழுது; பார்வையோடு கூடிப் புஷ்பித்திருக்கின்ற வனத்தைப் பார்த்துக்கொண்டு அவ்வழகில் மனஞ்சென்று மெய்ம்மறந்து நடந்து போகும்பொழுது என்றபடி. (ப்ரமாதம் மாகார்ஷீ:) மனவூக்கந் தவறுதல் செய்யாதிருக்கவேண்டும். ராமனது நடையழகு உன மனத்தை இழுக்குமாகையால் அதில் ஆழ்ந்து அவனை ரக்ஷிக்கும் கார்யத்தில் ஏமாறிப் போக வேண்டாமென்று பொருள். அன்றியே—(ராமே கச்சதி) ராமன் அரண்யத்திற்குப் போகும்பொழுது (ப்ரமாதம் மாகார்ஷீ:) அவன் போகட்டுமென்று நீ பராக்கடித்து இங்கேயே நின்றுவிடவேண்டாமென்று மற்றொரு பொருளுங் கூறுவர். இப்படி கோவிந்தராஜர். அன்றியே—(ஸ்ருஷ்டஸ்த்வம்) நீ ஸ்ருஷ்டிக்கப்பட்டவன். ராம கைங்கர்யத்திற்காகவே பிறப்பிக்கப்பட்டவன். ஒருவனுடைய தூண்டுதலின்றி நீயாகவே ராமனது பாதாரவிந்தங்களில் பரிசர்யை செய்யுந் தன்மையனல்லவோ நீ யென்றபடி. இப்படிப்பட்ட நீ ராமனுக்கு தாஸ்யம் செய்வதில் கண்காதுகளொன்றுமிருக்கப் பெற்றவனாகையால் (சேஷாவதாரமாகையால்) உனக்கு நான் சொல்லவேண்டியது யாதிருக்கின்றதென்று கருத்து. (வநவாஸாய) வனவாஸத்திற்காக ஸ்ருஷ்டிக்கப்பட்டனை. அதாவது—ராமனுக்கு ஸஹாயமாயிருக்கும் ப்ரயோஜனத்திற்காகவே நான் உன்னைப் பெற்றனன். ஆகையால் ராமனோடு அரண்யத்திற்குப் போவாயாயின், உன்னை நான் பெற்றதற்கு ப்ரயோஜனம் ஸித்திக்கும்; இல்லையாயின், நீ பிறந்தும் ப்ரயோஜனம் இல்லையென்று கருத்து. (ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே) ஒருவன் உனக்கு

ராமனைப் பெற்றாளோ, அப்படியே நானும், ஸ்னேஹிதனாகிய ராமனிடத்தில் மிகவும் ப்ரீதி அமைந்திருக்கப்பெற்ற உன்னை அவனுடன்கூட அரண்யஞ் சென்று பரிசர்யை செய்வதற்காகவே பெற்றனன். இதற்காகவே உன்னைத் தெய்வம் என்னிடத்தில் பிறப்பித்தது. ஆகையால் அரண்யத்தில் ராமன் ஆச்சர்யங்களைப் பார்த்துக்கொண்டு பரவசனாகி மெய்ம்மறந்து போகும்பொழுது நீ மனவூக்கந் தவறுதலின்றிக் காத்துக்கொண்டிருக்க

---

ஸ்னேஹிதனாயிருப்பது மாத்ரத்திற்கே அவனிடத்தில் மிகுந்த ப்ரீதியைக் காட்டுவாய்; அப்படியிருக்க, எல்லோரும் தன்னை ஆஸ்ரயித்து ஜீவிக்கும்படி விளங்குகின்ற ராமனிடத்திலும் ப்ரீதியோடிருப்பாயாக. அன்றியே—ஸ்னேஹிதனாகிய ராமனிடத்தில் உனக்குப் பிறந்தது வே முதலாக மிகுந்த ப்ரீதி உண்டாயிருக்க, இப்பொழுது நீ அவனோடு வனத்திற்குப் போகவேண்டுமென்று நான் சொல்லவேண்டுமோ என்று கருத்து. ஆயினும் பெரியோர்களாயிருப்பவர் சிறியவர்களுக்குத் தெரியச் சொல்லி நியமிக்க வேண்டுமாகையால் நான் உனக்கு நியமிக்கவேண்டியது சிறிது இருக்கின்றது. (ராமே ப்ரமாதம் மாகார்ஷீ:) ராமன் விஷயத்தில் மனவூக்கந் தவறியிருக்க வேண்டாம், அந்த மனவூக்கந் தவறுதல் யாதெனில்—(ஹீராதரி மச்ஹதி) ராமன் போய்க்கொண்டிருக்கும்பொழுது அவனது நடையழகில் கண்களை நிறுத்திவிடுவாயாயின், அந்த ஸமயத்தில் ராமனது ரக்ஷணத்தில் உனக்கு மனவூக்கந் தவறிப் போகுமாகையால் அப்பொழுது ஏதாயினும் ஒரு கெடுதி ஸம்பவித்து அவனைப்போக்கடித்துக் கொள்ளவேண்டி வரும். ஆகையால் அங்ஙனம் மனவூக்கந் தவறுதலின்றி இருப்பாயாக வென்றபடி. தனிஸ்லோகி. அன்றியே—(ஸ்வநுரக்தஸ் ஸுஹ்ருஜ்ஜநே) இவ்விடத்திலுள்ள ஸ்னேஹிதர்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனாயினும், (வநவாஸாய) ராமனோடு அரண்யத்திற்குச் சென்று வாஸஞ் செய்யும்படி, (ஸ்ருஷ்ட:) அனுமதி செய்யப்பட்டனை. நான் அனுமதி செய்கிறேனென்றபடி. மற்றதெல்லாம் கீழ்க் கூறினபடியே, இங்ஙனம் மஹேஸ்வர தீர்த்தர்.

வேண்டும். 'ராமனோடு போகவேண்டுவது ஏன்' என்பாயோ? பாபமற்ற ஸ்வபாவமுடையவனே! ராமன் ராஜ்யாதிகளின்றி விபத்திலகப்பட்டுக்கொண்டிருந்தாலும் ராஜ்யாதி ஸம்ருத்தியோடிருந்தாலும் இவனே உனக்கு ரக்ஷகன். மேலும், இளையவன் மூத்தவனைப் பின்சென்று அவனுக்கு வசப்பட்டிருக்க வேண்டுமென்பது உலகத்திலுள்ள ஸத்புருஷர்கள் ஆசரிக்குந் தர்மமேயன்றோ? இவ்வளவேயன்று; இபபடி மூத்தவனைப்பின்பிறந்தவன் அநுஸரித்து வர்த்திப்பதும், தானமும், யாகதீக்ஷை வஹிப்பதும், யுத்தங்களில் பின்வாங்காமல் தேஹத்தை விடுவதும் ஆகிய இவை யெல்லாம் உங்கள் குலத்திற்குரிய தர்மங்களே. இவை இந்தக்குலத்தில் வெகுகாலமாக நடந்து வருகின்றன. ஆகையால் தேஹத்தை விடவேண்டியதாக நேர்ந்தாலும் அங்ஙனஞ்செய்து ராமனை ரக்ஷிக்க வேண்டும்' என்று இவ்வாறு மொழிந்து, ராமனைத் தவிர மற்றை எவ்விஷயத்திலும் ப்ரீதியென்பது சிறிதுமில்லாமல் ராமனுடன் புறப்பட்டுப் போக முயன்றிருக்கிற அந்த லக்ஷ்மணனைப் பார்த்து 'போ, போ' என்று அடிக்கடி மொழிந்து மீளவும் அவனை நோக்கி[1] 'ராமனைத்தசரத

1 இதற்கு—'ராமம் தஶரதம் வித்தி மாம் வித்தி ஜநகாத்மஜாம்। அயோத்யாமடவீம் வித்தி கச்ச தாத யதாஸுகம்' என்று மூலம். இதற்கு விசேஷார்த்தம்—அரண்யத்தில் வாஸஞ் செய்யும்பொழுது தாயும் தந்தையும் பட்டணமும் நினைவுக்கு வந்து லக்ஷ்மணனுக்கு மனஞ் சலிக்குமோ வென்று நினைத்து ஸுமித்ரை தாய் தந்தை முதலியவர்களுக்குப் பதிலாக வேறு தாய் தந்தைகளைச் சொல்லுகின்றனள்.—(ராமம்) ராமனை, (தஶரதம்) தசரதனாக, தந்தையாக, (வித்தி) தெரிந்துகொள்க. (ஜநகாத்மஜாம்) ஸீதையை, (மாம்) நானாக, அதாவது—தாயாக, (வித்தி) தெரிந்துகொள். (அடவீம்) அரண்யத்தை, (அயோத்யாம்) அயோத்யையாக, அயோத்யையைப் போன்ற போகஸ்தானமாக, (வித்தி) தெரிந்துகொள். (தாத) அப்பா! (யதாஸுகம் கச்ச) ஸுகமாகப் போ. ராமனை அநுவர்த்

ராகத் தெரிந்துகொள். ஸீதையை நானென்று நினைத்

---

திப்பதே உனக்கு உரிய ஸுகமாகும். ராமனையே தந்தையாகவும், ஸீதையையே தாயாகவும், அரண்யத்தையே அயோத்யையாகவும் நினைத்து ராமனைப் பின் சென்று போவாயாக. எங்களையும் அயோத்யையையும் நினைத்துக்கொண்டு மனஞ் சலிக்கப் பெறுதிருப்பாயாக வென்று பொருள். அல்லது—(ராமம்) ராமனை, (தஶரதம்) தஶதி மத்ஸ்யாதீநிதி தஶ:—பக்ஷி—மீன் முதலியவற்றைப் பற்களால் கடிக்குந் தன்மையுள்ள பக்ஷிக்குத் தசமென்று பேர், 'தம்ஶ தம்ஶநே' என்று தாதுபாடத்தில் படிக்கப்பட்டது. 'தம்ஶ: தம்ஷ்ட்ரா வ்யாபார:' தசனமாவது பற்களால் கடிக்கையென்று அதன் பொருளும் அங்குக் கூறப்பட்டது. இங்குப் பக்ஷியென்று பக்ஷிகளிற் றலைவனுகிய கருடனைச் சொல்லுகிறது. 'தஶ: பக்ஷீ விஹங்கம:' என்று ஹலாயுத நிகண்டுவில் தசமென்று பக்ஷிக்குப் பேரென்று சொல்லப்பட்டது. (தஶரதம்) கருடனை ரதமாகவுடையவனாக, விஷ்ணுவாக, (வித்தி) அறிவாய். (ஜநகாத்மஜாம்) ஸீதையை, (மாம்) லக்ஷ்மியாக, (வித்தி) அறிவாய், (அடவீம்) அரண்யத்தை, (அயோத்யாம்) 'தேவாநாம் பூரயோத்யா' என்று சொல்லப்பட்ட பரமபதமாக, (வித்தி) அறிவாய். ராமனை விஷ்ணுவாகவும், ஸீதையை லக்ஷ்மியாகவும், அரண்யத்தைப் பரமபதமாகவும் தெரிந்துகொள்வாயென்றபடி. அல்லது—(ராமம் தஶரதம் வித்தி) ராமனையும் தசரதனையும் தெரிந்துகொள். இவ்விருவர்க்கும் உள்ள தாரதம்யத்தை ஆலோசித்துப் பார். (மாம் ஜநகாத்மஜாம் வித்தி) என்னையும் ஸீதையையும் தெரிந்துகொள், குணங்களில் எங்களிருவர்க்குமுள்ள தாரதம்யத்தைத் தெரிந்துகொள்வாய். அங்ஙனம் ஆலோசித்துப் பார்க்கையில், என்னைக் காட்டினும் ஸீதையே உனக்கு ஹிதபரையாயிருப்பாள். (அயோத்யா மடவீம் வித்தி) அயோத்யையையும் அரண்யத்தையும் தெரிந்து கொள். அவ்விரண்டுக்குமுள்ள தாரதம்யத்தை ஆலோசித்துப் பார்த்துத் தெரிந்து கொள்வாய். அயோத்யையைக் காட்டிலும் அரண்யமே ராமகைங்கர்யத்தை இடைவீடின்றி விளைவிக்கும் ஸ்தானமாயிருப்பது பற்றி அதுவே மேலாயிருக்கும். நீ அடவிக்குச் சென்று இங்குள்ள தந்தையையும் தாயாகிய என்னையும் இவ்வயோத்யா புரத்தையும் நினைத்துக் கொண்டு மனம்

துக்கொள். அரண்யத்தை அயோத்யையாகப் ஈவித்

---

கலங்கப் பெற்றிருக்க வேண்டாம். தசரதரைக்காட்டிலும் ராமனே மேலானவன்; என்னைக் காட்டிலும் ஸீதையே உனக்கு ஹிதபரையா யிருப்பவள்; அயோத்யையைக்காட்டிலும் அரண்யமே உனக்கு ப்ரியமான ராமகைங்கர்யத்திற்கு மிகவும் அனுகூலமாயிருக்குமென்று பொருள். அல்லது—(஢ஶரயம்) தசரதரை, (ராமம்) 'ரமு உபரமே' என்கிற தாதுவினின்றும் உண்டான தாகையால் இந்த ராமசப்தம் உபரமத்தைச் சொல்லுகிறது. உபரமமாவது—தொலைந்து போதல். தொலைந்து போனவராக. அதாவது—செத்துப் போனவராக. (வித்தி) அறிவாயென்க. (மாம்) என்னை, (ஜநகாத்மஜாம்) என் தந்தைக்குப் புதல்வியாகத் தெரிந்து கொள்வாய். கைகேயி பாதைப் படுத்துகையில், பர்த்தாவுங் காலஞ் சென்று போகையில், இனி என் தந்தையின் க்ருஹத்திற்குப் போயிருக்க வேண்டியவளாகத் தெரிந்து கொள்ளென்க. (அயோத்யாம்) அயோத்யா புரத்தை, (அடவீம் வித்தி) அரண்யமாகத் தெரிந்து கொள். அரண்யம்போல் ஜன ஸஞ்சாரமற்றிருக்கப் போகிறதென்று தெரிந்து கொள். நீ ராமனோடு அரணயஞ் சென்ற பின்பு தசரதர் ப்ராணன்களோடிருக்கமாட்டாராகையால் அவர் இல்லை யென்றே தெரிந்துகொள். நானும் கைகேயியால் துரத்தப்பட்டு என் தந்தையது க்ருஹத்திற்கே போய்ச் சேருவேன். இப்பட்டணமும், ஜனங்கள் எல்லோரும் துறந்து ராமனைப் பின் சென்று போகையில், சூன்யமாகி அடவியைப் போலவே ஆகுமென்று கருத்து. இங்ஙனங் கோவிந்தராஜர்.

அன்றியே—(ராமம்தஶரயம்வித்தி) உபாதி வசத்தினால் தந்தையாகிய தசரதரிடத்திலுள்ள மிகுந்த ப்ரீதியை விட்டு நிருபாதிகமான தந்தையாகிய ராமனிடத்தில் ப்ரீதியைச் செலுத்துவாயாக. (மாம் வித்தி ஜநகாத்மஜாம்) உபாதி வசத்தினால் தாயாகிய என்னை விட்டு நிருபாதிக மாதாவாகிய ஸீதையிடத்தில் பக்தியைச் செய்வாயாக. (அயோத்யா மடவீம் வித்தி) உபாதியால் வந்த அயோத்யையை விட்டு ராமனது வாஸஸ்தானமாகையால் நிருபாதிகமாக ப்ராப்ய தேசமாகிய அரண்யத்தில் ப்ரீதியோடு செல்வாயாக. அல்லது—(ராமம் தஶரயம் வித்தி) ராமனைத் தசரதரைப்போல் மஹாராஜனாக

துக்கொள். அப்பனே! இங்ஙனம் நினைத்து ஸுகமாகப்

நினைத்துக் கொள். (மாம் வித்தி ஜநகாத்மஜாம்) என்னைப்போல் ஸீதையும் பட்டமஹிஷி யாவாளென்று நினைத்துக்கொள். (அயோத்யா மடவீம் வித்தி) அரண்யத்தை அயோத்யையைப்போல் புஷ்ப பல ஸம்ருத்தியுள்ளதாக நினைத்துக்கொள். ஆகையால் ராமனையும் ஸீதையையும் அரண்யத்தையும் கேவலமாக நினைக்காமல் பெரிதாகவே நினைத்துக் கொள்வாயென்றபடி. அல்லது—(ராமம் தசரதம் வித்தி) தசரதரை ராமனாக நினைத்துக் கொள். ராமனைத் தந்தையென்னும் பரிபூர்ண புத்தியோடு நினைப்பதுபோல் தசரதரையுங் கூட நினைப்பாயாக. 'அஹந் தாவந் மஹாராஜே பித்ருத்வந் நோபலக்ஷயே। ப்ராதா பர்த்தாச பந்துச்ச பிதாச மம ராகவ:' (எனக்கு மஹாராஜரிடத்தில் தந்தை யென்னும் நினைவு கிடையாது. உடன் பிறந்தவனும் போஷகனும் பந்துவும் தந்தையும் எனக்கு ராமனே) என்று நீ சொன்னபடி தசரதரை நினைத்து அவமானிக்க வேண்டாம். (மாம் வித்தி ஜநகாத்மஜாம்) என்னைத் தசரதர் பாணிக்ரஹணஞ் செய்த தோஷத்தைப்பற்றி அவமதிக்காமல் ராமனுடைய தாய்க்குச் சக்களத்தி யென்று வெகுமானம் வைத்து ஸீதையிடத்தில் எப்படியோ, அப்படியே என்னிடத்திலும் பூர்ணமாக மாத்ருபுத்தியை வைப்பாயாக. (அயோத்யா மடவீம் வித்தி) 'வநம் நகரமேவாஸ்து யேந கச்சதி ராகவ:' (ராமன் போகும் வனமே பட்டணமாகட்டும்) என்கிறபடி ராமன் போகிற அரண்யத்தை வெகுமானிப்பதுபோலவே அயோத்யாபுரத்தையுங் கூட வெகுமானிக்கத் தகுமேயன்றி அவமானிக்க வேண்டாம். அன்றியே— (ராமம் தசரதம் வித்தி) ராமனும் தசரதரும் இருவரும் பெரியோர்களாயினும், அதில் எவன் பரிசாரகர்களுடையவனோ, எவன் பரிசாரகர்க ளில்லாதிருப்பவனோ, என்று விசாரித்துப் பார். அங்ஙனம் ஆலோசித்துத் தெரிந்துகொண்டு அவ்விருவரில் யாரை அனுஸரிக்க வேண்டுமோ, அதை ஊஹித்துப்பார். அதாவது—பரிசாரகர்களில்லாத ராமனையே அனுஸரிக்கவேண்டும். (மாம் வித்தி ஜநகாத்மஜாம்) என்னையும் ஸீதையையும் தெரிந்து கொள்வாய். எவள் தாஸீ பரிஜனங்களுடையவளோ, எவள் அதில்லாதவளோ, அதை விசாரித்துப் பார். பரிஜனங்களில்லாத ஸீதையையே அனுவர்த்திக்க வேண்டும். (அயோத்யா

போய் வருவாய்' என்று மொழிந்து நின்றனள். பிறகு ஸுமந்த்ரன் விநயம் தெரிந்தவனாகையால் வணக்கத்துடன் மாதலி இந்த்ரனுக்குச் சொல்வதுபோல், கைகளைக் கூப்பிக்கொண்டு ராமனைப் பார்த்து 'பெரும்புகழுடைய ராஜகுமாரனே! ரதங்கொண்டு வந்திருக்கின்றனன். ஏறுவாயாக; உனக்குச் சுபம் உண்டாகுமாக. ராமா! நீ எங்கே ஓட்டவேண்டுமென்று சொல்வாயோ, அவ்விடத்திற்குச் சீக்ரத்தில் உன்னைக்கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கிறேன். பதினான்கு ஸம்வத்ஸரங்களன்றோ நீ அரண்யத்தில் வாஸஞ்செய்யவேண்டும். அப்படியன்றோ உனக்குக் கைகேயி கட்டளையிட்டனள். ஆகையால் விலம்பஞ்செய்வது எதுக்காக? அதில் ஒருதினம் சென்றாலும் எவ்வளவோ லாபமாகையால் அதை இப்பொழுதே செலுத்த ஆரம்பிக்கவேண்டும்' என்றனன். ஸீதையும் மாமனாராகிய தசரதன் கொடுத்த ஆடையாபரணங்களால் நன்கு அலங்காரஞ் செய்துகொண்டு மனத்தில் ஸந்தோஷம் மிகுந்திருக்கப் பெற்று இருமடங்காக அழகுபொருந்தி விளங்குகின்ற அவயவங்களுடையவளாகி ஸூர்யன்போல் ப்ரகாசிக்கின்ற தேரின்மேல் ஏறிக்கொண்டனள். பின்பு ஸுவர்ணத்தினால் பூசப்பட்டு அக்னியைப்போல் தகதகவென்று விளங்குகின்ற அந்த ரதத்தின்மேல் அண்ணன் தம்பிகளாகிய ராமலக்ஷ்மணர்களிருவரும் சீக்ரமாக [1] ஆரோஹணஞ் செய்தனர். ஸீதைக்கு மாமனாராகிய தசரத

---

மடவீºவிதீயி) அயோத்யையை அரண்யமாகத் தெரிந்து கொள்வாய். அயோத்யையில் ஐஹிக ஸுகமாகிய ராஜ்யமே உள்ளது. அரண்யத்தில் ராமகைங்கர்ய ரூபமாகிய பரலோக ஸுகமும் உண்டு. பரலோக ஸுகத்தைக் கொடுக்கும்படியானதே அதிசயித்திருப்பதாகையால் அப்படிப்பட்ட அரண்யத்தையே ஆஶ்ரயிப்பாயாக.

1. ஆரோஹணம் - ஏறுதல்.

னும் வனவாஸஞ் செய்யவேண்டிய காலத்தைக் கணக்கு செய்து அதற்குத் தகுந்தபடி அப்பெண்பிள்ளைக்கு வஸ்த்ரங்களையும் ஆபரணங்களையும் அப்படியே புத்ரர்களுக்கு ஆயுத ஸமூஹங்களையும் கவசங்களையும் தவறாமல் கொடுத்தனன். ஸுமந்த்ரன் ஸீதைக்குக் கொடுத்த ஆடையாபரணங்களையும், ராம லக்ஷ்மணர்களுக்குக் கொடுத்த ஆயுதங்களையும் கவசங்களையும் மண்வெட்டி புட்டிற்கூடைகளையும் ரதத்தினிடையில் வைத்து, பிறகு ஸீதா ராம லக்ஷ்மணர்கள் மூவரும் ரதத்தில் ஏறக் கண்டு வாயுவேகத்தை நிகர்த்த வேகம் பொருந்திச் சுபலக்ஷணங்கள் அமைந்து மனத்துக்கினியவைகளாயிருக்கின்ற குதிரைகளைத் திட்டமாக அதட்டி ஓட்டினன். ராமன் வெகுகாலம் வாஸஞ்செய்வதாக முயன்று அரண்யம்போகையில் அந்தப் பட்டணம் முழுவதும் மூர்ச்சையில் மூழ்கிக்கிடந்தது. மேலும், குதிரைகள் யானைகள் முதலிய சதுரங்கபலமும் மூர்ச்சித்துவிட்டது. உத்ஸவத்தைப் பார்க்கவந்த ஜனங்களும் மூர்ச்சை அடைந்தனர். அனந்தரம் இவ்வாறு அப்பட்டணத்தில் ஜனங்கள் எல்லோரும் மனங்கலங்கப் பெற்றுச் செய்வது தோன்றாமல் இந்த்ரியங்களெல்லாம் அழிந்து ராமனைப் பின்சென்று போகவேண்டுமென்னும் இதொன்று மாத்ரம் தோன்றப்பெற்று த்வரைப்பட்டுக் கொண்டிருந்தனர். மகிழ்ந்து ஸந்தோஷித்திருந்த யானைகளும் மிகுந்த மனவருத்தத்தில் ஆழ்ந்து கோபாவேசங்கொண்டு கிங்காரங்களைச் செய்தன. குதிரைகளும் மிகுந்த பரிதாபம் அடைந்து இப்படியும் அப்படியும் சலித்து நின்றவிடத்தில் நிற்கமுடியாமல் ஆபரணங் குலுங்கி த்வனிக்கப்பெற்றுக் கனைத்தன. இவ்வாறு அப்பட்டணம் பேரொலியொன்றுண்டாகப் பெற்றிருந்தது.

பிறகு அந்த நகரத்திலுள்ள குழந்தைகள் கிழவர்கள் முதலிய ஜனங்கள் எல்லோரும் ராமனைப் பிரிந்து மிகுந்த மனவருத்தமுற்று வெயிலில் அடிபட்டு நீர் வேட்கையுற்றவர் ஜலந்தேடி ஓடுவதுபோல், ராமனைக்குறித்து ஓடிவந்தனர். அங்ஙனம் ஓடிவந்த அந்த ஜனங்கள் எல்லோரும் ராமனது ரதத்தின் பக்கத்தில் சிலரும் பின்புறத்தில் சிலருமாகப் பிடித்துக்கொண்டு தொங்கியிருந்து தலையை எடுத்து அவனுக்கு எதிர்முகமாக்கிக் கண்களினின்றும் நீர் பெருகி முகம் முழுவதும் நிரம்பப் பெற்றுப் பெருங்கூச்சலிட்டு ஸுமந்த்ரனைப் பார்த்து 'ஓ ஸூதனே! குதிரைகளின் கடிவாளங்களை இழுத்துப் பிடிப்பாயாக. குதிரைகளை மெதுவாக நடத்திக்கொண்டு செல்வாயாக. நாங்கள் ராமனது முகத்தைப் பார்க்கின்றனம். இப்பொழுது தவறினேமாயின், இனி நாங்கள் பார்ப்பது கஷ்டம். தேவகுமாரனைப்போல் விளங்குகின்ற புதல்வனாகிய ராமன் காட்டுக்குப் போகையில், அவனது தாயின் மனம் எப்படியோ வெடித்துப் போகாதிருக்கின்றதே! அது இரும்பினால் செய்யப்பட்டதென்றே சொல்லவேண்டும்; இதில் ஸந்தேஹமே இல்லை. ஸீதை உடனிழல்போல் பர்த்தாவைப் பின்றொடர்ந்து செல்கின்றனள்; ஆகையால் அவள் பாக்யமுள்ளவளாயினள். அப்பெண்மணி பதிவ்ரதா தர்மங்களில் மனந்திடமாயிருக்கப் பெற்று [1] ஸூர்யகாந்தி மேருபர்வதத்தை விடாமல் தொடர்ந்து செல்வதுபோல் பர்த்தாவைக் கைவிடாதிருக்கின்றனள். ஓ லக்ஷ்மணா! ப்ரியவாதியும் தேவர்களை நிகர்த்தவனுமாகிய அண்ணனுக்கு என்றும் பரிசர்யை செய்துகொண்டிருக்கப் போகின்றனையாகையால் கருத்து நிறைவேறப் பெற்றனை. ஐயனே! நீ எவ்

1. ஸூர்யன் மேருபர்வதத்தை ப்ரதக்ஷிணஞ் செய்துகொண்டேயிருக்கிறானாகையால் அவனது காந்தி அப்பர்வதத்தில் எப்பொழுதும் படிந்தேயிருக்குமென்று தெரிகின்றது.



779. ராமன் வனத்திற்கு ப்ரயாணமாய்ப் போதலும், ஜனங்கள் பின்றொடர்தலும்.

வளவு ஸுக்ருதஞ் செய்தனையோ! நீயே மனக்கருத்தெல்லாம் ஈடேறப் பெற்றவன். நீயன்றோ மஹா பாக்ய சாலி. இவனைப் பின் சென்று போவதே உனக்கு மேலான க்ஷேமம். இதுவே உனது பெருந்தவத்தின்ஸித்தி. இதுவே உனக்கு ஸ்வர்க்கப்ராப்திக்கு மார்க்கம்' என்றனர். ராமன் இக்ஷ்வாகுவம்சத்திற்கு இயற்கையாகவே மனக்களிப்பை விளைக்குந் தன்மையன். மேலும், அவன் அனைவர்க்கும் இனியனுயிருப்பவன். ஆகையால் அப்படிப்பட்ட ராமனை ஜனங்கள் எல்லோரும் பின்றொடர்ந்து போய்க்கொண்டு அவனை விட்டுப் பிரிந்திருக்கப் பொறுமல் இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டு கண்ணீர்களை அடக்க முடியாதிருந்தனர். பிறகு மன்னவனும் மனவருத்தமுற்றுப் பரிதபிக்கின்ற தன் பத்னிகளோடு கூடி, 'என்னன்பு குமாரனைப்பார்க்கப்போகிறேன்' என்று மொழிந்து க்ருஹத்தை விட்டுப் புறப்பட்டனன். அங்ஙனம் அவன் புறப்படும்பொழுது, ஒருபெரு யானையைக் கட்டுத்தறியில் கட்டிவைக்கையில் அதைச் சேர்ந்த பெண்யானைகள் துக்கத்தினுல் பெருங் கோஷத்துடன் வீறிடுவதுபோல், ராமன் அரண்யம் போவதைப் பொறுமல் வருந்துகின்ற மடந்தையர் செய்யும் ரோதனத்வனியால் உண்டான பெருங்கோஷம் ஒன்று அம்மன்னவனுக்கு முன்னம் செவியிற்பட்டுக் கொண்டு வந்தது. முன்பு மிகுந்த ஒளியுடன் விளங்குந் தன்மையனுகிய தந்தை தசரதன் அந்த துக்கத்தைக் கண்டு, க்ரஹணஸமயத்தில் ராஹுவால் பிடிக்கப்பட்ட பூர்ணசந்த்ரன்போல் முகவொளி மழுங்கப்பெற்றிருந்தனன். காட்டுக்குப்போக நேரிடினும் சிறிதும் மனக்களிப்பு மாருமல் பளபளவென்று விளங்குகின்ற ஸ்ரீராமன் இப்படிப்பட்டதென்று நிரூபிக்க முடியாத ஸ்வபாவ

முடையவனுகையால் ஜனங்கள் அங்ஙனம் பின்றொடர்ந்து வருவதையும் மனவருத்தமுறுவதையும் கண்டு மனங் கலங்கப்பெறுமல் ஸுமந்த்ரனை த்வரையாக ஓட்டும் படி ஆஜ்ஞாபித்தனன். ராமன் 'ஓட்டுஓட்டு' என்று தூண்டவும், ஜனங்கள் அப்பொழுது 'நிறுத்து நிறுத்து' என்று ப்ரார்த்திக்கவும், ஸாரதியாகிய ஸுமந்த்ரன் இரண்டையும் செய்யமுடியாதிருந்தனன். மஹாபாஹுவாகிய ராமன் வெளிப்புறப்படும்பொழுதே ரதம் செல்வதனுல் உண்டாகுந் தூள்களெல்லாம் பட்டணத்து ஜனங்களின் கண்ணீர்கள்பட்டு நனைந்து அடங்கிப் போயின. ராமன் ப்ரயாணமாய் போகும்பொழுது அப்பட்டணத்து ஜனங்களெல்லோரும் மிகவும் மனவருத்தத்தினுல் பீடிக்கப்பட்டுக் கதறிக்கொண்டு கண்களில் நீர் தளும்பப் பெற்று ஹாஹாகாரங்களைச் செய்துகொண்டு ப்ரஜ்ஞை தப்பி மிகவும் பரிதபித்தனர். மீன்கள் இங்கும் அங்கும் துள்ளுவதனுல் அலைந்தசைகின்ற தாமரைப்பூக்களினின்றும் தேன்கள் பெருகி வருவதுபோல், ஸ்த்ரீகளின் கண்களினின்றும் துக்கத்தின் மிகுதியினுல் பெருகிவருகின்ற நீர் புலப்பட்டது. ஸ்ரீமானுகிய அம்மன்னவன் பட்டணம் முழுவதும் ஒரே மனத்துடன் ராமனுக்காக வருத்தப் பட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு மேன்மேலும் மன வருத்தம் மேலெழப் பெற்று வேரறுப்புண்ட வ்ருக்ஷம் போல் கபீலென்று கீழே விழுந்தனன். பின்பு ராமனது பின்னே போகிற ஜனங்கள் மிகவும் துக்கித்துப் பரிதபிக்கின்ற மன்னவனைப் பார்த்து மனவருத்தம் மிகப்பெற்றுக் கலகலவென்று சப்தஞ்செய்தனர். அந்த ஜனங்களில் சிலர் 'ஐயோ! ராமா' என்றும், மற்றுஞ் சிலர் 'ஆ ! ராமனைப்பெற்ற தாயே!' என்றும் பெயரைச்

சொல்லிக் கூக்குரலிட்டுக் கதறினர். அந்தப்புர ஸ்த்ரீக ளெல்லோரும் அப்படியே உரக்க ரோதனஞ்செய்தனர். ராமன் அந்தந்த அழுகுரலைக் கேட்டுப் பின்புறம் திரும்பி, கதறிக்கொண்டு மனவருத்தத்தில் ஆழ்ந்து மார்க்கத்தில் தன்னைப்பின்சென்று வருகின்ற தாய்தந்தையர்களைக் கண்டனன். அந்த ராஜகுமாரன் கயிற்றாற் கட்டுண்ட குதிரைக்குட்டி தன் தாயைப் பார்ப்பதுபோல், தான் தர்மபாசத்தினால் கட்டுண்டவனாகையால் தாய்தந்தைகளை ஸ்பஷ்டமாகப் பாராமல் கடைக் கண்களால் கண்டனன். வாஹனத்தின்மேல் ஏறி வரத்தக்கவர்களாயினும் காலால் நடந்து வருகின்றவர்களும் துக்கத்தை அனுபவிக்கச் சிறிதுந்தகாதவர்களுமாகிய அந்தத்தாய் தந்தைகள் ஸுகத்திற்கே உரியவர்களாயினும் ஸுகமென்பது சிறிதுமின்றி வருந்துவதைக் கண்டு ராமன் ஸாரதியைப் பார்த்து 'ஸூதனே! தேர் வேகமாகப் போகட்டும்' என்று ஆஜ்ஞாபித்தனன். புருஷஶ்ரேஷ்டனாகிய ராமனுக்குத் தாய் தந்தையர்களைக் காண்பதுமிகுந்த மனவருத்தத்தை விளைவிப்பதாயிருந்தது. ஆனது பற்றி மாவெட்டியால் அடியுண்ட யானை அவ்வேதனையைப் பொறுக்க முடியாததுபோல், தான் அவர்களைப் பார்ப்பதனாலுண்டாகும் மனவருத்தத்தைப் பொறுக்க முடியாதிருந்தனன். பசு கன்றுக்குட்டியினிடம் அதிப்ரீதியுடையதாகையால், அதைக் கட்டியிருக்கும் வீட்டிற்கு அதிகவேகத்துடன் வருவதுபோல் ராமனது தாயாகிய கௌஸல்யை ராமன் போகும் திசையாகவே பறந்தோடி வந்தனள். அங்ஙனங் கதறிக் கொண்டு ரதத்தைப் பின்றொடர்ந்தோடி 'ஹா ராமா! ஹா ஸீதே! ஹா லக்ஷ்மணா!' என்று கூக்குரலிட்டு அந்த ஸீதாராமலக்ஷ்மணர்கள் மூவர்க்கும் நேர்ந்த விபத்தைப் பொறுக்க மாட்டாமல் கண்ணீர்களைப் பெருக்கி துக்காவேசத்

தினல் கூத்தாடுபவள்போல் இப்படியும் அப்படியும் தடுமாறித் துள்ளி வருகின்ற தாயாகிய கௌஸல்யையை ராகவன் அடிக்கடி திரும்பிப் பார்த்தனன். அரசன் ஸாரதியைக் குறித்து 'நில் நில்' என்று உரக்கக் கூச்சலிட்டனன். ராகவன் 'போ போ' என்று ஸூதனைத் தூண்டினன். ஆனதுபற்றி ஸுமந்த்ரனுடைய மனம் நிற்கவும் போகவும் தோன்றுமல் சக்ரத்தினிடையில் அகப்பட்டதுபோல் பரிதபித்தது. மீளவும் ராமன் ஸாரதியைப் பார்த்து 'மன்னவர் என் வார்த்தையை ஏன் கேட்கவில்லையென்று உன்னை வெறுப்பாராயின், நீ அதற்கு 'அந்தச் சந்தை யிறைச்சலில் எனக்கு நீர் சொன்னது செவியிற்படவில்லை' யென்று சொல்லக்கூடும். இவ்வபத்தத்தை யாயினும் சொல்லலாமன்றி, அவர்கள் இங்ஙனம் மன வருத்தப்பட்டுக் கொண்டிருப்பதை வெகுநேரம் பார்த்துப் பொறுத்திருக்க முடியாது' என்றனன். ஸுமந்த்ரனும் ராமன் சொன்னபடி செய்யத் தொடங்கி அவனது பின்னே வருகின்ற அந்தப்புரஜனங்களுக்கு ராமனைக் கொண்டு அனுமதி கொடுப்பித்துக் குதிரைகள் தாமே வேகமாகப் போய்க்கொண்டிருப்பினும் அவைகளை மேலும் சீக்ரமாய்ப் போகும்படிக்குத் தூண்டி ஓட்டினன். ராஜனைச் சேர்ந்த ஜனங்கள் அனைவரும் ராமனுக்கு ப்ரதக்ஷிணஞ் செய்து தண்டனிட்டுப் பின்னுக்குத் திரும்பிவிட்டனர்.[1] ஆயினும்

---

1. அன்றியே—ராஜாவைச் சேர்ந்த அந்தப்புரஜனங்கள் தேஹ மாத்ரத்தினல் திரும்பிப் போயினரே யன்றி அவரது மனமும் திரும்பவில்லை, கண்ணீரும் ஓயவில்லை. மற்றைப் பட்டணத்து ஜனங்களோ வென்றால்—தேஹமாவது, மனஸ்ஸாவது, கண்ணீராவது இம்மூன்றில் ஒன்றும் மாறப் பெறுமல் கூடவே சென்றனரென்று மஹேஶ்வர தீர்த்தர்.

அதில் மனுஷ்யர்களாயிருப்பவர்கள் எவர்க்காயினும் தேஹம் மாத்ரம் திரும்பிற்றேயன்றி அவர்களது மனந் திரும்பவில்லை; கண்களில் நீரும் ஓயவில்லை. அப்பொழுது மந்த்ரிகள் தசரதமஹாராஜனைப் பார்த்து 'யாவன் சீக்ரமாய்த் திரும்பிவரவேண்டுமென்று விரும்புகிறோமோ, அவனை வெகுதூரம் பின்றொடர்ந்து செல்லலாகாது' என்று மொழிந்தனர். சரீரம் வியர்க்கவும் மேனி முழுவதும் துக்கத்தினால் வாடி வதங்கவும் பெற்றுத் தீனனாயிருக்கின்ற அம்மன்னவன் மந்த்ரிகள் சொன்ன வார்த்தையைக் கேட்டு, அது ஸர்வகுணங்களும் அமைந்திருந்தமையால் அதன்படி ராமனைப் பின்றொடர்ந்து செல்லாமல் பார்யைகளும் தாமுமாக அவ்விடத்திலேயே நின்றிருந்து தனது அன்பு குமாரனாகிய ராமனைப் பார்த்துக்கொண்டிருந்தனன். நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.



{ அந்தப்புரஸ்த்ரீகளின் விலாபமும், அவசகுனங்களும், ப்ரஜைகளின் துக்கமும். }

புருஷசிகாமணியாகிய அந்த ராகவன் தாய்மார்களால் சூழப்பெற்றிருக்கிற தந்தைக்குக் கைகூப்பிட்டு அரண்யத்திற்குச் செல்லத் தொடங்கும் பொழுதே ராஜனோடு வந்த அந்தப்புரஸ்த்ரீகள் அனைவரும் அப்பொழுது மிகுந்த த்வனி உண்டாகும்படி ஐயோவென்று கதறினர். அவர்கள் ராமனைக் குறித்துத் 'திசையற்றுத் துர்ப்பலர்களாகிக் காண்போர் மனம் கரையும்படி தயனீயமாயிருக்கின்ற இந்த ஜனங்களுக்கு யாவன் கதியாகி ரக்ஷணஞ் செய்துகொண்டிருந்தானோ, அப்படிப்பட்ட நாதனாகிய ராமன் இப்பொழுது எவ்விடம் போகின்றானோ! தன்மேல் பிறர் இல்லாத பிழைகளைக் கூறினும் தான் கோபமுறமாட்டான்; ப்ரஜைகளுக்குக் கோபம்

வரும்படியான கார்யங்களைச் செய்யமாட்டான். மேலும், தன்மேல் கோபித்துக் கொண்டிருப்பவர்களனைவரையும் கலக்கந் தெளியச் செய்பவன்; ப்ரஜைகளின் துக்கத்தைக் கண்டு அவர்களோடொக்க துக்கிப்பதும் அவர்களுடைய ஸுகத்தைக் கண்டு அவர்களோடொக்க ஸுகிப்பதுமாயிருக்குந் தன்மையன்; அப்படிப்பட்ட ராமன் எவ்விடம் போகின்றானோ! அம்மஹாதேஜஸ்வி தன் தாயாகிய கௌஸல்யையிடத்தில் நடப்பதுபோலவே எம்மிடத்திலும் நடக்குந் தன்மையன்; அப்படிப்பட்டவன் இப்பொழுது எவ்விடம் போகின்றானோ! அரசன் கைகேயியால்பீடிக்கப்பட்டு அதுபொறுக்கமாட்டாமல் வனத்திற்குப் போவென்று ஆஜ்ஞாபிக்கையில், இங்ஙனம் வருந்துகின்ற நம்மனைவர்க்கும் அன்றியே மற்றை ஜனங்களுக்கும் ரக்ஷகனாயிருக்கின்றராகவன் அந்த வசனத்திற்குட்பட்டு எவ்விடம் போகின்றானோ! ஐயோ! இம்மன்னவன் என்ன புத்திஹீனனோ; [1] ப்ராணிவர்க்கங்களுக்கு மிகவும் ப்ரியனாகித் தர்மத்தினின்று தவறாதவனும் ஸத்யவ்ரதனுமாயிருக்கின்ற ராமனை அரண்யத்திற்கு அனுப்புகின்றானே' என்று எல்லோரும் கன்றுக்குட்டியைப் பிரிந்த பசுபோல் துக்கத்தினால் பீடிக்கப்பட்டவர்களாகிக் கதறலிட்டனர்; மேலும், உரக்கக் கூச்சலிட்டனர். அரசன் முன்பே புத்ரசோகத்தினால் பீடிக்கப்பட்டவன்; பின்னும், அப்பொழுது அந்தப்புரத்தில் பயங்கரமாகச் செவியிற்படுகின்ற அந்த அழுகுரலைக் கேட்டு மிகுந்த மனவருத்தத்தில் ஆழ்ந்தனன். ராமன் அரண்யஞ் சென்ற மனவருத்தத்தினால் [2] நித்யாக்னிஹோத்ரிகளும் தாம் செய்யவேண்டிய அக்னிஹோத்ரங்களைச்செய்யாமல் தவிர்த்திருந்தனர். அக்னியும் அம்மனவருத்தத்தில் ஆழ்ந்து மழுங்கி மறைந்திருந்தது. க்ருஹஸ்தர்கள் யாவரும் தமது க்ருஹங்களில் சமையல் செய்

---

1 ப்ராணிவர்க்கம்—ப்ராணிஸமூஹம்.

2 நித்யாக்னி ஹோத்ரிகள்—தினந்தோறும் தவறாமல் அக்னிஹோத்ரஞ் செய்பவர்கள்.

யாதிருந்தனர். ப்ரஜைகள் யாவரும் தமது கார்யங்களை யெல்லாந் துறந்து ஒன்றுந் தோன்றாதிருந்தனர். [1]ஸூர்யனும் இன்னும் பொழுது இருப்பினும் முன்னமே அஸ்தமித்தாற்போல் மறைந்துவிட்டனன். யானைகள் ஆஹாரங்களைக் கொள்ளாதிருந்தன; எடுத்த ஆஹாரங்களையும் விட்டுவிட்டன. பசுக்களும் கன்றுகளுக்கு ஊட்டக் கொடுக்காதிருந்தன. [2] வ்ரதோபவாஸங்களைச் செய்து வெகு காலந் தவஞ்செய்துகொண்டிருந்த பெண்பிள்ளை தனக்கு அப்பொழுதே பிறந்த முதற் பிள்ளையைக் கண்டும் அப்புதல்வனுக்குத் தாயாகிய அவள் மனங்களிக்கப் பெறாதிருந்தனள். இக்ஷ்வாகுகுல கூடஸ்தனும் ஆகாயத்தில் நக்ஷத்ரமாகப் புலப்படுகின்றவனுமாகிய த்ரிசங்கு

1 ராமன் ஸர்வாத்மாக்களுக்கும் அந்தராத்மா வாகையால் அவனுக்கு துக்கம் உண்டாகவே எல்லாவற்றுக்கும் துக்கம் உண்டாயிற்றென்று தெரியவருகின்றது. ஆனதுபற்றியே ராமாயணத்தில் எது சொன்னாலும் அதெல்லாம் வாஸ்தவமேயென்று தெரிகின்றது. என்று மஹேஶ்வரதீர்த்தர்.

2 இதற்கு மூலம்—'புத்ரம் ப்ரயமஜ° லவ்ய்வா ஜநநீ நாஹீய நந்தித' (ப்ரயமஜம் புத்ரம்) முதலிற் பிறந்த பிள்ளையை. முதலிற் பிறந்த மஹா குணசாலியாகிய ராமனே அரண்யஞ் செல்லத் துரத்தப் பட்டனன். இனி என் புதல்வனது கதி யாதோ? என்று பொருள். (லவ்ய்வா) அடைந்து. அறுபதினாயிரம் ஸம்வத்ஸரங்கள் எவ்வளவோ கஷ்டப்பட்டு ஸம்பாதித்த புதல்வனே அரண்யம் போகத் துரத்தப்பட்டனன். நெடுநாள் வ்ரதோபவாஸங்களைச் செய்து வெகு காலம் கழித்துப் பெற்ற இப்புதல்வனுக்கும் யாது ஸம்பவிக்குமோ என்று கருத்து. (ஜநநீ நாஹீயநந்தித) தாய் ஸந்தோஷியாதிருந்தனள். பிள்ளை பிறந்தது முதலாக 'உத்ஸவேஷுச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி' விவாஹம் முதலிய உத்ஸவங்களில் எல்லாவற்றிலும் தந்தையைப்போல் மடியிலிட்டுக்கொண்டு உபலாலனஞ் செய்பவனே அரண்யத்திற்குப் போகின்றனன். இனி இப்புதல்வன் என்ன படுவானோ? என்று கருத்து.

வும், அங்காரகனும், ப்ருஹஸ்பதியும், புதனும், மற்று முள்ள க்ரஹங்களும் சில ஸங்கமத்தினாலும் சில த்ருஷ்டியினாலும் சில வக்ரகதியினாலும் சந்த்ரனைச்சேர்ந்திருந்தன. ஆகாயத்திலுள்ள மற்றை நக்ஷத்ரங்களும் ஒளிமழுங்கப்பெற்றிருந்தன. க்ரஹங்களும் காந்திகுறைந்திருந்தன. இக்ஷ்வாகு குல நக்ஷத்ரமாகிய [1] விசாகா நக்ஷத்ரமும் புகை படர்ந்தாற்போல் ஒளி மழுங்கிப் புலப்பட்டது. மேக ஸமூஹத்துடன் கூடிய மஹாவாயுவேகத்தினால் மஹா ஸமுத்ரம் பொங்குவதுபோல், ராமன் அரண்யத்திற்குப் போனவுடனே அயோத்யை முழுமையும் நடுங்கிவிட்டது. திசைகளெல்லாம் கலங்கி இருள் மூடப்பெற்றவைபோலாய்விட்டன. க்ரஹங்களும் நக்ஷத்ரங்களும் சிறிதும் ப்ரகாசமில்லாதிருந்தன. பட்டணத்து ஜனங்கள் ராமன் அரண்யத்திற்குப் போவது தவிர மற்றைப் பந்துவியோகம் முதலிய காரணங்கள் ஒன்றுமில்லாமலே மனவருத்தமுற்றவராயினர். ஆஹாரஞ்செய்வதிலாயினும் விளையாடுவதிலாயினும் ஒருவர்க்கும் மனம் பொருந்தவில்லை. அயோத்யையிலுள்ள ஜனங்களெல்லோரும் துக்க பரம்பரையால் பரிதபித்து இடைவிடாமல் பெருமூச்செறிந்துகொண்டு ராஜனது பெயரைச் சொல்லி துக்கித்துக் கொண்டிருந்தனர். ஜனங்களெல்லோரும் முகம் முழுவதும் கண்ணீர் நிரம்பப்பெற்றுத் தந்தமது க்ருஹத்திற்குப் போகாமல் ராஜமார்க்கத்திலேயே திரிந்துகொண்டிருந்தனர். அவர்களில் ஒருவனுக்

---

1 (விசாகா) விசாகா நக்ஷத்திரத்தினின்றும் பிறந்த ஸூர்யனது வம்சத்தில் இக்ஷ்வாகு ஜனித்தவனாகையால் அது இக்ஷ்வாகு குல நக்ஷத்ரமாகின்றது. அது புகை படிந்தாற்போல் காணப்படுவதால் அரசனுக்கு நேரப் போகிற மரண விபத்து ஸூசிக்கப் படுகிறதென்று தெரிகின்றது.

காயினும் ஸந்தோஷம் புலப்படவில்லை. ஒவ்வொருவனும் மிகுந்த மனவருத்தத்தில் மூழ்கிக் கிடந்தனன். காற்றும் குளிர்ந்து வீசவில்லை. சந்த்ரனும் இனியனாகப் புலப்படவில்லை. ஸூர்யனும் பளபளவென்று விளங்கவில்லை. உலகம் முழுவதும் கலங்கி நலங் குலைந்திருந்தது. குழந்தைகள் தாய்மார்களை விரும்பி லக்ஷ்யஞ் செய்யாதிருந்தன. பர்த்தாக்களும் பார்யைகளிடத்தில் ப்ரீதி குறைந்து லக்ஷ்யஞ் செய்யாதிருந்தனர். அண்ணன் தம்பிகளும் ஒருவர்க்கொருவர் ப்ரீதி மறையப்பெற்றிருந்தனர். இப்படி ப்ரீதியாயிருந்தவர் அனைவரும் ஒருவர்க்கொருவர் ப்ரேமம் தவறி எல்லாவற்றையுந் துறந்து ராமனையே சிந்தித்துக் கொண்டிருந்தனர். [1] அப்பொழுது ராமனுடைய ஸ்னேஹிதர்களெல்லோரும் துக்க

---

1 இதற்கு மூலம்—'யேது ராமஸ்ய ஸுஹ்ருதஸ்ஸர்வே தே மூடசேதஸ: । ஶோகபாரேண சாக்ராந்தாஶ் ஶயநம் நஜஹுஸ் ததா'--(யேது இங்குள்ள து சப்தம் இதுவரையிற் சொன்னவர்களைக்காட்டிலும் இவர்கள் விலக்ஷணர்களென்னுங் கருத்தைக் காட்டுகின்றது. அதாவது—இதற்கு முன்பு சொல்லப்பட்ட தசரதன் ராமனது போக்குக்கு அநுமதி கொடுத்தனன். கௌஸல்யை மங்களாசாஸனஞ் செய்தனள். இவர்களோ அப்படியல்லர். இவர்களில் ஒருவனாயினும் ஒன்றும் செய்தவனல்லன். (ராமஸ்ய ஸுஹ்ருத:) ராமனது ஸ்னேஹிதர்களோ, தந்தைக்குந் தெரியக்கூடாத ரஹஸ்யங்களை ராமன் எவர்க்குத் தெரிவித்திருப்பனோ, அப்படிப் பட்டவர்கள். மிகவும் அழகான ஹ்ருதயத்தை யுடையவர்கள். அதாவது தம்மையாயினும் விட்டு ராமனையே ரக்ஷிப்பவர்களென்றபடி. (ஸர்வேதே) எல்லோரும் ஒரே ரீதியாயிருப்பவர்களே யன்றி அவர்களில் ஒருவனாயினும் வேறுபட்டிருப்பவன் இல்லை. ஸ்னேஹிதர்களாயின் ராமனது பாதங்களைப் பிடித்துக்கொண்டு வேண்டித் திருப்பலாகாதோ வென்னச் சொல்லுகிறார் (மூடசேதஸ:) புத்தி தப்பியிருந்தனர். ஆனதுபற்றியே அங்ஙனஞ் செய்யாதிருந்தனரென்று கருத்து. தெளிவு நன்கிருக்கப் பெற்றவர் செய்யவேண்டிய கார்யத்தை மனமயங்கித் தெளிவின்றியிருப்பவர் எப்படி செய்வார்களென்ற

பாரம் வளர்ந்து வரப் பெற்று மனத்தில் ஒன்றுஞ் செய்யத் தோன்றாமல் படுக்கையை விட்டு எழுந்திருக்காமலே யிருந்தனர். பின்பு த்ரிலோகாதிபதியாகிய இந்த்ரனைத் துறந்து க்ஷேமமின்றிப் பூமண்டலம் முழுவதும் நடுங்குவதுபோல், மஹானுபாவனாகிய ராமனைத் துறந்த அயோத்யா நகரம் முழுவதும் பயத்தினாலும் சோகத்தினாலும் பீடிக்கப்பட்டு யானை குதிரை காலாட்கள் ஆகிய இவற்றுடன் கூடி மிகவும் நடுங்கிப் பெருங்கோஷமொன்றுண்டாகப் பெற்றிருந்தது. நாற்பத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் அரண்யத்திற்குச் சென்ற பின்பு தசரதன் புலம்புதல்.

அந்த ராமன் பட்டணத்தினின்று புறப்பட்டுப்போகையில், அவனுடைய ரதஞ் செல்வதனால் உண்டாகுந் தூள் எதுவரையிலும் புலப்பட்டுக் கொண்டிருந்ததோ, அதுவரையிலும் தசரதமன்னவன் ராமன் போகுந்திசையைப் பார்த்துக்கொண்டே யிருந்தானன்றிப் பார்வை

---

படி. அவர்களுக்குத்தெளிவு தவறுதலுக்குக் காரணஞ் சொல்லுகிறார் (ஶோகபாரேணசாக்ராந்தா:) சோகபாரத்தினால் ஆக்ரமிக்கப்பட்டவர்கள். பர்வதம் ஒன்று மேல்வந்து விழுந்தாற்போல் சோகபாரம் மேலெழுந்த தாகையால் தெளிவுதப்பப் பெற்றிருந்தனர். (ஶயநம் நஜஹு:) படுக்கையை விடாதிருந்தனர். தரையில் விழுந்து எழுந்திருக்கவில்லை யென்றபடி. பர்வதம் மேல் விழப்பெற்றவர்கள் எப்படி எழுந்திருப்பார்கள்? (ததா) அப்பொழுது. அந்தச் சோகத்தினால் பரவசராயிருக்கும் பொழுது, (நஜஹு:) புத்திபூர்வகமாகப் படுத்தவர்களன்றோ எழுந்திருப்பார்கள். இவர்கள் அங்ஙனம் படுக்காமையால் எழுந்திருக்க முடியாதிருந்தனரென்று கருத்து.

யை மாற்றிக் கொள்ளவில்லை. அம்மன்னவன் தனக்கு ப்ரியனும் பரம தார்மிகனுமாகிய அக்குமாரனை அத்தூளின் வழியாகப்பார்த்துக்கொண்டிருந்த வரையிலும் அத்தூள் மேன்மேலும் வளர்ந்து புலப்பட்டுக் கொண்டிருந்தது. அங்ஙனம் வளர்ந்து புலப்படுகின்ற அத்தூளைப் பார்க்கில், அது தான் புலப்படும் வழியைப் பற்றியாவது இம்மன்னவன் தனது ப்ரிய குமாரனைப்பார்த்துக்கொஞ்சகாலம் ஆறியிருப்பானாக வென்று பூமியினின்று மேன்மேலும் வளர்ந்து ஆகாயத்தில் புலப்பட்டதோ என்னும்படி தோற்றியது. அவ்வரசன் ராமனது ரதஞ் செல்வதனாலுண்டாகிய தூளுங்கூட மறைந்துபோகும்பொழுது சரீரம் தழதழத்து மிகவும் துக்கித்து நிலத்தில் வீழ்ந்தனன். அது கண்டு மடக்தையரில் உத்தமையான கௌஸல்யை அம்மன்னவனை எழுந்திருக்க எடுப்பதற்காக அவனது வலக் கையைப் பிடித்துக்கொண்டனள். கைகேயி பரதனிடத்தில் மாத்ரம் ப்ரீதியுடையவளே யன்றித் தசரதனிடத்தில் ப்ரீதிமாறப்பெற்றிருந்தமையால் அம்மன்னவனது இடப் பக்கத்தில் வெறுமனே நின்றிருந்தாளன்றி அவனை எழுந்திருக்க எடுக்கவில்லை. நீதியறிந்தவனும் தார்மிகனும் ஸதாசார ஸம்பன்னனுமாகிய அவ்வரசன் தனது இடப்பக்கத்தில் நிற்கின்ற கைகேயியைப் பார்த்து இந்த்ரியங்கள் கலங்கப் பெற்று 'அடி! கைகேயி! கெடு நடத்தையுடையவளே! நீ எனது அவயவங்களைத் தொடவேண்டாம். உன்னைக் கண்ணால் காணவும் பொறேன். நீ எனக்குப் பார்யையும் அல்லை; உனக்கும் எனக்கும் கேவலபந்துத்வமுங் கிடையாது. உன்னோடு எனக்கு ஸம்பந்தமே இல்லை. உன்னை யடுத்துப் பிழைப்பவர்களுக்கும் நான் ராஜனல்லேன். அவர்களும் எனக்கு வேலைக்காரர்களல்லர். உனக்குக் கேவலம்

பணத்திலேயே விருப்பம்; தர்மத்தில் சிறிதும் விருப்பம் இல்லை. நீ தர்மத்தைத் துறந்தவள். ஆகையால் இப்படிப்பட்ட உன்னைக் கைவிட்டனன். 'அக்னிஸாக்ஷிகமாக உனது கையால் பிடிக்கப்பட்ட நான் எப்படி பார்யை ஆகாமற்போவேன்' என்பாயோ? உன் கையைப் பிடித்ததும் உன்னுடன் அக்னியை ப்ரதக்ஷிணஞ் செய்ததும் ஆகிய அவ்விரண்டினாலும் உன்னோடு எனக்கு ஏற்பட்ட ஸம்பந்தத்தினால் உண்டான ஐஹிகம் ஆமுஷ்மிகம் ஆகிய எல்லாவற்றையும் துறக்கின்றனன். ஐஹிக ஸம்பந்தத்தை விட்டேனாகையால் உன்னோடு க்ரீடிப்பது முதலியவற்றைத் துறந்து விட்டனன். ஆமுஷ்மிக ஸம்பந்தத்தையும் விட்டேனாகையால் பரலோகத்தின் பொருட்டு உன்னோடு அக்னிஹோத்ரம் முதலிய கார்யங்களையும் நடத்த மாட்டேன். பரதன் அக்ஷயமாகிய இந்த ராஜ்யத்தைப் பெற்று ஸந்தோஷிப்பானாயின், அவன் தந்தையாகிய என்னை உத்தேசித்துக் கொடுக்கிற ஜலதர்ப்பணாதிகள் எனக்குச் சேராதிருக்குமாக' என்றனன். பின்பு கௌஸல்யை அப்பொழுது புழுதியில் புரண்டிருக்கின்ற மன்னவனை எழுந்திருக்க எடுத்துச் சோகத்தினால் பரிதபித்தவளாகி அவ்வரசனை அழைத்துக்கொண்டு திரும்பி வந்தனள். தார்மிகனாகிய அம்மஹீபாலன் தனது புதல்வன் அங்ஙனம் முனிவேஷந் தரித்து அரண்யம் போவதை அடிக்கடி நினைத்துக்கொண்டு வேண்டுமென்று ப்ராஹ்மணனை அடித்துக் கொன்றவன்போலவும், கையினால் அக்னியைப் பரிசித்தவன்போலவும், மிகவும் பச்சாத்தாபம் அடைந்திருந்தனன். ராமனது ரதம்போன மார்க்கங்களில் அடிகள்தோறும் திரும்பித் திரும்பிப் பார்த்துப்பரிதபித்து வருகின்ற மஹாராஜனுடைய மேனியானது ராஹுவால் பிடிக்கப்பட்ட ஸூர்யன்போல் ஒளி

மழுங்கப்பெற்று ப்ராகாசியா திருந்தது. அரசன் தனது அன்புகுமாரனுகிய ராமனை நினைத்துக்கொண்டு மன வருத்தமுற்றுப் புலம்பிக்கொண்டிருந்தனன். பிறகு அம் மன்னவன் ராமன் பட்டணந் தாண்டிச் சென்றதாகத் தெரிந்து மனவருத்தத்தினுல் இங்ஙனம் மொழிந்தனன்:- 'ஐயோ! என் புதல்வனைக்கொண்டுபோயின உத்தமாஸ்வங்களின் அடிகள் மாத்ரம் இவ்வழியில் புலப்படுகின்றன; அம்மஹானுபாவன் புலப்படவில்லையே. எவன், உயர்ந்தசந்தனங்களைப்பூசி, உத்தமஸ்த்ரீகள் விசிறிகளைக்கொண்டு விசுகையில், மெத்தென்றபலதலையணைகள் போடப்பெற்ற மேலான படுக்கையில் ஸுகமாகப் படுத்திருந்தானே, அப்படிப்பட்ட எனது உத்தம குமாரனுன ராமன் இப்பொழுது எதோ ஓரிடத்தில் ஒரு வ்ருக்ஷத்தின் கீழ்ப்புறத்தில் கொம்பையாவது கல்லையாவது தலையணையாக வைத்துக்கொண்டு படுக்கப் போகின்றனன். இதற்குச் சந்தேகம் உண்டோ? அப்படிப்பட்ட எனது குமாரன் மனக்களிப்புமாறப்பெற்றுத்தேஹம்முழுவதும் புழுதியேறப்பெற்று முகம் வாடப் பெருமூச்செறிந்து, யானைக்கூட்டங்களில் தலைமையுள்ள மதித்தமஹாகஜம் மலையருவியின் அருகினின்றும் எழுந்திருப்பதுபோல், நிலத்தினின்றும் எழுந்திருக்கப் போகின்றனன். மஹாபுஜனும் லோகநாதனுமாகிய ராமன் அநாதன்போல் நிலத்தினின்றும் எழுந்திருந்துபோய்க்கொண்டிருக்கையில் அடவியில் திரிகிற அறிவிலாமனிதர்களும் நிச்சயமாகப் பார்க்க நேரும். ஜனகனது ஆசைக் குமாரத்தியாகிய அந்தப் பெண்மணியும் எப்பொழுதும் ஸுகம் அனுபவிப்பதற்கே உரியவள், அப்படிப்பட்ட அவ்வறியாமடந்தை இப்பொழுது முட்கள்மீது அடிகளையிட்டு, அவை காலில் பொத்துகையால் வருந்தி ஆரண்யத்தில் நடக்கப் போகின்றனள்; இது நிச்சயம். அப்பெண்பிள்ளை என்றும் ஆரண்யத்தை அறியாதவள்; அப்படிப்

பட்டவள் பயங்கரமாகக் கர்ஜனையிடுகின்ற க்ரூர ஜந்துக்களின் த்வனிகளைக் கேட்டுப் பயப்படுவாளென்பதில் ஸந்தேஹம் உண்டோ? கைகேயீ! உன் கருத்து முழுவதும் ஈடேறிற்று. இனி விதவையாகி ராஜ்யபரிபாலனஞ் செய்வாயாக. நானோ அந்தப் புருஷஶ்ரேஷ்டனாகிய ராமனைவிட்டுப் பிரிந்து நொடிப்பொழுதும் ஜீவித்திருக்கப்போறேன்' என்றனன். மன்னவன் இவ்வாறு புலம்பிக்கொண்டு ஜனங்கள் திரள்திரளாக நாற்புறமும் சூழப்பெற்று பந்து [1]மரணம் அடைகையில் அதற்காக ஸ்னானஞ் செய்து வருபவன்போல், இீட்டுவீட்டை நிகர்த்து அமங்கலமாயிருக்கின்ற அயோத்யாபுரத்தில் ப்ரவேசித்தனன். அப்பட்டணத்திலுள்ள நாற்சந்திவீதிகளும் விட்டுவாசற்படிகளும் பாழடைந்திருந்தன; கடைகளும் தேவாலயங்களும் மூடப்பட்டிருந்தன; தே

1 இதற்கு—'அபஸ்நாத இவாரிஷ்டம் ப்ரவிவேஶ புரோத்தமம்' என்று மூலம். ப்ராணன்களோடு கூடிய ராமனைப் பின்சென்று திரும்பி நகரத்தில் ப்ரவேசிக்கும் ஸமயத்தில் 'அபஸ்நாத:' 'அரிஷ்டம்' என்று சொல்வது அமங்கலமாகையால் யுக்தமன்று. ஆயினும், தசரதன் அப்பொழுது ஸீதைக்கு 'நூநம் ஹயமுபைஷ்யதி' (நிஜமாகப் பயமுறுவாள்) என்று விபத்து ஸம்பவிப்பதை ஆசங்கித்துத் தன்மூலமாக ராமனுக்கு விபத்தும், அதனால் தனக்கு விநாசமும் ஸம்பவிக்குமென்று சங்கித்தனன். அப்படி ஸீதாவிபத்து மூலமாகவே ராமனது விபத்தையும் சங்கித்து 'ஸகாமா ஹவ கைகேயி' (கைகேயி! உன் கருத்தெல்லாம் ஈடேறப்பெறுவாய்) என்றனன். தான் விநாசம் அடைவதாக நினைத்து 'விதவா ராஜ்யமாவஸ' (விதவையாகி ராஜ்யத்தில் வஸிப்பாயாக) என்றும் தெரிவித்தனன். ஆகையால் இங்கு ஸீதாராமர்களின் மரணம் நிஜமாக நடவாமற் போயினும், அரசன் மதிக்கு அங்ஙனம் தோற்றுவதால், அதை அனுஸரித்துக் கவி இங்ஙனஞ் சொல்வது உசிதமேயாகையால் தோஷம் இல்லை.

ஹத்தில் வலிவுள்ளவர்கள் யாவரும் ராமனைப் பின்றொடர்ந்து சென்றார்களாகையால் துர்ப்பலர்களாகிய ஜனங்கள் மாத்ரமே ராமனை நினைத்துக்கொண்டு மனவருத்தமுற்றிருந்தனர். ராஜமார்க்கத்தில் இங்குமங்கும் கொஞ்சமாகவே ஜனங்கள் புலப்பட்டனர். இனி மற்றை மார்க்கங்களில் ஜனஸஞ்சாரமே யில்லையென்பது சொல்லவேண்டுமோ? இவ்வாறு புலப்படுகின்ற அப்பட்டணம் முழுவதையும் கண்டு ராமனையே நினைத்துக்கொண்டு புலம்புகின்ற அம்மன்னவன், ஸூர்யன் மேகத்திற்குள் நுழைவதுபோல், தன்மாளிகையில் நுழைந்தனன். மஹா ஸர்ப்பம் குடியிருக்கப்பெற்ற ஓர் மடு, அந்த ஸர்ப்பபயத்தினால் யாவரும் கிட்டி அணுகக்கூடாதிருந்து, அந்த ஸர்ப்பத்தைக் கருடன் வந்து அபஹரித்துக் கொண்டு போகையில், அம்மடு யாவரும் இழிந்து பயமின்றிக் கலக்கக்கூடியதாயிருப்பதுபோல், ராமலக்ஷ்மண ஸீதைகள் இருப்பதனால் பயபக்திகளுடன் பூஜிக்கத்தக்கதாயிருந்த அம்மாளிகை அம்மூவரும் இல்லாமையால் பகைவரும் பயமின்றிப் புகக்கூடியதாகப் புலப்பட்டது. அனந்தரம் அம்மன்னவன் புலம்பிக்கொண்டே குரல் தழதழக்கப் பெற்று வார்த்தைகள் அதிகமாயினும் பொருள் சிறுகப் பெற்று மெதுவான சில வாக்யங்களை மந்தஸ்வரத்துடன் தீனமாகச் சொல்லத்தொடங்கி 'என்னைச் சீக்ரமாக ராமனது தாயாகிய கௌஸல்யையின் க்ருஹத்திற்குக் கொண்டு செல்வீர்களாக. மற்றை எவ்விடத்திலும் என் மனத்திற்குத் தேறுதல் உண்டாகாது' என்றனன். இங்ஙனம் அம்மன்னவன் மொழியக்கேட்டு வழிகாட்டுகிற வேலைக்காரர்கள் வணக்கத்துடன் அவ்வரசனைக் கௌஸல்யையின் க்ருஹத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்த்தனர். பிறகு அம்மன்னவன் கௌஸல்யையின் மாளிகையில் ப்ரவேசித்துப் படுக்கையில் படுத்துக்கொண்ட பின்

யும் அவனது மனம் தெளிவுபெறாமல் கலக்கமுற்றே யிருந்தது. இருபிள்ளைகளும் இல்லாமல் மணாட்டுப் பெண்ணும் இன்றிப் போனதுபற்றி அம்மாளிகை சந்திரனும் நக்ஷத்ரங்களும் தாரகைகளும் இல்லாமல் இருள் மூடிய ஆகாயம்போல் மன்னவனுக்குத் தோற்றிக் கொண்டிருந்தது. பாாக்ரமசாலியாகிய அம்மஹாராஜன் கைகளை உயர எழுப்பிப் பெருங்குரலுடன் 'ஐயோ ராமா! என்னை விட்டுப்போகின்றாயே' என்று கதறிக் கூச்சலிட்டு 'ராமன் திரும்பி வருகையில் அவனைக் கட்டியணைத்துக் கண்ணாரக் கண்டு களிக்கும் மஹா பாக்ய சாலிகளாகிய புருஷஶ்ரேஷ்டர்களெல்லோரும் ஸுகமாக அவன் திரும்பி வருமளவும் பிழைத்திருப்பார்கள். ராமன் வரும் வரையில் பிழைத்திருக்கும் புருஷஶ்ரேஷ்டர்களெல்லோரும் ஸுகமாக ஒருவர்க்கொருவர் ஆலிங்கனஞ் செய்துகொண்டு திரும்பி வந்த ராமனை அக்காலத்தில் கண்ணாரக் காண்பார்கள். எனக்கு அப்படிப்பட்ட பாக்யம் எங்கிருந்து நேரப்போகின்றது' என்று இங்ஙனம் புலம்பிக்கொண்டிருந்தனன். பிறகு தனக்கு ப்ரளயகால ராத்ரிபோல் அதிபயங்கரமாகத் தோன்றுகின்ற அன்றிரவு ஸமீபித்துவந்து சிலபொழுதுங் கடந்த பின்பு தசரதன் அர்த்தராத்ர ஸமயத்தில கௌஸல்யையைப் பார்த்து [1] 'கௌஸல்யே! என் கண் ராமனையே

1 இதற்கு மூலம்— ராமம் மேऽநுகதா த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே। நத்வா பஶ்யாமி கௌஸல்யே ஸாது மா பாணிநா ஸ்ப்ருஶ'. ராமம்) ராமனை' குணரத்னங்களுக்கு ஸமுத்ரம்போலிருப்பவனை. (மே த்ருஷ்டி: அநுகதா) என்கண் பின்தொடர்ந்து சென்றது. ஸமுத்ரத்தில் அகப்பட்டது மறுபடியும் மீண்டு வருமோ என்றபடி. (மே த்ருஷ்டி:) அறுபதினாயிரம் ஸம்வத்ஸரங்கள் செய்த உபவாஸாதிகள் நிவ்ருத்தியாயின. என்த்ருஷ்டியோவென்றால், (அத்யாபி ந நிவர்த்

பின்றொடர்ந்து போயிருக்கின்றது; இன்னும் திரும்பி

ததே) இப்பொழுதும் திரும்பவில்லை. அவனுடைய தர்சனம் இல்லா மற் போயினும், அவன் தாயாகிய உன்னைப் பார்க்கலாமென்றாலும் திரும்பி வாராதிருக்கின்றது. (த்ருஷ்டிঃ) நமக்கு ஹிதாஹிதங்களைத் தெரிவிக்கும்படியான இது தன் ஹிதத்தைத் தெரிந்துகொள்ளாதிருக்குமோ? ஆனதுபற்றியே ராமனைப் பின்சென்று போயிற்று. கைகேயி மந்தரை முதலியவர்களின் த்ருஷ்டியாயின் அப்படி செய்யாது. 'நந்தாமி பஸ்யந்நபி தர்ஸநே' (தூரத்தில் பார்த்தபோதிலும் மீள்வும் அருகில் அழைத்துப் பார்த்து ஆநந்திப்பேன்) என்று இதற்கு ராமனைப்பார்க்க நானே வழிகாட்டிக் கொடுத்தனன். ஆனது பற்றி இது இங்ஙனம் செய்துவிட்டது. (மேத்ருஷ்டிঃ) தாயை விட்டுக் கன்னிகை பர்த்தாவைப் பின்சென்றாலும் அந்தத் தாயானவள் 'என் பெண்' என்று தன்னுடையதாகவே அபிமானங் கொள்வதுபோல், என் கண் என்னைவிட்டு ராமனைப் பின்றொடர்ந்து போயினும், 'என்கண்' என்றே அதனிடத்தில் அநுராகம் விரம்பப் பெற்றிருக்கின்றனன். (மேத்ருஷ்டிঃ ராமம் அநுமதா) என்னுடைய இந்த்ரியமாயின் என்னை அனுஸரித்திருக்க வேண்டுமேயன்றி ராமனை அனுஸரித்துப் போவது எப்படி? என்றால்—த்ருஷ்டி தனக்கு விஷயமானதைப் பின் சென்று போவது தோஷமன்றாகையால், என் த்ருஷ்டியும் தனக்கு விஷயமாகிய ராமனைப் பின்சென்று போயிற்று. ஆயினும் (அத்யாபி நநிவர்த்ததே) இப்பொழுதும் திரும்பி வாராதிருக்கின்றது. 'அதிக்ராந்தே ஐபிராகவே' (ராமன் கண்பார்வையைக் கடந்து போயினும் திரும்பாதிருக்கின்றதே) என்கிறான். (த்ருஷ்டிரத்யாபி நநிவர்த்ததே) திரும்பி வந்தால் கைகேயியின் முகத்தைப் பார்க்கவேண்டிவருமே யென்று இன்றும் திரும்பி வாராதிருக்கின்றது. (மேத்ருஷ்டிரத்யாபி நநிவர்த்ததே) மனவருத்தம் நேர்ந்த காலத்தில் பரிஜனங்கள் ஸஹாயமாயிருக்க வேண்டும். அப்படியிருக்க, ராமவிரஹத்தினால் வருந்துகின்ற எனக்கு என் கண் வந்து உதவாதிருக்கின்றதே. (த்ருஷ்டிரத்யாபி நநிவர்த்ததே) போனராமனைத் திருப்பிக்கொண்டு வாராமற் போயினும், தானாவது திரும்பி வருவதற்குத் தடை யாது? (ராமம் அநுமதா த்ருஷ்டிரத்யாபி நநிவர்த்ததே) 'நசபுநராவர்த்ததே' என்கிறபடியே அவ

வரவில்லை. ஆகையால் உன்னைப் பார்க்க நேராதிருக்

---

னைப் பின்சென்றவனுக்குப் புனராவ்ருத்தி (மீளவும் திரும்பிவருதல்) இல்லையாகையால் என் த்ருஷ்டியும் அவனைப் பின்சென்று திரும்பி வாராதிருக்கின்றது. 'அது உன்னை விட்டுப் போனாலன்றோ மீளவும் திரும்பி வரவேண்டிவரும், போகாமலேயிருக்கத் திரும்பி வருவது எப்படி?' என்று வினவுகையில்—சொல்லுகிறான்—(நத்வாபஶ்யாமி கௌஸல்யே) உன்னைப்பார்க்க நேராதிருக்கின்றனன். அது போகாதிருக்குமாயின், உன்னைப்பார்க்க முடியாதிருப்பேனோ? ஆகையால் அது போகவேபோயிற்று. சக்ஷுரிந்த்ரியம் மேலுக்குப் புலப்படாதது, கார்யத்தைப் பற்றியே அதன் இருப்பைத் தெரிந்துகொள்ளவேண்டும். நீ எதிரே இருப்பினும், உன்னைக் காணாதிருக்கின்றேனாகையால் அது போயிற்றேயாகவேண்டும். ராமனிடத்தில் பற்றின த்ருஷ்டி மற்றோரிடத்தில் பற்றுமா? ஆகையால் உன்னைப் பாராதிருக்கின்றதென்று கருத்து. சக்ஷுரிந்த்ரியம் நசித்துப் போயினும் வாகிந்த்ரியத்தைப் பற்றியாயினும் பிழைப்போமென்று அதன் இருப்பைப் பரீக்ஷிப்பதற்காக அவள் பேரைக்கூறி அழைக்கின்றான்—(கௌஸல்யே) 'ஏஷமே ஜீவிதஸ்யாந்தோ ராமோயத்யபிஷிச்யதே' (ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்குமாயின், இதுவே என் ப்ராணனுக்கு முடிவு) என்று ராமனோடு ஸம்பந்தத்திற்குக் கைகேயி சாவேனென்கையில், 'கிம்புந: ப்ரோஷிதே தாத த்ருவம் மரணமேவ மே' (நீ அரண்யத்திற்குப் போகையில், இனிச் சொல்லவேண்டுவதென்? எனக்கு மரணமே நேருமென்பது நிச்சயம்) என்று நீ ராமனது வியோகத்தில் ப்ராணனை விடுவேனென்று சொன்னவள். (கௌஸல்யே) 'கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவேயம் மநஸ்விநீ' (உதாரமனமுடைய கௌஸல்யை லோகநாதனாகிய யாதொருவனைப் பெற்றனள்) என்று வெகுகாலம் வேண்டி உலகம் முழுவதும் உஜ்ஜீவிக்கும்படி ஸம்பாதித்த ஸந்தானம் கடைசியில் உனக்கு இப்பொழுது என்னோடொக்க துக்கத்தின் பொருட்டே ஆயிற்றன்றோ? (கௌஸல்யே த்வா நபஶ்யாமி) இத்தனைபொழுது அனர்த்தம் செய்த கைகேயியைப்பார்த்து வருந்திய கண்களை ஆஶ்வாஸப்படுத்த வல்ல உன்னைப் பார்க்க நேராமற்போவது ஏனோ? ராமவிரஹத்தினால் பரிதபிக்கின்ற கௌஸல்யை தசரதனுடைய துக்கத்தைப் பார்த்து, பர்த்ரு

கின்றனன். நீ என்மேல் கோபம் வையாமல் தனை விரஹமும் நேருமோவென்று பயந்து அவனது அருகில் வருகையில் அவளைப்பார்த்துச் சொல்லுகின்றனன்—(ஸாய மா பாணிநா ஸ்ப்ருஶ) என வருத்தமெல்லாந் திரும்படி தடவி ஆஶ்வாஸப்படுத்துவாயாக (பாணிநா ஸ்ப்ருஶ) உன்னைப் பார்க்க நேராதிருப்பதுபற்றிச் சக்ஷுரிந்த்ரியம் போயிற்றென்று நிச்சயித்தனன்; உன் வார்த்தை செவியிற்படுவதால் ஶ்ரவணேந்த்ரியம் இருக்கிறதென்று தெரியவருகின்றது. (கௌஸல்யே) என்று உன் பேரைச் சொல்ல நேர்ந்தமையால் வாகிந்த்ரியம் உளதென்று நிச்சயித்தனன், வாஸனை மோப்பத் தெரியாமையால், ராமனை உச்சி மோப்பதற்காக க்ராணேந்த்ரியமும் போயிற்றென்று நிச்சயிக்கின்றனன். பெரிய விஷயம் நேரும் பொழுது மற்றை விஷயங்கள் துச்சமாகத் தோற்றுமாகையால், என்னுடைய ஸ்பர்சேந்த்ரியமும் மற்றை யெல்லாவற்றையும் விட்டுப் பெரும் விஷயமாகிய ராமனைப் பின்றொடர்ந்து போயிற்றோ? இருக்கின்றதோ? தெரியவில்லை. அதை நிச்சயித்துக் கொள்வதற்காகக் கையினுல் தொட்டுப் பாராயென்றபடி. திருடன் ஒரு வீட்டிற்குள் புகுந்து சில வஸ்துக்களை எடுத்துக்கொண்டு போனபின்பு அவ்வீட்டுக்குடையவன் இருட்டில் எது எது போயிற்றோ என்று அந்தந்த வஸ்துக்களைத் தடவிப் பார்த்துக்கொண்டு பார்யை முதலானவர்களைக் கேட்பது போல, தசரதன் தன் இந்த்ரியங்களில் சிலவற்றை ராமன் திருடிக்கொண்டு போகையில், மிகுந்தவை எவை யென்று விமர்சித்துக் கொண்டு கௌஸல்யையை வினுவினுனென்று தெரியவருகின்றது. (ஸாய ஸ்ப்ருஶ) நன்கு ஸ்பர்சிப்பாயாக. 'கைகேயியோடு கலந்து ராமனைக் காட்டுக்குத் துரத்திவிட்டு இப்பொழுது அதொன்றும் தோற்றுதிருக்கும்படி இச்சகம் பாடுகின்றுன்' என்று நினைக்காமல் 'ப்ரக்ருதி ஸம்பந்தத்தினுல் இங்ஙனம் கலங்கினுனன்றி வேறில்லை' என்று மனவெறுப்பில்லாமல் ஸ்பர்சிப்பாயாக. (பாணிநா ஸ்ப்ருஶ) முன்பு அக்னிஸாக்ஷிகமாக மங்கள முஹூர்த்தத்தில் குதூஹலத்துடன் பிடித்த அந்தக் கையினுலேயே அந்த நினைவோடேயே ஸ்பர்சிப்பாயாக. (பாணிநா ஸ்ப்ருஶ) ராமனை ஸ்பர்சித்ததனுல் பரிமளித்துக்கொண்டிருக்கிற அந்தக் கையினுல் ஸ்பர்சிக்க வேண்டும். (மா ஸ்ப்ருஶ) ராமஸ்பர்சம் பெறு

செய்து உனது ஹஸ்தத்தினல் என்னை நன்கு ஸ்பர்சிப்பாயாக. அப்பொழுது என் பரிதாபம் கொஞ்சம் குறையலாம்' என்றனன். அனந்தரம் கௌஸல்யா தேவி, படுக்கையில் படுத்து ராமனையே நினைத்துக் கொண்டு புலம்புகின்ற அம்மஹாராஜனைப் பார்த்து அவன் பக்கத்தில் உட்கார்ந்து மனக்களிப்பின்றிப் பெருமூச் செறிந்துகொண்டு மிக்க மனவருத்தத்துடன் தானும் புலம்பினள். நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.



---

வேனுயின் ஜீவித்திருப்பவனும் அதில்லையாயின் பிழைத்திருக்கப் பெருதவனுமாகிய என்னை, அவனைப்பெற்ற உன் கையினுல் தடவிக் கொடுப்பாயாக. பகவானுடைய ஸ்பர்சம் லபிக்காமற் போகும் பொழுது, அவனது ஸம்பந்தி ஸம்பந்திகளின் ஸ்பர்சத்தை லபித்தாயினும் உஜ்ஜீவிக்கலா மல்லவா? அவனும் ஸீதையில்லாதபொழுது 'வாஹி வாத யதஃ காந்தா தாம்ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருஶ' (வாயுவே! எனது அன்புநாயகி இருக்குமிடத்தினின்றும் வீசுவாயாக. அவள் மேல்பட்டு வீசிக்கொண்டு வந்து என்மேல் வீசுவாயாக.) என்று ஸீதாஸம்பந்தமுள்ள வாயுவை விரும்பினுற்போல, ராமஸ்பர்சம் இல்லாதபொழுது உன் ஸ்பர்சத்தை யாவது பெறவேணுகவென்று கருத்து.இங்கு ஜன்மாந்தர ஸுக்ருத வசத்தினுல் தசரதனுக்கும் கௌஸல்யைக்கும் ஸ்ரீராமனிடத்தில் பரத்வஜ்ஞானம் உண்டாயிருக்குமாயின், உண்டாயிருக்கட்டும். அவ்விருவரும் ஒருவருக்கொருவர் ராமனது பரத்வத்தை விஷ்க்ருஷ்டமாக அநுஸந்தித்து வாயாடுவது எப்படி யென்னில்—இங்கு ரிஷி தசரதாதிகள் கூறுவதாகச் சொல்லித் தானே அடிக்கடி பரத்வத்தை அநுஸந்திக்கிருனன்றி வேறில்லை யென்று ஸம்ப்ரதாயமாகத் தெரிகின்றது.

## கௌஸல்யை தசரதனுடன் ராமனைச் சொல்லித் துக்கித்தல்.

பிறகு புத்ரசோகத்தினால் பரிதபிக்கின்ற கௌஸல்யை, படுக்கையில் படுத்து மனவருத்தமுற்றுப் புலம்புகின்ற அந்தத் தசரதமஹாராஜனைப் பார்த்து 'கைகேயி! புருஷ ஸிம்ஹமாகிய ராமன்மேல் தனது கௌடில்ய மென்னும் விஷத்தை ப்ரயோகித்தனள். இனித்தோலை யுரித்த ஸர்ப்பம்போல் ஸுகமாக விளையாடிக் கொண்டிருக்கப் போகிறாளல்லவா! பார்வைக்குமாத்ரம் அவள் அழகாயிருப்பவளே; மனமோ மிகவும் கடோரமானது. ராமனை அரண்யம் போகத் துரத்திவிட்டுத் தன் கருத்து ஈடேறப் பெற்று மனக்கவலை தீர்ந்தனள். இனி வீட்டிற் சேர்ந்த துஷ்ட ஸர்ப்பம்போல் என்னை மேன்மேலும் அதிகமாகப் பயப்படுத்துவாள். பரதனுக்கு ராஜ்யம் அவஶ்யமாகக் கொடுக்கவேண்டியதா யிருப்பினும், அப்பொழுது என் புதல்வனை அரண்யத்திற்குத் துரத்துவதைக் காட்டிலும் அன்னம் அளிக்காமல் பரதனுக்குத் தாஸனாகச் செய்ய விரும்புவதாயினும் மேலாயிருக்கும். அப்பொழுது ராமன் பட்டணத்தில் பிச்சையெடுத்துப் பிழைப்பான். வீட்டில் என் கண் முன்பு வஸித்திருப்பான். அப்படியும் செய்யாமல் அரண்யத்திற்குத் துரத்துவது ஏனோ? நீ மர்யாதை தவறி உனதிஷ்டப்படி ராமனை அவனது பதவியினின்றும் விழத்தள்ளி, [1] ஆஹிதாக்னியா யிருப்பவன் பர்வகாலத்தில் தேவதைகளுக்குக் கொடுக்கவேண்டிய ஹவிர்ப்பாகத்தை மனமயக்கமுற்று ராக்ஷஸர்களுக்குக் கொடுப்பதுபோல், ராமனது ராஜ்ய பாகத்தைக் கைகேயிக்குக் கொடுத்தனை. மதித்துச் சிறந்த [2] மாதங்கத்தை நிகர்த்த

---

1 ஆஹிதாக்னி-விவாஹகாலத்தில் ப்ரதிஷ்டை பண்ணின அக்னியை அணையாமல் வைத்து ப்ரதிதினமும் தவறாமல் ஔபாஸனஞ் செய்யும் க்ருஹஸ்தன்.　　2. மாதங்கம்-யானை.

அழகிய நடைமிடுக்குடையவனும் நீண்ட புஜதண்டங்களமைந்தவனும் வலுத்த வில்லைத் தரித்துப் பராக்ரமத்துடன் கம்பீரமாகப் புலப்படுபவனுமாகிய ராமனுங் கூடப் பார்யையோடும் லக்ஷ்மணனேடுங்கூடி வனத்திற்குப் போகின்றனன். நீ கைகேயியின் வார்த்தையைப் பாராட்டி, என்றும் வனவாஸதுக்கத்தை அனுபவித்தறியாத ஸீதையையும் ராமலக்ஷ்மணர்களையும் வனத்தில் வஸித்திருக்கும்படிக்குத் துரத்திவிட்டனை. அப்படிப்பட்ட ஸுகுமாரர்களுக்கு அரண்யத்தில் யாது கதி நேருமோ? அவர்கள் நல்ல இளம் பிராயத்திலிருப்பவர்களாகையால் போகபலங்களை அனுபவிக்கவேண்டுங் காலத்தில், மேலான வஸ்துக்களைத் துறந்து நீ அரண்யத்திற்கு அனுப்புகையில் தீனர்களாகிக் காய்களையும் வேர்களையும் புஜித்து எப்படி பிழைத்திருக்கப் போகின்றனர்? ராமன் தன் பார்யையோடும் லக்ஷ்மணனேடும் கூடி இவ்விடம் வருகையில் எனது மனவருத்தங்களெல்லாந் தீர்ந்து, என்னைச் சுபங்கள் வந்து கிட்ட நான் அவர்களைக் கண்ணாரக் காணும்படியான அக்காலம் இப்பொழுது நேருமா? அவ்வீரர்கள் ஓரிடத்தில் படுத்து நித்ரை செய்து எழுந்து வருவதுபோல், அரண்யத்தினின்றும் அயோத்யைக்கு ஸுகமாகத் திரும்பி வருவதறிந்து, புகழ் பெற்றவர்களாகிய இப்பட்டணத்து ஜனங்களெல்லோரும் ஸந்தோஷம் அடைந்து த்வஜங்களை வரிசையாக உயர எடுத்துக் கட்டி அலங்கரிக்கப் பெற்று விளங்குகின்ற இவ்வயோத்யைக்கு அவர்கள் எப்பொழுது வரப் போகிறார்களோ? அரண்யத்தினின்றும் திரும்பிவருகின்ற அந்தப் புருஷஸிம்ஹங்களைக் கண்டு இந்நகர ஜனங்கள், பூர்ணிமையினன்று சந்த்ரனைக் கண்ட ஸமுத்ரம் பொங்குவது போல், எப்பொழுது மனங் களிக்கப்போகின்றார்களோ?